# வரலாறு

## மேல் நிலை முதலாம் ஆண்டு



தொகுதி
I & II



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# வரலாறு

## (இந்திய நாகரிகம்)

### தொகுதி I & II

### மேல் நிலை — முதலாம் ஆண்டு

தீண்டாமை ஒரு பாவச்செயல்

தீண்டாமை ஒரு பெருங்குற்றம்

தீண்டாமை மனிதத்தன்மையற்ற செயல்



தமிழ்நாட்டுப்
பாடநூல் நிறுவனம்
சென்னை

திருத்திய பதிப்பு — 1982

**பதிப்பாசிரியர் குழுத் தலைவர்**

டாக்டர் சி. ஜே. நிர்மல்,
பேராசிரியர் & வரலாற்றுத் துறைத் தலைவர்,
சென்னைக் கிறித்தவக் கல்லூரி, தாம்பரம், சென்னை

**ஆசிரியர்கள்**

டாக்டர் கே. ராஜய்யன்,
பேராசிரியர் & நவீன கால வரலாற்றுத் துறைத் தலைவர்,
மதுரைக் காமராஜர் பல்கலைக் கழகம், மதுரை

டாக்டர் கே. ஆர். அனுமந்தன்,
பழங்கால வரலாற்றுத் துறைத் தலைவர்,
மதுரைக் காமராஜர் பல்கலைக் கழகம், மதுரை

பேரா. எம். வி. சுப்பிரமணியம்,
ஸ்ரீபுரம் விரிவாக்கம், திருநெல்வேலி சந்திப்பு

**மொழிபெயர்ப்பாளர்கள்**

திரு. மாணிக்கவேலு,
வரலாற்றுத் துறைப் பேராசிரியர்,
அரசினர் கலைக் கல்லூரி, சென்னை

திரு. வி. ராஜாராம்,
வரலாற்றுத் துறைத் துணைப் பேராசிரியர்,
தேர்வு முன்னிலைப் பயிற்சி நிலையம், சென்னை

**மேலாய்வாளர்கள்**

பேரா. டி. பாலசுப்பிரமணியம்,
வரலாற்றுத் துறைத் தலைவர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்

பேரா. சி. கே. பங்கஜாட்சி,
முதல்வர், டி. கே. எம். மகளிர் கல்லூரி, வேலூர்

**விலை: ரூ. 3-90**

இந்திய அரசு சலுகை விலையில் வழங்கிய 60 ஜி.எஸ்.எம். தாளில் இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது.

**அச்சிட்டோர்:**
**பிரேம் எண்டர்பிரைஸஸ், சென்னை - 600 015.**

# பொருளடக்கம்

# தோற்றுவாய்

## (INTRODUCTION)

நாகரிகச் சமுதாயத்தின் நான்கு அடிப்படிப்படைகளாக இருப்பவை, அரசாங்கம், அறநெறித் தொகுப்பு, கலைவளர்ச்சி, ஓரளவிற்குப் பொருளாதார வளம் ஆகியவையே என, நாகரிகத்தின் இலக்கணம் கண்ட தலைசிறந்த எழுத்தாளரான பேராசிரியர் டாயின்பி குறிப்பிட்டுள்ளார். இந்த உரைகல்லை வைத்துப் பார்த்தால், மனித வரலாற்றின் அடிநாளிலேயே நமது பாரத நாடு நனி சிறந்த நாகரிக நாடாக விளங்கியது உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெரியவரும். கிறிஸ்து பிறப்பதற்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வாழ்ந்த மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகத்தையே ஆரம்பமாகக் கொண்ட அத்துணைப் பழமையானது நமது நாகரிகம். அது என்றுமே தேங்கி நின்றதில்லை. நூற்றாண்டுகளோடு நடைபோட்டு வளர்ந்த வண்ணமிருந்தது. அவ்வாறு அது நடந்து வந்த பாதையில் அவ்வப்போது பல்வேறு கூறுகளைத் தன்னுள் அடக்கி நின்றது. அன்னியக் கருத்துகளைக் கைநீட்டி வரவேற்றது போலவே பிற நாகரிகங்களுக்குக் கைகொடுத்து உதவியும் வந்துள்ளது. இங்ஙனம் நமது நாகரிகத்தில் அன்னியக் கூறுகளைக் காணமுடிகின்ற போதிலும் அது இந்தியப் பண்பினை எப்போதும் இழந்ததில்லை. எனவே, பழமையும் பல்லாயிரமாண்டுகளாகியும் தொடர்பறாத நிலையும் அதன் தனிச் சிறப்புகளாகத் திகழ்கின்றன.

கிறிஸ்து பிறப்பதற்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் திகழ்ந்த சிந்துவெளி நாகரிகக் காலம் இந்திய நாகரிகத்தின் தொடக்கம் எனக்கொள்வர் அறிஞர். கி.மு. இரண்டாயிரத்தில் இந்தியாவிற்கு வந்த ஆரியர்கள் வேதகால நாகரிகத்திற்கு வித்திட்டனர். அதைத் தொடர்ந்து பழைய திராவிடக் கலாச்சாரத்திற்கும் புதிதாக வந்த ஆரியக் கலாச்சாரத்திற்குமிடையே கூட்டிணைவு (Synthesis) ஏற்பட்டது. இந்தியாவில் சில பகுதிகளைப் பாரசீகர் ஆண்டபோது இவ்விரு நாடுகளுக்கிடையேயான தொடர்பின் விளைவாகவும், அலெக்சாண்டரின் படையெடுப்பிற்குப் பின்னர் இந்தியாவிற்கும் கிரேக்க நாட்டிற்குமிடையேயான உறவின் விளைவாகவும்,

நமது நாகரிகத்தின்மீது பாரசீக, மற்றும் கிரேக்க சாயல் படிந்தது. ஐரோப்பா, ஆசியா, ஆப்பிரிக்கா ஆகிய மூன்று கண்டங்களிலும் உரோமானியப் பேரரசு பரவிநின்ற காலத்தில் உரோமானியக் கலாச்சாரத்தோடும் இந்தியா தொடர்பு கொண்டிருந்தது.

உரோமானியப் பேரரசு சீர்குலைந்த காலமுதல் 1498 ஆம் ஆண்டில் நன்னம்பிக்கை முனைவழியாக (Cape of Good Hope) இந்தியாவிற்குப் புதியவழி கண்டுபிடிக்கும் நாள்வரையில் இந்தியாவிற்கும் ஐரோப்பாவிற்கும் இடையேயான நேரடித் தொடர்பு அதிகமில்லை. இருப்பினும் மேற்கு ஆசியாவின் வலிமை பெற்று விளங்கிய அரேபியர் வாயிலாகத் தத்துவம், இசை, நடனம் முதலான இந்திய நாகரிகக் கூறுகள் மேலை நாடுகளுக்குச் சென்றன.

பதினைந்தாம் நூற்றாண்டின் முடிவில் ஐரோப்பியர் இந்தியா வந்தனர். ஆனால், ஆரம்பக்காலத்தில் அவர்கள் வாணிகத்திலேயே அக்கறை காட்டினர். பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலேதான் ஐரோப்பிய அறிஞருலகம், குறிப்பாக ஜெர்மானிய அறிஞர் சமஸ்கிருத மொழியையும் இந்திய தத்துவத்தையும் ஏற்றுப் பாராட்ட முன்வந்தனர். அண்மைக் காலத்தில், தொழில் நுட்ப வளர்ச்சி காரணமாகவும் அடிக்கடி நடைபெறும் இந்திய, ஐரோப்பிய அறிஞர்களின் பரிமாற்றம் காரணமாவும் இந்தியச் சிந்தனைச் செல்வமும் அறிவாற்றலும் மேலை நாடுகளில் அதிகமாகப் பரவியுள்ளன. அகிம்சை, சத்தியம், தர்மம் ஆகியவற்றின் அடிப்படையிலான மகாத்மா காந்தியின் சத்யாக்கிரக முறை, மேலை நாட்டுத் தலைசிறந்த மேதைகள் சிலரைக் கவர்ந்திழுத்தது.

இந்தியக் கலாச்சாரத்தின் செல்வாக்கு மேற்கில் மட்டும் பரவவில்லை. கிழக்காசியாவிலும், தென்கிழக்காசியாவிலும் அதன் செல்வாக்குப் படிந்துள்ளது. மத்திய ஆசியாவுடன் இந்தியா மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்ததன் விளைவாக ஏறக்குறைய ஆயிரமாண்டுகளுக்குப் பௌத்தப் பண்பாட்டின் நிலைக்களனாக விளங்கியது. மத்திய ஆசியா அங்கிருந்து சீனாவிற்கும், ஜப்பானுக்கும் கொரியாவிற்கும் திபேத்திற்கும் புத்தசமயம் பரவி அந்நாடுகளின் தனித் தன்மை வாய்ந்த கலாச்சாரங்களை உருவாக்கியது. தென்கிழக்காசிய நாடுகளுடன் இந்தியா கொண்டிருந்த

தொடர்பு, சிறப்பாக வாணிகத் தொடர்புதான் என்றாலும், வாணிகப் பொருள்களோடு இந்தியக் கலாச்சாரமும் அந்நாடுகளில் பரவியது.

பல்வேறு நாடுகளுடன் இந்தியா கொண்டிருந்த தொடர்பின் விளைவாக அந்நாடுகளின் கலாச்சாரங்களின் செல்வாக்கினை இந்திய நாகரிகம் ஏற்றதில் வியப்பொன்றுமில்லை. பாரசீகம், கிரேக்கம், ரோம், ஆகிய நாடுகளும், பின்னர் இஸ்லாமும் இந்தியாவின்மீது செல்வாக்குச் செலுத்தியுள்ளன. இந்நாட்டில் முகமதியர் ஆட்சி ஏற்பட்டதால் இந்திய முகமதியக் கலாச்சார இணைப்பிற்கு வாய்ப்புத் தோன்றியது. இந்தியாவில் ஆங்கிலேயரின் ஆதிக்கம் நிலைநாட்டப்பட்டதால் ஆங்கில மொழியறிவு வளர்ந்தது. ஆங்கிலக் கல்வி முறையினால் அறிவியல் கருத்துகளும் தொழில் நுட்பமும் நம்நாட்டிற்கு வந்தன. இவற்றினாலெல்லாம் பழமையான இந்திய வாழ்க்கைக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. இந்தியா விழித்தெழுந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இந்தியத் தத்துவத்தில் பகுத்தறிவு வாதம் புகுந்ததைக் காணமுடிகின்றது. இந்தியாவின் இப்புத்துணர்ச்சியின் விளைவாக நவீன பாரதம் எழுந்தது.

இத்தகைய இந்தியக் கலாச்சாரத்தின் பலநூற்றாண்டு வளர்ச்சியை இனிவரும் பக்கங்களில் காணலாம். இந்திய நாகரிகத்தின்மீது எந்த அளவிற்கு அன்னியரது செல்வாக்கு இருந்தது என்பதை, மதிப்பிடுதல் எளிதன்று. பொதுவாகச் சொல்வதானால் ஆரம்பக் காலத்தில் அன்னியக் கருத்துகளை ஏற்க இந்திய நாகரிகம் தயங்கியது. ஆனால் அவற்றினை ஒதுக்கித்தள்ளவும் அதனால் இயலவில்லை. காலப்போக்கில் இத்தகைய அன்னியக் கருத்துகளைத் தனக்கு இசைந்தவாறு மாற்றித் தன்னுடையதாக்கிக் கொண்டது. இங்ஙனம் அன்னியக் கருத்துகளை ஏற்கும்போது ஏற்படும் எதிர் உணர்ச்சிக் குறிப்புகளை (responses) எதிர்த்தாக்குதல் (recoil), மாற்றியமைத்தல், தன்மயமாக்குதல் எனப் பேராசிரியர் ஆர்னால்டு டாயின்பி வருணித்துள்ளார். இந்தியக் கலாச்சாரம், வெளிநாட்டுக் கலாச்சாரங் குறித்த அதன் எதிர் உணர்வுக் குறிப்புகள், உலக சிந்தனைக்கு அது ஆற்றிய தொண்டு ஆகியவற்றின் வரலாற்று விளக்கமே இந்நூலாகும்.

பகுதி — அ

# 1. நாகரிகத்தின் தோற்றம்

நாடோடிகளாகத் திரிந்த மக்கள் நிலையாக ஓர் இடத்தில் குடியேறி வாழ்வதை நாகரிகம் என்ற சொல்லால் குறிக்கலாம். மேலும், சீரான அரசாங்க முறைகளை அமைத்துக் கொண்டு, வாணிகத்தை வளர்த்து முன்னேற்றத்திற்குத் தகுதி படைத்தவர்களாக வாழ்கின்ற மக்களின் வாழ்க்கையை இச் சொல் குறிக்கும். இத்தகைய நாகரிகங்கள்—பண்டைப் பெரு நாகரிகங்கள் — ஆற்றுப்படுகைகளிலே (Valleys) எழுந்-




படம் 1. ஆசியா : நாகரிகம் வளர்ந்த ஆற்றுச் சமவெளிகள்

1. ஹவாங்கோ 2. யாங்சியாங்கு 3. சிந்துநதி 4. ஹரப்பா
5. மொகஞ்சதாரோ 6. யூப்ரடிஸ் 7. டைகிரிஸ்

துள்ளன. நைல், யூப்ரடீஸ், டைகிரிஸ், சிந்து, ஹோயாங்ஹோ அல்லது, மஞ்சள் ஆற்றுப் படுகைகளில் மிகப்பழங் காலத்-

திலேயே தலைசிறந்த நாகரிகங்கள் விளங்கி வந்தன. இங்ஙனம், ஆரம்பக்கால நாகரிகங்கள் ஆற்றுப் படுகைகளிலே தோன்றி வளர்ந்தன என்பதைக் காணவேண்டும். இயற்கை அன்னையின் அரவணைப்பு இல்லாத இடங்களில் குடியேறி வாழும் மக்கள், தங்களது வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகளையும் தேவையான பொருள்களையும் தேடிப் பெறுவதற்கு ஓயாது போராட வேண்டியிருக்கும். அப்படி ஓயாத வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும் மக்கள் நாகரிகத்தில் முன்னேற முடியாது. அதற்குமாறாகப் பேராறுகள் பாய்வதால் வண்டல்மண் படிந்த சமவெளிகளில் வாழும் மக்களுக்கு வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகள் எளிதாகக் கிடைத்து விடுகின்றன. உயிர்வாழ்வதைப் பற்றியே எண்ணிக் கொண்டிருக்காமல் மற்ற வாழ்க்கைத் தேவைகளைக் குறித்துச் சிந்திப்பதற்கு அவர்களுக்கு நிரம்ப அவகாசமும் ஓய்வும் கிடைக்கின்றன. எனவே, கிரேக்க அறிஞன் கனவுகண்ட 'நல்ல வாழ்க்கை' (Good life) அதாவது நாகரிக வளர்ச்சிக்கு உதவக்கூடிய நல் வாழ்க்கை, ஆற்றுப்படுகைகள் அல்லது சமவெளிப் பகுதிகளில் மட்டுமே அமையமுடியும்.

ஆயினும், சாதகமான சூழ்நிலை காரணமாக ஆற்றுப் படுகைகள் ஆரம்பக்கால நாகரிகங்களின் தொட்டில்களாக அமைந்த போதிலும், இயற்கைக் கூறுகளின் முக்கியத்துவத்தினை அளவுக்குமீறி வலியுறுத்துதல் அறிவுடைமையாகாது. அவ்விதம் செய்வதால், ஏதோ மாற்றமுடியாத இயற்கையின் நியதிகளுக்கு உயிரினங்கள் அடிமைப்பட்டுள்ளன என்றும், அங்கே மனிதனுக்கு அல்லது அவனது சுதந்திர எண்ணத்திற்கு எவ்விதச் சிறப்பும் இல்லையென்றாகி விடுமென்றும் அறிஞர்கள் குறிப்பிடுவர். உண்மையில், மனிதனுக்கும் அவனது சுற்றுப்புறச் சூழலுக்கும் இடையே ஏற்படும் செயல், எதிர்ச் செயல்களின் விளைவாகவே நாகரிகம் எழமுடியும்.

உயிரினங்களிலேயே மிகவும் பலங்குன்றியிருக்கும் மனிதன் தான் சுற்றுச் சூழலுக்கு ஏற்பத் தனது வாழ்க்கையை அமைத்துக்கொள்ளும் திறம்படைத்தவனாகவும், அந்தச் சூழலையே தன் தேவைகளுக்கேற்ப மாற்றியமைத்துக் கொள்ளும் வலிமை கொண்டவனாகவும் திகழ்கின்றான். பல இடங்களில் மனிதன் இயற்கை நிலைகளுக்கேற்பத் தன் பழக்க வழக்கங்களை மாற்றிக் கொண்டிருக்கின்றான். அதுபோலவே வேறு இடங்களில் இயற்கையை எதிர்த்துப் போராடியும் வந்துள்ளான். ஆற்றுப்படுகைகளில் நிலத்தைப் பண்படுத்திப் பயிரிடவும், வீட்டு விலங்குகளை வளர்க்கவும்

தொடங்கினான் மனிதன். அப்போது அங்கே சமுதாய அமைப்பு உருவானது. பொதுநலத்திற்காகத்தனிமனிதர்கள் தங்களுடைய உரிமைகளில் ஒவ்வொரு பகுதியை விட்டுக் கொடுக்க முன்வந்தனர். இவ்விதமாக மக்கள் கூடிவாழ்ந்து, கிராம வாழ்க்கையை அமைத்துக் கொண்டனர். நாளடைவில் நகர நாகரிகக் கூறுகள் அனைத்தும் இலங்கும் பெருநகரங்களும் தலையெடுக்கலாயின.

அத்தகைய நாகரிகங்களைப்பற்றி நாம முழுவதுமாக அறிய முடியவில்லை. பண்டைக்கால நாகரிகச் சின்னங்களின் இடிபாடுகளிலிருந்தும் வழிவழியாக வந்துள்ள மரபுகளிலிருந்தும் கிடைக்கின்ற செய்திகளையே நாம் ஆதாரமாகக் கொள்ளவேண்டியுள்ளது. மிகப்பழைய எகிப்திய நாகரிகத்தின் மாட்சிமை குறித்து, அந்நாட்டுப் பிரமிடுகள் அளவிறந்த செய்திகளைத் தருகின்றன. சிந்துவெளி நாகரிகத்தின் சிறப்பினை மொகஞ்சதாரோ - ஹரப்பா அழிபாடுகள் அறிவிக்கின்றன. பாபிலோனுக்கு அருகிலும், வடசீனாவிலும் நிகழ்ந்த புதைபொருள் ஆராய்ச்சிகள் முறையே சுமேரிய நாகரிகத்தைப் பற்றியும், சீனநாகரிகத்தைக் குறித்தும் செய்திகளைத் தருகின்றன.

நைல்நதி அல்லது எகிப்திய நாகரிகம், யூப்ரடீஸ்-டைகிரீஸ் ஆறு அல்லது சுமேரிய நாகரிகம், சிந்துவெளி நாகரிகம், மஞ்சள் நதி அல்லது சீன நாகரிகம் ஆகியவை, நாமறிந்த பண்டைப் பெரு நாகரிகங்களாகும். இந்த நாகரிகங்கள் ஒன்றிற்கொன்று தொடர்புற்றுக் கிடந்தன எனக் கூற இயலாவிட்டாலும், தனிப்பண்புகளும், தனிக்கூறுகளும் பெற்றுத் திகழ்ந்தன என அறிகிறோம். இவற்றில் வரம்பற்ற முடியாட்சி முதல் நிலமானியப் பிரபுக்கள் ஆட்சி வரை, (Feudal Oligarchies) பல்வேறு ஆட்சியமைப்புகள் விளங்கியிருக்கின்றன. பொருளாதாரத் துறையிலோவெனின் கட்டற்ற பொருளாதார அமைப்பு முதல், அரசுப் பொதுவுடைமைப் பொருளாதாரம் வரை, பலவகை அமைப்புகள் வழக்கில் இருந்திருக்கின்றன.

ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நைல்நதிக்கரையிலும் யூப்ரடீஸ்-டைகிரிஸ் ஆற்றங்கரைகளிலும் வாழ்ந்த நாகரிகங்களுக்கும், இக்கால எகிப்திய மற்றும் மெசபடோமிய பண்பாடுகளுக்குமிடையே தொடர்பறுந்து போயிருக்கும் நிலையில், இன்றைய இந்திய, சீன நாகரிகங்கள் மட்டும் அந்தந்த நாடுகளில் வாழ்ந்த ஆரம்பக்கால நாகரிகங்களுடன் தொடர்பு

கொண்டிருப்பது விந்தையானதே. சிந்துவெளியில் வாழ்ந்த நமது முன்னோர்கள் கொண்டிருந்த கருத்துக்களை ஒத்த கருத்துகள், நமக்கு எழுச்சியை ஊட்டுகின்றன. நமது உணர்ச்சிகளைத் தூண்டுகின்றன. நமது பழமையான நாகரிகம் அழிந்துவிடவில்லை. அதற்குமாறாகப் புதிய பண்பாடுகளின் கருத்துகளைத் தன்னுடையதாக்கிக்கொண்டு அது வளர்ந்துள்ளது கண்கூடு. நம்முடைய நாட்டைப்போலப் பலபடையெடுப்புகளுக்குள்ளாகிப் பல அன்னியரின் ஆதிக்கத்திற்கு ஆட்பட்ட நாடு எதுவும் இல்லையெனலாம். ஆனால் அதே சமயத்தில் நமது நாகரிகத்தைப்போல அதிக அளவில் பரவிய நாகரிகம் வேறு எதுவும் இல்லையென்றும் கூறவேண்டும். மனித நாகரிக வளர்ச்சிக்கு இந்தியாவின் தொண்டு மகத்தானது.

# 2. சிந்துவெளி நாகரிகம்

**முன்னுரை**

நமது நாட்டில் வாழ்ந்த பண்டைக்கால மக்களைப் பற்றி மிக அண்மைக் காலம்வரை வேதங்களிலிருந்தும் இதிகாசங்களிலிருந்துமே செய்திகளை அறிந்து வந்தோம். அதனால் கி.மு. 2000-ல் நடந்திருக்கக் கூடிய ஆரியர் படையெடுப்பிலிருந்துதான் இந்திய வரலாறு தொடங்கியது எனச் சிலர் நம்பிவந்தனர். ஆனால், வடமேற்கு இந்தியாவில் நடைபெற்ற தொல்பொருளாராய்ச்சியின் பயனாக இந்திய வரலாறு, ஆரியர் வருவதற்கு ஆயிரத்து இருநூற்றுஐம்பது ஆண்டுகளுக்கு முன்னதாகக் கொண்டு செல்லப்படுகின்றது.

ஒரு காலத்தில் இந்தியாவின் மீது படையெடுத்துவந்த அலெக்சாண்டர் தமது பேரரசின் கிழக்கு எல்லையைக் குறிக்கும் வகையில் கட்டியதாகக் கருதப்பட்ட பன்னிரண்டு பலிபீடங்களைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் போது இந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகத்தைச் சேர்ந்த சர். ஜான் மார்ஷல்; ஆர். டி. பானர்ஜி; எம். எஸ். வாட்ஸ் ஆகியோர் ஹரப்பா, மொகஞ்சதாரோ ஆகிய நகரங்களின் அழிபாடுகளைக் கண்டனர்.

அதன் பிறகு புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் விரிவான அகழ் ஆய்வினை (Excavations) மேற்கொண்டு, சிந்து மாநிலத்தில் லார்க்கானா மாவட்டத்தில் சிந்து ஆற்றின் வலக் கரையில் மொகஞ்சதாரோ என்னும் பாழடைந்த நகரையும், பஞ்சாப் மாநிலத்தில் மாண்ட்கோமரி மாவட்டத்தின் ராவி ஆற்றங்கரையில் சிதைந்த ஹரப்பா நகரையும் கண்டுபிடித்தனர். இவற்றை அடுத்து மொகஞ்சதாரோவிற்கு நூறு கல் தென்கிழக்கில் சான்ஹூதாரோ, அம்ரி ஆகிய இடங்களிலும், சிந்து ஆற்றின் மேல்கரையில் லொஹூம்ஜொதாரோவிலும், வட பலுச்சிஸ்தானத்தில் உள்ள சுர்ஜங்காலிலும், தென்பலுசிஸ்தானத்தில் உள்ள மெஹியிலும் நடைபெற்ற அகழ்வாய்வுகள் சிந்துவெளி நாகரிகத்தைப்போன்றதொரு வரலாற்றுக்கால முந்திய நாகரிகத்தின் நினைவுச் சின்னங்களை வெளிக் கொணர்ந்துள்ளன.

இவ்விதம் ஹரப்பாப் பண்பாடு என்றழைக்கப்படும் சிந்துவெளி நாகரிகம், டில்லியிலிருந்து குஜராத் வரையில்




படம் 2. சிந்துவெளி நாகரிக மையங்கள்

உள்ள மிகப் பரந்த நிலப் பரப்பில் விளங்கிய நாகரிகம் எனத் தெரியவருகின்றது.

இத்தகைய நகரங்களின் அழிபாடுகளிலிருந்து, ஆரியர்கள் வருவதற்கு முன்பே சிந்துவெளியில் வாழ்ந்த மக்களின் உயரிய நாகரிகத்தினை அறிய முடிகின்றது. சிந்து வெளி நாகரிகமானது செம்பு கற்கள் காலம் (Chalcolithic Age) அதாவது கற்கருவிகளும் செப்புக் கலன்களும் பயன்பட்ட

பண்பாட்டுக் காலமாகும். இதனால் இந்தக் காலத்தைக் கி.மு. 3,250 - 2,750 எனத் தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கணக்கிட்டுள்ளனர்.



படம் 3. மொகஞ்சதாரோ அழிபாடுகள்

**சமுதாய நிலை**

மொகஞ்சதாரோ நகரம் நன்கு திட்டமிட்டு அமைக்கப் பெற்ற நகரம் என்பதை அகழ்வாராய்ச்சிகள் காட்டுகின்றன. தெருக்கள் அகலமாகவும் நேராகவும் அமைந்துள்ளன. அவை நேர்க்கோணத்தில் ஒன்றோடு ஒன்று சேர்கின்றன. இந்நகரத்தின் பிரதான சாலை 10½ மீட்டர் அகலம் கொண்டது. இந்த நகரத்தில் மிகுதியான மக்கள் வாழ்ந்திருக்க வேண்டும். சுட்ட செங்கற்கள் கொண்டு வீடுகள் கட்டப்பட்டுள்ளன. இப்பகுதியில் கருங்கல் கிடைக்காமல் இருந்திருக்க வேண்டும். வீடுகளுக்குக் கடைக்கால் போடும்போதும் உலர்ந்த செங்கற்களையே அக்கால மக்கள் பயன்படுத்தி இருக்கின்றார்கள். ஒவ்வொரு வீட்டிலும் முற்றமும் பல அறைகளும் கட்டப் பெற்றுள்ளன. சில வீடுகள் பல மாடிகள் வைத்தும் கட்டப் பட்டுள்ளன. புறச்சுவர்களில் சாளரங்கள் இல்லை. உள் புறச் சுவர்களிலேயே அவை அமைக்கப்பட்டுள்ளன. மொகஞ்சதாரோ நகரத்தில் சிறந்த வடிகால் அமைப்புக் காணப்படுகின்றது. பூமிக்கடியில் சாக்கடைக் கால்வாய்களை அமைத்து



படம் 4. நகர அமைப்பு — சிந்துவெளி நாகரிகம்

இடையிடையே உள்ளே நுழைந்து சுத்தம் செய்வதற்கென்று ஆள் நுழையும் துவாரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. வீடுகளில் குளியல் அறைகள் இருப்பதுடன் தெருக்கிணறுகளும் பொதுக் குளங்களும் காணப்பெறுகின்றன. மொகஞ்சதாரோவில் கிடைத்துள்ள முக்கிய கண்டுபிடிப்புகளுள் 'பெருங்குளியல் இடமும் 'பெருங்குளமும்' (The Great Bath) ஒன்று. அதில் அகலமான படிகள் நீருக்கு இட்டுச் செல்கின்றன. மக்களின் வசதிக்காக என்று இக்குளக் கரையில் வரிசையாகப் பல அறைகள் கட்டப்பெற்றுள்ளன. மொகஞ்சதாரோ நகரில் நல்ல குடிதண்ணீர் வசதி இருந்திருக்க வேண்டும். இவற்றிலிருந்து சிந்துவெளி மக்கள் உடல் தூய்மையில் மிகுந்த நாட்டங்கொண்டிருந்தார்கள் என்பது தெரிகின்றது. வீட்டிற்கு முன்னால் குப்பைத்தொட்டிகள் வைக்கப்பட்டிருப்பதிலிருந்து சிந்து மக்களிடையே மிக நேர்த்தியான குடிமக்கள் உணர்வு (Civic sense) இருந்தது புலனாகின்றது.

ஹரப்பாக் கண்டுபிடிப்புகளிலிருந்தும் உயரமான வீடுகளிலும் பலமாடிக் கட்டிடங்களிலும் மக்கள் வாழ்ந்தார்கள் எனத் தெரிகின்றது. பலவீடுகளில் பெண்களுக்கும் விருந்தினர்களுக்கும் தனித்தனி அறைகள் இருந்திருக்கின்றன.

சிந்துவெளி மக்கள் குட்டையாகவும் பருமனாகவும் இருந்தார்கள் என்பதையும், சிறிய கண்கள் உடையவராக இருந்தனர் என்பதையும் அக்காலப் படங்களிலிருந்து அறிகின்றோம். ஆண்களும் பெண்களும், தங்கம், வெள்ளி, பீங்கான் (faience) ஆகியவற்றினாலான பல ஆபரணங்களை அணிந்திருந்தார்கள் எனத் தெரிகின்றது. கோதுமை, இறைச்சி, பால், காய்கறிகள் போன்றவைகளை அவர்கள் உணவாகக் கொண்டார்கள். நடனம், தாயக்கட்டை உருட்டுதல், சூதாடல் (Gambling) ஆகியவை அவர்களின் முக்கிய பொழுதுபோக்கு விளையாட்டுகள். சிந்துவெளி மக்களுடைய வாழ்க்கை, வசதியானதாகவும் நாகரிகம் மிகுந்ததாகவும் திகழ்ந்திருக்கவேண்டும். அக்கால மக்கள் கலையார்வம் மிக்கவர்களாகக் காணப்படுகின்றனர். சிந்துவெளியில் கண்டெடுக்கப்பட்ட முத்திரைகளில் திமில் பருத்த எருது, புலி, யானை, காண்டாமிருகம், முதலை போன்ற விலங்குகளின் உருவங்கள் அழகாகப் பொறிக்கப்பட்டுள்ளன. சிந்துவெளி முத்திரைகளில் எழுத்துகள் காணப்படுகின்றன. இங்குப் பயன்படுத்தப்பட்டுள்ள எழுத்து வடிவம் யாது என்பதை இனங்காண முடியவில்லை. குறிப்பிட்ட வார்த்தையை

அல்லது பொருளைக் குறிக்கும் குறிகள்போல் இவை காணப்படுகின்றன. இவற்றைச் சித்திர எழுத்து அல்லது கண்ணெழுத்து வகை எனலாம். புகழ்மிக்க இந்திய வரலாற்று அறிஞரான பாதர் ஹீராஸ் (Father Heras) சிந்துவெளி எழுத்துகளும் மொழியும், தமிழே என்று கூறியுள்ளார். சிந்து எழுத்து வடிவத்திலிருந்துதான் அசோகரின் கல்வெட்டுகளில் காணப்படும் பிராமி எழுத்து வடிவம் (Brahmi Sünoi) வந்திருக்க வேண்டுமென்று பேராசிரியர் லாங்டன் கருதுகின்றார்.

பொதுவாக இறந்தவர்களைக் கொளுத்தும் பழக்கத்தைச் சிந்துவெளி மக்கள் கொண்டிருந்தனர். சிலசமயங்களில் இறந்தவர்களைப் புதைப்பதும் உண்டு.

வில், ஈட்டி, குறுவாள், மழு முதலான ஆயுதங்களை அக்கால மக்கள் பயன்படுத்தினர்.

**பொருளாதார நிலை**

சிந்துவெளி நாகரிகம் அடிப்படையில் நகர நாகரிகமாகும். ஆனால், மக்கள் நகரங்களில் வாழ்ந்த போதிலும் வேளாண்மையே அவர்களது முக்கியத் தொழிலாக இருந்தது. சிந்து நதியும் அதன் துணை ஆறுகளும் பாய்வதால் சிந்துவெளியில் பயிர்த்தொழிலுக்கு வேண்டிய வசதிகள் பெருகி இருந்தன. அங்கு விளைந்த பொருள்களுள் கோதுமையும் பார்லியும் முக்கியமானவையாகும். வீட்டு விலங்குகளான மாடு, நாய் முதலானவைகளையும் யானை, ஒட்டகம் போன்றவற்றையும் மக்கள் பயன்படுத்தினர். வண்டிகளை இழுப்பதற்குத் திமில்பருத்த எருதுகளைப் பயன்படுத்திய சிந்துவெளி மக்கள் குதிரையைப்பற்றி அறிந்திருக்கவில்லை.

பல சிந்துவெளி முத்திரைகள் சுமேரியாவிலும், பல சுமேரியப் பொருள்கள் சிந்துவெளியிலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளதிலிருந்து சிந்துவெளிக்கும் மேற்கு ஆசியாவிற்குமிடையே பரவலான வாணிபத் தொடர்பு இருந்தது புலனாகின்றது. அக்காலத்திலேயே பலவித எடைக்கற்களும், அளவைகளும் பயன்படுத்தப்பட்டன.

சிந்துவெளியில் பல கைத்தொழில்கள் விளங்கி வந்தன. அவற்றுள் நெசவுத் தொழில் முக்கியமானதாகும். பருத்தியிலும் கம்பளத்திலும் நூல் நூற்று, ஆடைகள் நெய்ய அறிந்

திருந்தனர். அக்கால மக்கள் பலவித வண்ணங்கள் கொண்டு அச்சிட்டு ஆடைகளை அழகு செய்தனர். கைதேர்ந்த தச்சர்களும், கருமாரும், பொற்கொல்லரும், மணிக்கற்கள் பதிப்போரும், கொத்தரும் அங்கே வாழ்ந்திருந்தனர்; பீங்கான் மற்றும் உலோகத் தொழில்களும் சிந்துவெளியில் சிறந்து விளங்கின. அழகிய, வேலைப்பாடுமிகுந்த கட்டமட்பாண்டங்களை வீடுகளில் பயன்படுத்தியுள்ளனர். அக்கால மக்கள் பீங்கான், தங்கம், வெள்ளி ஆகியவைகளை அணிகலன்கள் செய்யப் பயன்படுத்தி வந்தனர். எனினும், இரும்பினை அவர்கள் அறிந்தார்கள் இல்லை.

ஹரப்பா கண்டுபிடிப்புகளுள் 'பெருங் களஞ்சியம் குறிப்பிடத்தக்கது. 42 மீட்டர் நீளமும் 40 மீட்டர் அகலமும் கொண்ட இப்பெருங் கட்டுக்கோப்பில் 7 மீட்டர் அகல இடைவழியில் இருகட்டிடங்கள் அமைந்துள்ளன. இவற்றிற்குக் கூரை இருந்திருக்கவேண்டும். மக்களிடமிருந்து வரியைப் பொருளாகப் பெற்று அவற்றை இக்களஞ்சியத்தில் சேமித்து வைத்திருக்க வேண்டும். 'பணியாளர் விடுதிகள்' என அழைக்கப்பட்ட அமைப்பும் ஒரு முக்கிய கண்டுபிடிப்பாகும். இதில் மொத்தம் பதினான்கு சிறிய வீடுகள் காணப்படுகின்றன. ஏழு ஏழு வீடுகள் கொண்ட இரு தொகுதிகள் இவை. நீளமான சந்து ஒன்றும், குறுக்கும் நெடுக்குமான பல சிறு சந்துகளும் இந்த வீடுகளுக்கிடையே அமைந்துள்ளன. பொதுவாக சிந்துவெளி வீடுகள் நீண்ட சதுரவடிவங் கொண்டவை. முற்றங்களும் இரண்டிரண்டு அறைகளும் வைத்துக் கட்டப்பட்டவை. இவற்றில் குளியல் அறைகளும் உள்ளன. இவற்றிலிருந்து கல்லினால் கட்டப்பட்ட சிறு கால்வாய்களும் ஒன்றோடொன்று நெருக்கமாகவே இணைந்துள்ள மண் குழாய்களும் கழிவுநீரைத் தெருவிலுள்ள சாக்கடைகளுக்குக் கொண்டு செல்கின்றன. இக்கண்டுபிடிப்புகளிலிருந்து அக்காலத்தில் தொழிலாளர்களின் நலன் நன்கு பேணப்பட்டது தெளிவாகின்றது.

மொகஞ்சதாரோ மக்கள் வெளி உலகுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்கள். சுமேரியாவுடன் உறவு இருந்தது என்பதை ஏராளமான சான்றுகள் மெய்ப்பிக்கின்றன. அதே போன்று எகிப்துடனும் கிரீட்டுடனும் வாணிகத் தொடர்புகள் இருந்ததும் தெளிவாகின்றது. சிந்துவெளி மக்கள் கடல்கடந்து வாணிகம் செய்திருக்கவேண்டும். பாய்மரம் இல்லாத கப்பல் ஒன்றில் மைய அறையும், மாலுமி

ஒருவன் சுக்கானுக்கருகில் அமர்ந்திருக்கும் காட்சியும் முத்திரை ஒன்றில் பொறிக்கப்பட்டிருப்பதிலிருந்து கடலோடும் கப்பல்களைச் சிந்து மக்கள் அறிந்திருந்தார்கள் என்பது உறுதியாகின்றது.

### சமயம்

சிந்துவெளி மக்களின் சமயம் குறித்து நாம் நன்றாக் அறிந்துகொள்ள இயலவில்லை. சிந்துவெளியில் கோயில்கள் இருந்தமைக்கான தடயங்கள் ஏதும் கிடைக்கவில்லை. பல கடவுளரை அக்கால மக்கள் வணங்கினர் என்பதை முத்திரைகள் காட்டுகின்றன. நரபலி கொண்ட தாய்க் கடவுளை (Mother Goddess) மக்கள் வணங்கி இருக்கின்றார்கள். கிடைத்துள்ள முத்திரை ஒன்றில் மூன்று முகங்கொண்ட கடவுள் யோக நிலையில் அமர்ந்திருப்பது போலவும், அதனைச் சுற்றி நான்கு விலங்குகள் இருப்பது போலவும் சித்திரிக்கப்பட்டுள்ளது. இக்கடவுள் 'பசுபதி' அல்லது விலங்குகளின் தலைவர் என்ற கருத்தில்வரும் சிவனாக இருக்க வேண்டுமென்று சர். ஜான்மார்ஷல் போன்ற பல அறிஞர்கள் கருதுகின்றனர். இங்ஙனம் இக்கால இந்துசமயத்தில் காணப்படும் சில முக்கியக்கூறுகள் அக்காலத்திலும் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக இலிங்கவணக்கம், அரசு போன்ற மரங்களை வழிபடுதல், எருதுபோன்ற விலங்குகளை வணங்குதல், நீரின் புனிதத் தன்மை, குளிப்பதன் சிறப்பு ஆகியவைகளைக் குறிப்பிடலாம்.

### வேதகால நாகரிகத்துடன் ஒப்பிடுதல்

மொகஞ்சதாரோ, ஹாரப்பா அழிபாடுகள் காட்டுகின்ற சிந்து மக்களுடைய சமுதாய, பொருளாதார வாழ்க்கையை நோக்கும்போது அது, பல நூற்றாண்டுகளாக வந்த வளர்ச்சியின் விளைவே என்பது தெளிவாகும். பின்னால் இந்தியாவிற்கு வந்த ஆரியர்களை விட மிகுந்த வாழ்க்கை வசதிகளையும் சுகங்களையும் சிந்துவெளி மக்கள் அனுபவித்திருக்கின்றார்கள். அவர்களுடைய நாகரிகம் நகர நாகரிகம். அவர்களது வாழ்க்கை நகர வாழ்க்கை என்பதுடன் பலதிறப்பட்ட சுகபோக வாழ்க்கையுமாகும். அதற்கு மாறாக ஆரிய நாகரிகம் எளிய கிராமிய நாகரிகமாகும். அது பயிர்த் தொழிலைப் போற்றும் முல்லை நில நாகரிகமாகும். இரண்டாவதாகச் சிந்துவெளி மக்களும் ஆரியர்களும் வேறுபடுவது அவர்கள் அறிந்த விலங்குகளைவைத்து எனலாம்: குதிரையும்

பசுவும் ஆரியர்களுக்கு மிகப்பிடித்தமான விலங்குகளாகும். ஆனால், சிந்துவெளி மக்கள் குதிரையைப்பற்றி அறியாதவர்கள். மேலும் அவர்கள் பசுவினைப் போற்றாமல் எருதையே கடவுளாக வணங்கினர். அதைப்போலவே சிந்துவெளி மக்கள் புலியையும் யானையையும் பற்றி நன்கு அறிந்திருந்தார்கள். ஆனால், ஆரியர்களோ புலியைப்பற்றி அறிந்ததாகத் தெரியவில்லை. யானையும் அவர்கள் அதிகமாக அறிந்த விலங்கு அன்று. சிங்கம் ஆரியருக்குப் பழக்கமானது; சிந்துவெளி மக்கள் அறியாதது. மூன்றாவதாகப் போர்க்கருவிகள் செய்வதற்கு ஆரியர் பயன்படுத்திய இரும்பினைச் சிந்துவெளி மக்கள் அறியவில்லை. நான்காவதாகச், சிந்துவெளி மக்கள் அமைதியை நாடியவர்கள். அவர்களிடையே போரிடும் பிரிவினர் இருந்தனர் என்பது தெரியவில்லை. அதற்கு மாறாக ஆரியர்கள் போரை விரும்பினர். அவர்கள் இந்தியாவிற்கு வருவதற்குமுன் இங்கு வாழ்ந்த மக்களுடன் பல போர்களை நிகழ்த்தியிருக்கின்றனர். ஐந்தாவதாக, ஆரியரும் சிந்துவெளி மக்களும் இறைச்சியை உண்டார்கள் என்ற போதிலும், சிந்துவெளி மக்கள் மீனைப் பெரிதும் விரும்பி உண்டனர். சிந்துவெளியில் பெருத்த அளவில் மீன் எலும்புகள் கண்டு பிடிக்கப்பட்டதிலிருந்து இதனை அறியலாம். ஆறாவதாகச் சிந்துவெளி மக்கள் மரங்களையும் விலங்குகளையும் வணங்கினார்கள்: கடவுளர்களையும் படிமங்கள் மூலமாக வழிபட்டார்கள். ஆனால், ஆரம்பக்கால ஆரியர்கள் இயற்கையை வழிபட்டார்கள்.

இவ்விரு நாகரிகங்களுக்கிடையே சில ஒற்றுமைப் பண்புகளும் இல்லாமல் இல்லை. உதாரணமாக இறைச்சி உண்ணுதல், தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களைப் பயன்படுத்தல், நூல் நூற்று ஆடைநெய்தல் போன்றவைகளைக் குறிப்பிடலாம் இருப்பினும் இவ்விரண்டிற்கும் இடையே காணப்பெறும் பலப்பல வேற்றுமைகளை நோக்கும்போது இவை இரண்டும் வெவ்வேறு மக்கள் கூட்டத்தினரால் வளர்க்கப்பட்ட நாகரிகங்கள் என்ற கருத்தைத்தான் கொள்ளமுடியும்.

**எகிப்திய சுமேரிய நாகரிகங்களுடன் ஒப்பிடுதல்**

ஏறக்குறைய எகிப்திய நாகரிகத்தையும் சுமேரிய நாகரிகத்தையும் ஒத்தது சிந்துவெளி நாகரிகம். மட்பாண்டம், கருவிகள், கலன்கள் ஆகியவற்றில் இந்த நாகரிகங்களுக்கிடையே பொதுவான ஒற்றுமை காணப்படுகின்றது. ஆயினும் ஒரு சில வேற்றுமைகள் இருக்கத்தான் செய்கின்றன.

இவை ஒவ்வொன்றும் தனித்தனி எழுத்து வடிவங்களைக் கொண்டிருந்தன. சிந்துவெளி மக்கள் பருத்தியைப் பயன் படுத்தினார்கள். ஆனால், எகிப்தியர் சணலைப் பயன்படுத்தி யுள்ளனர். எகிப்திலும் சுமேரியாவிலும் அரண்மனைகளும் கோயில்களும் காணப்படுகின்றன. ஆனால், சிந்துவெளியில் இவற்றைக் காண முடியவில்லை. மாறாகச் சாதாரண மக்களும் தொழிலாளர்களும் வாழ்வதற்கு வேண்டிய வசதிகள் பெருகியிருந்தன. சுமேரியாவில் சாதாரண மக்கள் குடிசைகளில் வாழ்ந்தனர். அங்கே குளிப்பதற்கான குளங்கள் இல்லை. சுமேரிய—எகிப்திய நாகரிகங்களைக் காட்டிலும் சிந்துவெளி நாகரிகம் உயர்வானது என சர். ஜான் மார்ஷல் கருதுகின்றார்.

சிந்துவெளி நாகரிகம் திராவிடர் நாகரிகம் என ஹீராஸ் போன்ற அறிஞர்கள் கருதுகின்றனர். ஆயின், தற்போது கிடைக்கும் சான்றுகளை வைத்து, இது ஆரியரல்லாதார் நாகரிகம் என்றும் ஆரியருக்கு முந்திய நாகரிகம் என்று மட்டுமே கூறமுடியும். அதாவது இந்தியாவிற்கு ஆரியர்கள் வருவதற்கு முன்பே ஆரிய இனத்தைத் சேராத மக்களால் வளர்க்கப்பட்ட நாகரிகமே சிந்துவெளி நாகரிகமாகும்.

# 3. வேதகால நாகரிகம்

## ஆரியரின் படையெடுப்புகள்

ஏறக்குறைய கி.மு. 2,000-ல் ஆரியர் என்றழைக்கப் படும் உயரமான, வெண்மை நிறங்கொண்ட, எடுப்பான மூக்கினையுடைய, மக்கள் கூட்டத்தினர் மத்திய ஆசியா விலிருந்து தங்கள் மனைவி மக்களுடன் குடிபெயர்ந்து. கைபர், போலன் கணவாய்களின் வழியாகப் பஞ்சாபில் குடி யேறினார்கள் எனச் சில அறிஞர் கருதுகின்றனர். அவர்கள் தாஸ்யூக்கள் என்று கூறப்பட்ட பழங்குடி மக்களை அநேகமாக ஒழித்துவிட்டனர். பிற்காலத்தில் சித்ரால், கில்ஜிட் கணவாய் களின் வழியாக மற்றுமோர் ஆரியக் கூட்டத்தினர் இந்தியா விற்கு வந்தனர். இப்போது அவர்கள் வந்தவழி மிகுந்த இடர்ப்பாடானது என்பதால், அவர்கள் மனைவி மக்களை உடன் அழைத்து வரவில்லை. கங்கைச் சமவெளியில் பரவிய ஆரியர்கள் தாஸ்யூக்களுடன் மணவினைத் தொடர்பு கொண்ட வராகத் தெரிகின்றது.

ஆரியருடைய ஆதியகம் குறித்து அறிஞர்கள் மாறு பட்ட கருத்துக் கொண்டுள்ளனர். மத்திய ஆசியப் புல்வெளி களிலிருந்து வந்தவர்கள் ஆரியர் எனப் பேரறிஞர் மாக்ஸ் முல்லர் குறிப்பிடுகின்றார். நம்முடைய பெருந் தேசியத் தலை வரான திலகர் (B. G. Tilak) ஆர்க்டிக் கடற் கரைதான் ஆரிய ரின் ஆதி வாழ்விடம் என அறிவிக்கின்றார். பேராசிரியர் கைல்ஸ் (Prof. Giles) ஹங்கேரி என்கின்றார். இவற்றுள் பேரறிஞர் மாக்ஸ் முல்லரின் (Max Muller) கருத்து பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. அநேகமாக மத்தியாசியப் புல்வெளிகள் ஆரியர்களுடைய ஆதிய கமாக இருந்திருக்கலாம். அங்கே இந்தோ-ஐரோப்பிய இனமக்கள் வாழ்ந்திருக்க வேண்டும். சிறிதுகாலத்திற்குப் பிறகு அவர்கள் பல்வேறு பகுதிகளில் குடியேறியிருக்க வேண் டும். சமஸ்கிருதத்திற்கும், கிரேக்கம், லத்தீன், ஜெர்மன் மற்றும் ஆங்கில மொழிகளுக்குமிடையே உள்ள ஒற்றுமை களைக் கொண்டு இந்தோ-ஆரியர்கள், இந்தோ-ஜெர்மானிய இனங்களைச் சார்ந்தவர் எனக் கொள்ளமுடியும். இந்தோ- ஐரோப்பிய இனங்களுள் (Indo-European Races) ஒரு பிரிவினர் ஈரானில் குடியேறினர் என்றும், நீண்டகாலத்

திற்குப் பிறகு அவர்களுள் ஒரு பகுதியினர் இந்தியாவிற்கு வந்து பஞ்சாபில் வாழத் தொடங்கினர் என்றும் நம்பப் படுகின்றது. வேதங்களின் மொழிக்கும் இரானியரின் வேத மாகிய 'ஸெண்டவஸ்தாவின் (Zend Avesta) மொழிக்கும் இடையே நிறைய ஒற்றுமை காணப்படுவதும், கப்படோ ஷியாவிலுள்ள பாக்ஹாங்காய் என்னுமிடத்தில் ஜெர்மானி யர் நடத்திய அகழ்வாராய்ச்சிகளும் இந்த நம்பிக்கையை உறுதி செய்கின்றன. வேதகாலத் தெய்வங்களான இந்திரன் வருணன் போன்றோரைக் குறிப்பிடும் கி.மு. 1400ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டுகளைப் பாக்ஹாங்காயில் நடை பெற்ற ஆராய்ச்சிகள் உலகிற்களித்துள்ளன. அவையும் இதனை வலியுறுத்துகின்றன.

ரிக்வேதத்தில் வரும் புவியியல் கூறுகள் பெரும்பாலும் ஆப்கானிஸ்தானத்தை உள்ளடக்கிய வடமேற்கு இந்தியா வையே குறிப்பதைக்கொண்டு ஆரியர்கள் முதலில் பஞ்சாபில் குடியேறினார்கள் என்பது தெளிவாகும்.

### வேதங்களும் அவற்றின் வரலாற்றுப் பயன்களும்

வேதம் என்ற சொல்லுக்கு அறிவு என்பது பொருள். இந்துக்களுக்கு அது புனிதமான அறிவாகும். பண்டைக் கால ஆரியர்களுடைய துதிப்பாடல்கள் அல்லது பாடல்கள் தலைமுறை தலைமுறையாக வந்தவை. சொற்களின் அமைப்பிற்கு முறையான முக்கியத்துவம் தந்து, வழிவழியாக வந்தவை. அவை ரிக், யஜுர், சாமம், அதர்வம் என்னும் நான்கு சம்ஹிதைகளாக அல்லது தொகுப்புகளாக நமக்குக் கிடைத்திருக்கின்றன. நாளடைவில் இதிகாசகாலத்தில் தான் வியாச முனிவர் இந்த வேதங்களையெல்லாம் வகைப்படுத்தி எழுதிவைத்துள்ளார்.

வேதங்களில் சிறந்த வேதமாகிய **ரிக் வேதம்** ஆரியர் களின் புனித நூலாகும். இது வேதங்களிலேயே மிக முக்கிய மானதும் மிகப்பழமையானதுமாகும். கடவுளின் புகழ்பாடு பாக்களைக் கொண்ட இதனைத் 'துதிப்பாடல் திரட்டு' என லாம். வேள்விச் சடங்குகளின்போது பாடப்படும் துதிப் பாடல்களைக் கொண்ட வேதமே யஜுர் வேதமாகும். இதன் பனுவல்களிற் பல ஆரியர்கள் கங்கைச் சமவெளியில் தங்களது ஆதிக்கத்தைப் பரப்பிய காலத்தில் இயற்றப்பட் டவையாகும். சாம வேதம் ஆரியர்களின் இசைப் பாடல் நூலாகும். இதில் ரிக் வேதத்திலிருந்து எடுக்கப்பட்டு ஒரு

குறிப்பிட்ட குருமார்கள் சோமா வேள்வியின்போது இசைப்பதற்கென்று பண்ணுடன் அமைக்கப்பெற்ற பனுவல்கள் நிறைந்துள்ளன. இத்தகைய ரிக், யஜுர், சாம வேதங்களே ''த்ரயிவித்யா'' (Troyi Vidya) முப்பெருவேதங்கள், எனப்படுபவை. பிற்காலத்தில்தான் அதர்வணம் வேதமாக ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆரியர்களின் மந்திரம், மாயம், மாந்திரிகம் ஆகியவை அடங்கிய நூல் இதுவாகும். ஆரிய திராவிட நாகரிகங்கள் கலந்தன என்பதற்கு இந்நூல் சான்றாக உள்ளது.

பண்டைக்கால பிரதான நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கூற வல்ல ஹெரடோடஸ் (Herodotus), தூஸிடைடஸ் (Thucidides) போன்ற வரலாற்று அறிஞர்களையோ அல்லது ஆங்கிலோ சாக்சானிய காலவழிச் செய்திக் கோவை (Anglo-Saxon-Chronicles) போன்ற ஏடுகளையோ இந்தியா பெற்றிருக்கவில்லை. எனவே, மிகப் பழங்காலத்தைப்பற்றி அறிந்து கொள்ள நாம் வேதங்களின் துணையை நாடவேண்டியுள்ளது. அளவிலே பெரியவை என்பதாலும், நன்கு பாதுகாக்கப்பட்டவை என்பதாலும் சம காலத்தவை என்பதாலும் வேத இலக்கியம் தரும் சான்றுகள் இதிகாசம், புராணங்கள் தரும் சான்றுகளைவிடச் சிறப்பு வாய்ந்தவையாகும். அவற்றின் பழமை உலகவரலாற்றில் அவற்றிற் கென்று ஓர் உன்னத இடத்தை அளித்துள்ளது. வேதங்களில் தரப்பட்டுள்ள நில இயல் செய்திகளிலிருந்து, இந்தியாவில் ஆரியநாகரிகம் பரவியதை அறிய முடிகிறது. ஆயினும், வரலாற்றுச் சான்றுகள் என்ற வகையில் வேத இலக்கியத்தில் இரண்டு குறைகள் உண்டு. முதலாவதாக, இதில் வரும் செய்திகள் கால முறைப்படி தரப்படுவதில்லை. இரண்டாவதாக, இது சமயச் செய்திகளையே அதிகமாகத் தருவது. சமயம் சாராத வாழ்க்கை பற்றிய குறிப்புகள் இங்கொன்றும் அங்கொன்றுமாக இருப்பதுடன், அவை கோவையாகவும் தரப்படவில்லை.

10,000-க்கும் மேற்பட்ட பனுவல்களைக் கொண்ட ரிக் வேதத்தில். 1,017 பாடல்கள் துதிப்பாடல்களாக இடம்பெற்றுள்ளன. இத்துதிப்பாடல்கள் குலவளர்ச்சி, கால்நடைகள், செல்வம், நீண்ட ஆயுள், தாஸ்யூக்கள் மீது வெற்றி கொள்ளுதல் ஆகியவை குறித்து இயற்கைத் தெய்வங்களை நோக்கிப் பாடப் பெற்றவையாகும்.

ரிக் வேதத்தில் வரும் புவியியல் குறிப்புகளிலிருந்து ஆப்கானிஸ்தானத்தின் வழியாக வந்த ஆரியர்கள் முதலில் வடமேற்கு இந்தியாவில் குடியேறினர் என்பது தெரியவருகின்றது. வடமேற்கு' இந்தியாவில் ஆரியர்கள் குடியேறிய பகுதியை 'சப்த சிந்தவா'' அல்லது 'ஏழு ஆறுகள்பாயும் நிலம்' என அழைத்தனர் நமது முன்னோர். சிந்து நதியும் அதன் துணை ஆறுகளும் ரிக் வேதத்தில் அடிக்கடிப் பேசப் பட்ட போதிலும், கங்கையும் யமுனையும் ஒருமுறை தான் குறிப்பிடப்பட்டுள்ளன. இமயத்தைப் பற்றி அறிந்த ஆரியர்கள் விந்திய மலையையும் நர்மதையையும் பற்றி அறிந் திருக்கவில்லை. அதைப் போலவே அவர்கள் சிந்து ஆற்றின் கழிமுகத்தைக் கண்டதில்லை. ரிக் வேதத்தில் வரும் ''சமுத்ரா'' என்னும் சொல் தேங்கிய நீரைத்தான் குறித்தது. இதன் பனுவல்கள் குறிப்பிடும் விலங்குகளும் மரவகைகளும் வடமேற்கு இந்தியாவைச் சார்ந்தவைகளாகும். பஞ்சாபில் வாழும் சிங்கம் அடிக்கடிக் குறிப்பிடப்பெற்றுள்ளது. ஆனால், வங்காளத்துப் புலி பற்றிய செய்தி ஏதும் இல்லை. பிற்பட்ட வேதகால இலக்கியத்தில் தான் புலியைக் காணமுடிகின்றது. 'மிருக ஹஸ்தின் (Mrigahastin) என யானையைக் குறிக்க வந்த சொல்லானது (ஒரு கையுடைய விலங்கு) அன்னியர்களாகிய ஆரியர்கள் கையாண்ட சொல்லாகவே காணப்படுகின்றது. பார்லியைப்பற்றிப் பேசும் ரிக்வேதம் வங்காளத்தில் விளையும் அரிசியைப்பற்றிக் குறிப்பிடாதது கவனத்துக் குரியது. இவற்றிலிருந்து ஆரியர்கள் வடமேற்கு இந்தியப் பகுதியைத்தான் முதலில் கைப்பற்றினர் என்பது வெள்ளிடை மலை. ரிக்வேதத்திலிருந்து, வடமேற்கு இந்தியாவின் அரசியல், சமுதாயப் பொருளாதார நிலைகளை அறிய முடியும்.

## ரிக் வேதகாலத்தில் (கி.மு. 2000 — 1500) அரசியல், சமுதாய, பொருளாதார, சமய நிலை

### அரசியல்

ஆரியர்கள் 'ஜனா' எனும் சிறுசிறு கூட்டங்களாக வாழ்ந் தனர். தாஸ்யூக்கள் அல்லது திராவிடர்களிடமிருந்து அவர் களுக்குக் கடுமையான எதிர்ப்பு இருந்தது. எனவே ஆரியக் கூட்டத்தினர் அவர்களுடன் போராடி வந்தனர். ரிக் வேதகால ஆரியர் முடியாட்சியைப் போற்றினர் எனத் தெரிகின்றது. சில கூட்டத்தார் அரசனைத் தேர்ந்தெடுத் தனர். வேறு சில கூட்டங்களில் அரச குடும்பத்தைச்

சேர்ந்தவர்கள் அதிகாரத்தைப் பகிர்ந்து கொண்டனர். ஏதோ ஒரு சில கூட்டத்தாரிடையேதான் அரசுரிமை வழி வழியாக வருதல் என்னும் வழக்கம் நிலவியது. எனவே ரிக் வேத காலத்தில் முடியாட்சி ஆரம்பக் கட்டத்தில் இருந்தது எனலாம்.

படையின் உயர் தனித் தலைவனாக மன்னன் விளங்கினான். போர்க்களத்தில் படைகளை முன்னின்று நடத்தினான். ஆனால், அமைதிக்காலத்தில் அவனுடைய செயல்களைக் குறித்து ஒன்றும் அறிய இயலவில்லை. தாஸ்யூக்கள் மீது கொண்ட வெற்றிக்காகக் கடவுளர்களுக்கு நன்றி கூறும் வகையில் அவன் பல வேள்விகளைச் செய்து வந்தான். தம் கூட்டத்தைச் சேர்ந்தவர்களுக்காகத் தெய்வங்களைத் தொழுத புரோகிதருக்கு நல்ல மதிப்பிருந்தது. அவருக்கு விலையுயர்ந்த பரிசுகளும் கிடைத்தன. பெற்ற பரிசுப் பொருள்களைப் பற்றிப் பெருமையாகப் புரோகிதர்கள் பாடிச் சென்றுள்ள துதிப்பாடல்கள் அக்கால மக்களின் சமூக, பொருளாதார நிலையினை நன்கு விளக்குகின்றன. அரசு தனது 'ஆரம்பக்' கட்டத்தில் இருந்த காரணத்தினால் மன்னனது முறை வழங்கும் அதிகாரங்கள் எளிமையானவையே. பெரும்பாலும் தனிப்பட்ட மக்களே குற்றங்களுக்கான தண்டனைகளை அளித்தனர். குற்றங்களுக்குக் கடுந் தண்டனை விதிக்காமல் கழுவாயாக இழப்பீடு கோரப்பட்டது. குற்றமிழைத்தவன் ஒறுக்கப்பட்டவனுக்குப் பசுக்களை இழப்பீடாகத் தரும் வழக்கம் இருந்தது. ரிக்வேத காலத்தில் அரசனின் வல்லாட்சியில்லை. படைத்தலைவர், புரோகிதர், யுவராஜா (இளவரசர்) ஆகியோர் அரசருக்கு உதவி செய்தனர். அக்காலத்தில் சட்டங்கள் செய்யவும், போர் மற்றும் சமாதானம் ஆகியவற்றை முடிவு செய்யவும் சமிதி (Samiti) எனும் மக்கள் சபையும் இருந்தது. சபா (Sabha) எனும் பெயரில் தலைவர்கள் அடங்கிய சிறுகுழு ஒன்றும் இருந்ததாகத் தெரிகின்றது. ஆனால், சபா என்பது ஒரு குழுவன்று என்றும் அது சமிதி கூடும் இடத்தையே குறிக்கும் என்றும் பேராசிரியர் கீத் என்பார் கருதுகின்றார். அக்காலத்தில் அரசு சிறியதாக இருந்ததால் அரசரின் வருவாயும் குறைவு; படை வலிமையும் குறைவானதே.

போர்க்களங்களில் அரசரும் பிற தலைவர்களும் குதிரை பூட்டிய தேர்களில் ஏறிச்சென்றனர். மற்றவர்கள் காலாட்படையினராகப் போரிட்டனர். வாள், கோடரி

மழுப் போன்ற ஆயுதங்கள் தாக்குவதற்கும் பயன்பட்டன. தற்காப்பிற்காக மார்புக்கவசத்தையும் பச்சைத் தோலினா லான கேடயங்களையும் போர்க்களத்தில் பயன் படுத்தினர். குதிரைப்படை குறித்து ரிக்வேதத்தில் செய்தியில்லை.

**சமுதாயம்**

பெரும்பாலும் மண் சுவர் சூழ்ந்த கிராமங்களிலேயே அக்கால மக்கள் வாழ்ந்து வந்தனர். வீடுகள் நன்கு அமைக்கப்பட்டன. பல கிராமங்கள் சேர்ந்தது விஸ் (Vis) அல்லது மாவட்டமாகவும், பல விஸ்கள் சேர்ந்தது ஓர் ஜனமாகவும் (Jana) விளங்கின. சமுதாயத்தின் அடிப்படை குடும்பமே யாகும். குடும்பத்தின் தலைவர் தந்தை, குடும்பத்தில் இருந்த மற்றவர்கள் மீது அவர் வரம்பற்ற அதிகாரம் செலுத்தினார். ஒருவன் ஒருத்தியை மணத்தல் பொது விதியாகும். ஒழுக்கம் உயர்நிலையில் இருந்தது. குழந்தைகள் திருமணம் இல்லை. புதுமணப் பெண்ணைக் குடும்பத்தில் வரவேற்பதற்கென்று மிக அழகிய பாடல்கள் சில ரிக்வேதத்தில் காணப்பெறுகின்றன. 'சமுதாயத்தில் பெண்களுக்கு மதிப்பான இடமிருந்தது. லோபாமுத்திரை (Lopa Mudra), அபாலா (Apala) போன்ற சில பெண்கள் கல்வியறிவுமிக்கவர்களாகத் திகழ்ந்தனர். பல பனுவல்களை இயற்றும் வல்லமை பெற்றிருந்தனர். சில சூழ்நிலைகளில் விதவைகள் மறுமணம் செய்துகொள்ள அனுமதிக்கப் பட்டனர். சதியெனும் உடன்கட்டையேறும் கொடுமை இல்லை. ஆயினும் மகள் பிறப்பதைக்காட்டிலும் மகன் பிறப்பதையே மக்கள் வரவேற்றனர். ரிக்வேதகாலத்தில் ஜாதி முறை இருந்ததாகத் தெரியவில்லை. நிறத்தின் அடிப்படையில் சமுதாயப் பிரிவுகள் ஆங்கே அமைந்திருக்கவேண்டும். வெண்மைநிற ஆரியர் என்றும் கருப்பு நிற தாஸ்யூக்கள் என்றும் பிரிவினைகள் இருந்தன. சமுதாயப் பிரிவினரிடையே சமபந்தி போஜனமும் கலப்புத் திருமணமும் பொதுவாக நிகழ்ந்தன.

ஆடவரும் பெண்டிரும் பகட்டான ஆடை உடுத்தி அழகிய அணிகலன்களை அணிந்து மகிழ்ந்தனர். கழுத்து அட்டிகை, காப்பு, ஒட்டியாணம், காதணி, ஹாரம் முதலியவை அவர்தம் முதன்மையான அணிகலன்களாகும். இறைச்சி, பால், வெண்ணெய், நெய், காய்கறிகள், பார்லி ஆகியவை மக்களின் உணவுப் பொருள்களாயின. பொதுமக்களின்

பானமாகிய சுராபானம் (Sura) பார்லியிலிருந்து வடிக்கப்பட்டது. செல்வர்கள் அருந்தும் சோமபானம், இமய மலைச்சாரலில் விளையும் ஒருவகைச் செடியின் சாறாகும்.

நடனம், இசை, தேர்ப்பந்தயம் ஆகியவை ஆரியர்களின் சிறந்த பொழுதுபோக்காக விளங்கின. ஆரியர்கள் இன்பமாக வாழ்வதில் நாட்டங்கொண்டவர்கள். எனினும் ஆரியசமுதாயத்தில் சில கேடுகள் இல்லாமல் இல்லை. பெண் குழந்தைகளையும் முதியவர்களையும் இயற்கைக்கு அளித்தல், குடிமயக்கத்தில் இருத்தல், சூதாட்டம், முதலிய தீமைகளைக் குறிப்பிடலாம். நோய்களுக்குக் காரணம் கெட்ட தேவதைகள்தான் என ஆரியர்கள் நம்பியதால் மருத்துவத்துறையில் அதிக முன்னேற்றம் ஏற்பட வில்லை. மொத்தத்தில் ரிக்வேத கால ஆரியருடைய வாழ்க்கை, விருவிருப்பானதாக, ஊக்கம் நிறைந்ததாக அமைந்திருந்தது.

**பொருளாதார நிலை**

ரிக்வேதகால ஆரியர்கள் சிறப்பாக ஆடு மாடுகளை மேய்க்கும் கூட்டத்தினர். கால்நடைகளே அவர்களது சிறந்த செல்வம். பண்டமாற்று முறையில் வாணிபம் நடந்தது. அச்சிட்ட நாணயம் வழக்கிலில்லை. பசுவை ஆரியர்கள் பெரிதும் மதித்தனர். அதனையே மதிப்பின் அளவையாகவும் கொண்டனர் அவர்கள் பயிர்த்தொழிலிலும் ஈடுபட்டனர்: பார்லி, பீன்ஸ் போன்றவைகளைப் பயிரிட்டனர். ஆனால், அரிசியை உற்பத்தி செய்யவில்லை. வேட்டையாடுவதை அதிகமாக விரும்பிய ஆரியர்கள் மீன் பிடிப்பதில் ஆர்வம் காட்டவில்லை. உலோகத் தொழில், மரவேலை, தோல்பதனிடுதல், பாய்முடைதல் போன்ற பல கைத்தொழில்கள் பற்றிய குறிப்புக்கள் ரிக்வேதப் பனுவல்களில் காணக்கிடக்கின்றன. உழைப்பின் உயர்வைப் போற்றியவர்கள் ஆரியர்கள். வீட்டு வேலையிலோ, பயிர்தொழிலிலோ அல்லது விவசாயத்திலோ அடிமைகளைப் பயன்படுத்தவில்லை.

**சமய நிலை**

ரிக்வேதகால ஆரியருடைய சமயத்தின் அடிப்படை 'இயற்கை' வணக்கமாகும். ஆரியர்கள் முதலில் இயற்கையைக் கண்டு அஞ்சினர். பிறகு அதனைக் கண்டு வியந்தனர். இறுதியில் அதனையே வழிபடவும் முற்பட்டனர். இயற்கைச் சக்திகளை உருவகித்து அவற்றை வணங்கலாயினர்.

அக்கினி அவர்களது தீக்கடவுள் (Fire God). ரிக்வேதத்தின் முதற்பனுவலே அக்கினியைக் குறித்துப் பாடப்பெற்றதாகும். ஆரியர்கள் சூரியனை வழிபட்டார்கள். காயத்ரீ என வழங்கும் ரிக்வேதத்தின் மிகப் புனிதமான பனுவல், உதிக்கும் சூரியனைப் போற்றும் பாடலே. இந்திரனை ஆரியர்கள் மழைக் கடவுளாகவும் போர்க்கடவுளாகவும் வணங்கினர். வருணனை ஒழுக்கநெறிக் கடவுளாக வழிபட்டனர். அஸ்வின்களைத் தெய்வீக மருத்துவர்களாகப் போற்றினர். எமனை இறப்புக் கடவுளாகக் கொண்டனர். செம்மைபடர்ந்த காலைச் சிறுபொழுதை (உஷத் காலம்) அழகிய உஷாவாக உருவகித்து வழிபட்டனர். மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோரும் சரஸ்வதி, இலக்குமி, பார்வதி என்னும் அவர்களின் தேவியரும் ரிக்வேதத்தில் இடம்பெறவில்லை. கோயில்களோ உருவ வழிபாடோ அக்காலத்தில் இல்லை. குடும்பமே கோயில். குடும்பத்தலைவரே புரோகிதராகத் திகழ்ந்தார். வேள்விகளில் கடவுளர்களுக்குச் சோமபானம் அவிர்ப்பாகமாக வழங்கப்பட்டது. ரிக்வேதகால இறுதியில், உலகத்தைக் காக்கவும் கட்டுப் படுத்தவும் வல்ல முழுமுதற் பொருள் ஒன்று உண்டு என்னும் கருத்தை ஆரியர்கள் கொண்டிருந்தனர்.

## பிற்பட்ட வேதகாலத்தில் அல்லது இதிகாச காலத்தில் (கி.மு.1500-1000) அரசியல், பொருளாதார, சமயநிலை

யஜுர், சாமம், அதர்வம் ஆகிய 'பிற்கால வேதங்களும், பிராம்மணங்களும் எழுந்த காலத்தைப் பிற்பட்ட வேதகாலம்' என்கிறோம், இக்காலத்தில் இதிகாசங்களான இராமாயணமும், மகாபாரதமும் உருவானதால் இக்காலத்தை இதிகாசகாலம் அல்லது வீரகாவியக் காலம் என்றும் அழைக்கின்றோம். சச்சிதானந்தமயமான (Truth, Spirit, Bliss) பிரம்மம், துதிப் பாடல்கள், வேள்விச் சடங்குகள் ஆகியவை பற்றிய உரைநடை விளக்கங்களே பிராம்மணங்களாகும் கி.மு. 1,500 அளவில் மக்கள் பேசிய மொழி பெரிதும் மாறுபட்டிருந்ததால் வேதப்பனுவல்களுக்கான விளக்கம் தருவதில் அறிஞர்களிடையே மாறுபட்ட கருத்துகள் மலியலாயின. எனவே, வேதப்பனுவல்களின் உண்மைப் பொருள், வேள்விகளுடனான அவற்றின் தொடர்பு, வேள்விகளின் குறிப்புப் பொருள் ஆகியவை குறித்து இத்தகைய அதிகாரபூர்வகமான உரைநடை-விளக்கங்கள் தேவையாயின. இந்த விளக்க

உரைகளில் புராணக்கதைகளும், மரபுரைகளும் தத்துவங்களும் மண்டிக்கிடப்பதால் வரலாற்று ஆசிரியர்களுக்கு இவை பெரிதும் பயன்படுகின்றன.

பிராம்மணங்களின் கடைசிப்பகுதிகள் ஆரண்யகங்கள் எனப்பெயர் பெறுகின்றன. காரணம் அவற்றில் பொதிந்து கிடக்கும் மறை பொருள்களைத் தீக்கை பெறாதவர்களுக்கு (uninitiated) உபதேசிக்க முடியாது என்பதுமட்டுமல்லாமல் அவற்றைக் காடுகளில்தான் கற்றுக் கொள்ளவேண்டுமென்பதுதான் இவை உபநிடதங்களுக்கு கட்டியங்கூறுபவையாகும். அதாவது மிகப்பழமையான சில உபநிடதங்கள் ஆரண்யங்களில் இடம் பெற்றுள்ளன. புகழ்பெற்ற பண்டைக்கால தத்துவ விசாரணைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளதால் இவை முக்கியமாகின்றன. உபநிடதங்கள் பிறிதொரு வகையான இலக்கியமாகும். இவை காலங்கடந்து, இனங்கடந்து, தேசங்கடந்து மக்களை ஈர்க்கவல்ல, ஆத்மசக்தி பற்றிய இலக்கியம் என வருணிக்கப்படுகின்றன ஜெர்மன் நாட்டுத் தத்துவ ஞானிகளைக் கவர்ந்திழுத்து, அவர்களின் ஒருமித்த போற்றுதலைப் பெற்றவை இந்த உபநிடதங்களாகும். எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சங்கரர், பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த மத்துவர் ஆகிய இருபெரும் இந்துசமயச் சீர்திருத்தச் செம்மல்கள் இந்த உபநிடதங்களுக்கு சமஸ்கிருதத்தில் விளக்கவுரைகள் எழுதியுள்ளனர். ஷாஜஹானின் மூத்த மகனான தாரர்ஷுக்கோவும் இவற்றைப் பாரசீகத்தில் மொழி பெயர்த்துள்ளார். வேதாந்தத் தத்துவத்தின் வேரே உபநிடதங்கள் எனலாம்.

இருபெருங்காப்பியங்களான இராமாயணமும், மகாபாரதமும் ஓரளவிற்கு வரலாற்றுச் சான்றுகளாகச் பயன்படுகின்றன. பிற்காலத்தில் வந்த புலவர்களும் தொகுப்பாசிரியர்களும் இவற்றைக் கூட்டியும், குறைத்தும், மாற்றியும் சிதைத்தும் எழுதியுள்ளதால் இவைகளை முழுக்க முழுக்க வரலாற்று இலக்கியங்கள் எனக் கருத முடியவில்லை. இவற்றில் மூலப்பகுதிகள் எவை, பிற்சேர்க்கை எவை என்பதைப் பிரித்தறிந்தால் இவை அதிகம் பயன்படலாம். குறைபாடுகள் இருப்பினும் இவை தரக்கூடிய செய்திகளிலிருந்து இதிகாச அல்லது வீரகாப்பியக் காலத்தைப் படம்பிடித்துக் காட்டமுடியும்.

**அரசியல் நிலை**

கி.மு. 1,500 முதல் 1,000 வரையில் ஆரியர்கள் பஞ்சாபிலிருந்து கங்கைச் சமவெளிக்கு மெள்ள மெள்ளப் பரவினார்கள். இக்காலத்தில் கடப்பதற்கரிய சித்ரால், கில்ஜிட் கணவாய்களின் வழியாக இரண்டாவது முறையாக ஆரியர் கூட்டங்கள் இந்தியாவிற்கு வந்திருக்க வேண்டும். வட இந்தியாவில் பலபகுதிகள் குடியேறிய ஆரியக் கூட்டங்களின் பெயராலேயே அழைக்கப்பட்டன. மகதர்கள் வாழ்ந்த பகுதி மகதம் என்றும் காசிகள் வாழ்ந்த பகுதி காசியென்றும், அங்கர் குடியேறிய பகுதி அங்கம் என்றும், சேடிகள் வாழ்ந்த பகுதி சேடியென்றும், பாஞ்சாலர் பரவிய பகுதி பாஞ்சாலம் என்றும் பெயர் பெற்றன. காப்பியங்களில் குறிப்பிடப் பெற்றுள்ள கூட்டத்தினருள் குருக்கள் (Kurus). பாஞ்சாலர்கள், கோசலர்கள், காசிகள், விதேகர்கள் புகழ் மிக்கவர்கள்.

முடியாட்சியே பொதுவான அரசாங்க அமைப்பாக இருந்தது. ஆனால், இதிகாசகால மன்னர்கள் ரிக்வேத கால அரசர்களைவிட அதிகாரம் மிக்கவர்களாக விளங்கினர். சிறுசிறு அரசுகள் வலிமை மிக்க அரசுக்கு இரையாயின. வலிமைவாய்ந்த மன்னர்கள் 'ஏக்ராட். சாம்ராட்', 'அதிராட்,' முதலான பட்டங்களைக் கொண்டனர். தங்களுடைய பேரரச நிலையை உலகிற்கு எடுத்துக் காட்ட அவர்கள் அஸ்வமேத வேள்வி செய்தனர். ஸ்ரீராமர்; யுதிஷ்டிரர் கார்த்தவீரியர், மந்தாதர் போன்ற மன்னர்கள் அஸ்வமேத வேள்வி செய்தவர்களிற் சிலர். மன்னரின் அதிகாரம் பெருகப் பெருக சமிதியின் அதிகாரம் குறைந்துவந்தது. அரசியல் நிலையும் வேதகாலத்தில் இருந்ததைப் போன்று எளிதாக இல்லை. அரசியல் மேலாண்மையை நிலைநாட்ட மன்னர்கள் திக்விஜயங்களை நடத்தினர். குருக்ஷேத்திரச் சண்டை முடிந்ததும் பீஷ்மரும் யுதிஷ்டிரரும் தெய்வீக உரிமை, மற்றும் சமுதாய ஒப்பந்தம் (Theories of Divine Right and Social Contract) ஆகிய கோட்பாடுகள் பற்றிய விவாதம் நடத்தினார்கள் என்ற செய்தி குறிப்பிடத்தக்கது.

ரிக்வேதகால அரசர்களுடன் ஒப்பிடும்போது பிற்பட்ட வேதகாலத்து வேந்தர்கள் பெரும் பொருள் படைத்தவர்களாக இருந்தனர். அவர்களுடைய வருவாய் இனங்கள் பல்கியிருந்தன. நிலவரி அவர்களது முக்கிய வருவாயாகும். காடுகள், சுரங்கங்கள், உப்பளங்கள் முதலியவற்றிலிருந்து பெறும் வசூலும் சுங்கவரிகளும் அவர்தம் வருவாயை

அதிகரித்தன. இக்காலத்தில் ஆட்சிமுறை சிக்கலாகி விட்டதால் அரசருக்கு உதவப் பல அதிகாரிகள் இருந்தனர். இக்காலத்தின் இறுதிக் கட்டத்தில் மிதிலைபோன்ற நாடு களில் முடியாட்சி மறைந்து உயர்குடியினர் ஆட்சி (aristocracy) தோன்றியது.

### சமுதாய நிலை

ரிக்வேதத்தில் 'புருஷ சூக்தம்' (Purushasukta) ஒன்றில்தான் நான்கு ஜாதிகளைப் பற்றிய குறிப்பு வருகின்றது. இதனையும் சில அறிஞர்கள் இடைச் செருகல் எனக் கருதுகின்றனர். வரலாற்று ரீதியாகப் பார்ப்போமானால், வெற்றி பெற்றவர், தோல்வியுற்றவர்களுக்கிடையேயான ஆரம்பக் காலப் பிரிவினையிலும், அதை அடுத்து நாகரிகம் முன்னேறும் போது வெற்றியாளர்களிடையே தோன்றக் கூடிய பிரிவினைகளிலும் ஜாதி முறையின் ஆரம்பத்தைக் காணலாம். ஜாதி முறையானது முதலில் நிற அடிப்படையில் மக்களைப் பிரித்துக் காட்டியது. எடுத்துக்காட்டாக வெள்ளை நிறங்கொண்ட ஆரியரிடமிருந்து கருப்பு நிறத்தவரான தாஸ்யூக்களைப் பிரித்துக் காட்டியது. இங்ஙனமாக ஜாதிமுறை ரிக்வேத காலத்தில் தோன்றியிருக்கலாம். ஆனால், அது தோலின் நிறத்தை அடிப் படையாகக்கொண்டே இருந்திருக்க வேண்டும். பிராம்மணங்கள் உபநிடதங்கள் எழுந்த காலத்தில், ஆரியர்கள் கங்கைச் சமவெளியில் பரவிய நேரத்தில், மக்கள் தொகை பெருகிய நிலையில், செய்யும் தொழில் அடிப்படையில் சமுதாயப் பிரிவினைகள் தோன்றியிருக்க வேண்டும்.

சமய இலக்கிய வளர்ச்சியும் வேள்விச் சடங்குகளின் பெருக்கமும் புரோகிதப் பிராமண வகுப்பு தோன்றக் காரணமாக இருந்திருக்கலாம். தாஸ்யூக்களுடன் போரிட வேண்டிய அவசியம் காரணமாகவும், சிறு அரசுகளை இணைத்துக் கொள்வதற்காக மன்னர்கள் நிகழ்த்திய போர்களின் விளைவாகவும் 'க்ஷத்திரிய' வகுப்புத் தோன்றியிருக்க வேண்டும். பயிர்த்தொழிலிலும் வாணிகத்திலும் ஈடுபட்டிருந்தவர்கள் 'வைசியர்' எனவும், எடுபிடி வேலைகள் செய்தவர்கள், 'சூத்திரர்' என்றும் பெயர் பெற்றிருக்க வேண்டும். இருப்பினும் அக்காலத்தில் ஜாதி முறையில் நெகிழாத்தன்மை இல்லை என்பதை மறந்துவிடல் ஆகாது. பிறப்பால் பிராமணர்களான துரோணர், அஸ்வத்தாமன், கிருபர் போன்றோர் புகழ்மிக்க போர் வீரர்களாக விளங்கினர். அதேசமயத்தில்

க்ஷத்திரியர்களாகப் பிறந்த மிதிலையின் ஜனகரும், பீஷ்மரும் தத்துவ ஞானிகளாகப் புகழ்கொண்டனர். இராமாயண காப்பியத்தின் ஆசிரியரான வால்மீகி ஒரு வல்வில் வேடன். வேதங்களைத் தொகுத்தளித்தவரும், மகாபாரதத்தை இயற்றியவருமான வியாச முனிவர் ஒரு மீனவர். காப்பிய காலத்திலும் ஆரியருக்கும் தாஸ்யூக்களுக்குமிடையே கலப்புத் திருமணங்கள் நடந்தன என்பதற்கு இராமர், கிருஷ்ணர், திரௌபதி போன்ற காப்பிய நாயகர்களும், நாயகியரும் கருமை நிறங்கொண்டவர்கள் என்ற குறிப்பை ஆதாரமாகக் கொள்ளலாம்.

காலப்போக்கில் ஜாதிமுறையில் இருமாற்றங்கள் தோன்றின. தொழில் அடிப்படையில் வந்த சமுதாயப் பிரிவுகளின் விளைவாக எழுந்த ஜாதி முறையானது, மெதுவாகப் பிறப்பினை அடிப்படையாகக் கொண்டது. இரண்டாவதாக, ஜாதிமுறை நெகிழாத் தன்மை (Rigidity) கொண்டதாகிச், சமபந்தி போஜனமும் கலப்புத் திருமணங்களும் தடைசெய்யப்பட்டன.

எவ்வாறெனினும், பண்டைய கிரேக்கத்திலும் உரோமிலும், இடைக்கால ஐரோப்பாவிலும் இருந்த அடிமை முறையைப் போன்று அத்துணைத் தீமையானதன்று பண்டைக்கால இந்திய ஜாதிமுறை என்பதை மனத்தில் கொள்ள வேண்டும்.

காப்பியக்காலத்திலும் தந்தையைத் தலைவனாகக் கொண்ட குடும்பமே சமுதாயத்தின் அடிப்படையாக இருந்தது. குடும்பத்தின் மற்ற உறுப்பினர்கள் மீது அவர் கட்டற்ற அதிகாரம் கொண்டிருந்தார். ஒரு தாரமணம் பொதுவிதியாக இருந்த போதிலும் அரச குலத்தவர் பல பெண்களை மணக்கும் வழக்கம் கொண்டிருந்தனர். குழந்தைத் திருமணமுறை இல்லை. வயது வந்தபின் திருமணம் என்பது இயல்பான ஒன்று. ரிக்வேத காலத்தைப் போலவே காப்பியக் காலத்திலும் கல்வி கற்ற பெண்கள் இருந்தனர். விஸ்வாரா, கோஷா, அபாலா, உலோபாமுத்திரை, முட்காலனி போன்ற பெண்கள் ரிக்வேதப் பாடல்கள் இயற்றும் புலமை பெற்றிருந்ததைப்போல, உபநிடதங்களில் யக்ஞுவால்கியரை அவருடைய மனைவியே கேள்விகள் கேட்டதாகவும், அவருடன் கார்க்கி என்னும் பெண்மணி வாதப்போர் செய்ததாகவும் குறிப்பு வருவதைக் கொண்டு பெண்களின் கல்வி நிலையைப்பற்றி உணரமுடியும். போட்டியில் யக்ஞுவால்கியர்

வெற்றி பெற்ற போதிலும் தத்துவ விசாரணையில் பெண்கள் கொண்ட பங்கினை இக்குறிப்பு எடுத்துக் காட்டுகின்றது. ஆசிரியைகளும் அக்காலத்தில் இருந்தனர். ஆடவரைவிடப் பெண்களின் நிலை தாழ்ந்திருந்த போதிலும் சமயச்சடங்குகளில் ஆண்களுடன் பெண்களும் பெரும்பங்கு கொண்டனர். ஆனால் விதவைத் திருமணத்திற்குத் தடையிருந்தது. மகாபாரதத்தில் அர்ஜுனன் எடுத்துக் கொண்ட சபதம் இக்கருத்தை வலியுறுத்துகின்றது. தன் வீர மகன் அபிமன்யுவைக் கொன்றவர்களைப் பழிவாங்காவிட்டால் விதவைகளை மறுமணம் செய்துகொண்டவர்கள் செல்லும் நரகத்திற்குத்தான் செல்வதாக அர்ஜுனன் சூளுரைத்தான்.

ரிக்வேதத்தைப் போல பிற்பட்ட வேதகாலத்திலும் ஆரியர்கள் இறைச்சியை உண்ணும் பழக்கத்தைக் கொண்டிருந்தனர். விருந்தினரைக் குறிக்கும் சமஸ்கிருதச்சொல்லான 'கோக்னா' (Goghana) என்பதற்கு 'யாருக்கு விருந்து வைப்பதற்காகப் பசு கொல்லப் பட்டதோ அவர்' என்பது பொருளாகும். பிற்காலத்திலேதான் ஆரியர்கள் புத்த, சமயங்களின் செல்வாக்கினால் சைவ உணவு கொள்பவராக மாறினர். காப்பியக் காலப் பெண்கள் வளையல், கழுத்து அட்டிகை, காப்பு, ஒட்டியாணம் போன்ற அணிகலன்களை அணிந்து வந்தனர். இராவணன் தன்னைத் தூக்கிச் சென்ற போது சீதை ஒவ்வொன்றாகக் கழற்றிப்போட்ட அணிகலன்களைக் கொண்டு அக்கால மகளிர் அணிந்திருந்த ஆபரணங்களைப்பற்றி அறிய முடிகின்றது.

மதுவருந்துதலும் சூதாட்டமும் அக்கால மக்களிடம் பரவலாக இருந்தன. கிருஷ்ணபரமாத்மா தோன்றிய யாதவ குலத்தவர் மிகுந்த குடிப்பழக்கம் உடையவர்கள் என்றும் குடிபோதையில் நிகழ்ந்த சண்டையின் விளைவாக அவர்கள் வரலாற்றில் தங்களது இடத்தை இழந்து விட்டனர் என்றும் கூறப்படுகிறது.

**சமய நிலை**

காப்பியக்காலத்தில் சமயத்துறையில்தான் அதிக மாறுதலைக் காணுகின்றோம். ரிக்வேதகாலத்து எளிமையான சடங்கு முறையானது, பல்வேறு சடங்குகளும் வேள்விகளும் நிறைந்த ஒன்றாக மாறியது. இராஜசூயம், வாஜபேயம், அஸ்வமேதம் போன்ற பல வேள்விகளை மன்னர்கள் செய்து வந்தனர். இத்தகைய சமயச் சடங்குகளும் வேள்வி

களும் புரோகித வகுப்பாரின் ஆதிக்கத்திற்கு உதவியாக இருந்தன. சமயமும் பிராமண சமயம் எனப்பெயர் பெற்றது.

**அறிவியல் முன்னேற்றம்**

வேள்விப் பீடங்களை அமைப்பதற்கான விதிமுறைகளில் வடிவியலின் (Geometry) தொடக்கத்தைக் காண முடிகின்றது. குறிப்பிட்ட நல்லோரைகளில் வேள்விகளை நடத்த வேண்டுமென்பதால் நட்சத்திரங்களின் நிலைகளையும் அவற்றின் இயக்கங்களையும் ஆராய்வது இன்றியமையாததாயிற்று தக்ஷிணாயனத்தில் (சூரியனின் தெற்கு நோக்கிய பயணம்) பெருவேள்வி எதனையும் செய்தல் கூடாது எனக் கருதப்பட்டது. தக்ஷிணாயனத்தில் இறப்பதுகூட துரதிர்ஷ்டம் என நம்பப்பட்டது. இதனால்தான், குருக்ஷேத்திரச் சண்டையில் மரண அடிபெற்ற பீஷ்மர் உத்திராயணம் (சூரியனின் வடக்கு நோக்கிய பயணம்) வரும் வரையில் உயிர்விடாமல் இருந்தார். ரிக்வேத காலத்தில் ஆண்டினைப் பன்னிரண்டு சந்திர மாதங்களாகப் (திங்கள்) பிரித்திருந்தனர். ஆனால், பிற்பட்ட வேதகாலத்தில் சூரிய ஆண்டுடன் ஒத்துவரும்படி செய்வதற்காகச் சந்திர ஆண்டென்பதின் மூன்றாவது அல்லது இரு மண்டலங்களின் இடையிட்டு மாதத்தைச் (inter catary) சேர்த்தனர். இவற்றிலிருந்து வானவியலில் இந்த அளவிற்கு முன்னேற்றம் இருந்தது என்பது தெளிவாகும். வேள்விகளில் விலங்குகளைப் பலியிடும் வழக்கம் உடற்கூறு இயல் (anatomy) வளர்வதற்கு உதவியது. அதர்வ வேதத்திலும் சதபதப் பிராம்மணத்திலும் மனித எலும்புகள் பற்றிய செய்திகள் சரியாகத் தரப்பட்டுள்ளன. தொழுநோய் (leprosy) சீதபேதி, மஞ்சள் காமாலை முதலான நோய்களும் அவைகளுக்கான நிவாரணங்களும் தரப்பட்டுள்ளன.

**பொருளாதார நிலை**

காப்பியக்காலத்தில் வேளாண்மை வியத்தகு முன்னேற்றம் அடைந்தது. மக்கள் புதிய உழு கருவிகளையும் உரங்களையும் பயன்படுத்தினர். கோதுமை, நெல், எண்ணெய்வித்துகள் முதலான பல்வேறு தானியங்களைப் பயிரிட்டனர். கால்நடை வளர்ப்பு மக்களின் முக்கியத் தொழில்களில் ஒன்றாக இருந்தது. மன்னர்களுக்கிடையே மாடுபிடிச் சண்டைகள் (Cattle lifting) பல நிகழ்ந்தன. மகாபாரதத்தில் வரும் விராடபருவத்தில் துரியோதனன்

விராட் மன்னரின் ஆநிரைகளைக் கவர்ந்து சென்றதும், அவற்றை அர்ஜுனன் மீட்டுத் தந்ததும் பேசப்படுகின்றன. காப்பியக்காலத்தில் நகரவாழ்க்கை வளர்ச்சியடைந்திருந்தது. கைத்தொழில்களும் பெருகின. இக்காலத்தில் அஸ்தினாபுரம், கோசாம்பி, காம்பில்யா ஆகியவை மிக முக்கியமான நகரங்களாகும். தாமிரம், ஈயம், வெள்ளி போன்ற உலோகங்கள் பற்றி மக்கள் அதிகமாக அறிந்திருந்தனர். அச்சிட்ட நாணயங்கள் வழக்கத்தில் இருந்தன. கொடுவட்டியும் வழக்கில் இருந்தது. அணிகலன் செய்தல், தேர் செய்தல் ,கூடை முடைதல், கயிறு திரித்தல், உலோகங்களைப் பதப்படுத்துதல், நெசவு போன்ற பல்வேறு தொழில்கள் மேலோங்கி நின்றன.

மேலே கூறியவற்றிலிருந்து, பிற்பட்ட வேத அல்லது வீர காவிய உலகம் ரிக்வேத உலகிலிருந்து மிகவும் மாறுபட்டது. என்பதை அறியமுடிகின்றது. பேரரசுகள் தோன்றிய கங்கைச் சமவெளியில் ஆரியர்கள் குடியேறினர். இராமாயணவரலாறும், மகாபாரதத்தில் வரும் அர்ஜுனனின் யாத்திரையும், ஆரியர் மெதுவாகத் தக்கணத்திலும் ஊடுருவலாயினர் என்பதைக் காட்டுகின்றன. சடங்குகளும் வேள்விகளும் மலிந்ததாகச் சமயம் மாறியிருந்தது. பிற்காலத்தில் இருந்ததைப்போல அதிக அளவு நெகிழாத்தன்மை கொண்டிருக்கவில்லை யென்றாலும், காப்பியக் காலத்தில் ஜாதிமுறை தோன்றி இறுக்கம் அடைந்தது.

# 4. இந்தியாவும் பண்டைக்கால உலகமும்

சிந்துவெளி மக்கள் வெளிநாடுகளுடன் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதைச் 'சிந்து வெளி நாகரிகம்' எனும் பகுதியிலேயே குறிப்பிட்டோம். மேற்கு ஆசியாவுடனும், எகிப்துடனும் அவர்கள் நெருங்கிய உறவுகள் கொண்டிருந்தனர் என்பதற்கு ஏராளமான சான்றுகள் உள்ளன. சுமேரியா, எகிப்து, கிரீட் ஆகியவற்றுடன் வாணிகத் தொடர்புகள் இருந்து வந்தன. சிந்துவெளி நாகரிகம் சிதைந்த பின்னரும், இந்தியாவிற்கும் மேற்கு ஆசியாவிற்கு மிடையே வாணிகத் தொடர்பு இருந்தது. தரை வழியாகவும் கடல் வழியாகவும் வாணிகம் நடந்தது. அவ்வாணிகத்தின் தரை வழியானது கைபர் கணவாய் வழியாக இந்துகுஷ் மலைத் தொடரைக் கடந்து பால்க்கிற்குச் (Balkh) சென்றது. பால்க்கில் தான், மத்திய ஆசியாவிலிருந்தும், கிழக்கில் சீனாவிலிருந்தும், மேற்கில் மத்தியதரைக்கடல் துறைமுகங்களிலிருந்தும்வந்த தரைவழித் தடங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்தன. கடல் வழியானது இந்தியா பாரசீகம், அரேபியா ஆகிய நாடுகளின் கரையோரமாகச் சென்று செங்கடல் வழியாக எகிப்தை அடைந்தது. இத்தகைய வழித் தடங்கள் வழியாக மிகப் பழங்காலத்திலிருந்தே இந்தியாவிற்கும், பாரசீகம், கிரேக்கம் உரோமப்பேரரசு, சீனா போன்ற பண்டைய உலகின் நாடுகளுக்குமிடையே வாணிகத் தொடர்பு ஏற்பட்டிருந்தது. வாணிகத்திற்காகவோ, அல்லது வெற்றி காரணமாகவோ இரு நாடுகளுக்கிடையே தொடர்பு ஏற்படும் போது அவ்விரு நாடுகளுக்கிடையே கருத்துப் பரிமாற்றம் ஏற்பட்டது. மற்ற நாடுகள் மீது இந்தியாவின் செல்வாக்குப் படிந்ததைப் போலவே அந்த நாடுகளின் செல்வாக்கும் இந்தியாவின் மீது ஏற்பட்டது. இப்போது நாம் இவ்வாறு தொடர்பு கொண்ட பல்வேறு நாடுகளும் ஒன்றையொன்று எவ்வாறு கெடுத்தன என்பதைக் காண்போம்.

## இந்தியாவும் பாரசீகமும் அல்லது ஈரானும்

இந்தியாவும் பாரசீகமும் மிகப் பழங்காலந் தொட்டே தொடர்பு கொண்ட நாடுகளாகும். மொகஞ்சதாரோ, ஹாரப்பா கண்டுபிடிப்புகளிலிருந்து சிந்துவெளி மக்கள் பாபிலோனியாவுடனும் பாரசீகத்துடனும் நெருங்கிய தொடர்பு

கொண்டிருந்தனர் என்பது நன்கு புலப்படுகின்றது. ரிக் வேதமும், பாரசீகரின் புனித நூலாகிய ஸெண்டவதஸ்தாவும், ஒரு காலத்தில் இந்தோ ஆரியருடைய மூதாதையரும் பாரசீகருடைய மூதாதையரும் ஒரே கூட்டத்தைச் சார்ந்தவர்கள் என்பதை நிரூபிக்கின்றன. மேலும், அவர்கள் பாரசீகத்தில் குடியேறி வாழ்ந்தனர் என்பதையும், அவர்களில் ஒரு பிரிவினரான 'இந்தோ - ஆரியர்கள்' பிற்காலத்தில் இந்தியாவிற்கு வந்து குடியேறினர் என்பதையும் தெளிவாக்குகின்றன. மிகப் பழங்காலத்திலிருந்தே இந்தியாவிற்கும் பாரசீகத்திற்குமிடையே வாணிகத் தொடர்புகள் இருந்தன என்பது உண்மை. கி.மு. ஆறாம் நூற்றாண்டில் அகமேனியன் (Achaemenian) அரசகுல ஆட்சிக் காலத்தில் பாரசீகப்பேரரசு எழுந்தபோது இந்த வாணிகத் தொடர்பு அரசியல் தொடர்பாக வளர்ந்தது.

ஹெரடோடஸ், ஆரியன், ஸ்ட்ராபோ முதலிய வரலாற்று அறிஞர்கள். மகா சைரஸ் (Cyrus the Great) தான் (கி. மு. 558—530) வடமேற்கு இந்தியாவிலுள்ள காந்தாரத்தைக் கைப்பற்றியதாகக் குறிப்பிட்டுள்ளனர். அவருக்குப் பிறகு ஆட்சி செய்த காம்பிஸஸ் (Cambyses) (கி. மு. 530—522) எகிப்தை வெற்றி கொள்வதில் ஈடுபட்டிருந்ததால் இந்தியாவின் பக்கம் திரும்பவில்லை. ஆனால், அவரது வாரிசான முதலாம் டேரியஸ் (Darius I கி. மு. 522—486) பிம்பிசாரன் (Bimbisara) காலத்தில் இந்தியாவின் மீது படையெடுத்து வந்து சிந்துவையும், பஞ்சாபின் பெரும் பகுதியையும் கைப்பற்றினார். இங்ஙனம் சிந்து, பஞ்சாபின் பெரும் பகுதி, காந்தாரம் ஆகியவை பாரசீகப் பேரரசின் இருபதாவது சாத்ரபி (Satraphy) அல்லது மாநிலமாக விளங்கியது. பாரசீகப் பேரரசின் ஆசிய மாநிலங்களில் இருந்து வந்த மொத்த வருவாயில் மூன்றில் ஒரு பங்கு இந்திய மாநிலத்திலிருந்து வந்தது. பாரசீக மன்னன் முடியில் ஒப்பற்ற ஒளி விட்டுப் பிரகாசிக்கும் மாமணிபோல் இம்மாநிலம் அமைந்தது. வடமேற்கு இந்திய மாநிலம் பாரசீகப் பேரரசோடு இணைந்திருந்த வேளையில், சிந்து நதியின் கழிமுகத்திலிருந்து பாரசீக வளைகுடா வரையிலான கரையோரப் பகுதியை ஆய்வு செய்வதற்காக டேரியஸ் தமது கடற்படைத் தலைவரான ஸ்கைலாக்ஸ் (Skylax) என்பவரை அனுப்பினார். டேரியஸுக்குப் பின்னர்ப் பட்டத்திற்கு வந்த அவரது புதல்வரான ஸெர்க்ஸிஸ் (Xerxes) (கி.மு. 486—465) கிரேக்க நாட்டின் மீது படையெடுத்துச் சென்றார். இப்

படையெடுப்பின் போது பிளேடியே (Plataea) என்னும் போர்க்களத்தில் பருத்தியாடை அணிந்த இந்திய வீரர்கள் எவ்வாறு போரிட்டனர் என்பதைக் கிரேக்க வரலாற்றறிஞர் ஹெறரடோடஸ் கூறியுள்ளார். கிரேக்க நாட்டில் பாரசீகர்கள் கண்ட தோல்விகளின் விளைவாகப் பாரசீக மன்னர்கள் இந்தியாவின்மீது போர் தொடுத்துத் தங்களது ஆதிக்க எல்லையை விரிவு செய்ய முடியாமல் போயிருக்க வேண்டும். பஞ்சாபில் பாரசீகரின் ஆட்சி எத்துணைக் காலம் நீடித்தது என்பது தெளிவாகத் தெரியவில்லை. எவ்வாறாயினும் இரண்டாம் ஆர்ட்டாஸெர்க்சிஸ் (Arta Xerxes) ஆட்சிக் காலத்தில் (கி. மு. 405—358) ஏறத்தாழ கி. மு. 380 அளவில் பாரசீகர்கள் இந்திய மாநிலத்தை இழந்திருக்க வேண்டும்.

பாரசீகத்தோடு நெடுநாட்களாகத் தொடர்பு இருந்ததன் விளைவாக இந்திய நாகரிகத்தில் மிகப்பல மாற்றங்கள் தோன்றின என்று சில அறிஞர்கள் அறிவிக்கின்றனர். இந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையில் பணியாற்றிய டாக்டர் ஸ்பூனர் (Spooner), இராயல் ஏஷியாடிக் சொசைட்டி, 1915 ஆம் ஆண்டு வெளியிட்ட பருவ ஏடு ஒன்றில் (Journal), இந்தியாவின்மீது பாரசீகரின் செல்வாக்கு மிக அதிகம் என எழுதியுள்ளார். மௌரியர் ஆட்சிக்காலத்தை அவர் 'இந்திய வரலாற்றின் ஸொராஸ்டிரியக் காலம்' எனக் குறிப்பிடுகின்றார். மேலும் அவர் மௌரிய குலம் பாரசீகத்தைச் சார்ந்தது, பாரசீக நகரமான பெர்ஸிபாலிஸிலிருந்து வந்தவர் தான் சந்திரகுப்த மௌரியர், பாரசீகத்திலிருக்கும் 'மேரு' விலிருந்துதான் 'மௌரிய' எனும்சொல் வந்தது, கௌடில்யரும், புத்தரும், நந்தர்களும் இரானியரே என்றெல்லாம் கூறிவிட்டு, சுருங்கச் சொல்வதானால் இந்திய வரலாற்றில் ஸொராஸ்டிரியக்காலம் ஒன்று உண்டு எனக் குறிப்பிட்டுள்ளார். தமது கருத்தை வலியுறுத்த அவர் பின் வரும் வாதங்களைத் தருகின்றார். அவையாவன:

1. பாடலிபுத்திரத்தில் மௌரியர்கள் கட்டிய கட்டிடங்கள் பெர்ஸிபாலிஸ் (Persepolis), சூசா (Susa) போன்ற பாரசீக நகரங்களில் உள்ள அரண்மனைகளை முன் மாதிரியாகக் கொண்டவை.

2. பேரரசரின் பிறந்த நாளன்று நடைபெறும் தலைமுழுக்குச் சடங்கு, குற்றவாளிகளை மொட்டையடித்துத் தண்டித்தல் ஆகிய இரண்டு பாரசீக வழக்கங்கள் மகதத்தில் இருந்தன என்று மெகஸ்தனீஸ் எழுதியுள்ளார்.

3. சூசாவையும் ஆசியா மைனரில் உள்ள மைலிடஸ் (Myletus) நகரையும் நெடுஞ்சாலை ஒன்றின் மூலமாக முதலாம் டேரியஸ் இணைத்ததைப்போலவே இந்தியாவின் வடமேற்குக் கோடியிலுள்ள அட்டாக்கிலிருந்து கிழக்கிலுள்ள தாம்ரலிப்திக்கு, 3200 கிலோ மீட்டர் நீளத்திற்குச் சந்திர குப்த மௌரியர் நெடுஞ்சாலை ஒன்று அமைத்தார்.

4. பாரசீகப் பேரரசர்கள் செய்ததைப் போலப் பாறைகள் மீதும் தூண்களிலும் அசோகர் ஆணைகளைப் பொறித்துள்ளார். ஆணைகளின் அமைப்பைக்கூட அப்படியே பின்பற்றினார். ''புனிதமும் கருணையுள்ளமும் கொண்ட மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் இவ்விதம் கூறுகின்றார்'' என்னும் அசோகக் கல்வெட்டின் வாசகமும் ''பேரரசர் டேரியஸ் இவ்விதம் கூறுகின்றார்'' என்னும் பாரசீகக் கல்வெட்டு வாசகமும் ஒத்திருக்கின்றன.

5. பாரசீகத் தூண்களின் தலைப்புகளும் (Capitals) ஒன்றிற்கொன்று புறமுதுகு காட்டி அமர்ந்துள்ள விலங்குகளின் உருவங்களும் அசோகத் தூண் தலைப்புகளை ஒத்திருக்கின்றன.

6. கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் அச்சான இந்திய நாணயங்களில், அக்காலப் பாரசீக நாணயங்களில் இருப்பதைப் போன்று மேரு மலையின் உருவமும் நந்தியின் உருவமும் பொறிக்கப்பட்டுள்ளன.

ஆனால் இந்திய நாகரிகத்தில் அதிக அளவு பாரசீக செல்வாக்கு காணப்படுகின்றது என்ற டாக்டர் ஸ்பூனரின் கோட்பாட்டை பேராசிரியர் E. H. ஹேவலும் வேறு பல வரலாற்று அறிஞர்களும் மறுக்கின்றனர். இந்தியத் தாமரையைக் கவிழ்த்துப் பிடித்தால் அசோகரது தூண் தலைப்பில் காண்பதுபோன்ற மணி வடிவம் வரும் என இவர்கள் குறிப்பிடுகின்றனர். மேலும் ஒத்த வழக்கங்களை அதிகமாக வலியுறுத்தக் கூடாது என்கின்றனர். ''இந்திய வரலாற்றில் ஸொராஸ்டிரியக் காலம் என்ற ஒன்று இருந்ததில்லை'' என்றும் ''அவ்வாறு இருந்திருக்கும் என்று எதிர்பார்க்கவும் இயலாது'' என்றும் பேராசிரியர் ஏ. பி. கீத் (A. B. Keeth) கூறுகின்றார்.

இத்தகைய மாறுபட்ட கருத்துக்களுக்கிடையே உண்மை நிலை என்ன? அதனை இனி காண்போம். மௌரிய ஆட்சி

முறை, அரண்மனை அமைப்பு, சில அரசவை மரபுகள் ஆகி யவை பாரசீகக் கருத்துகள் அல்லது முன் மாதிரிகளின் செல்வாக்கிற்கும் உட்பட்டிருக்கின்றன. ஒருவேளை, மௌ ரியப் பேரரசு என்னும் கருத்தே பாரசீகப் பேரரசிலிருந்து பெறப்பட்டதாக இருக்கலாம். அசோகரது தூண் தலைப்பு களில் காணப்படும் நான்கு சிங்கங்களும் தர்மச்சக்கரமும் கொண்ட சுதந்திர இந்தியாவின் தேசியச் சின்னம் பாரசீகத் தூண்களில் காணப்படும் உருவங்களை ஒத்துள்ளது. ஆயினும், அது இந்திய உணர்வுகளுக்கேற்றவாறு மாற்றியமைக்கப்பட்ட தாகும். தர்மச் சக்கரம் (நீதிச் சக்கரம்) புத்த சமயச் சின்ன மாதலால் அது முழுக்க முழுக்க இந்தியக் கருத்தாகும். பாறை களின் மீதும் தூண்களிலும் கல்வெட்டுகளை வெளியிடும் அசோகரது பழக்கம் பாரசீகச் செல்வாக்கின் விளைவாக இருக்க லாம். ஆனால், புத்தரின் மனிதாபிமான போதனைகளைப் பரப்பவே அசோகர் இத்தகைய ஆணைகளைப் பயன்படுத் தினார். பாரசீக நாணயங்களின் அடிப்படையில் இந்திய நாண யங்கள் அச்சிடப்பட்டன. பாரசீக ஆர்மீனிய எழுத்து வடிவங் களிலிருந்து உருவான 'கரோஷ்டி' எழுத்து வடிவம், வடமேற்கு இந்தியாவில் வழக்கில் இருந்தது. 'இந்து' என்னும் சொல் பாரசீகரிடமிருந்து பெறப்பட்டதாகும். சிந்துநதி பாயும் நாட்டின் மக்களாகத் (Indus River) தான் இந்தியரைப் பாரசீகர் அறிந்திருந்தனர். சிந்து என்பதில் இருக்கும் 'ச' ஒலியை மட்டுப்படுத்தி 'ஹி' என அவர்கள் கொண்டனர். பாரசீகரின் மூலமாக இந்தியாவை அறிந்த கிரேக்கர்கள் இந்துவை 'இண்டஸ்' (Indus) என மாற்றினர். இண்டஸ் பாயும் பூமி தான் 'இந்தியா' எனப் பெயர் பெற்றது.

## இந்தியாவும் கிரீஸும்

இந்தியாவிற்கும், பண்டைக்கால உலக நாடுகளுக்கும் இடையேயான தொடர்பின் இரண்டாவது முக்கிய கட்டம், மகா அலெக்சாண்டர் இந்தியாவின் மீது படையெடுத்து வந்த போது தொடங்கியது. பஞ்சாபிலும், சிந்து மாநிலத்திலும் சிறிது காலத்திற்குக் கிரேக்கர்களின் ஆட்சி நடந்தது. ஆனால், மௌரியகுலத்தைத் தோற்றுவித்த சந்திரகுப்தர் கிரேக்கர் களைப் பஞ்சாபிலிருந்தும், சிந்துப் பகுதியிலிருந்தும் வெளி யேற்றினார். அதுமட்டுமல்லாமல் அலெக்சாண்டரின் வாரிசாக வந்த செலுக்கஸ் நிகேடரிடமிருந்து ஆசிய மாநிலங்கள், ஆப்கா னிஸ்தானம் ஆகியவற்றையும் பெற்றார். சிந்து நதிக்கு அப்பா லும் பரவியிருந்த மௌரியப் பேரரசு ஆசியாவில் செலுசைட்

கிரேக்கப் பேரரசின் அண்டை நாடாக விளங்கியது. செலூக்கிய மன்னர்கள் பாடலிபுத்திரத்தில் இருந்த மௌரியரின் அரசவைக்கு மெகஸ்தனீஸ், டெய்மாக்கஸ் (Daimachus) போன்ற அரசாங்கத் தூதுவர்களை அனுப்பி வைத்தனர். எகிப்தை ஆண்ட (Greek) யவன மன்னரான தாலமி பிலடெல்பஸ் (Ptolemy Philadelphus), டயானிஷியஸ் (Dionysius) என்னும் தூதுவரை மௌரிய அரசவைக்கு அனுப்பினார். பாடலிபுத்திர நகரில் அன்னியரைக் கவனித்துக் கொள்வதற்கென்றே தனித்துறை இருந்ததாக மெகஸ்தனீஸ் குறிப்பிடுவதிலிருந்து, ஏராளமான அந்நியர்கள், அதிலும் கிரேக்கர்கள் அல்லது யவனர்கள் பாடலிபுத்திரத்திற்கு வந்தார்கள் என்பது தெளிவாகின்றது. அசோகரது பதின்மூன்றாவது பாறைக் கல்வெட்டாணையில் மேலை நாட்டைச் சார்ந்த ஐந்து கிரேக்க மன்னர்களைப் பற்றிய குறிப்பு வருகின்றது. இந்த ஐந்து மன்னர்களிடமும் புத்த சமயத்தைப் போதிப்பதற்காகப் புத்த சமயக் குழுக்களை அசோகர் அனுப்பியதாகச் செய்தி வருகின்றது. மௌரியப் பேரரசு வீழ்ந்த பின்னர்க் காபூல் பள்ளத்தாக்கிலும் பஞ்சாபிலும் கிரேக்க மன்னர்கள் வாழ்ந்திருந்தனர். அவருள் சாகாலா (தற்காலத்து சியால்கோட்) நாட்டு அதிபரான மினாண்டர் முக்கியமானவர்.

இங்ஙனம் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கு இந்தியாவிற்கும் கிரீஸுக்குமிடையே நெருங்கிய தொடர்பு இருந்ததன் விளைவாகக், கிரேக்க நாகரிகத்தின் செல்வாக்கு இந்தியாவில் பரவியது. அதைப்போலவே இந்திய நாகரிகத்தின் செல்வாக்குக் கிரேக்க நாட்டின் மீது படர்ந்தது. இந்திய நாகரிகத்தின் மீது எந்த அளவிற்குக் கிரேக்க நாகரிகம் செல்வாக்கு செலுத்தியது என்பதை விருப்பு வெறுப்பின்றிப் பார்க்கச் சிலர் தவறிவிட்டனர். பல ஐரோப்பிய அறிஞர்கள் அதனை மிகை படுத்திக் கூற முற்பட்டுள்ளனர். இந்தியக் கலாச்சாரத்தின் நல்ல பல கூறுகள் கிரேக்க நாகரிகத்தின் விளைவே என, ஜெர்மன் அறிஞரான டாக்டர் நீஸ் (Dr. Niese) குறிப்பிடுவார். அதற்கு நேர்மாறாகக் கிரேக்கக் கலாச்சாரத்தின் சாயல் சிறிதும் இல்லையென்று இந்திய அறிஞர்கள் அறைகூவல் விடுவர். இவ்விரு கருத்துகளின் இடையே தான் உண்மை இருக்கின்றது.

ஹோமர் எழுதிய காப்பியமான 'இலியட்' என்பதன் (Iliad) இந்திய வடிவமே இராமாயணம் என்பர் மேலை நாட்டு அறிஞர். சிலர் ஹெலனையும் சீதையையும் மாற்றார் கவர்ந்து செல்லல், அக்கிலிஸ் (Achilles) இராமன் ஆகி

யோரின் வீரசாகசங்கள், டிராய் மற்றும் இலங்கை முற்றுகை ஆகியவற்றில் ஒற்றுமை இருப்பதை இவர்கள் காரணங்களாகக் காட்டுவர். ஆனால், இக்கருத்து சரியான தன்று. மோனியர்வில்லியம்ஸ் குறிப்பிடுவதைப்போல இராமாயணத்தையும் மகாபாரதத்தையும், இலியட் மற்றும் ஒடிஸியுடன் ஒப்பிடுவதானது, சிந்து கங்கை நதிகளை, தெஸ்ஸலியில் பாயும் நீரோடைகளுடன் ஒப்பிடுவதற்குச் சமமாகும். எவ்வாறெனில், செயற்பாட்டில் ஒழுங்கு, நடையின் நேர்த்தி, வீரச் செயல்களின் விரிவான விளக்கம், இயற்கை அழகின் வர்ணனை, மனித உள்ளத்தின் பண்பட்ட உணர்ச்சிகளைக் காட்டும் தன்மை ஆகியவைகளில் இலியட்டைவிட இராமாயணம் பெருமளவு உயர்ந்தது. இங்ஙனம், காப்பியங்களைப் படைப்பதற்கு இந்தியர்கள் கிரேக்கர்களுக்குக்கடமைப் பட்டவர்கள் அல்லர்.

நாடகங்கள் எழுதுவதை இந்தியர் கிரேக்கர்களிடமிருந்து கற்றனர் எனச், சில மேலை நாட்டு அறிஞர் கருதுகின்றனர். ஏனெனில் திரைச் சீலையைக் குறிக்கும் 'யவனிகா' என்னும் சொல் 'யவன' எனும் சொல்லிலிருந்து வந்தது எனக் கூறுவர். ஆனால் இக்கருத்தை ஏற்க இயலாது. காரணம், கிரேக்க நாடகங்களில் திரைச் சீலையே கிடையாது. இரத்தம் சிந்தும் காட்சிகளை விலக்குதல் போன்ற சிலவற்றில் இந்திய நாடகங்களுக்கும் கிரேக்க நாடகங்களுக்குமிடையே ஒற்றுமை காணப்படுவது உண்மை. ஆயினும், ஒற்றுமைகளைவிட வேற்றுமைகளே மிகுதியாக இருக்கின்றன. இந்திய நாடகங்களில் இடங்களின் பெயரும் காலமும் குறிப்பிடப்படுவதில்லை. உரைநடையும், பாடல்களும் கலந்து இருப்பதைப் போலவே, துன்பியல் கூறுகளுடன் நையாண்டிகளும் கலந்து தரப்பட்ட இந்திய நாடகங்கள், கடுமையான கிரேக்க நாடகங்களிலிருந்து மாறுபடுகின்றன. கிரேக்க நாடக ஆசிரியரான யூரிபிடஸ் (Eurypides) என்பவரைப் பின்பற்றியே காளிதாசர் நாடகங்களை எழுதினார் என்பது கேலிக்கூத்தாகும். அந்தக் கிரேக்க நாடகாசிரியர் ஒரு நல்ல எழுத்தாளர்தான். ஆனால் காளிதாசன் ஒரு மேதை. அவரது படைப்புகள் தனித் தன்மை வாய்ந்தவை; ஈடு இணையற்றவை.

மேலும் சில மேலை நாட்டு அறிஞர்கள், கற்களைக் கொண்டு கட்டடம் கட்டும் கலையைக் கிரேக்கர்களிடமிருந்து தான் இந்தியர்கள் கற்றனர் எனக் கூறுவர். இக்கூற்றும் தவறானதாகும். இருக்குவேதத்திலும், புத்த ஜாதகக் கதைகளிலும் கல்லினால் ஆன மதிற்சுவர்கள் கொண்ட நகரங்களைப்

பற்றிய குறிப்புகள் வருகின்றன. கிரேக்கர்கள் இந்தியா விற்கு வருவதற்கு முன்பே மகதத்தில் கட்டப்பட்ட ஜராசந்தாபைடக்கும், வாசுதேவ சங்கிருஷ்ண கோயிலின் இடிபாடுகளும் வேதகாலத்திலிருந்தே கருங்கல்லைக்கொண்டு கட்டடங்கள் கட்டும் கலையை இந்தியர் அறிந்திருந்தனர் என்பதை எடுத்துக்காட்டுகின்றன.

ஆட்சிக்கலையை அலெக்சாண்டரிடமிருந்து சந்திரகுப்தர் அறிந்தார் என்பதும் அபத்தமானது. மிகக் குறுகிய காலத்திற்கே அலெக்சாண்டர் இந்தியாவில் தங்கியிருந்தார். அவரிடமிருந்து சந்திரகுப்தர் எதையும் அறிந்திருக்க முடியாது. மௌரியப் பேரரசின் ஆட்சியமைப்பு கௌடில்யரின் கைவண்ணமாகும். அது, முழுக்க முழுக்க இந்திய இலக்கியமாகிய அர்த்த சாத்திரத்தை அடிப்படையாகக் கொண்டது.

கணித இயல் துறையிலும் கிரேக்கரின் தொண்டு அதிகமில்லை. எண்களையும், தசாம்சமுறையையும் கிரீஸுக்கு மட்டுமல்லாமல் உலகினுக்கே நன்கொடையாக வழங்கிய பெருமை நம் நாட்டிற்கு உண்டு. சதுரங்க ஆட்டத்தைப் (Chess) பண்டைக்கால இந்தியாவிடமிருந்து கிரேக்கர் அறிந்து சென்றனர்.

தத்துவத் துறையில் பண்டைய கிரேக்கரிடமிருந்து இந்தியர் எதையும் பெறவில்லை. ''ஐரோப்பியரின் மிக உன்னதமான தத்துவம், இந்தியத் தத்துவத்தோடு ஒப்பிடும்போது ஒளி வீசும் நண்பகல்சூரியனுக்கு முன்னால் எரியும் எளிய அகல் விளக்குப் போன்றது'' என ஷெலிகால் என்னும் அறிஞர் குறிப்பிட்டுள்ளார். பித்தகோரஸ், தேல்ஸ், அனக்ஸகோரஸ் போன்ற கிரேக்கத் தத்துவ ஞானிகள் இந்தியாவிற்கு வந்தனர் என்றும், ஆன்மாவின் அழியாத் தன்மையையும், மறுபிறவிக் கொள்கைபற்றியும் அறிந்து சென்றனர் என்றும் கூறப்படுகின்றது. அளவையியலிலும் (Logic) இந்தியா மேம்பட்ட நிலையில் இருந்தது. நேரியல் வாதமுறையில் (Syllogism) கிரேக்கருடைய மூன்று பகுதிகளுக்கு மாறாக இந்தியாவில் 'நியாயா' முறையை வகுத்த கௌதமர் ஐந்து பகுதிகளைக் கொண்டுள்ளமை கவனிக்கத்தக்கது.

சமயத்தை எடுத்துக்கொண்டால் பல இந்தோ-கிரேக்கர்கள் புத்த சமயத்தைத் தழுவினர். சாகாலாவின் கிரேக்க மன்னரான மினாண்டர் புத்த சமயத்தவர். அவர் வெளியிட்ட நாணயங்களில் தர்மச் சக்கரம் பொறிக்கப்பட்டிருப்பதிலிருந்து அவர் புத்தரிடம் மாறாத பற்றுக் கொண்டிருந்தது

தெரியவருகின்றது. அவர்தான், நாகசேனர் என்ற புகழ் பெற்ற புத்த சமய அறிஞரின் சீடரான 'மிலிந்தா' என அறிஞர்கள் கொள்கின்றனர். நாகசேனரும், மிலிந்தாவும் படைத்ததாகக் கருதப்படுகின்ற புனித பாலிநூலான 'மிலிந்தபன்ஹா' (Milinda Panha) இவ்விருவரின் வினா விடைகளைத் தன்னகத்தே கொண்டிருக்கின்றது. அதில் மகா யான புத்த சமயம் பற்றிய விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. மினாண்டரின் வாரிசுகளில் ஒருவர் அன்டால்கிடஸ் என்பவர். அவரது தலைநகரம் தட்சசீலமாகும். அவர் பாடலிபுத்தி ரத்தில் ஆண்ட ஏன்பதாவது சுங்க மன்னரான பாகபத்ராவின் காலத்தவர். ஹிலியோடோரஸ் என்பவரைச் சுங்கமன்னரிடம் தூதுவராக அனுப்பிவைத்தார். அந்தத்தூதுவர் பெஸ்நகரில் கருடத்தம்பம் ஒன்றினை அமைத்து அதில் தாம் ஒரு பரம பாகவதர் அல்லது விஷ்ணுவின் பக்தர் எனப் பொறித்தார். இந்தப் பெஸ்நகர்த் தூணிலிருந்து கிரேக்கர்கள் மீது இந்து சமயம் செல்வாக்குச் செலுத்தியது தெரிய வருகின்றது.

காப்பிய இலக்கியம், நாடகம், கருங்கல் கட்டடம், ஆட்சி முறை, தத்துவம், சமயம் ஆகியவைகளில் இந்திய நாகரிகத்தில் கிரேக்கச் செல்வாக்கு ஒன்றுமில்லை என்பதை மேலே குறிப் பிட்டோம். இனி எந்தெந்தத் துறைகளில் கிரேக்கச் செல் வாக்குப் படிந்தது என்பதனைக் காண்போம்.

இந்தியாவில் நேர்த்தியான பலவகை நாணயங்களைப் புகுத்தியவர் கிரேக்கர்கள். குறிப்பாகச் சொல்வதானால் இந்தோ கிரேக்கர் அல்லது இந்தோபாக்டிரியர் எனும் கிரேக் கர்கள் வருவதற்கு முன்னால் இந்தியாவில் துளையிட்ட நாண யங்களே பொதுவாக வழக்கில் இருந்தன. கிரேக்க நாண யங்கள் இரு மொழி நாணயங்களாகும். அவற்றின் வாசகங்கள் கிரேக்க மொழியிலும் அந்தந்த வட்டார மொழிகளிலும் அமைந்திருந்தன. இத்தகைய கிரேக்க நாணயங்களைப் பின் பற்றி நம் நாட்டவர் நாணயங்களை வெளியிடலாயினர். பிற்காலத்தில் முதலில் இருந்ததைவிடக் கலைநுட்ப வேலைப் பாடு மிகுந்த நாணயங்கள் வெளிவந்தன.

வானவியலில் கிரேக்கரிடமிருந்து பல செய்திகளைப் பண்டைக்கால இந்தியர் அறிந்து கொண்டனர். ''யவனர்கள்'' (Greeks) மிலேச்சர்கள் (நாகரிகமற்றவர்கள்) என்றா லும் விண்வெளியில் காணும் கோளங்களின் இயக்கங்களை அறிந்த அவர்களைத் தேவதைகளைப்போல் வழிபடத் தகுந்

வர்கள்'' எனக் 'கார்கிசம்கிதை'யின் ஆசிரியர் எழுதியுள்ளார். இந்திய வானநூல்கள் ஐந்தில் இரண்டு மேலை நாட்டுப் பெயர்களைக் கொண்டுள்ளன. அவை **ரோமக சித்தாந்தம் பாலிகசித்தாந்தம்** என்பவையாகும். இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்ட நூல் அலக்சாந்திரியாவைச் சார்ந்த புகழ் மிக்க வானநூல் அறிஞரான பாலின் (கி. பி. 378 அளவில் வாழ்ந்தவர்) பெயரால் வழங்கப் பட்டிருக்கவேண்டும். இந்திய வானநூல் அறிஞர்கள் சில கோள்களையும் விண் மீன்களையும் கிரேக்கப் பெயரால் அழைத்தனர். வருவ துரைக்கும் குறியியலில் (Astrology) இந்தியர், கிரேக்க ரிடமிருந்து பலவற்றைத் தெரிந்து கொண்டனர். ஜாதகம் கணிக்கும் கலையில் இந்தியர் பல கிரேக்க முறைகளைப் பயன்படுத்தினர். கிரேக்கக் கலைச் சொற்களையும் தாராள மாக உபயோகித்தனர்.

சிற்பக் கலையில் கிரேக்க சாயலை அதிகமாகக் காண முடிகின்றது. காந்தாரச் சிற்பக்கலையில் கிரேக்கச் செல் வாக்குத் தெளிவாகத் தெரிகின்றது. கி. பி. முதல் இரு நூற் றாண்டுகளில் குறிப்பாகக் கனிஷ்கர் ஆட்சிக் காலத்தில் வளர்ச்சி யுற்ற இவ்வகையான சிற்பக்கலை காந்தாரத்தில் காணப்படு கின்றது. ஆந்திரப் பிரதேசத்திலுள்ள நாகார்ஜுன கொண்டா, அமராவதிச் சிற்பங்கள் காந்தாரப் பாணியில் அமைந்தவை யாகும். புத்தரின் பல வடிவங்கள், அதாவது இளவரசராகவும், துறவியாகவும், ஞானப் பழமாகவும், காந்தாரப் பாணியில் செதுக்கப்பட்டன. புத்தரின் பிறப்பு, துறவு, அவரை மயக்க வந்த மாயைகள் ஆகியன புடைப்புச் சிற்பங்களாக (Relief) உருவாக்கப்பட்டிருக்கின்றன. இங்ஙனம் இவ்வகைச் சிற்பங் களுக்கான கருப்பொருள் இந்தியாவிற்குச் சொந்தமானது (முக்கியமாகப் புத்த சமயத்தவை), ஆனால், அவை கிரேக்கத் தொழில் நுணுக்க அடிப்படையில் செதுக்கப்பட்டுள்ளன. காந்தாரக் கலைப் பாணியிலான சிற்பங்களில் உறுப்பு ஒழுங் குமதி (Symmetry) நன்றாக உள்ளது. உடலைச்சுற்றி ஆடைகள் நேர்த்தியாக உள்ளன; தலையைச் சுற்றியுள்ள ஒளி வட்டமும் சிறப்பாக அமைந்துள்ளது. இவ்வகைச் சிற்பக் கலை மெதுவாக உள்நாட்டுப் பாணியில் வளர்ந்தது. இவ் வாறாகக் கிரேக்க நாட்டுத் தொடர்பால் இந்தியச் சிற்பக்கலை பெரு நன்மை அடைந்தது.

மருத்துவத் துறையிலும் கிரேக்கச் செல்வாக்கைக்காண முடிகின்றது. கனிஷ்கரது அவையில் இருந்த சரகர், இந்திய

மருத்துவர்களுக்குத் தந்துள்ள விதிமுறைகள், மருத்துவம் செய்யத் தொடங்குவதற்குமுன் ஒரு கிரேக்க மருத்துவர் கையாளும் விதிமுறைகளை ஒத்திருக்கின்றன. அதே சமயத்தில் கிரேக்கரைப் போன்று இந்தியரும் மருத்துவத் துறையில் புகழ் பெற்று விளங்கினர் என்பதையும் கவனிக்கவேண்டும். எவ்வாறெனில் முதன் முதலாக மனித உடலை வெட்டி ஆராய்ந்தவர் இந்தியரே. உலோகங்களையும் பாதரசத்தையும் முதலில் உள்ளுக்குக் கொடுக்க முன்வந்தவர்களும் அவர்களே. முதலில் தோல் ஒட்டு மருத்துவம் (Skingraft) செய்து காட்டியவர்களும் அவர்களே. எனவே, கிரேக்கர்கள் இந்தியரிடமிருந்து கற்றுக்கொண்டனரா அல்லது கிரேக்கரிடமிருந்து இந்தியர் அறிந்துகொண்டனரா எனச் சொல்வது கடினம். கிரேக்க இந்திய உறவால் இருவருக்குமே பயன் ஏற்பட்டிருக்கலாம்.

முடிவாகக் கூறுமிடத்து, இந்தியர் கிரேக்கருடன் தொடர்பு கொண்டதால் நாணயக்கலை, வானஇயல், சிற்பம் ஆகிய துறைகளில் இந்திய நாகரிகம் மேம்பாடுற்றது. ஆனால், இலக்கியத்திலோ, அரசியலிலோ, தத்துவத்திலோ கிரேக்கச் செல்வாக்கு அநேகமாக இல்லை எனலாம்.

## இந்தியாவும் ரோமானியப் பேரரசும்

கிறிஸ்தவ சகாப்தத்தில் ரோமானியப் பேரரசு வாழ்ந்த காலத்தில்முதல் நான்கு நூற்றாண்டுகளில் இந்தியாவிற்கும் மேலை நாடுகளுக்குமிடையே வாணிகம் நடந்து வந்தது. இந்தியாவுடன் கடல் வழியை வளர்ப்பதும், பகை நாடான பார்த்தியா வழியாகச் செல்லும் நில வழித்தடத்தை அழிப்பதும் அக்காலத்தில் ரோமானியப் பேரரசின் கொள்கையாக இருந்தன. இந்தியாவின் மேற்குக் கரையோரமாக ரோமானியப் பேரரசுக்கும் இந்நாட்டிற்குமிடையே விருவிருப்பான வாணிகம் நடந்தது. இந்தியாவிலிருந்து வரும் ஆடம்பரப் பொருள்களுக்கு ரோமில் அதிக கிராக்கி இருந்தது. அவற்றை நாடி ஓடி வந்தனர் ரோமானியர்கள். அதனால் இந்தியாவிற்கு பெருமளவில் பொன் கிடைத்தது. தென்னிந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்ட ஏராளமான ரோமானியத் தங்க நாணயங்கள் இதனை நிரூபிக்கின்றன. ரோமானிய நாணயங்கள் கிடைப்பதைக் கொண்டு அக்காலத்தில் மதுரையிலும் வேறு பல தென்னிந்திய நகரங்களிலும் ஏராளமான ரோமானியர் வாழ்ந்திருக்க வேண்டுமென்று அறிஞர் சிவெல் முடிவுசெய்துள்ளார்.

தென்னிந்தியாவில் ஏராளமான கிரேக்க, ரோமானிய நாணயங்கள் உலவியமைப்பற்றியும், மாமல்லபுரம், புகார், கொற்கை போன்ற தமிழகத்துத் துறைமுகப்பட்டினங்களில் அன்னிய வாணிகர்கள் வாழ்ந்திருந்தது பற்றியும் சங்க இலக்கியங்கள் (கி. பி. முதல் மூன்று நூற்றாண்டுகள்) குறிப்பிடுகின்றன.

ஒரு புறத்தில் வாணிகம் வளர்ந்து வந்த நிலையில் மறுபுறத்தில் ரோமானியப்பேரசுக்கும் ஒரு சில இந்திய அரசர்களுக்குமிடையே அரச உறவுகளும் இருந்தன. ஹேட்ரியன், ஆரிலியஸ், கான்ஸ்டன்டைன் போன்ற ரோமப் பேரரசர்கள் காலத்தில் இந்தியத் தூதுக் குழுக்கள் ரோம் நகருக்குச் சென்றன என்பதை நாம் அறிகின்றோம். இந்தியாவிற்கும் ரோமப் பேரரசுக்குமிடையே இருந்த வாணிகம் மற்றும் அரசியல் தொடர்பின் விளைவாக இந்தியரும் ரோமானியரும் ஒருவரை ஒருவர் சரியாகப் புரிந்துகொள்ள முடிந்தது. நேரடியாக அறிந்துகொள்ள முடிந்தது. ரோமானிய வரலாற்று அறிஞர்களின் நூல்களில் இந்தியாவைப்பற்றிய செய்திகள் நிறைய வருகின்றன. இந்தியாவைப் பற்றியும், இந்தியரின் நிலை குறித்தும் தங்களது நூல்களில் நிறைய எழுதியிருக்கும் ரோமானிய அறிஞர் பலர். அவர்களுள் ஸ்ட்ராபோவும், அரியனும், பிளினியும், 'இயற்கையின் வரலாறு' என்ற நூலின் ஆசிரியரும், 'எரித்திரியன் கடலில் பெரிபுளுஸ்' (Periplus of Erythrean sea) என்ற நூலின் ஆசிரியரும் சிலராவர்.

நைல் நதியின் கழிமுகத்தில் மாமன்னர் அலெக்சாண்டர் நிறுவிய அலெக்சாந்திரியா நகரம் அக்காலத்தில் உலக கேந்திரமாகத் திகழ்ந்தது. அங்கே பன்னாடுகளிலிருந்தும் வந்த பண்டங்களின் மாற்றுமட்டும் நிகழவில்லை. கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் வந்த தத்துவம் மற்றும் அறிவியற் கருத்துக்கள் பரிமாற்றம் செய்து கொள்ளும் மையமாகவும் அந்நகரம் விளங்கியது. மேலைநாடுகளில் இந்தியச் சமயக் கருத்துகள் செல்வாக்குப் பெற்றிருந்தன. சீஸ்தானில் (Seistan) காணப்படும் பௌத்த மடத்தின் இடிபாடுகள் பாரசீக எல்லையில் புத்த சமயம் வாழ்ந்ததை எடுத்துக்காட்டுகின்றன. பார்த்தியாவில் புத்தசமயம் வாழ்ந்தது என்பதைச் சீனக்குறிப்புக்களிலிருந்து அறிய முடிகிறது. கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் பார்த்திய மன்னர் ஒருவர் முடிதுறந்து பௌத்த துறவியாக மாறினார் என்று சொல்லப்படுகின்றார். கொரசான், பாரசீகம், ஈராக், மோசுல் ஆகியவையும், சிரியா

வின் எல்லை வரையிலான பகுதியும் கிறிஸ்தவ சகாப்தத்தின் ஆரம்ப நூற்றாண்டுகளில் பௌத்த சமயத்தைச் சார்ந்தவை என புகழ்பெற்ற அரேபிய வரலாற்றறிஞரான அல்பருனி கூறியுள்ளார். கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலேயே மேல்யூப்ரடீஸ் பகுதியில் இந்தியரின் குடியேற்றம் ஒன்று இருந்ததற்கும், அந்தக் குடியேற்றத்தில் இந்தியர்கள் இரண்டு கோயில்களைக் கட்டி, அவற்றில் தெய்வங்களின் திருமேனிகளை வைத்து வணங்கினர் என்பதற்கும் சான்றுகள் கிடைத்துள்ளன. இந்திய நாட்டுச் சமயங்கள் கிறிஸ்தவ சமயத்தின்மீது செல்வாக்கு செலுத்தியிருக்க வேண்டுமென்று சில அறிஞர்கள் கூறுகின்றனர். இங்ஙனம் திருச்சபையின் உள் அமைப்புகளுக்கும் பௌத்த சமயசைத்திய மண்டபத்திற்கும் இடையே ஒற்றுமைகள் காணப்படுகின்றன. ஆரம்பகாலக் கிறிஸ்தவப் பிரிவுகளில் சில துறவறத்தைப் போற்றியுள்ளன. திருச்சின்னங்கள் வழிபாடும், ஜெப மாலையும் கிறிஸ்தவ சமயத்தில் இடம்பெற்றுள்ளன. இவைகளையெல்லாம் கிறிஸ்தவ சமயத்தவர் இந்திய சமயங்களிலிருந்து பெற்றிருக்க வேண்டும்.

இந்தியாவிலிருந்து புத்தசமயம் மேலை நாடுகளுக்குச் சென்றதைப்போல மேலை நாடுகளிலிருந்து கிறிஸ்தவசமயம் நம்நாட்டிற்கு வந்தது. ஏசுநாதரின் சீடர்களில் ஒருவரான புனித தாமஸ், கிறிஸ்தவ சமயத்தை இந்தியாவில் போதித்தார். அவர் முதல் நூற்றாண்டில் ஆட்சிசெய்த **கொண்டோபர்னஸின்** அரசவைக்கு வந்து கிறிஸ்தவத்தைப் பரப்பியதாகத் தெரிகின்றது. அதன் பிறகு அவர் கேரள நாட்டிற்குச் சென்று அங்கே பலரைக் கிறிஸ்தவர்களாக மாற்றியதுடன் சமயவட்ட எல்லைகள் பலவற்றையும் நிறுவினார். தென் மேற்கு இந்தியாவிலிருந்து அவர் பரங்கிமலைக்கு வந்தபோது அங்கே அவர் கொல்லப்பட்டதாகக் கூறப்படுகின்றது. இங்ஙனம் ஆங்கிலேயர் வருவதற்கு வெகுகாலத்திற்கு முன்பே கிறிஸ்தவசமயம் உரோமப் பேரரசிலிருந்து இந்தியாவிற்கு வந்துவிட்டது.

## இந்தியாவும் சீனாவும்

இந்தியாவிற்கும் மேலை நாடுகளுக்குமிடையேயான நெடுநாளைய தொடர்புகளில் வாணிகம் முக்கிய இடத்தினைப்பெற்றது. கலாச்சாரம் இரண்டாவது இடத்தையே கொண்டது. இதற்கு மாறாக, மத்திய ஆசியாவுடனும், சீனாவுடனும், தென்கிழக்காசிய நாடுகளுடனும் இந்தியர்

கொண்ட தொடர்பு, முக்கியமாக, கலாச்சாரத் தொடர்பே யாகும். இங்கே வாணிகம் இரண்டாம் நிலையிலேயே இருந்தது. மேற்றிசை நாகரிகத்தைப் பொருத்த வரையில் இந்தியாவின் செல்வாக்கின் பயன் எதுவாக இருந்த போதிலும் ஆசியாவின் பெரும் பகுதியில் பிரகாசமான இந்திய நாகரிகத்தின் சாயல் படிந்துள்ளது.

இந்தியக் கலாச்சாரம் சீனாவில் பரவியதைப் புரிந்து கொள்வதற்கு அந்த நாட்டிற்கும் இந்தியாவிற்குமிடையே மத்திய ஆசியாவின் வழியாகச் சென்ற வழித்தடங்களைப் பற்றி, அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். பெஷாவர், காபூல் பள்ளத்தாக்கு, பாக்டீரியாவிலுள்ள பால்க் ஆகியவற்றின் மூலமாக பிரதான வழித்தடம் அமைந்திருந்தது. பால்கிலிருந்து மூன்று தடங்கள் பிரிந்து தரீம் வடிகால் பிரதேசம் தற்கால சீனதுருக்கிஸ்தானம், அல்லது சிங்கியாங்கை அடைந்தன. அவற்றுள் ஒன்று பாமீர் வழியாகச் சீனாவிற்குச் சென்றது. மற்றொன்று வடக்குவழி. அது ஆக்சஸ், ஜக்ஸார்டஸ் வழியாகச் சீனாவிற்குச் சென்றது. மூன்றாவது தெற்கு வழி. அது காஷ்கர், யார்க்கண்டு வழியாகச் சீனாவை அடைந்தது. இவையேயன்றிச் சீனாவிற்குச் செல்லக் கடல்வழி ஒன்றும் இருந்தது. அது சீனக்கடல் வழியாகவும் இந்துமா கடல் வழியாகவும் சென்றது.

அசோகர் காலத்தில் புத்தசமயம் இந்தியாவிலிருந்து மத்திய ஆசியாவிற்குப் பரவிற்று. மத்திய ஆசியாவில் இந்தியப் பாணியில் கட்டப்பட்ட ஸ்தூபிகள் மற்றும் விகாரங்களின் அழிபாடுகளிலிருந்தும், கண்டுபிடிக்கப்பெற்றுள்ள சிலைகளிலிருந்தும் இதனை அறியலாம். மேலும் சமஸ்கிருதத்திலும் பிராகிருதத்திலும் மத்திய ஆசியமொழிகள் சிலவற்றிலும் எழுதப்பட்டுள்ள புத்தசமய இலக்கியங்கள் கிடைப்பதைக் கொண்டும் இது உறுதியாகின்றது. மத்திய ஆசியாவில் புத்த சமயமே அதிகமாகப் பரவி இருந்தபோதிலும், பிராம்மண சமயமும் அங்கே வழக்கில் இருந்தது. இதனை மெய்ப்பிப்பதைப் போன்று மத்திய ஆசியாவிலுள்ள நூஜா, எண்டரே போன்ற இடங்களில் கணேசர், குபேரன், திரிமுகர் ஆகியோரின் உருவங்கள் பொறிக்கப்பட்ட முத்திரைகள் கிடைத்துள்ளன.

கிறிஸ்தவ சகாப்தத்திற்கு முன்பே இந்தியா சீனாவுடன் தொடர்பு கொண்டிருந்தது. முதலில் இத்தொடர்பு வாணிக அடிப்படையிலானது. சீனத்துப்பட்டிற்கு நம்நாட்டில் மிகுந்த மதிப்பிருந்தது. ஆயின், எல்லா நாடுகளிலும் எப்போதும்

ஏற்பட்டதைப்போல வாணிகப் பண்டங்களுடன் கருத்துகளும் கொண்டு செல்லப்பட்டன. அதன் விளைவாகச் சீனாவில் புத்தசமயம் புகுந்தது. அசோகர் காலத்திற்குப் பிறகுதான் புத்தசமயப் பரப்பாளர்கள் சீனாவிற்குச் சென்றனர் என சீன மரபுரைகள் தெரிவிக்கின்றன. மத்திய ஆசியாவின்மீது படையெடுத்த சீன தளபதி ஒருவர் கி. மு. 121-ம் ஆண்டில் புத்தரின் தங்கச் சிலை ஒன்றுடன் திரும்பிவந்ததாகச் சீனக் குறிப்புத் தெரிவிக்கின்றது.

கி. பி. முதல் நூற்றாண்டில்தான் புத்தசமயம் சீனாவில் பரவியிருக்க வேண்டுமென்று பெரும்பாலான வரலாற்று அறிஞர்கள் அறிவிக்கின்றனர். சீனப் பேரரசின் அழைப்பிற்கிணங்கத் **தாமரத்னா, கஸ்யபமாதங்கா** என்னும் இரு புத்த சமயத் துறவிகள் சீன அரசவைக்குச் சென்றனர். அவர்களுக்காகத் தலைநகரமான பீகிங்கில் மடம் ஒன்று கட்டுமாறு பேரரசர் ஆணையிட்டார். அது ''வெண்புரவி மடம்'' எனப் பெயர் பெற்றது. அவ்விரு துறவிகளும் பல புத்தசமய நூல்களையும், திருச்சின்னங்களையும் வெள்ளைக் குதிரைமீது வைத்துக் கொண்டுவந்ததால் இப்பெயர் வந்ததென்பர்.

இங்ஙனம் சீனாவில் புத்தசமயம் வேரூன்றியது. பிற்காலத்தில் மத்திய ஆசிய நாடுகளிலிருந்து பல பௌத்தத் துறவிகள் சீனாவிற்கு வந்தனர். கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் பார்த்திய மன்னர் ஒருவர் முடிதுறந்து பௌத்தத் துறவி ஆனார் என்பதை ஏற்கெனவே, 'இந்தியாவும் உரோமும்' என்னும் அதிகாரத்தில் கண்டோம். ஷிகோ (Sheko) அல்லது **லோகதூமா** என்னும் பெயருடைய இந்தப் பார்த்தியத் துறவி வேறுபல பார்த்திய மற்றும் சோக்தியத் (Sogdian) துறவிகளுடன் வெண்புரவி மடத்தில் தங்கியிருந்தார். சீனாவின் பல்வேறு பகுதிகளில் புத்தசமயத்தைப் போதித்த சமயப் பரப்பாளர்களின் பெயர்களைச் சீனர்கள் பாதுகாத்து வந்துள்ளனர். இவ்வாறு புத்தசமயமும் அதனுடன் இந்திய கலாச்சாரமும் மத்திய ஆசியாவையும் சீனாவையும் நாகரிக மேம்பாடு அடையச் செய்யும் வலிமை வாய்ந்த சக்திகளாக இருந்தன என்பது புலனாகின்றது.

புத்தசமயம் தோன்றிய புனித பூமியாகிய இந்தியாவைக் காணவும், புத்தசமய நூல்களைத் திரட்டவும் பல சீனத் துறவிகள் பெரிதும் விரும்பினர். அவ்விதம் இந்தியாவிற்கு வந்தவர்களுள் கி. பி. நான்காம் நூற்றாண்டில் வந்த பாஹியான், ஏழாம் நூற்றாண்டில் வந்த யுவான் சுவாங், இட்சிங்

ஆகியோர் குறிப்பிடத் தகுந்தவர்களாவர். இந்தச் சீனத்துத் துறவிகள், தாங்கள் கண்ட இந்தியாவைப்பற்றிய குறிப்புகளை எழுதி வைத்துள்ளனர்.

புத்தசமயம் சீனாவிற்கு வந்தபோது அந்நாட்டில் ஏற்கனவே கன்பூஷிய சமயம், தாவோயிசம் (Taoism) ஆகியவை வலிமை பெற்று விளங்கியிருந்தன. புத்தர் வாழ்ந்த கி. மு. ஆறாம் நூற்றாண்டில்தான் கன்பூஷியஸும், லோட்சேவும் (தாவோ சமயத்தைத் தோற்றுவித்தவர்) சீனாவில் வாழ்ந்து வந்தனர். கன்பூஷிய சமயம் ஒழுக்க நெறிக் கோட்பாடுகளின் தொகுப்பாகும். ஆனால், தாவோ சமயத்தில் தத்துவமும் கலந்துள்ளது. பௌத்தத்தை அன்னிய சமயம் என்று சீனர்கள் கருதிய போதிலும் சீனாவில் இருந்த கலாச்சாரச் சூழல் புத்தசமயம் வளர்வதற்கு வாய்ப்பாக இருந்தது. கன்பூஷிய சமயத்திலும், தாவோசமயத்திலும் ஆன்மீகத் தன்மை குறைவாகும். ஆனால், சமய உணர்வுடைமை (Religiosity), ஈகை, நம்பிக்கை ஆகிய பண்புகள் நிறைந்த புத்தசமயம் சீன நாட்டில் குறைவாக இருந்த ஆன்மீகத் தன்மையை இந்தியாவிலிருந்து கொண்டு சென்றது. நாளடைவில் அது கன்பூஷிய சமயத்தைத் தன் வயமாக்கிக் கொண்டு சீனா முழுவதிலும் வெகு விரைவாகப் பரவியது.

இந்நிகழ்ச்சிகளால், பண்டைக்காலத்தில் இந்தியா தனித்து வாழவில்லை என்பது தெரிகிறது. அதற்குமாறாக அக்காலத்தில் விளங்கிய பாரசீகம், கிரேக்கம், உரோமாபுரி, சீனா ஆகிய நாடுகளில் வாழ்ந்த மக்களின் நாகரிகங்களுடன் நெருங்கிய தொடர்புகொண்டு, அவற்றின் மீது செல்வாக்குப் பெற்றும், அவற்றின் செல்வாக்கிற்குட்பட்டும் வளர்ந்த வண்ணமிருந்தது.

# 5. இந்திய அரசு

மனிதன் உருவாக்கிய அமைப்புகளில் அரசுதான் மிக முக்கியமானதாகும். சமுதாய வாழ்க்கையெனும் வானுயர்ந்த வளைமாடத்தின் மையக்கல் அதுவேயாகும். வரலாற்றின் ஆரம்பக் காலந்தொட்டு இக்காலம் வரையில் சிந்தனையாளர் அனைவரின் கவனத்தையும் கவர்ந்த பெரும் பொருளும் இதுவாகும். இத்தகைய அரசின் கோட்பாட்டையும் அதன் வளர்ச்சியையும் குறித்துப் பண்டைக்காலத்தில் மனு, கௌடில்யர், திருவள்ளுவர் ஆகியோரும், இக்காலத்தில் மகாத்மா காந்தியும் விவாதித்துள்ளனர்.

அரசு என்பது என்ன? அரசு என்பது அமைப்புகளுக்கெல்லாம் தலையாய அமைப்பு; அரசாங்கம் செய்யும் சட்டத்தின் மூலமாகச் செயல்படவும், அவ்வாறு செய்வதற்குத் தேவையான ஒறுக்கும் சக்திகொண்டும் திகழும் அமைப்பு, குறிப்பிட்ட நில எல்லைக்குள் வாழும் சமுதாயத்தில் ''சமுதாய ஒழுங்கின் வெளிப்புற நிலைகளை நிலைநாட்டவல்ல அமைப்பு'' என, இக்காலச் சமூக இயல் அறிஞர் ஒருவர் கூறியுள்ளார். இங்ஙனம், வரையறுக்கப்பட்ட நிலப்பரப்பு, மக்கள் தொகை, அரசாங்கம், இறைமைத் தன்மை (Sovereignty) ஆகியவையே அரசின் அடிப்படைகளாக அமைகின்றன. 'பெரியமீன் சிறியமீனை விழுங்கும்' என்னும் விதிமுறையான மச்ச நியாயத்திற்கு (Matsya nyaya) எதிரிடையானது அரசு எனப் பண்டைக்கால இந்தியாவில் விளக்கம் தரப்பட்டது. சட்டம், ஒழுங்கு, நீதி, பாதுகாப்பு, மக்கள் நலம் ஆகிய அனைத்து நிலைகளையும் ஒருங்கே குறிக்கும் சொல் அரசு என்பதாம்,

## அரசியல் கோட்பாடு

**மனு**

நம்து நாட்டில் முதன் முதலில் சட்டம் தந்தவர் மனு என்று கொள்ளப்படுகின்றது அவர் கி. மு. ஆறாம் நூற்றாண்டிற்கு முன்பே வாழ்ந்தவர் என்று வரலாற்று அறிஞர்கள் குறிப்பிடுவர். பிற்காலத்தில் தர்மசாஸ்திரங்களில் பின்பற்றப்பட்ட சட்ட இயல் முறையின் சீரான விளக்கத்தை மனுஸ்மிருதியில் முதன் முதலாகக் காணமுடிகின்றது. அது

தெய்வீகத் தன்மை வாய்ந்தது எனக் கொள்ளப்பட்டதால் இந்துக்கள் அதனைப் பெரிதும் மதித்தனர். அரசியல் பற்றி யும் சட்டம் குறித்தும் மனு கொண்டிருந்த கருத்துகளை இனி ஆய்வோம்.

'தனி ஒருவனான அரசனுடைய ஆணைக்குப் பலராக இருக்கின்ற மக்கள் கீழ்ப்படிவது எப்படி?' என்று மகாபார தத்தில் யுதிஷ்டிரர் பீஷ்மரைக் கேட்டபோது, பீஷ்மர் பின் வரும் பதிலைத் தந்தார். ''ஒருகாலத்தில் மக்கள் நல்லவர் களாகவும், தனி மனிதன் ஒவ்வொருவனும் தன் கடமை களை உணர்ந்து செயல்படுபவனாகவும் இருந்தபோது அரசின் அவசியம் உணரப்படவில்லை. ஆனால், காலப்போக்கில் நிலைமைகள் மாறின. வலிமையே நேர்மையென்றானது. காட்டு நியதி நாட்டிற்கு வந்தது. குழப்பத்திலிருந்து தங் களைக் காக்கவேண்டுமென்று மக்கள் இறைவனைத் தொழு தனர். பிரம்மதேவர் சட்டத் தொகுப்பு ஒன்றை உரு வாக்கித் தம்முடைய மகன் விரஜாஸ் மூலமாக அதனை நடை முறைப்படுத்தினார் (enforced). இவ்வாறாகத்தான் அரசு பிறந்தது; முதல் அரசனும் தோன்றினான்.'' எனவே அரசு என்பது ஆண்டவனுடைய படைப்பு. தான் நல்லவனாக வாழ உதவும் அரசினை மனிதன் ஏற்றுக் கொண்டான் என்பது மகாபாரதக் கருத்து. இதிலிருந்து, குழப்பத்தை நீக்கவே அரசு தோன்றியது என்பது தெளிவாகும். அறம் பொருள், இன்பம் ஆகியவற்றை (Dharma, Artha, Kama) வளர்ப்பதற்காக வந்தது அரசு எனலாம். இங்கே தர்மம் என்பது தனிமனித ஒழுக்கத்தையும் சமுதாய ஒழுக்கத்தை யும் குறிக்கும். பொருள் என்பது, பொருளாதார நலனைச் சுட்டும். இறுதியாகச் சொல்லப்பட்ட இன்பம் என்பது, சமுதாய ஒழுங்கினை நிலைநாட்டி, வாழ்க்கையின் பங்களைத் துய்ப்பதைக் குறிக்கும். இந்த மூன்று குறிக்கோள்களையும் அடைவதற்குப் படைபலத்தை அல்லது தண்டத்தைப் பயன் படுத்த வேண்டும்.

மனுஸ்மிருதியிலும் அரசின் தெய்வீகத் தோற்றம் (Divine Origin) பேசப்படுகின்றது. தாம்படைத்த உயிரினங்களை யெல்லாம் பாதுகாக்க என்று இறைவன் அரசனைப் படைத் தான் என்றும், மனித வடிவில் இருக்கும் இறைவனை மன்னன் என்றும் மனுஸ்மிருதியில் கூறப்பட்டுள்ளது. சமுதாய ஒப்பந்தக்கொள்கை பற்றிய குறிப்பொன்றும் மனுஸ்மிருதி யில் காணப்படுகின்றது. திருட்டுப் போன பொருளை

மீட்டுத்தர இயலாத மன்னவன் பொருளை இழந்தவனுக்கு இழப்பீடு தரவேண்டுமென்று மனுசாஸ்திரம் கூறுகின்றது.

தவறுசெய்பவர்களை ஒறுக்க அரசர்கள் தண்டத்தைப் பயன்படுத்த வேண்டுமென்று வற்புறுத்திக் கூறுகின்றார் மனு. ஆனால், அதேசமயத்தில் வரம்பில்லா அதிகாரத்தை மன்னர்களுக்கு வழங்க அவர் தயாராக இல்லை; தங்களை எதிர்ப்பவர்களையெல்லாம் அழிப்பதற்குத் தெய்வீக உரிமையைக் கொண்டாடினர் இங்கிலாந்தை யாண்ட ஸ்டூவர்டு மன்னர்கள். ஆனால், அரசன் நினைத்ததைச் செய்யலாம் என்ற வரம்பற்ற அதிகாரத்தை மனு ஒப்பவில்லை. செங்கோல்வேந்தன் செழித்து வாழ்வான்; கொடுங்கோலரசன் அழிந்துபடுவான் என அவர் குறிப்பிடுகின்றார். ''அரச அதிகாரத்தின் சின்னமாக விளங்கும் தண்டமே, கடமை தவறும் காவலரைக் கூண்டோடு அழித்து விடும்.'' என அவர் கூறுகின்றார். படைவலியை (தண்டம்) முறையாகப் பயன்படுத்தி நாட்டை ஆள்வது கடினமான செயலாகும். எனவே அரசனுக்கு வேண்டிய சரியான கல்வி குறித்தும் பயிற்சி பற்றியும் விரிவான நெறிமுறைகளை வகுத்துள்ளார் மனு

மன்னருடைய அதிகாரத்திற்கெதிரான அரசியல் அமைப்புச் சட்ட ரீதியான தடைகள் ஏதும் அக்காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால், ஒழுக்க நெறி முறையிலான தடைகள் இருந்தன. தர்மவிதிகளின் அடிப்படையிலேயே அரசன் ஆட்சிசெய்ய வேண்டும். கொடுங்கோல் அரசன் அல்லது தீய மன்னனுக்கு எதிராகப் புரட்சி செய்யும் உரிமை மக்களுக்கு உண்டு என்பதை மனு ஒப்புக்கொண்டுள்ளார்.

மன்னனே அரசு அல்லன்; அதனுடைய ஓர் அங்கமே அரசன் எனச் சட்டம்பற்றிய மேதையான மனு அறிவித்தார். ''மன்னன், மதியமைச்சர், நாடு, கோட்டை, கருவூலம், படை, நட்பு'' ஆகிய அனைத்தும் ஒருங்கிணைந்த ஒன்று தான் அரசு என்றார். அங்கங்களான இவற்றுள் ஏதேனும் ஒன்றிற்கு ஊறுநேர்ந்தால் அதனைப் பெருங்குறையாகக் கொள்ளவேண்டுமென்றார். இவற்றில் எந்த ஓர் அங்கமும் மற்றவற்றைக் காட்டிலும் உயர்ந்தது அன்று. ''ஒவ்வோர் அங்கமும் ஒரு குறிப்பிட்ட பணியை நிறைவேற்றும் தகுதிபடைத்தது என்ற காரணத்தால், அந்தந்த நோக்கத்தை நிறைவேற்றுதல் என்று வரும்போது ஒவ்வோர்

அங்கமும் அதிமுக்கியமானதாகக் கருதப்படும்'' என மனு விளக்கினார்.

அரச பதவியை ஓர் அறக்கட்டளையாகவே (Trust) மனு கருதினார். நற்கல்வியும் நல்லபயிற்சியும் வேந்தருக்குத் தேவை யென்றார். ஏழு அல்லது எட்டு அமைச்சர்களின் உதவியுடன் நாட்டை மன்னன் ஆளவேண்டுமென்றார். அத்தகைய அமைச்சர்களுள் ஒருவன் தலைமை அமைச்சராக வேண்டுமென்றும் அவன் பிராம்மணனாக இருக்கவேண்டுமென்றும் கூறினார். புதிதாக வென்றடக்கிய நாட்டில் கனிவுடைய, நலம்பயக்கும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்று மனு பரிந்துரை செய்துள்ளார். ஸ்ருதி அல்லது வேதங்கள், ஸ்மிருதி அல்லது தர்ம சாஸ்திரங்கள், மறையோரின் வழக்கங்கள், தனிமனிதனுடைய சொந்த விருப்பங்கள் ஆகியவையே சட்டத்தின் அடிப்படைகள் என்பது அவர் தம் கருத்து. சர்ச்சை வரும்போது ஸ்ருதி முதன்மையிடத்தைப்பெறும். ஸ்மிருதி பின்னணியில் நிற்கும். ஆனால், மற்ற இரண்டோடு ஒப்பிடும்போது இவையிரண்டும் முன்னுரிமை பெறும் என்றார். சட்டத்தை அவர் பதினெட்டு வகையாகப் பிரித்துள்ளார். தண்டனைகளைப் பொருத்த வரையில் ஒரு குலத்துக்கொரு நீதி வழங்கியுள்ளார். அதாவது குற்றவாளியின் ஜாதிக்கும், கொடுமைக்கு உள்ளானவனின் ஜாதிக்கும் ஏற்பவே தண்டனைகள் வழங்கவேண்டுமென்றார்.

**கௌடில்யர்**

பண்டைய இந்தியாவில் அரசியல் கோட்பாட்டு வளர்ச்சிக்குத் தலையாய தொண்டாற்றியவர் கௌடில்யர் எனலாம். விஷ்ணு கோபர் என்றும், சாணக்கியர் என்றும் அழைக்கப்படும் கௌடில்யர் கி.மு. நான்காம் நூற்றாண்டில் அர்த்த சாஸ்திரமெனும் அரிய அரசியல் கோட்பாட்டு நூலைப் படைத்துள்ளார். சந்திரகுப்த மௌரியர் மகத நாட்டின் முடிமன்னராக ஆவதற்கு உதவிய அவர், அந்தப் பேரரசின் முதல் அமைச்சராகவும் விளங்கினார். அரசாங்கத்தின் இயலையும், நடைமுறையையும் நன்கு அறிந்தவராகத் திகழ்ந்தார். அவர் எழுதிய அர்த்தசாஸ்திரமும் மௌரியரின் மெச்சத் தகுந்த ஆட்சிமுறையும் பண்டைக் கால இந்தியர், தத்துவ உலகில் மட்டுமே மேன்மையுற்றனர் என்றும், செயல் வீரர் என்ற வகையில் வெற்றி பெறவில்லையென்றும் இருக்கின்ற பழைய நம்பிக்கையைத் தகர்த்

தெறிந்துள்ளன. 1905ஆம் ஆண்டில்தான் சாமா சாஸ்திரி அவர்கள் அர்த்த சாஸ்திரத்தை முதன்முறையாக மொழி பெயர்த்தார். கௌடில்யர் எழுதிய அர்த்தசாஸ்திரம் பொதுவாக உரை நடையில் அமைந்துள்ளது. ஒவ்வோர் அத்தியாயத்தின் முடிவிலும் சில அடிவரையறைச் செய்யுட்கள் இடம்பெறுகின்றன. நாட்டைக் கைப்பற்றி அதனைக் காக்கும் வழிவகைகளை விளக்கும் அறிவியல் நூலே ''அர்த்த சாஸ்திரம்''. செங்கோல் அல்லது அரசாங்கம் குறித்துக் கூறும் ''தண்ட நீதியும்'' அதுவாகும். ''பழங்கால இந்தியாவின் அரசியல் மற்றும் பொருளாதார நிலைகள் குறித்து இவ்வாறு முழு அளவில் செய்திகளைத் தரும் இந்திய இலக்கியம் வேறெதுவும் இல்லை'' என அர்த்தசாஸ்திரத்தின் இன்றியமையாத்தன்மையை மக்டானல் ஒப்புக்கொண்டுள்ளார். ''இந்தியனின் சிந்தனை, மற்றும் ஆன்மீக வெற்றிகளிலிருந்து மாறுபட்டதும், சமயம் சாராத நடைமுறை சார்ந்த செய்திகளையும், அவற்றில் இந்துக்கள் கொண்ட வெற்றிகளையும் படம்பிடித்துக் காட்டும் ஏடுதான் அர்த்த சாஸ்திரம்'' என்று பேராசிரியர் இராதா குமார் முகர்ஜி குறிப்பிடுகின்றார்.

அர்த்தசாஸ்திரத்தில் பதினைந்து இயல்களும், நூற்றைம்பது அதிகாரங்களும் உள்ளன. இதனை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். அரசன், அவனது ஆலோசனைக்குழு, அரசாங்கத்துறைகள் ஆகியன குறித்துப் பேசுவது முதல் பகுதி. இரண்டாவது பகுதியில் பொதுச்சட்டமும், குற்ற இயல் சட்டமும் (Civil and Criminal Law) இடம்பெறுகின்றன. மூன்றாவது பகுதியில் பன்னாட்டுச்சட்டம், போர், வெல்திறம் (diplomacy) ஆகியவை விளக்கப்படுகின்றன. இந்நூலில் வரும் செய்திகள் பல்பொருள் அறிவு நிரம்பினவையதாகக் காணப்படுகின்றன. இத்தகைய அறிவும் மதிநுட்பமும் சிறிய தலை ஒன்றில் அடங்கியிருக்க முடியுமா! எனச் சில அறிஞர் ஐயுறுவர்.

கௌடில்யரின் அரசியல் கருத்துக்களைப்பற்றி அர்த்த சாஸ்திரம் நிறையச் செய்தி தருகின்றது. மனிதன் வீடுப்பேறு அல்லது மோட்ச இன்பத்தை அடையவேண்டும், அதனை அடைவதற்கு உதவவே சமுதாய அமைப்புகள் வாழ்ந்தன என்ற வகையிலேயே, அநேகமாக அனைத்து இந்துக்களின் எண்ணம் இருந்தது. அரசியல் அமைப்புக்களும் சமுதாய ஒழுங்கைப் பாதுகாக்க வந்தனவாகையால்

அவையும் ஆன்மீகக் குறிக்கோளை அடைய உதவும் கருவிகளே ஆன்மீக வாழ்க்கையைப் பெறவேண்டுமானால், காவல் துறையின் பணிகளை மட்டும் அல்லது முறை வழங்கும் பணியை மட்டும் அரசு மேற்கொண்டால் அதுபோதாது மக்களின் வாழ்க்கை முழுவதையும் அது தழுவி நிற்க வேண்டும் இதனால் அரசு சர்வாதிகார அரசாகின்றது. ஆனால், ஒருதிறமாக்கும் கட்டுப்பாடு (regimentation) அங்கே கிடையாது 'மௌரியர்கால அரசின் செயல்பற்றி விரிவான விளக்கத்தையும் அர்த்தசாஸ்திரம் அளிக்கின்றது அன்னிய படையெடுப்புகளிலிருந்து நாட்டைக்காத்தது அரசு, உள்நாட்டில் ஒழுங்கை நிலை நாட்டியது, உண்மைச் சமயத்தை வளர்த்தது விவாகரத்து, பிரிவினை, மறுமணம், அதை அடுத்துச் செய்துகொள்ளும் திருமணங்கள் ஆகியவை குறித்து நிபந்தனைகளை வகுத்தளித்தது, மது உற்பத்தியையும் விற்பனையையும் ஒழுங்குபடுத்தியது, மக்களின் பணிகளையும் தொழிலகளையும் தனது கட்டுப்பாட்டில் வைத்திருந்தது அவர்களது பொருளாதார வாழ்க்கையை முறைப்படுத்தியது, நாடுமுழுவதிலும் விலங்குகளுக்கான நடைபாதைகளுடன் நெடுஞ்சாலைகளை அமைத்தது

தர்மசாஸ்திரங்களின் வழிநின்று மன்னர் தம கடமைகளை நிறைவேற்ற வேண்டுமென்று கௌடில்யர் விரும்பினார் அரசியல் செய்திகளில் ஆலோசனை கூறுவதற்காக அமைச்சர் அல்லது மந்திரிபரிஷத்தை மன்னர்கள் வைத்திருக்கவேண்டுமென்றார் 'தனிச் சக்கரம் ஓடமுடியாது அதுபோலப் பிறருடைய உதவியின்றி இறைமாட்சி இருக்க முடியாது'' எனக்கூறினார் அமைச்சர்களில் ஒருவர் முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்றும், அவர் பிராமணராக இருக்க வேண்டுமென்றும் மனு விதித்திருந்தார் ஆனால், சந்திரகுப்த மௌரியரின் முதல் அமைச்சரான கௌடில்யர். ஒரு பிராமணராக இருந்தும், அத்தகைய கட்டுப்பாடு எதையும் விதிக்கவில்லை என்பது குறிப்பிடத் தகுந்தது வெலதிறம (ராஜ தந்திரம்), போர், நாடுகளுக்கிடையேயான உறவுகள் ஆகியவைபற்றிக் கௌடில்யர் கொண்டிருந்த கருத்துகள் தற்கால அரசுகளில் காணப்பெறும் கருத்துகளை ஒத்திருக்கின்றன அவர் வகுத்த போர்க்களவிதிகள் மனிதாபிமானமுள்ளவை வெற்றி கொண்ட நாடுகளில் கனிவான, நலங்கூட்டும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்று அவர் விரும்பினார்.

தர்மம் (புனிதச்சட்டம்), ஒப்பந்தம், மற்றும் விவகாரம் (Vivahara), வழக்கு (Charitra), அரசகட்டளை (Raja Sasana) ஆகியவை சட்டத்தின் நான்கு கால்கள் எனவும், இவற்றில் அரசகட்டளையே முதன்மையானது என்றும் கௌடில்யர் வகுத்துள்ளார். இவ்விடத்தில், ஸ்ருதிக்கு முதலிடம் தந்த மனுவின் திட்டத்திலிருந்து கௌடில்யர் மாறுபடுகின்றார். சட்டங்கள் செய்வதில் மன்னருக்கே முதன்மையான அதிகாரத்தை வழங்கியுள்ளார். பகுத்தறிவு அடிப்படையிலான சட்டத்திற்கும் புனிதச்சட்டத்திற்கும் இடையே மோதல் வருமானால் பகுத்தறிவே முன்னுரிமை பெற வேண்டுமென்பது கௌடில்யரின் புரட்சிக் கருத்து. மனுவைப் போலவே கௌடில்யரும் ஜாதி அடிப்படையில் குற்றங்களுக்குத் தண்டனை வழங்கவேண்டுமென்றார். ஆயினும், பொதுவாகத் தாழ்ந்த ஜாதியினருக்கும் தண்டனைகளின் கடுமையை அவர் குறைத்துள்ளார். பெருங்குற்றம் செய்த பிராமணனுக்கு மரணதண்டனை அளிக்கலாகாது (நாடு கடத்த வேண்டும்) என்று மனு கூறினார். ஆனால், அரசத்துரோகக் குற்றமிழைத்த பிராமணனுக்கு மரண தண்டனை விதிக்கலாம் எனக் கௌடில்யர் யோசனை கூறியுள்ளார்.

பல்பொருள் சார்ந்த அறிவினைக் கொண்டவர் கௌடில்யர். அரசர், அமைச்சரவை பொதுத்துறை மற்றும் குற்றஇயல் சட்டம், போர், வெல்திறம், நாடுகளுக்கிடையேயான உறவு போன்ற பல்வேறு பொருள்கள் குறித்து அவர் எழுதியுள்ளார். ''சந்தர்ப்பவாத அரசியலை'' (Politics of expediency) அறிமுகப்படுத்தினார் என்று கௌடில்யரைப் பலர் குறைகூறுவர். முடிவுதான் முக்கியம், வழி முக்கியமல்ல என்று கொண்ட 'இந்திய மாக்கியவல்லி' எனவும் கௌடில்யர் அழைக்கப்படுகின்றார்.

பண்டைக்கால இந்தியாவில் விளங்கிய பழங்குடியினரின் குடியரசுகள், முடியாட்சி அரசுகள், பேரரசுகள் எல்லாம் நம் நாட்டில் அரசியல் வாழ்க்கைக்கு உரமூட்டியுள்ளன. காலங்களெல்லாம் 'பொற்காலங்கள்' அல்ல. வலிமையான நல்லரசுகள் வாழ்ந்த காலங்களும் உண்டு. மாறுபட்ட ஆசைகள் கொண்டு ஒன்றுடன் ஒன்று போராடி வந்த, சிறிதும் பெரிதுமான பல அரசுகள் வாழ்ந்து வந்த காலங்களும் உண்டு. ஆயினும், பண்டைக்கால இந்தியாவைப் பற்றிச் சரியாக எண்ணிப் பார்த்தால், நாம் பெருமைபடக்கூடிய செய்திகள் பல அதில் உண்டு என்பதையும், பிற்காலத்திற்கு

அது முன்மாதிரியாக விளங்கியது என்பதையும் காண முடியும்.

**திருவள்ளுவர்**

சங்க காலத்தைச் சார்ந்த பெரும் புலவரான திருவள்ளுவர், தமது ஒப்பற்ற நூலாம் திருக்குறளில் அரசு பற்றிய கருத்துகளை வெளியிட்டுள்ளார். கிறிஸ்தவ சகாப்தத்தின் முதல் மூன்று நூற்றாண்டுகளைச் சங்ககாலமாகக் கொள்ளலாம் எனப் பல அறிஞர் கருதுகின்றனர். வள்ளுவரின் குறளுக்கும் கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்திற்குமிடையே நெருங்கிய ஒற்றுமை காணப்படுகின்றது. அர்த்தசாஸ்திரத்தில் வருவதைப் போலவே, படை, குடி, கூழ் (செல்வம்), ஆலோசனைக் குழு, நட்பு, அரண் ஆகியவை அரசின் ஆறு அங்கங்கள் எனத் திருக்குறளிலும் குறிப்பிடப் படுகின்றது. அர்த்தசாஸ்திரத்தில் மன்னரையும் சேர்த்து ஏழு அங்கங்கள் பேசப்படுகின்றன. காட்சிக் கெளியராக, கடுஞ் சொல் அல்லராக, இனியவை கூறுபவராக வேந்தர் வருணிக்கப்படுகின்றார். மக்களின் இன்பமே மன்னரின் இன்பமாக இருக்க வேண்டும். அறவிதிகளின்படி ஆட்சி செய்வதைப் பொருத்து மழை பெய்தது. துணைவர்களின் ஆலோசனைகளை அரசர் கேட்கவேண்டியதின் தேவையும், அரசின் தலைமை அதிகாரிகளின் தகுதிகளும் அர்த்தசாஸ்திரத்தில் வருவதைப் போன்று திருக்குறளிலும் காணப்படுகின்றன. கௌடில்யரைப் போன்று தூதுவர்கள், அரண்கள், படை ஆகியவற்றைத் திருவள்ளுவரும் வலியுறுத்தியுள்ளார். ஒற்றர்கள் பற்றிய அவர்தம் கருத்துகள் கௌடில்யருடையதை ஏறக்குறைய ஒத்துள்ளன. ''ஒற்றனும் சட்ட நூலும் மன்னரின் இரு கண்கள்'' என்பது இவர்தம் கருத்தாகும். வரம்பற்ற அதிகாரத்தின் தீய, கேடு பயக்கும் பண்பினை



படம் 5. திருவள்ளுவர்

வலியுறுத்திய போதிலும், மழை பெய்வதற்கும் பொறுப் பாக்கும் அளவிற்கு மன்னரின் சர்வ வல்லமையை வலியுறுத் தும் கோட்பாட்டினைத் திருக்குறள் ஏற்றுக்கொண்டுள்ளது. ஆனால், அர்த்த சாஸ்திரத்தில் நாம் காணும் சந்தர்ப்ப வாதத்திற்கும் மாக்கியவல்லியின் போதனைகளுக்கும் முற் றிலும் மாறுபட்டவை குறளில் காணும் உயர் ஒழுக்க நெறி கள். அதுகாட்டும் அரசியல் முறைகளானவை தர்மசாஸ் திரங்களில் வரும் அறிவுரைகளை ஒத்துள்ளன. மன்னருடைய நலன்களுக்கும் மக்களுடைய பொது நலன்களுக்கு மிடையே ஒற்றுமை இல்லையானால், பொருளாதார முன்னேற்றம் பயனற்றது எனத் திருவள்ளுவர் அறிவித்துள்ளார். நன் கொடைகளையும், கட்டாயக் கடன்களையும் ஆதரிக்கும் அர்த்த சாஸ்திரத்திற்கு மாறாக, இவ்வித வருவாய்களைக் கொள்ளும் மன்னர், கள்வருக்கு ஒப்பாவர் எனக் குறள் குறிப்பிடுகின்றது.

## மகாத்மா காந்தி

தற்கால இந்தியச் சிந்தனையாளர்களில் வெளிநாடுகளில் அதிக செல்வாக்கு பெற்றவர் மகாத்மா காந்தியாவார். ஏசு கிறிஸ்துக்குப் பிறகு வந்த தலைசிறந்த மனிதர் எனக் காந்தி ஜியை அமெரிக்காவைச் சேர்ந்த மறைதிரு ஹோம்ஸ் என் பார் (Rev. Holmes) வருணித்துள்ளார். உண்மையில், புத் தருக்குப்பிறகு வந்த இந்தியர்களில் தலைசிறந்தவர் மகாத்மா என்பது உறுதி. உயரிய நிலையிலான இந்தியா வின் கருத்தியல் கோட்பாட்டு நிலையின் பிரதிநிதியாக அவர் விளங்குகின்றார். வன்முறையில்லாத போராட்டத் தின் மூலமாக பிரிட்டிஷ் ஆதிக்கத்தை அவரால் அழிக்கமுடிந் தது. கத்தியின்றி, ரத்தமின்றிப் பெருஞ் சுதந்திரப் போரை அவர் வெற்றிகரமாக நடத்தினார். அணு அயுத யுகத்தில் அமைதியின் அற்புத வெற்றியைப் பெற்றார். தமது வாழ்நாள் முழுவதிலும் அவர் உலக நன்மையை மனதிற் கொண்டும் உண்மையான அன்பு உணர்வுடனும் தீமையை எதிர்த்துப் போராடி வந்தார். சத்தியமே அவர் தம் கடவுள்; அகிம்சையே அவரது சமயம். வன்முறை உண்மையின் உணர்விற்கு நேர்மாறானது என்பது அவருடைய கருத்து. உடலுக்கு ஊறுவிளைப்பதும், கடுஞ்சொல் கூறுவதும், மனத்தால் பிறருக்குக்கேடு நினைப்பதும் அகிம்சையை மீறுவதாகும். பகைவனிடத்தும் அன்புகாட்டுதலும், தன்னைத் தாக்கியவனுக்காகவும் இறைவனை வழிபடுவ

தும் அகிம்சா வீரனுக்கு அழகாகும். இங்ஙனமான காந்தி யின் கொள்கைகளில் கிறிஸ்தவத் தத்துவத்தின் பிரதிபலிப் பைப் பல கிறிஸ்தவர்கள் காண்பதில் வியப்பில்லை. பிரஞ்சு அறிஞரும் அமைதிகாவலருமான ரொமெய்ன் ரோலண்டு என்பார் காந்திஜியிடம் ஈடுபாடுகொண்டு, மகாத்மாவின்



படம் 6. மகாத்மா காந்தி

வாழ்க்கை விளக்கமென்னும் உலகப் புகழ்பெற்ற நூலை இயற் றினார். ஆங்கிலக் கடற்படைத் தளபதியின் மகளான மேடலமி ஸ்லேட் (மீராபென்) என்பவர் மகாத்மா காந்தி யின் வாழ்க்கை விளக்க நூலைப் படித்துவிட்டுத் தமது சொகுசான வாழ்வைத் துறந்து காந்திஜியின் ஆசிரமத்தில் வந்து தங்கிவிட்டார்.

தேசியப் போராட்டத்தில் சத்தியத்தையும் அகிம்சை யையும் ஆயுதங்களாகப் பயன்படுத்திய ஒரே தலைவர் காந்தி அடிகளாவார். அதிலும் தாம் கையாண்ட முறை

வெற்றியைத் தேடித்தரும் என்பதையும் நிரூபித்துக் காட்டினார். அவர் உலக மக்கள் அனைவர் மீதும் அன்பு செலுத்திய போதிலும், உலகக் குடிமகனாக இருந்த போதிலும் அடிப்படையில் அவர் ஓர் இந்தியரே. பிறந்த பொன்னாட்டையும், தமது சமயமான இந்து மதத்தையும், அவர் பெரிதும் விரும்பினார். இந்தியத் தேசிய இயக்கத்தை எடுத்துப் பார்ப்போமானால், ஐரோப்பிய தாராளக் கோட்பாட்டின் செல்வாக்கிற்கு அது ஆளாகியிருந்தது. ஐயமில்லையெனினும் இந்தியக் கலாச்சார மறுமலர்ச்சியே அதன் முக்கியமான தூண்டுகோலாகும். மேல் நாட்டுப்பாணிக் கல்வி முறையை ஆதரித்த இராசாராம்மோகன்ராய், ஐரோப்பிய தாராளக் கொள்கைக்கும் இந்துசமயத்தின் உள்ளார்ந்த பண்புக் கூறுகளுக்குமிடையே எவ்வித் வேற்றுமையையும் காணவில்லை. ''சுதந்திரம் எனது பிறப்புரிமை'' என்று முதல் முழக்கமிட்ட பாலகங்காதர திலகரின் அரசியல் தத்துவத்தில் ஐரோப்பிய தாராளக் கொள்கையைவிடப் பகவத் கீதையின் செல்வாக்குத்தான் மிகுதியாகக் காணப்படுகின்றது. மேலை நாட்டுப் பழக்கங்களை மேற்கொண்ட ஜவஹர்லால் நேருவும், ஒற்றுமைக்கும் முன்னேற்றத்திற்கும் ஊக்கும் சக்தியாகக் கருதக்கூடியது இந்தியக் கலாச்சார மரபே என்று கொண்டார். வெளிநாடுகளிலிருந்து வந்த கருத்துகளான சுதந்திரம், சமத்துவம் ஆகியவற்றுடன் இந்தியக் கலாச்சாரத்தின் வளர்ந்து வரும் கருத்துக்களையும் முறையாகக் கலந்ததன் மூலமாக மகாத்மா காந்தி அடிகள் இந்திய தேசிய இயக்கத்திற்கே ஒரு தனிப் பண்பினைத் தந்தார்.

அரசியல் வளர்ச்சியும் சமுதாய வளர்ச்சியும் கைகோத்து ஒன்றாகச் செல்லவேண்டுமென்று காந்தி அடிகள் விரும்பினார். மேலும் அரசியல் மற்றும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் சமுதாயச் சீர்திருத்தம் இன்றியமையாதது எனக் கருதினார். விடுதலைப் போரில் ஈடுபட்டிருக்கும்போதே அவர் எல்லா வகுப்பு மக்களின் முன்னேற்றத்திற்காக என்று புகழ்பெற்ற 'நிர்மாணத் திட்டத்தை' (Constructive Programme) வகுத்தளித்தார். இந்த 'நிர்மாண திட்டத்தில்' அவர் தம் தத்துவத்தில் அடங்கிய ஆறுகூறுகளான அரசியல், சமுதாயம், பொருளாதாரம், கல்வி, சமயம் மற்றும் ஆன்மீகக் கூறுகள் இடம்பெற்றுள்ளன. மேலை நாட்டு நாகரிகம் தவறான வழியில் போய்விட்டது என்று அவர் நம்பிய போதினும் நமது முன்னேற்றத்திற்கு அடிப்

படையாக இருக்கக் கூடிய கூறுகளை அந்த நாகரிகத்திலிருந்து தெரிந்தெடுத்துக் கொள்ளுமாறு நம் நாட்டவரை அவர் கேட்டுக் கொண்டார். நம் நாட்டின் போக்குடன் இந்த நூற்றாண்டின் போக்கை இணக்குவிக்க வேண்டுமென்றார்.

கருத்தியலான அரசாங்கம் குறித்து மகாத்மா அவர்கள் கொண்ட எண்ண எழுச்சிகள் படிப்பதற்குச் சுவையானவை. சுதந்திரம் வந்தபிறகு அவர் 'இராமராஜ்யத்தை' அல்லது இராமனின் அரசை அமைக்குமாறு நம்நாட்டுத் தலைவர்களைக் கேட்டுக்கொண்டார். பொதுவிரிவான ஒழுக்க நெறிக் கோட்பாடுகளின் அடிப்படையில் அமைவது இராமராஜ்யம் என்றும், அதில் நீதியும் நேர்மையும் மக்களின் விருப்பார்வமும் தலையாய இடத்தைப்பெறும் என்றும் அவர் கருதினார். பணக்காரர்கள் செல்வத்தின் அறங்காவலர்களாக இருக்கவேண்டும், அவர்கள் ஏழைகளுக்கு உதவவேண்டும், மனிதாபிமான முயற்சிகளுக்குப் பொருள் கொடுத்து உதவ வேண்டுமென்றும் அன்புருவான அண்ணல் விரும்பினார். பொதுக் குடும்பத் தொழிலில் ஈடுபட்டுள்ள உடன்பிறப்புகளாகத் தொழிலாளர்களைக் கொள்ள வேண்டுமென்று முதலாளிகளுக்கு அறிவுரை வழங்கினார். அவ்வாறு செய்தால் பணக்காரனுக்கும் ஏழைக்குமிடையே, முதலாளிக்கும் தொழிலாளிக்குமிடையே மோதல் இருக்காது என அவர் எண்ணினார்.

சத்யாக்கிரகத்தின் சக்தியை நிரூபித்ததன் வாயிலாக மகாத்மா அவர்கள் உலகிற்குப் பெருந் தொண்டாற்றியுள்ளார். அவரைப் பின்பற்றிய பிறநாட்டுத் தலைவர்களிற் சிலர், தங்களுடைய நோக்கங்கள் நிறைவேற அவரது முறையைக் கையாண்டனர். காந்திஜியின் அகிம்சை என்னும் கொள்கை அடிப்படையில் அமெரிக்காவின் தெற்குப் பகுதியில் அரசியல் உரிமைகளை நிலைநாட்டுவதற்கு மார்டின் லூதர்கிங் என்பார் ஓர் இயக்கத்தையே நடத்தினார். இந்த இயக்கம் வெற்றி பெற்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நீக்ரோக்களின் உரிமைகளில் குறிப்பிடத்தகுந்த முன்னேற்றம் ஏற்பட்டது. காந்திஜிக்கும் அவரது கொள்கைக்கும் தாம் கட்டுப்பாடு உடையவர் என்பதை மார்டின் லூதர்கிங் அவர்களே ஒப்புக்கொண்டுள்ளார். 1930ஆம் ஆண்டு காந்தியடிகள் நடத்திய சட்ட மறுப்பு இயக்கத்தால் கவரப்பட்ட டையட்ரிச் பானோஃபர் (Dietrich Bonhoefer)

என்பார் காந்திஜியின் தத்துவத்தையும் முறையையும் கற்றார். நாஜி ஜெர்மனியில் ஹிட்லரின் கொடுங்கோன்மைக்கு எதிராகக் காந்தியடிகளின் முறையினைப் பயன்படுத்த விரும்பினார். ஆனால், ஜெர்மனியில் இருந்த அரசியல் சூழ்நிலை காரணமாக அவரால் அவ்வாறு செய்ய இயலாமற் போயிற்று.

## ஆட்சி முறை — மத்திய அரசு

நீண்டகாலமாக நடைபெற்ற ஊக ஆய்வு மற்றும் சிந்தனைக் கனவுகளின் (Theorising) ஒட்டுமொத்தமான நூல்வடிவே 'அர்த்த சாஸ்திரம்', என்பதை ''அரசியல் கோட்பாடு'' எனும் இயலிலேயே கண்டோம். மௌரியர் காலத்தில் உருவாக்கப்பட்ட அதன் அடிப்படையில் மௌரியர் ஆட்சிமுறை அமைந்திருந்தது. அர்த்த சாஸ்திரத்தின் ஆசிரியரான கௌடில்யர் சந்திரகுப்தரின் தலைமை அமைச்சராகத் திகழ்ந்ததால் மௌரிய ஆட்சிமுறையை வகுத்ததில் அவருக்கும் பங்கு உண்டு. பண்டைக்கால இந்தியர்கள் தத்துவத்துறையில்தான்' மேன்மை அடைந்திருந்தனர் என்ற ஆழமாக வேரூன்றியிருந்த தவறான கருத்து மௌரிய ஆட்சி முறையைப் பற்றி அறிகின்றபோது அறவே நீங்கி விடும். அதேபோன்று அக்கால மக்கள் செயல் வீரர்கள் அல்லர் என்ற தவறான கருத்தும் தானாக நீங்கும். ஆட்சிக் கலையில் நாம், உலகின் எந்த ஒரு பகுதியில் வாழும் எவருக்கும், எந்த வகையிலும் தாழ்ந்தவர்கள் அல்லர் என்பதையும் உணரமுடியும். இனி நாம் சில ஆட்சி முறைகளை ஆய்வோம்.

### மௌரியர் காலத்தில்

கௌடில்யரின் 'அர்த்த சாஸ்திரம்,' மெகஸ்தனிஸ் எழுதிய 'இண்டிகா', அசோகரது கல்வெட்டுகள் ஆகியவை மௌரிய ஆட்சி முறை பற்றி அறிய உதவும் முக்கியச் சான்றுகளாகும்.

அரசாங்கத்தின் உச்சியில் இருந்தவர் அரசர். அவருக்கு உதவ 'மந்திரி பரிஷத்' என்று பெயர் பெற்ற அமைச்சர் அவை ஒன்று இருந்தது. மீன்கள் வாழும் குளங்கள் நிறைந்த பரந்த பூங்கா ஒன்றில் அமைந்த பெருமாளிகையில் மன்னர் வாழ்ந்திருந்தார். அதில் அமைந்த சுரங்கப்பாதைகள், மடியும் கதவுகள், உள்துளை கொண்ட தூண்கள் முதலானவைகளிலிருந்து திடீரென வரும் ஆபத்துக்களைச் சமாளிக்கும்

வகையில் அரண்மனை கட்டப்பட்டது என்பதை அறிய லாம். தீ, பாம்பு ஆகியவற்றிற்கெதிரான பாதுகாப்பு நடவடிக்கைகளும், அங்கே மேற்கொள்ளப்பட்டன.

சமயலறை இரகசியமான இடத்தில் இருந்தது. உண வில் விஷம் கலந்து விடாமல் இருப்பதற்காக உணவை ருசி பார்த்துச் சொல்லப் பலர் இருந்தனர். சமயலறையில் நுழையும் பொருள்களையும் வெளிவரும் பொருள்களையும் நன்கு சோதனையிட்டனர். பேரரசர் கடுமையாக் உழைத் தார். அவரது பகற்பொழுது எட்டுப் பகுதிகளாகவும் இராப் பொழுது எட்டுப் பகுதிகளாகவும் பிரிக்கப் பட்டன. ஒவ் வொரு பகுதியிலும் குறிப்பிட்ட ஒரு பணியை மன்னர் மேற்கொண்டார். எடுத்துக்காட்டாக ஒற்றர் கொண்டு வந்த செய்திகளைக் கேட்டறிதல், கணக்குகளைச் சரிபார்த் தல், படைகளை ஆய்வு செய்தல், அமைச்சர்களுடன் ஆலோசனை கலத்தல் அல்லது அறிஞருடன் அளவளாவுதல் போன்ற பணிகளை மன்னர் மேற் கொண்டார். வேட்டை யாடுதல், பலிகொடுத்தல், நீதிவழங்குதல் ஆகிய மூன்று சமயங்களில் மட்டுமே மன்னர் அரண்மனையை விட்டு வெளியே சென்றார். அவரைச் சுற்றிப் பெண் மெய்க்காப் பாளர்கள் இருந்தனர். மன்னர் வேட்டையாடச் சென்ற போது அவர்களும் உடன் சென்றனர். தமது ஆட்சிக்கால இறுதியில் சமண சமயத்தைத் தழுவிய பிறகுதான் சந்திர குப்தர் வேட்டையாடுவதைக் கைவிட்டார்.

மௌரிய மன்னர் உணர்வு ஒளிர் வல்லரசராகத் (Benevolent Despot) திகழ்ந்தார். அவரது அதிகாரத்தின் மீது அரசியல் சட்ட ரீதியான தடையேதும் இருக்கவில்லை. ஒழுக்க நெறிசார்ந்த தடைகள் மட்டுமே இருந்தன. தர்மசாஸ்திரப்படி நாட்டை ஆள அரசர் முயற்சி செய்தார். அர்த்தசாஸ்திரத்தில் கௌடில்யர் குறிப்பிடுவதைப்போல, ''மக்களின் இன்பமே அவரது இன்பமாகவும் மக்களின் நலனே மன்னரின் நலமாகவும்'' இருந்தன.

கொடுங்கோல் ஆட்சி நடத்தினால் புரட்சி தோன்றும் என்பது மன்னருக்குத் தெரியும். தம் உயிருக்கு ஆபத்து வரும் என்பதும் தெரியும். கொலை செய்யப்படுவோம் என்ற அச்சம் இருந்த காரணத்தால் அரசர்கள், சேர்ந்தார் போல இருநாட்களுக்கு ஒரே அறையில் படுத்துறங்குவ தில்லை. அவர்கள்ஒற்றர்களைப் பயன்படுத்தித் துரோகிகள்

பற்றிய செய்திகளை அறிந்தார்கள். மௌரியருடைய உளவுப் படையில் ஆண்களும், பெண்களும் பணியாற்றினர். பய பக்தியுடன் ஆற்றில் தலைமுழுகி அரசவைக் கூட்டித் தங் களுடைய பிறந்தநாள்களைப் பேரரசர்கள் கொண்டாடினர். கவர்ச்சிமிகும் இச்சடங்கினைக் காணப் பேரரசின் தொலை தூரப் பகுதிகளிலிருந்தெல்லாம் வந்த மக்கள் பாடலிபுரத் தை மொய்த்தனர். அப்போது செல்வரும் அரசாங்க அதிகாரிகளும் விலையுயர்ந்த பரிசுப் பொருள்களைப் பேர ரசருக்கு அளித்தனர். அச்சமயத்தில் மல்யுத்தம், குதிரைப் பந்தயம், மாட்டுப்பந்தயம் ஆகியவை நடப்பது வழக்கம்.

பேரரசை ஆள்வதற்கு மன்னருக்கு உதவும் அமைச்சர் குழுவில் புரோகிதர், படைத்தலைவர், பொருளாளர், வரு வாய் அதிகாரி, யுவராஜா அல்லது பட்டத்து இளவரசர், முதலானோர் இடம் பெற்றனர். போரும், சமாதானமும், மாநில ஆளுநர்களின் நியமனமும், மாற்றமும் ஆலோசனைக் குழுவின் விவாதத்திற்கு வந்து, ஆங்கே முடிவுகள் எடுக்கப் பட்டன. அரசாங்கத்தில் பல துறைகள் இருந்தன. அவை ஒவ்வொன்றிலும் கண்காணிப்பாளர் தலைமையில் பல உதவி யாளர்கள் பணியாற்றினர்.

பேரரசில் பொதுக் கணக்கெடுப்புச் செய்ய 'பொதுக் கணக்கெடுப்புத்துறை' (Census Department) தனியாக அமைந்திருந்தது மௌரிய ஆட்சிமுறையின் ஒரு சிறப்பியல்பாகும். பொதுக் கணக்கெடுப்பு இப்போதுள்ள தைப்போன்று பத்தாண்டுக்கொருமுறை எடுக்கப்படுவ தில்லை. அது நிரந்தரமாக அமைந்தது. மக்களுடைய பொருளாதார நிலைபற்றிய சரியான மதிப்பீடு செய்யவும் வரிவிதிப்பிற்கு அடிப்படையாக அமையும் வகையிலும் மௌரிய மன்னர்கள் ஆண்டுதோறும் கணக்கெடுப்பு மேற் கொண்டதாகத் தெரியவருகின்றது.

மொத்த விளைவில் ஆறில் ஒரு பங்காக இருந்த நிலவரி மௌரியப் பேரரசின் முக்கிய வருவாய் இனங்களில் ஒன் றாகும். சுங்கவரியும் தண்டங்களும், தொழிலாளர்கள், கைவினைஞர் (artisans) ஆகியோரிடமிருந்து வாங்கும் அனுமதிச் சீட்டுக் கட்டணமும், மது தயாரிப்போர் மீதும், இறைச்சி விற்போர் மீதும் இடப்படும் வரியும் வேறுசில முக்கிய வருவாய் இனங்களாகும். இவையன்றிக் காடுகள் மற்றும் அரசின் சொத்துகளிலிருந்தும் கிடைக்கும்

வருமானமும், சில சிறப்புவரிகளும், நன்கொடைகளும் மேலும் சிலவருவாய் இனங்களாகும். அரண்மனை, படை, பஞ்சநிவாரணம், நீர்ப்பாசன அமைப்புகள் ஆகியவை மௌரிய அரசாங்கத்தின் முக்கியச் செலவினங்களாகும். சந்திரகுப்தமௌரியரின் குஜராத் ஆளுநரான புஷ்ய குப்தர் சுதர்சனா ஏரியை வெட்டியதாகவும், அசோகர் கால ஆளுந ரான துஷாஸ்பர் அந்த ஏரியைப் பழுதுபார்த்ததாகவும் உருத்ரதாமனின் கிர்னார் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. வடமேற்கு எல்லையையும் தக்காணத்தையும், பேரரசின் பிறபகுதிகளையும் தலைநகரான பாடலிபுத்திரத்துடன் இணைக்கும் சாலைகள் பலவற்றை மௌரியப் பேரரசர்கள் அமைத்தார்கள்.

கிராமங்களில் சிறு சிறு பொது வழக்குகளும் குற்ற வழக்குகளும் பஞ்சாயத்துகளால் தீர்த்துவைக்கப்பட்டன. நகரங்களில் வாணிக சங்கங்கள், முறைமன்றங்கள் தீர்ப்பளித்து வந்தன. பெரிய வழக்குகளைக் கோபர்களும், ஸ்தானிகர்க ளும் விசாரித்தனர். வட்டார நீதிமன்றங்களுக்கு மேலே இரு பிரிவினதான நீதிமன்றங்கள் இருந்தன. அவை கீழ் நிலை, மேல்நிலை நீதிமன்றங்களாகும். கீழ்நிலை மன் றங்களில் ஆறு நீதிபதிகள் பதவி ஏற்றிருந்தனர். அவர்களுள் மூவர் சட்டப் புலமை வாய்ந்தவர்கள். மற்ற மூவர் மரபுகள், வழக்காறுகள் ஆகியவற்றை நன்கு அறிந்தவர்கள். இத் தகைய நீதி மன்றங்கள் முக்கியமாகப் பொதுவழக்குகள் அல்லது உரிமை வழக்குகளை விசாரித்தன. ஆறு நீதிபதி களைக் கொண்ட உயர்நிலை நீதிமனறங்கள் பெரும்பாலும் கைத்தொழில் வினைஞர்களிடையே நேர்ந்த வழக்குகளைக் கவனித்தன. பேரரசர் நீதியின் ஊற்றாகக் கருதப்பட்டார். தம்மிடம் வந்த வழக்குகளை அவர் தீர்த்துவைத்தார். கடு மையான தண்டனைகள் அளிக்கப்பட்டன. சிறு குற்றங் களுக்கும் மரண தண்டனை வழங்கப் பட்டது. உடலுறுப் புகளை வெட்டுதல், சித்திரவதை செய்தல், மொட்டை யடித்தல் போன்றவை தண்டனைகளிற் சிலவாகும். ஆட்சி முறையை மனிதாபிமான முள்ளதாக மாற்றிய அசோகர் தண்டனைகளின் கடுமையைக் குறைத்தார். மரண தண் டனை பெற்ற குற்றவாளிகள் இறைவனை நினைத்துக் கழுவாய்பெறும்வகையில் அவர்களுக்கு மூன்றுநாள் அவகாச மளித்தார். தமது பிறந்த நாள்களில் சில கைதிகளை விடுவித்தார்.

மௌரிய ஆட்சிமுறையில் இருந்த சில கடுமையான புண்புகளை நீக்கினார் அசோகர். பௌத்தத்தை அவர் அரசாங்கச் சமயமாகச் செய்தபோதிலும் சமயப்பொறைக் கொள்கையைப் பின்பற்றினார். அவரது ஏழாவது பாறை ஆணை (Rock Edict) சமயப்பொறை குறித்துக் கல்லில் அமைந்த கவிதையாகும்; அது அசோகரின் மாண்பினையும் பரந்த மனப்பான்மையையும் பறைசாற்றும் கருவியாகும். குடிமக்களுடைய நலனுக்காகவும், இன்பத்திற்காகவும் பாடு படுமாறு ராஜூகர் அல்லது மாநில ஆளுநர்களை அசோகர் தமது கல்வெட்டுகள் மூலமாகக் கேட்டுக் கொண்டார். பொதுமக்களுடைய நலன்களைக் கருத்திற் கொண்டு அரசாங்கத்தின் செயல்களும் கட்டுப்பாடுகளும் அமைய வேண்டுமென்று வற்புறுத்தினார். அரசாங்க அலுவலர்கள் நேர்மையாளர்களாகவும் ஆற்றல் மிகுந்தவர்களாகவும் விளங்க வேண்டுமென்றும், அவர்கள் மக்களுக்கு நீதி வழங்க வேண்டுமென்றும் வலியுறுத்தினார்.

மௌரியப் பேரரசிடம் பெரும்படை ஒன்று இருந்தது. அதில் காலாட்படை, குதிரைப்படை, தேர்ப்படை, யானைப்படை முதலான பிரிவுகள் இருந்தன. முப்பது உறுப்பினர்களைக் கொண்ட போர் அலுவலகம் படையினைக் கட்டிக்காத்து வந்தது. பாடலிபுத்திர நகர ஆட்சிக் குழுவில் இருந்ததைப் போன்று இந்த முப்பது உறுப்பினர்களும் ஐவர் கொண்ட ஆறு குழுக்களாகப் பணியாற்றினர். அவற்றில் நான்கு குழுக்கள் படையின் நால்வகைப் பிரிவுகளையும் கவனித்துக் கொண்டன. ஐந்தாவது குழுவானது படைகளுக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் அளிக்கும் பொறுப்பேற்றிருந்தது. பல படகுகளையும் கப்பல்களையும் பராமரித்து ஆறுகளையும் கடற்கரையையும் பாதுகாத்தல் ஆறாவது குழுவின் கடமையாக இருந்தது.

ஒருமுகப்படுத்தப்பட்ட அதிகார வர்க்கத்தினரின் ஆட்சியே மௌரிய அரசாங்கமுறை எனலாம் (Centralised Bureaucracy). அதாவது, திறமையான அரசாங்க அலுவலர்களின் துணையுடன் பேரரசர் அரசாங்கத்தைக் கொண்டு சென்றார். கி.மு. நான்காம் நூற்றாண்டிலேயே இத்தகைய தனிசிறந்த ஆட்சி முறையை வகுத்திருந்தார்கள் என்பதிலிருந்து, தத்துவத்துறையிலும் சமயத் துறையிலும் இருந்ததைப் போலவே, அரசியலிலும், ஆட்சித் துறையிலும் பண்டைக்கால இந்தியாவில் அதிக முன்னேற்றம் காணப்

பட்டிருந்தமை தெளிவாகும். பொதுநிர்வாகப் பணியையும் படைப்பணியையும் பிரித்தல், நிரந்தரமான பொதுக் கணக்கெடுப்பு, வாரியங்கள் மூலமாக நகர ஆட்சி, அரசாங்கத்தின் பரவலான பணிகள் ஆகியவைகளே மௌரிய ஆட்சி முறையில் காணும் தலைசிறந்த பண்புகளுள் சிலவாகும்.

மௌரிய ஆட்சிமுறையில் ஓரிருகுறைகள் காணப்படுவதும் உண்மை. சாதாரணக் குற்றங்களுக்கும் மிகக் கடுமையான தண்டனை வழங்குதல், ஒற்றர்களைப் பயன்படுத்துதல் ஆகியவற்றைக் குறைகளாகக் குறிப்பிடலாம். ஆயினும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரையில் இங்கிலாந்திலும் சாதாரணக் குற்றங்களுக்குக் கடுமையான தண்டனைகள் வழங்கினர் என்பதை இங்கே குறிப்பிடவேண்டும். 1830ஆம் ஆண்டில்தான் சர் ராபர்ட் பீல் குற்றச் சட்டத்தின் கடுமையைக் குறைத்தார். ஒற்றர்படையைப் பொருத்த வரையில், இன்றளவும் அனைத்துலக நாடுகளிலும், ஒற்றர்படை அதிகமாகப் பயன்படுத்தப்படுகின்றது. நாஜி ஜெர்மனியும், பாசிச இத்தாலியும் இரகசியக் காவற்படையான கெஸ்டபோ (Gestapo), ஒவ்ரா (Ovra) ஆகியவற்றைப் பயன்படுத்தின. எவ்வாறாயினும் புத்தசமயப் பேரரசரான அசோகர் மௌரிய ஆட்சிமுறையிலிருந்த கடுமையைப் பெருமளவிற்கு நீக்கினார் என்பதை ஏற்கனவே கண்டோம்.

### மொகலாயர் காலத்தில்

அக்பரது பேரரசில் இருந்த பொதுத்துறை மற்றும் படைத்துறை அமைப்புகள் குறித்த செய்திகள், அபுல்பாஸல் எழுதிய 'அயினி அக்பரி' அல்லது 'அக்பரின் நிறுவனங்கள்' என்னும் நூலில் முழு அளவில் கிடைக்கின்றன. ஷாஜஹான் காலத்திலும் ஔரங்கசீப் ஆட்சிக் காலத்திலும் எழுதப்பெற்ற அலுவலகக் கையேடுகள் (Official Handbooks), முகமத்காஸிம், அப்துல்ஹமித் லொஹாரி, நிசாமுத்தீன், பதௌனி போன்றோர் எழுதிய நூல்களும் மொகலாயர் ஆட்சிமுறை பற்றிய அரியசெய்திகளைத் தருகின்றன. ஜெசூயிட் சமயப் பரப்பாளர்கள், சர் தாமஸ்ரோ, ஹாக்கின்ஸ், பர்னியர் முதலான வெளிநாட்டவர் விட்டுச்சென்றிருக்கின்ற குறிப்புகளும் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியின் தொழிலகக் குறிப்பேடுகளும் மொகலாய ஆட்சி முறையின் சில பகுதிகள் குறித்துச் செய்தி தருகின்றன.

மொகலாயர் ஆட்சியானது இராணுவ ஆட்சி போன்றது. அப்போதிருந்த ஆட்சிமுறையானது ஒருமுகப்படுத்தப்பட்ட

வல்லாட்சியர்கும். முஸ்லிம்களைப் பொருத்தவரையில் பேரரசர் சமயத் தலைவராகவும் அரசின் தலைவராகவும் விளங்கினார். முகமதியர் அல்லாதாருக்கு அவர் அரசாங்கத் தலைவரே. மொகலாய ஆட்சிமுறைபற்றிக் குறிப்பிடும்போது "அது இந்தியப் பின்னணியில் அமைந்த பாரசீக அரேபியத் திட்டம்" என ஜாதுநாத் சர்க்கார் வருணித்துள்ளார். அரசாங்கக் கோட்பாடுகளும், துறைகளின் அமைப்பும், அதிகாரிகளுடைய பட்டப் பெயர்களும் வெளிநாட்டிலிருந்து பெறப்பட்டவையாக இருந்த போதிலும், ஏற்கெனவே இந்தியாவில் விளங்கிய ஆட்சியமைப்பின் கோட்பாடுகளை மொகலாய ஆட்சிமுறையில் காண முடிகிறது. முகமதியக் கோட்பாடுகளுக்கு முரணாக இல்லாத இந்திய வழக்கங்களையும் மரபுச் சட்டத்தையும் மொகலாயர் ஏற்றுக் கொண்டனர். பொதுவாகப் பார்ப்போமானால் அன்னிய முறையின் பண்புகளைப் பேரரசவையிலும் உயர் அதிகாரமட்டத்திலும் காண முடிகின்றது.

பொதுத்துறை அதிகாரிகள் அனைவரும் மன்சப்தாரர்களாக அல்லது படையின் உறுப்பினர்களாக இருந்ததால் மொகலாய அரசாங்கம் இராணுவ ஆட்சிமுறையைச் சார்ந்தது என்லாம். சாதர் சதரைத் (Sadr Sudr) தவிர பேரரசின் அலுவலர்களெல்லாரும் படைத்தலைவர்களே. எனினும் இந் நாட்டில் கண்ட பழைய இந்து வருவாய் முறையை (ரெவின்யூ முறை) மொகலாயர் பயன்படுத்திக் கொண்டனர். இந்து வருவாய்த்துறை அதிகாரிகளையும் நியமித்தனர்.

ஒருமுகப்படுத்தப்பட்ட வல்லாட்சியான மொகலாய அரசாங்கத்தின் தலைவராக விளங்கியவர் பேரரசர். அதிகாரங்கள் எல்லாம் அதிகமாக ஒருமுகப்படுத்தப்பட்ட அரசாங்கம் என்பதால் மொகலாயர் காலத்தில் ஆவணங்கள் (அரசாங்க ஏடுகள்) பல்கிப்பெருகின. இதன் காரணமாக மொகலாய அரசை 'காகஸிராஜ்' அல்லது 'காகித அரசு' என வேடிக்கையாகச் சொல்வதுண்டு.

அரசாங்கத்தின் தலைவராக இருந்தவர் பேரரசர். முகமதியக் கோட்பாட்டின்படி முகமதியக் குடிமக்களின் மன்னர் தான் பேரரசர். அவர் தமது நடத்தைக்கு முகமதியருக்குப் பொறுப்பானவர். அவரது அதிகாரம் வரம்பற்றது. மரபுச் சட்டமும், புரட்சி ஏற்படுமென்ற அச்சமும் தவிர வேறெதுவும் அவரது அதிகாரத்தைக் கட்டுப்படுத்தவில்லை.

பாபரும், ஹுமாயூனும் அரசு குறித்த முகமதியக் கோட்பாட்டிற்கிணங்கவே ஆட்சி செய்தனர். ஆனால் அக்பர் அதனைப் புறக்கணித்தார். தம்முடைய குடிமக்கள் அனைவரையும் சமமாக நடத்தினார். தேசிய மன்னரைப்போல் ஆட்சிசெய்து வந்தார். சமயவெறி தாண்டவமாடிய காலத்தில் சமயப் பொறைக் கொள்கையைக் கையாண்டதால் அக்பர் பெருமை பெற்றார். ஆயினும், சமகால மன்னர்களைப் போலவே அவர் தெய்வீக உரிமைக் கோட்பாட்டில் நம்பிக்கைக் கொண்டிருந்தார். மக்களைக் காட்டிலும் மன்னன் உயர்ந்தவன், இந்நிலத்தில் வாழும் ஆண்டவரின் பிரதிநிதியே மன்னன் என்ற கொள்கையைப் போற்றினார். தம் தந்தையான அக்பரின் சமயப் பொறைக் கொள்கையை ஜஹாங்கீர் ஓரளவிற்குக் கடைப்பிடித்தார். ஆனால், அவருக்குப்பின் பட்டத்திற்கு வந்த ஷாஜஹானும், அவரைத் தொடர்ந்த அவுரங்கசீப்பும் அரசு பற்றி அக்பர் கொண்டிருந்த குறிக்கோளை ஏற்க மறுத்தனர். அதற்குமாறாக அரசு பற்றிய முகமதியர் கோட்பாட்டையே ஏற்று நடத்தினர்.

மொகலாயர் காலத்தில் அரியணையில் அமர்வதற்கு உறுதியான வாரிசுரிமைச் சட்டம் வழக்கில் இல்லை. பொதுவாகத் தந்தைக்குப் பிறகு மகன் பட்டத்திற்கு வந்தான். ஆனால், எப்போதும் மூத்த மகன் பதவி ஏற்கவேண்டுமென்ற விதியில்லை. ஹுமாயூன், அக்பர், ஜஹாங்கீர் ஆகியோர் தங்களது தந்தையை அடுத்துப் பட்டத்திற்கு வந்த தலைப் பிள்ளைகள். ஆனால், ஹுமாயூனும் அக்பரும் அமைதியாக அரியணையேற முடிந்த போதிலும், ஜஹாங்கீரின் நிலை மாறுபட்டது. அவர்தம் புதல்வரான இளவரசர் குஷ்ருவ் அவருக்குப் போட்டியாக வந்ததால் சிக்கல் ஏற்பட்டது. தம் தந்தைக் கெதிராகப் புரட்சி செய்த இளவரசர் குஷ்ருவ், குரு அர்ஜுனரின் தலைமையிலான சீக்கியரின் உதவி பெற்றார். இப்புரட்சி ஒடுக்கப்பட்டது. ஜஹாங்கீர் அரியணையேறினார். சிறிது காலத்திற்குப்பிறகு இளவரசரும் கொல்லப்பட்டார். ஜஹாங்கீரின் மக்களில் குஷ்ருவும், பார்வஸும் முதலிலேயே இறந்து விட்டதால் ஷாஜஹானே உயிர் வாழ்ந்த இளவரசர்களில் மூத்தவர். இருப்பினும், ஜஹாங்கீரின் கடைசி மகனான இளவரசர் ஷாரியருக்குச் சாதகமாக நூர்ஜஹான் செய்த சூழ்ச்சிகளுக்கெதிராக ஷாஜஹான் போராட வேண்டியிருந்தது. தமது மருமகனான ஷாரியரை எப்படியும் அரியணையில் அமர்த்தி விடுவது என்று நூர்ஜஹான் பெருமுயற்சி செய்து இறுதியில் தோல்வியுற்றார்.

ஷாஜஹானுக்குப் பின்னர் பதவியேற்றவர் அவருடைய மூன்றாம்புதல்வரான அவுரங்கசீப், மூன்றாம் மகனாக இருந்தும் அவர் எவ்வாறு தம்முடைய உடன்பிறப்புக்களையெல்லாம் ஒழித்துவிட்டுத் தம்முடைய தந்தை உயிர்வாழ்ந்த போதே [அவரை (ஷாஜஹானை) ஆக்ராக் கோட்டையில் அடைத்துவிட்டு] அரியணையேறினார் என்பது நாம் அறிந்த ஒன்று.

மொகலாயப் பேரரசர் கலிபா எவரையும் தம் தலைவராக ஏற்கவில்லை என்பதைக் கவனிக்கவேண்டும். பேரரசரின் பெயரிலேயே குத்பா (Kutba) வாசிக்கப்பட்டது. நாணயங்களும் அவரது பெயரைத் தாங்கி வந்தன.

மொகலாயப் பேரரசர் கடுமையாக உழைத்தார். அரண்மனையில் உள்ள திவானிகாஸில் அமர்ந்து கொண்டு அரசாங்கப் பணிகளை அவர் கவனித்தார். வாஸிர் அல்லது முதல் அமைச்சரும், சம்பள பட்டுவாடா அமைச்சரான மீர்பக்ஷி போன்ற அமைச்சர்களும் பல அதிகாரிகளும் அவருக்கு உதவி செய்தனர். ஆனால், எப்போதும் அவர்களை ஆலோசனை கலக்க வேண்டியது அவசியமல்ல. மொகலாயர் காலத்தில் இருந்தது பேரரசரின் தனி வல்லாட்சியேயாகும். தாமே தம் முதலமைச்சராகவும் விளங்கினார் அவுரங்கசீப்.

மொகலாயர், அன்னியர் என்ற போதிலும், அவர்களுடைய ஆட்சி வல்லாட்சியாக இருந்தபோதிலும், அவர்கள் உருவாக்கிய சில மரபுகளும் வழக்காறுகளும் அவர்களை மக்கள் விரும்புமாறு செய்தன. பேரரசர் மக்களுக்குத் தரிசனம் (Interview) தருவது வழக்கமாக இருந்தது. அப்போதெல்லாம் பேரரசரிடம் நேரடியாக விண்ணப்பங்கள் தருவதற்கு மக்களுக்கு வாய்ப்புக் கிடைத்தது. ஜஹாங்கீர் அமைத்த 'நீதிச்சங்கிலி'யைப் பயன்படுத்திப் பேரரசரின் நீதி பெற்று மக்கள் கழுவாய் தேடிக்கொள்ள முடிந்தது. பேரரசர் மேற்கொண்ட ஆய்வுப் பயணங்களும், பேரரசு முழுவதும் இருந்த பகட்டாரவாரக் காட்சிகளும் பேரரசருக்கும் மக்களுக்குமிடையே நெருங்கிய தொடர்பினை வளர்த்தன.

மொகலாயப் பேரரசர் நீதியின் ஊற்றாகத் திகழ்ந்தார். அவர் மேல்முறையீட்டு மன்றமாகவும் விளங்கினார். சில சமயங்களில் முதல் நிலையிலேயே வழக்குகளை அவர் விசாரிப்பதும் உண்டு. மொகலாயர் காலத்தில் சட்டத் தொகுப்பு ஏதும் இல்லை. நாட்டுச் சட்டத்தை இறுதியாக நிலைநாட்டும் உயர்நீதிமன்றமும் இல்லை. அக்காலத்தில் மூன்று வகை

யான முறை வழங்கு மன்றங்கள் இருந்தன. அவை சமயச் சட்ட நீதிமன்றங்கள், சமயம்சாராச் சட்ட நீதிமன்றங்கள், அரசியல் நீதிமன்றங்கள் என்பன. சமயச்சட்ட நீதிமன்றங்களுக்குக் 'காஸிக்கள்' தலைமை வகித்தனர். முகமதிய சட்டத்திற்கிணங்கத் தீர்ப்பளித்தனர். அவர்கள் பயன் படுத்திய முகமதியச் சட்டம் நபிகள் நாயகத்தின் காலத்திற்குப்பிறகு மாறாமல் இருந்தது. நாட்டின் நலன்கருதி அதனை மாற்றுவது தெய்வ நிந்தனையாகும் எனக் கருதப்பட்டது. சமயம்சாராச்சட்ட முறை மன்றங்களுக்கு அரசாங்க அதிகாரிகள் தலைமை தாங்கினர். அரசியல் நீதிமன்றங்களுக்குத் தலைமை வகித்தவர்கள் பேரரசர் அனுப்பிவைத்த அதிகாரிகள். அவர்கள் அரசுத் துரோகம், புரட்சி போன்ற குற்ற வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்கினர்.

மொகலாயருடைய நிலவருவாய் ஆட்சிமுறையை உருவாக்கியவர் அக்பரே. அவர் ஷெர்ஷாவின் திட்டத்தைப் பின்பற்றினார். இங்ஙனம் உருவாகிய மொகலாயரின் திட்டத்தில் வளத்தின் அடிப்படையில் நிலம் பல வகைகளாகப் பிரிக்கப்பட்டது. விளைவைப் பொருத்து நிலவரி நிர்ணயிக்கப்பட்டது. மொத்த விளைச்சலில் மூன்றில் ஒருபங்கு வரியாக விதிக்கப் பெற்றது. வரிவிகிதம் அதிகம் என்று உணர்ந்தால் குடியானவன் பேரரசரிடம் முறையிடலாம். (மௌரியர் ஆறில் ஒருபங்கைத்தான் வரியாகக் கொண்டனர் என்பதைக் கவனிக்கவும்) இதேபோன்று உழவருக்கும் அரசாங்கத்திற்குமிடையே நேரடித் தொடர்பு இருக்கும் 'ரயத்வாரி' த் திட்டம் (குடி மானியத் திட்டம்) வழக்கிலிருந்தது. குடியானவர்கள் நிலவரியைப் பணமாகவோ பொருளாகவோ அளிக்கலாம். அலுவலர்களின் அவசியமற்ற குறுக்கீட்டினைத் தவிர்க்க வேண்டி நிலவரி பத்தாண்டுகளுக்கு நிர்ணயிக்கப்பட்டது.

நாட்டின் பொதுத்துறை, மற்றும் படைத்துறை ஆட்சி மொகலாயரின் மன்சப்தாரி திட்டத்தின் அடிப்படையில் அமைந்தன. இந்த மன்சப்தாரி திட்டத்தைப் புகுத்தியவர் அக்பர். இதனைத் திட்டமிட அவர் பாரசீகரைப் பின்பற்றினார். பொதுவாக உயர்தர அதிகாரிகள் மட்டுமே மன்சப்தார்கள் எனப் பெயர் பெற்றனர். மன்சப்தார்களில் பலவகையினர் உண்டு. அவர்களிற் சிலர் 10,000 படை வீரர்களுக்குத் தலைமை தாங்கினர். சிலர் சிறு படைகளை வைத்திருந்தனர். படை வீரர்களைச் சேகரிக்கவும், குறிப்பாகக் குதிரை

வீரர்களைச் சேகரிக்கவும், (காலாட்படையும், பீரங்கிப் படையும் முக்கியத்துவம் பெறவில்லை) அவர்களுக்குப் பயிற்சியும் படைக்கலனும் அளித்துப் பராமரித்து வருவதற்காகவும் மன்சப்தார்கள் சம்பளம் வாங்கிக் கொண்டனர். மன்சப்தாரின் பதவி மரபு வழியாக வருவதன்று. மன்சப்தாரின் நியமனமும் உயர்வும் பேரரசரின் விருப்பத்தையே முற்றிலும் சார்ந்திருந்தன.

இந்த மன்சப்தாரி முறையில் சில குறைபாடுகள் இருந்தன (1) சிலசமயங்களில் வீரர்களைப்பற்றியும் குதிரைகளைப்பற்றியும் தவறான குறிப்பேடுகளைப் படைத் தலைவர்கள் (மன்சப்தார்கள்) வைத்திருந்தனர். படைவீரர்களைப் பற்றி விரிவான குறிப்பேடுகளை வைத்திருக்க வேண்டுமென்றும் குதிரைகளுக்குக் குறியிடவேண்டுமென்றும் (Branding of Horses) வற்புறுத்தியதின்மூலம் அக்பரால் இத்தீமையைத் தடுக்கமுடிந்தது. என்றாலும், அவருக்குப்பின் வந்தவர்களால் இதனைக் கட்டுப்படுத்த முடியவில்லை. (2) படைவீரர்களைத் தேர்ந்தெடுத்து, நேரடியாகப் பராமரிப்பது மன்சப்தார்கள் என்பதால் வீரர்கள் அவர்களிடம் பற்றுக் கொண்டிருந்தார்களே தவிரப் பேரரசரிடம் விசுவாசம் கொண்டிருக்கவில்லை. (3) குதிரைப்படைக்கே முக்கியத்துவம் தரப்பட்டது. காலாட்படையும் பீரங்கிப்படையும் புறக்கணிக்கப்பட்டன. இங்ஙனம், மன்சப்தாரி முறையின் அடிப்படையில் அமைந்த மொகலாயப்படை திறமைவாய்ந்த ஒன்று அல்ல. இப்படையுடன் அக்பர் மராத்தியரைச் சந்தித்திருந்தால் அவுரங்கசீப்பின் கதியே அக்பருக்கும் ஏற்பட்டிருக்கலாம்.

### ஆங்கிலேயர் காலத்தில் ஆட்சிமுறை

இந்தியாவில் ஆங்கில ஆட்சிமுறை அவ்வப்போது பல மாறுதல்களுக்குட்பட்டது. அலகாபாத் உடன்படிக்கை உருவான 1765ஆம் ஆண்டிலிருந்து 1857ஆம் ஆண்டு வரையில் கிழக்கிந்தியக் கம்பெனியின் அலுவலர்கள் இந்தியப் பகுதிகளை ஆண்டு வந்தனர். இந்தியாவில் விளங்கிய ஆங்கில ஆட்சியின் மீது ஒருவகையான பாராளுமன்றக் கட்டுப்பாடு கொண்டுவர 1773ஆம் ஆண்டில் நிறைவேறிய ஒழுங்கு முறைச் சட்டமும், 1784ஆம் ஆண்டில் வந்த பிட் இந்தியச் சட்டமும் உதவி செய்தன. தலைமை ஆளுநரும் அவரது ஆலோசனைக் குழுவும் இந்தியப் பகுதிகளை ஆளும் பொறுப்பேற்றிருந்தனர். 1857ஆம் ஆண்டு எழுந்த பெரும் புரட்சிக்

கலகத்திற்குப்பிறகு இந்தியப் பகுதிகள் ஆங்கில அரசின் நேரடி ஆட்சியில் வந்தன. ஆங்கில அரசின் பெயரில் இந்தியாவை ஆண்டவர் அரசப்பிரதிநிதி அல்லது வைசிராய் ஆவார். நிர்வாகக் குழுவின் உதவியோடு அவர் ஆட்சி செய்து வந்தார். பிரிட்டிஷ் மந்திரி சபையின் உறுப்பினரான இந்தியா செயலர், வைசிராயின்மீது அதிகாரம் செலுத்தினார். 1885ஆம் ஆண்டிலிருந்து இந்தியத் தேசியக் காங்கிரஸ் செய்த கிளர்ச்சிகளின் விளைவாக ஆங்கிலப் பாராளுமன்றம் பல சட்டங்களைக் கொண்டுவந்தது. இவற்றினால் இந்தியருக்கு மேன்மேலும் பதவிகள் அளிக்கப்பட்டன. அரசாங்கமும் முற்போக்குத்தன்மை கொண்டதாயிற்று. இந்தியா செயலரான எட்வின் சாமுவேல் மாண்டேகு 1917ஆம் ஆண்டில் வெளியிட்ட புகழ்மிக்க ஆகஸ்ட் அறிவிப்பு (August Declaration) சிறப்புவாய்ந்த நிகழ்ச்சியாகும். இந்தியாவில் படிப்படியாகப் பொறுப்புள்ள ஆட்சியைக் கொண்டு வருவதாகவும், ஆட்சியின் பல்வேறு துறைகளில் இந்தியரை அதிக அளவில் தொடர்பு கொள்ளுமாறு செய்வதாகவும் அந்த அறிக்கை உறுதிதந்தது. அந்த அறிக்கையின் அடிப்படையில் மாண்டேகு சீர்திருத்தங்கள் எனப் பேசப்படும் இந்தியச்சட்டம், 1919ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்டது. இச்சட்டத்தை ஏற்கக் காங்கிரஸ் மறுத்துவிட்டது. காங்கிரஸ் அல்லாத கட்சிகளே இதனை ஏற்று நடத்தின. இந்தியாவிற்கு முழுச் சுதந்திரம் அல்லது பூர்ண சுயராஜ்யம் அளிக்கவேண்டுமென்னும் தீர்மானம் 1929ஆம் ஆண்டு கூடிய லாகூர் காங்கிரஸ் மாநாட்டில் நிறைவேறியது. பூரண சுயராஜ்யத்தை அடைவதற்காக மகாத்மா காந்தி அவர்கள் தமது சட்டமறுப்பு இயக்கத்தைத் துவக்கினார் இந்தியாவில் பொதுமக்களின் விருப்பத்தை நிறைவு செய்வதற்காக 1929ஆம் ஆண்டிற்கும் 1933ஆம் ஆண்டிற்குமிடையே பிரிட்டிஷ் அரசாங்கம் மூன்று வட்டமேஜை மாநாடுகளைக் கூட்டியது. இந்த மாநாடுகளின் பரிந்துரைகள் வெள்ளைத்தாள் வடிவில் (White Paper) வெளிவந்தன. இந்த வெள்ளைத்தாளின் அடிப்படையில் 1935ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கச் சட்டத்தை பிரிட்டிஷ் பாராளுமன்றம் நிறைவேற்றியது. 1947ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி இந்தியா சுதந்திரம் அடைந்தபோது, இந்தச்சட்டமே பிரிட்டிஷ் ஆட்சி முறையின் அடிப்படையாக இருந்தது.

இந்த 1935ஆம் ஆண்டைய சட்டத்தில் மத்திய அரசு பற்றிய முக்கியக் கூறுகளை இப்போது காணலாம். 1935ஆம்

ஆண்டு வரையில் இந்திய அரசாங்கத்தின் கொள்கைகள்மீது இந்தியச் செயலரும், இலண்டனிலிருந்த இந்தியா கவுன்சிலும் (India Council) மிகுந்த செல்வாக்குச் செலுத்திவந்தனர். 1935ஆம் ஆண்டுச் சட்டப்படி இந்தியா செயலர் காப்பாளராக மாறினார். இலண்டனிலிருந்த இந்தியா கவுன்சிலுக்குப் பதிலாக ஆலோசகர்கள் இந்தியா செயலருக்கு உதவி செய்ய நியமனமாயினர்.

மத்தியில் கூட்டாட்சியையும் மாநிலங்களில் தன்னாட்சியையும் (சுய ஆட்சி) இச்சட்டம் கொண்டு வந்தது. இந்தியா ஒரு கூட்டாட்சியாக அமையவேண்டும்; அதில் ஆளுநர்கள் பொறுப்பிலிருந்த மாநிலங்கள், தலைமை ஆணையாளரின் மாநிலங்கள் (Chief Commissioners Province), சுதேச அரசுகள், ஆகியன அங்கங்களாக இருக்கவேண்டும் என, இச்சட்டம் வகுத்தது. மாநிலங்களில் இரட்டை ஆட்சி நீங்கியது. ஆளுநர் பொறுப்பேற்றிருந்த மாநிலங்களில் தன்னாட்சி வந்தது. அதாவது, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைகளுக்குப் பொறுப்புள்ள அரசாங்கம் மாநிலங்களில் ஏற்பட வழிபிறந்தது. மத்தியில், இரட்டையாட்சித் தன்மை கொண்ட கூட்டாட்சி நிர்வாகக்குழு அமைக்கப்பட்டது. ஆனால், சுதேச அரசுகள் (இந்திய சமஸ்தானங்கள்) கூட்டாட்சியில் சேர மறுத்துவிட்டதால் 1935ஆம் ஆண்டுச் சட்டத்தின் கூட்டாட்சிப்பகுதி ஏட்டளவிலேயே நின்றுவிட்டது; நடைமுறைக்கு வரவில்லை. பிரிட்டிஷ் மாநிலங்களுக்கும் சுதேச அரசுகளுக்கும் வைசிராயே தலைவரானார். ஆனால், சுதேச அரசுகளின் உள்நாட்டு விவகாரங்களில் அவர் தலையிடவில்லை. சட்ட ஒழுங்குப் பிரச்சினை எழுமளவிற்குத் தவறான ஆட்சி இருக்கும்போதுதான் சுதேச அரசின் உள்நாட்டு விவகாரங்களில் வைசிராய் தலையிட்டார். வெளிநாட்டுக் கொள்கை, பாதுகாப்பு, செய்தித்தொடர்பு, போக்குவரத்து ஆகியவை வைசிராயின் பொறுப்பிலிருந்தன. சுதேச அரசுகளுக்கும் தலைமை அரசான பிரிட்டிஷ் அரசுக்குமிடையேயான உறவுகளைப் பொருத்த செய்திகளில், "மன்னர்களின் குழுவிடம்" (Chamber of Princes) ஆலோசனை கலந்தார் வைசிராய். பிரிட்டிஷ் மாநிலங்களைப் பொருத்துவரையில் நிர்வாகக்குழு ஒன்றின் உதவியுடன் ஆட்சி செய்தார். இந்த வைசிராயின் ஆலோசனைக் குழுவில் இந்தியரும் இடம்பெற்றனர். மத்திய சட்டமன்றம் ஒன்றும் இருந்தது. அதில் சட்டசபை என்றும், அரசுகளின் மன்றம் என்றும் இருசபைகள் இருந்தன. ஆயினும் சட்டசபை மறுத்த மசோ

தாக்களுக்குத் தகுதிச் சான்றிதழ் (Certificate) அளிக்கவும் சட்டசபை ஆமோதித்த மசோதாக்களை ரத்து செய்யவும் வைசிராயிக்குச் சிறப்பதிகாரங்கள் இருந்தன. மேலும் வரவு செலவுத்திட்டத்தின் பல கூறுகளை மத்திய சட்ட மன்றம் விவாதிக்க முடியாத நிலை இருந்தது. சுருங்கக் கூறினால் இந்தியத் துணைக்கண்டத்தில் வைசிராயானவர் தொடர்ந்து தனித்தலைமை அதிகாரம் பெற்றுத் திகழ்ந்தார்.

மத்திய சட்டமன்றத்தில் கூட்டாட்சிச் சட்டசபையும், (Federal Assembly) அரசுகளின் மன்றமும் (Council of States) செயலாற்றின. பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து வந்த 250 பிரதிநிதிகள் சட்டசபையில் இடம்பெற்றனர். முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், சீக்கியர் ஆகியோருக்கு வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டிருந்தது. அரசுகளின் மன்றத்தில் இருந்த 156 உறுப்பினர்களில் ஒரு பகுதியினர் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்கள். மற்றவர்கள் நியமன உறுப்பினர்கள். சட்டசபையின் காலம் ஐந்தாண்டுகள் என்றபோதிலும் அதனை முன்னாலேயே கலைக்கும் அதிகாரம் வைசிராயிடம் இருந்தது. அரசுகளின் மன்ற உறுப்பினர்களின் பதவிக்காலம் ஒன்பது ஆண்டுகளுக்குமேல் இருத்தல் ஆகாது. அதன் உறுப்பினர்களில் மூன்றில் ஒருபகுதியினர் மூன்றாண்டுக்கொருமுறை ஓய்வு பெற்றனர். இங்ஙனம் அது ஒரு நிரந்தர மன்றமாகப் பணியாற்றியது. மத்திய சட்டமன்றத்தின் இரு அவைகளும் சட்டமியற்றல், நிதிநிலை கவனித்தல் ஆகியவற்றில் சம அதிகாரம் கொண்டிருந்தன.

கூட்டாட்சி நீதிமன்றம் ஒன்றும் செயல்பட்டது. அதில் தலைமை நீதிபதியும் ஆறுக்குமிகாத நீதிபதிகளும் அமர்ந்திருந்திருந்தனர். பிரிட்டிஷ் அரசினால் அமர்த்தப்பட்ட இந்த நீதிபதிகள் 65 வயது வரையில் பதவியிலிருக்கலாம். கூட்டாட்சி நீதிமன்றம் பின்வரும் பணிகளை மேற்கொண்டது: (1) மாநிலங்களுக்கிடையேயும், மாநிலங்களுக்கும் மத்திய அரசுக்கிடையேயும் எழும் வழக்குகளைத் தீர்த்தல். (2) அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் அளிப்பதில் எழும் அடிப்படைச் சட்டப் பிரச்சினைகள் தொடர்பாக, உயர்நீதிமன்றங்களில் இருந்துவரும் மேல்முறையீடுகளை (Appeals) விசாரித்தல்.

மாநிலத்தில் ஓரளவிற்கு உண்மையான அதிகார மாற்றமும் இருந்தது. மக்களுடைய பிரதிநிதிகள் கையில் சில அதிகாரங்கள் ஒப்படைக்கப்பட்டன. ஆனால், மத்தியில் வைசிராயின் அதிகாரம் குறையாமல் அப்படியே இருந்தது.

பிரிட்டிஷ் ஆட்சி, திறமையானது என்பது கவனிக்கத்தக்கது. மேலும் அதன் திறமையில் உயர் குறிக்கோள் கொண்ட ஐ. சி. எஸ். (I. C. S.) அதிகாரிகளுக்குப் பெரும் பங்கு உண்டு என்பதும் கவனிக்கவேண்டிய ஒன்று. இக் காரணம் பற்றியே ''பிரிட்டிஷ் ஆட்சியின் இரும்புச் சட்டம்'' என லாயிட்ஜார்ஜ் இந்தியப் பொது ஆட்சித்துறை அதிகாரிகளைப் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

## இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் — மத்திய அரசு

1950ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 26ஆம் நாளன்று தொடக்கி வைக்கப்பெற்ற இந்தியக் குடியரசின் அரசியல் அமைப்பினை உருவாக்கியது, இந்திய அரசியல் நிர்ணய சபையாகும். அவ்வவையில் அரசியல் சட்ட வல்லுநர்கள் நிரம்பி யிருந்தனர். சுதந்திரம் பெற்ற பின்னர், நம்நாட்டில் வாழ்ந்த தலைசிறந்த அறிஞர்களின் உதவியை ஜவஹர்லால் நேரு கோரிப் பெற்றார். எக்கட்சியைச் சார்ந்தவராயினும் அறிஞர்களைப் பயன் படுத்திக் கொள்ள நேருஜி தவறவில்லை. எனவே, இத்தகைய அறிஞர்கள் ஒன்றுகூடிக் கொண்டுவந்த அரசியல் அமைப்பு, உண்மையில் ஒரு தேசிய ஆவணமாகும். நமது அரசியல் அமைப்புச் சட்டத்தை உருவாக்குவதில், டாக்டர் அம்பேத்கார். திரு. M. கோபாலசாமி அய்யங்கார், திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், திரு. K. M. முன்ஷி, முகமது சாதுல்லாகான் முதலானோரும், மற்றையோரும் முக்கியப் பங்குகொண்டனர். இறுதி வடிவில் வந்த அரசியல் அமைப்பு மசோதாவினை 1949 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 26ஆம் நாளில் அரசியல் நிர்ணயசபை ஏற்றுக் கொண்டது. அடுத்த ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் தேதி குடியரசு அரசியல் அமைப்புத் தொடங்கி வைக்கப்பட்டது. இங்ஙனம் இந்தியரே நம்நாட்டின் அரசியல் அமைப்பை நிர்ணயித்துள்ளனர். இந்தியாவின் தேவைகளை நிறைவு செய்யவும் இந்திய மக்களின் குறிப்பிட்ட இயல்புகளுக்கும் அறிவாற்றலுக்கும் ஏற்பவும் அரசியல் அமைப்பை உருவாக்கியுள்ளனர் என்பது கவனிக்கத்தக்கது.

இந்தியா ஒரு சுதந்திர ஜனநாயகக் குடியரசாகும். அது மாநிலங்களின் கூட்டாகவும் திகழ்கின்றது. அதனைக்

கூட்டாட்சி அரசு என அழைக்கலாம். ஆயினும் மத்திய அரசிடம் அதிக அதிகாரம் தரப்பட்டுள்ளதால் அது கூட்டாட்சியைவிட ஒற்றை ஆட்சிப் (unitary) பண்புகளை அதிகமாகக் கொண்டுள்ளது என்று கூறவேண்டும். நம் நாட்டு அரசியல் அமைப்பில் மக்களுக்குச் சில அடிப்படை உரிமைகள் (Fundamental Rights) இடம்பெற்றுள்ளன. இந்த உரிமைகள் நீதிமன்றங்கள் நிறைவேற்றி வைக்கக்கூடிய உரிமைகளாகும். அரசுக்கொள்கைக்கான நெறிமுறைக்கோட்பாடுகளும் (Directive Principles of State Policy) நமது அரசியல் அமைப்பில் வகுக்கப்பட்டுள்ளன. சமுதாயப் பொருளாதார அரசியல் நீதியை அடிப்படையாகக் கொண்ட சமுதாய அமைப்பினை உருவாக்குவதில் உதவிபுரிவதற்கென்று இந்த நெறிமுறைக் கோட்பாடுகளை இணைத்துள்ளனர். ஆனால், இவை நீதிமன்றங்கள் நிறைவேற்றிவைக்கக் கூடியவையல்ல.

புது டில்லியில் அமைந்துள்ள மத்திய அரசாங்கம், ஒன்றிய (Union) அரசாங்கம் என்றும் குறிப்பிடப்படுகின்றது. குடியரசுத் தலைவர் (ஜனாதிபதி), உதவி குடியரசுத் தலைவர், பிரதம அமைச்சர், அமைச்சரவை, மத்திய சட்டசபை, தலைமை நீதிமன்றம், மத்திய அரசாங்கப் பணித் தேர்வுக் குழு ஆகியவை ஒன்றிய அரசாங்கத்தின் அங்கங்களாகும்.

குடியரசுத் தலைவரே இந்திய ஒன்றியத்தின் நிர்வாகத் தலைவராகவும் திகழ்கின்றார். இந்நாட்டுக் குடிமக்களுள் எவரும் குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிடலாம். ஆனால், அவர் முப்பத்தைந்து வயது நிரம்பியவராக இருக்க வேண்டும். மத்திய அரசாங்கத்திலோ மாநில அரசாங்கத்திலோ ஊதியம்பெறும் அலுவலராக இருக்கக் கூடாது. நாடாளுமன்றத்தின் (Union Parliament) இருசபைகளின் உறுப்பினர்களும், தேர்ந்தெடுக்கப்பட்ட மாநிலச் சட்டசபை உறுப்பினர்களும் குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுக்கின்றனர். இத்தகைய ஜனாதிபதியின் தேர்தலில் விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையும், (Proportional Representation) ஒற்றை மாற்று வாக்குமுறையும் (Single Transferable Vote) கையாளப்படுகின்றன. தேர்ந்தெடுத்த குடியரசுத்தலைவர் ஐந்தாண்டுகளுக்குப் பதவியிலிருப்பார். அவர் மறுதேர்தலுக்கும் நிற்கலாம். அவரது மாதச் சம்பளம் ரூ. 10,000 ஆகும்.

இந்திய ஒன்றியத்தின் சட்ட முறையிலான (Dejure) தலைவர்தான் ஜனாதிபதி, ஆனால், பிரதம அமைச்சரே




படம் 7. மத்திய அரசு

அதன் நடைமுறைத் தலைவர் (Defacto) ஆவார். பிரதம அமைச்சரைக் குடியரசுத்தலைவர் நியமிக்கின்றார். ஆளுநர்கள், அயல்நாடுகளுக்கான தூதுவர்கள், தலைமை நீதிமன்றம், உயர்நீதி மன்றங்கள் ஆகியவற்றின் தலைமை

நீதிபதிகள், மற்றுமுள்ள நீதிபதிகள், மத்திய அரசுப்பணித் தேர்வுக்குழுவின் தலைவர், மற்றும் உறுப்பினர்கள் போன்ற வர்களைப் பிரதம அமைச்சரின் ஆலோசனைப்படி குடியரசுத் தலைவர் நியமனம் செய்கின்றார். பாராளுமன்றத்தைக் கூட்டுவதும், கூட்டத்தொடரைத் தள்ளிப்போடுவதும், கலைப்பதும் குடியரசுத் தலைவரின் பணிகளாகும். பாராளு மன்றமும் மாநிலச் சட்ட சபைகளும் இயற்றும் சட்டங் கள் செல்லத்தக்கவையாக ஆவதற்கு (Validity) குடியரசுத் தலைவரின் அங்கீகாரம் அவசியமாகிறது. குற்றவாளிகளுக்கு மன்னிப்பு வழங்கவும், தண்டனைகளைக் குறைக்கவும், தண்டனை நிறைவேற்றத்தைத் தள்ளிவைக்கவும் (reprieve) அவருக்கு உரிமை உண்டு.

நமது அரசாங்கம் பிரிட்டிஷ் மாதிரியில் அமைந்த காபி னட் அல்லது பாராளுமன்ற முறையாகும். கொள்கையளவில் குடியரசுத் தலைவரிடம் ஏராளமான அதிகாரங்கள் குவிந்து கிடக்கின்றன. என்றாலும், அவர் பிரதம அமைச்சரின் ஆலோசனைப்படியே அந்த அதிகாரங்களைச் செலுத்துகின் றார்.

குடியரசுத் தலைவரிடம் அவசரகால அதிகாரங்கள் (Emergency Powers) சில இருக்கின்றன. நாடாளு மன்றத்தின் இருசபைகளின் கூட்டத் தொடர் இல்லாத போது அவர் ஆணைகளைப் பிறப்பிக்கலாம். இந்த ஆணை களுக்கும் பாராளுமன்றச் சட்டத்திற்கு உள்ள சக்தி உண்டு. ஆனால், பராளுமன்றம் கூடிய உடன் இந்த ஆணைகளை அதன் பார்வைக்கு வைக்கவேண்டும். அப்படிப் பாராளுமன் றம் கூடிய ஆறுவார காலத்திற்குமுன் செய்யவில்லையாயின் குடியரசுத் தலைவரின் ஆணைகள் செல்லாதவையாகிவிடும். அவசரகால நிலையைச் சமாளிப்பதற்கென்று குடியரசுத் தலைவரிடம் 'சிறப்பதிகாரங்கள்' இருக்கின்றன. உண்மை யான அவசரகால நிலை உள்ளது எனக் குடியரசுத் தலைவர் உறுதியாக நம்பினால், அறிவிப்பு ஒன்றின் மூலமாக அவர் அவசரநிலையை அறிவிக்கலாம். இந்த அறிவிப்பினைப் பாராளுமன்றத்தின் இரு அவைகளிலும் வைக்கவேண்டும். இரண்டு மாதங்களுக்குள் இவ்விரு அவைகளின் ஒப்புதலைப் பெறாவிட்டால் அவசரநிலைஅறிவிப்பு செல்லாததாகி விடும்.

அவசரநிலை அமுலில் இருக்கும்போது, முழுக்கமுழுக்க ஒற்றையாட்சி அடிப்படையிலேயே நம் நாட்டு அரசியல்

அமைப்புச் செயல் படுகின்றது. ஒரு மாநிலத்தில் உண்மையான அவசரகால நிலை தோன்றியுள்ளது என்று ஆளுநரிடமிருந்து செய்தி கிடைத்தால் அந்த மாநிலத்தின் ஆட்சியை எடுத்து நடத்தும் அதிகாரம் குடியரசுத்தலைவரிடம் உள்ளதாகும். இந்த அதிகாரத்தைப் பயன்படுத்தியே, கேரளம், தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், பாண்டிச்சேரி, குஜராத் முதலான மாநிலங்களில் ஜனாதிபதியின் ஆட்சி அமைக்கப்பட்டது.

அரசியல் குற்றச்சாட்டின் மூலமாகக் (Impeachment) குடியரசுத் தலைவரைப் பதவியிலிருந்து நீக்கமுடியும். நாடாளு மன்றத்தின் இரு அவைகளிலுமே இத்தகைய அரசியல் குற்றச்சாட்டுத் தீர்மானத்தைத் கொண்டு வரலாம். ஆனால், தீர்மானம் ஏற்கப்பட வேண்டுமானால் அவையின் மொத்த உறுப்பினரில் மூன்றில் இரண்டு பங்கினர் அதற்கு ஆதரவு தரவேண்டும். இவ்வாறு ஓர் அவையில் நிறைவேறிய தீர்மானம் மற்ற அவைக்குச் செல்லும்போது அது அரசியல் குற்றச்சாட்டுகளை ஆராயும். அந்த ஆய்வின் விளைவாக அந்த அவை அரசியல் குற்றச்சாட்டை ஆதரித்துத் தீர்மானம் இயற்றவேண்டும். அவைஉறுப்பினரில் மூன்றில் இரண்டு பங்கினர் அந்தத் தீர்மானத்தை ஆதரித்தால் குடியரசுத்தலைவரைப் பதவியிலிருந்து நீக்க முடியும்.

பாராளுமன்றத்தின் இரு அவைகளையும் சேர்ந்த உறுப்பினர்கள், துணைக் குடியரசுத்தலைவரைத் தேர்ந்தெடுக்கின்றனர். இங்கேயும் விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையும், ஒற்றைமாற்று ஓட்டு முறையும் பயன்படுத்தப்படுகின்றன. முப்பத்தைந்து வயதை எட்டிய இந்தியர் எவரும் துணைத்தலைவர் தேர்தலுக்குத் தகுதி படைத்தவரே. குடியரசுத் தலைவரைப்போலத் துணைத்தலைவரும் ஐந்து ஆண்டுகளுக்குப் பதவியிலிருப்பார். பதவிவகையால் அவர் இராஜ்யசபையின் தலைவராக விளங்குகின்றார். அந்த அடிப்படையிலேயே அவர் ஊதியமும் பெறுகின்றார் (துணைக் குடியரசுத் தலைவர் பதவிக்கென்று ஊதியமில்லை). குடியரசுத்தலைவர் அதிக நோய்வாய்ப்படும்போது அவருக்குப் பதிலாகத் துணைத்தலைவர் பணியாற்றுகின்றார். அப்படியின்றிக் குடியரசுத்தலைவர் இறந்துவிட்டால், புதிய தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் வரை, அவர் குடியரசுத் தலைவராகப் பொறுப்பேற்கின்றார். துணைத்தலைவரை

யும் பதவியிலிருந்து நீக்கமுடியும். அப்படிச் செய்வதற்கு இராஜ்யசபையின் உறுப்பினரில் பெரும்பான்மையினர் தீர்மானம் ஒன்றை நிறைவேற்ற வேண்டும். அந்தத் தீர்மானத்தை லோக்சபை (மக்கள் சபை) ஏற்கவேண்டும். அப்போதுதான் துணைத் தலைவரைப் பதவியிலிருந்து நீக்கலாம்.

மத்திய அரசாங்கத்தில் மிகமுக்கியமான இடத்தை வகிப்பவர்கள் பிரதம அமைச்சரும், மந்திரி சபையினரும் ஆவர். குடியரசுத்தலைவர் பிரதமரை நியமிக்கின்றார். அவ்வாறு நியமனம் பெற்ற பிரதமரின் ஆலோசனைப்படி மற்ற அமைச்சர்களையும் குடியரசுத்தலைவரே நியமிக்கின்றார். லோக்சபையில் பெரும் பான்மை பலம் பெற்ற கட்சியின் தலைவரையே குடியரசுத்தலைவர் பிரதம அமைச்சராக நியமிக்க வேண்டுமென்பது மரபு. எந்த ஒரு கட்சிக்கும் பெரும்பான்மை பலம் இல்லாதபோது லோக்சபையின் நம்பிக்கையைப் பெறக்கூடிய தலைவர் ஒருவரைப் பிரதமராக நியமிக்கவேண்டும். லோக்சபையிடம் அமைச்சர்களுக்குக் கூட்டுப் பொறுப்பு உண்டு. அமைச்சர்கள் தனித்தனியாகவும் கூட்டாகவும் லோக்சபைக்கு பொறுப்பானவர்கள். அமைச்சர் ஒவ்வொருவரும் பாராளுமன்றத்தின் உறுப்பினராக இருக்க வேண்டும். அதேபோலப் பிரதம அமைச்சராக வருபவர் லோக்சபையின் உறுப்பினராதல் வேண்டும்.

மத்தியச் சட்டமன்றம் அல்லது நாடாளுமன்றத்தில் இரு சபைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று லோக்சபை அல்லது மக்கள் சபை. மற்றது இராச்சியசபை அல்லது மாநிலங்களின் மன்றம் (Council of States). மாநிலங்களிலுள்ளவர்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட 542 உறுப்பினர்களைக் கொண்டது லோக்சபையாகும். இருபத்தொரு வயது நிரம்பிய எந்த இந்தியனுக்கும் பாராளுமன்றத் தேர்தலிலும் மாநிலச் சட்டசபைத் தேர்தலிலும் வாக்களிக்க உரிமை உண்டு. லோக்சபா தேர்தலில் போட்டியிடும் வேட்பாளர் 25 வயது நிரம்பியவராக இருக்க வேண்டும். லோக்சபாவின் உறுப்பினர்கள் அதன் சபாநாயகரையும் துணைச் சபாநாயகரையும் தேர்ந்தெடுக்கின்றனர்.

மத்திய அரசுப் பட்டியலிலும், கூட்டு அரசுப் பட்டியலிலும் உள்ள பொருள்கள் குறித்து லோக்சபை சட்டமியற்றலாம். பண மசோதாத் தவிர மற்ற மசோதாக்களை லோக்சபையிலும் கொண்டு வரலாம்; ராஜ்ய சபையிலும் கொண்டுவரலாம். இந்த இரு அவைகளும் ஏற்றுக்

கொண்ட பின்னரே ஒரு மசோதா நிறைவேற்றப்பட்டதாகக் கருதப்படும். கருத்தொற்றுமை இல்லாதபோது இரு அவைகளின் கூட்டுக்கூட்டத்திற்குக் குடியரசுத்தலைவர் அழைப்பு விடுவார். கூட்டுக்கூட்டத்தில் பெரும்பான்மையினரின் முடிவே ஏற்றுக்கொள்ளப்படும்.

பணமசோதாவை லோக்சபையில்தான் கொண்டு வர முடியும். லோக்சபையில் நிறைவேறிய பணமசோதா பிறகு ராஜ்யசபைக்குச் செல்கிறது. ராஜ்யசபை கொண்டு வரும் திருத்தங்களை லோக்சபை நிராகரிக்கலாம். இங்ஙனம் பண மசோதாக்களைப் பொருத்தவரையில் லோக்சபையின் முடிவே இறுதியானது.

தேர்ந்தெடுக்கப்பட்ட 238 உறுப்பினர்களையும், 12 நியமன உறுப்பினர்களையும் கொண்டது ராஜ்யசபை. இலக்கியம், அறிவியல், அல்லது கலை ஆகியவற்றிலோ சமூகசேவையிலோ புகழ்பெற்றவர்களை நியமன உறுப்பினர்களாக நியமிப்பது வழக்கம். மற்ற 238 உறுப்பினர்களையும் மாநிலச் சட்டசபைகள் தேர்ந்தெடுத்து அனுப்பும். முப்பது வயதிற்கும் குறையாத இந்தியக் குடிமகன் ராஜ்யசபைத் தேர்தலுக்குப் போட்டியிடலாம். லோக்சபாவின் தலைவரும் துணைத் தலைவரும் அச்சபை உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஆனால், ராஜ்யசபையின் தலைவர் குடியரசின் துணைத் தலைவரே ஆவார். ராஜ்ய சபையின் துணைத் தலைவரை மட்டும் அச்சபையின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கின்றனர்.

இராஜ்யசபை நிரந்தரமான சபை. அதனைக்கலைப்பது என்பதில்லை. ஆறு ஆண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட இதன் உறுப்பினர்களுள் மூன்றில் ஒரு பங்கினர் இரண்டாண்டுக்கொருமுறை பதவியைவிட்டு விலகுகின்றனர். ஏற்கனவே குறிப்பிட்டதைப்போல ராஜ்யசபையின் அதிகாரங்கள் லோக்சபையின் அதிகாரங்களைவிடக் குறைவே.

லோக்சபை உறுப்பினர்களாக இருந்தாலும், ராஜ்யசபையின் அங்கத்தினர்களாக இருந்தாலும் அவர்களுக்கு மாதம் ரூ. 500 வீதம் ஊதியம் உண்டு. இதைத்தவிர வேறுபடிகளும் தரப்படுகின்றன.

**தலைமை நீதிமன்றம் (The Supreme Court)**

தலைமை நீதிமன்றம் நமது நாட்டில் மிக உயர்ந்த நீதிமன்றமாகும். அது அரசியல் அமைப்புச் சட்டத்திற்கு விளக்கம் அளிக்கவல்லது. அதனிடம் கொண்டு செல்லப்படும் செய்திகளில் ஆலோசனை வழங்குகின்றது. நேரடியாக வரும் வழக்குகளையும் மேல்முறையீடாகவரும் வழக்குகளையும் விசாரித்துத் தீர்ப்பு அளிக்கின்றது. மத்திய அரசிற்கும் மாநில அரசுகளுக்குமிடையேயான தகராறுகள், மாநில அரசுகளுக்கிடையேயான சச்சரவுகள் ஆகியவற்றையே அது நேரடியாக விசாரிக்கும். அடிப்படை உரிமை சார்ந்த வழக்குகளையும் மாநில உயர்நீதிமன்றங்களிலிருந்து மேல்முறையீடாகவரும் வழக்குகளையும் அது தீர்த்துவைக்கின்றது.

தலைமை நீதிமன்றத்தில் ஒரு தலைமை நீதிபதியும் பதின்மூன்று நீதிபதிகளும் இடம்பெற்றுள்ளனர். நாடாளுமன்றத்தின் இரு சபைகளிலும் வரும் விண்ணப்பத்தின் பேரில் நீதிபதிகளைப் பதவியிலிருந்து நீக்கும் அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு இருக்கிறது. நாடாளுமன்றத்தின் ஒவ்வொரு அவையிலும் கூடியிருந்து வாக்களிப்போரில் மூன்றில் இரண்டுபங்கினர் ஏற்கும் விண்ணப்பத்தின் அடிப்படையிலேயே ஜனாதிபதி நடவடிக்கை எடுப்பார். தலைமை நீதிபதி மாதமொன்றிற்கு ரூ. 5000மும், மற்ற நீதிபதிகள் ரூ. 4000மும் ஊதியமாகப் பெறுகின்றனர். அவர்களுடைய சம்பளமும் மற்றப்படிகளும் அரசாங்கத்தின் நிரந்தரச் செலவினங்களாக இருப்பதால் அதற்குப் பாராளுமன்றத்தின் ஒப்புதல் தேவையில்லை.

ஜனநாயகம் என்பது தொழில் முறையிலான தேர்ச்சி பெறாதவர்களின் ஆட்சியே. திறமையானவர்கள் என்பதற்காக மக்கள் தங்களது ஆட்சியாளர்களைத் தேர்ந்தெடுப்பதில்லை. அவர்களது செல்வாக்குக் காரணமாகவே அவர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர். அமைச்சர்களெல்லாம் பொதுவாக அனுபவம் மிக்கவர்கள். நாட்டின் குறைபாடுகளைத் தீர்த்துவைப்பதற்குத் தங்களது அனுபவத்தைப் பயன்படுத்துகின்றனர். மேலும் அவர்கள் மக்களுடன் தொடர்பு கொண்டிருப்பதால் நாட்டின் தேவைகளை நன்கு அறியும் நிலையில் உள்ளனர். ஜனநாயக நாட்டில் கொள்கைகளை வகுப்பவர்கள் அமைச்சர்கள் என்றாலும், அவைகளை நடைமுறைப்படுத்துபவர்கள் பொது நிர்வாகத் துறை அதிகாரிகளும், படைத்துறை அதிகாரிகளுமேயாவர். இந்த அதி

காரிகளைத் தேர்ந்தெடுக்கின்ற பொறுப்பு, மத்திய அரசுப் பணியாளர் தேர்வுக்குழு என்ற சுதந்திரமான அமைப்பிடம் உள்ளது.

மத்திய அரசுப் பணியாளர் தேர்வுக்குழுவின் தலைவரையும், மற்ற உறுப்பினர்களையும் குடியரசுத் தலைவரே நியமிக்கிறார். ஆறுவருடகாலம் அல்லது 65 வயது ஆகும் வரையில் தேர்வுக் குழு உறுப்பினர்கள் பதவியில் இருக்கலாம். இந்திய ஆட்சித் துறைக்கும், மற்ற அகில இந்தியப் பணிகளுக்கும் வேண்டிய நபர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக இக்குழு ஆண்டுதோறும் போட்டித் தேர்வுகள் நடத்துகின்றது. தன்னுடைய பணி குறித்து அது ஆண்டுதோறும் பாராளுமன்றத்திற்கு அறிக்கை சமர்ப்பிக்க வேண்டியது அவசியம். மத்திய அரசுப்பணித் தேர்வுக்குழுவின் தலைவர், மற்றும் உறுப்பினர்களின் ஊதியம் பாராளுமன்றத்தின் விவாதத்திற்கோ அல்லது வாக்கெடுப்பிற்கோ உட்பட்டதல்ல.

## தல ஆட்சி

### சோழர் காலத்தில்

மிகப்பழங்காலத்திலிருந்தே தல ஆட்சி அல்லது உள்ளூர் ஆட்சி நம்நாட்டில் நல்லபடியாக நடந்துவந்துள்ளது. 'இண்டிகா'வில் விவரிக்கப்படும் மௌரியர் காலப் பாடலிபுத்திர நகர ஆட்சிமுறையிலிருந்து, பண்டைக்கால இந்தியாவில் உள்ளூர் ஆட்சி அமைப்புகள் எத்துணை உரம் பெற்று விளங்கின என்பது புலப்படும். ஆயினும், சோழர் காலத்தில் விளங்கிய உள்ளூர் ஆட்சிமுறை தலைசிறந்தது எனக் கொள்ளலாம். பிற்காலத்தில் வந்த மொகலாய ஆட்சிமுறைக்கும் பிரிட்டிஷாரின் ஆட்சிமுறைக்கும் முன்மாதிரியாகத் திகழும் பெருமை பெற்றது சோழர்கால உள்ளூர் ஆட்சிமுறை. சில ஊர்கள் இணைந்து ஒன்றியமாகவோ அல்லது தனித்த கிராமமாகவோ இருந்த கூற்றம் என்பதே, சோழர் காலத்தில் அடிப்படை ஆட்சியெல்லையாக அமைந்தது. பிராமணர்களுக்குத் தானமாக அளிக்கப்பட்ட கிராமமாக அல்லது "பிரம்மதேசமாக இருந்தால்" அதனைச் சதுர்வேதி மங்கலம் என்றழைத்தனர். இத்தகைய பிராமண ஊரின் விவகாரங்களை "மகாசபை" என்னும் அவை கவனித்துவந்தது. மற்ற ஊர்களில் பலஜாதிகளைச் சேர்ந்தவரும் பங்குகொண்ட 'ஊரார்' என்னும் மன்றம் பொது

விவகாரங்களைக் கவனித்துக்கொண்டது. முதலாம் பராந்தக சோழருடைய உத்திரமேரூர்க் கல்வெட்டுகள் இரண்டும், உக்கல் கல்வெட்டுகள் பதினான்கும் மகாசபையின் அமைப்பு, பணிகள் குறித்து அதிக அளவில் செய்திகளைத் தருகின்றன. ஏறக்குறைய மகாசபையின் அமைப்பினையும், பணிகளையும் ஊராரும் கொண்டிருந்திருக்க வேண்டுமெனலாம். ஊரார் மூன்றுவகையான பணிகளை மேற்கொண்டனர். அவை, நிதி, நீதி, நிர்வாகம் என்னும் முப்பெரும் பிரிவுகளில் அடங்கும். நிலத்தை விற்கவும், விற்றபணத்தைப் பெறவும், அப்பணத்திலிருந்து வந்த வட்டியைக் கொண்டு அரசாங்கத்திற்கு வரி செலுத்தவும் 'ஊரார்' என்னும் அம்மன்றம் அதிகாரம் பெற்றிருந்தது. அதுபோலவே காடுகளை அழித்தல், சதுப்பு நிலங்களைச் சீர்ப்படுத்துதல், புதிய நிலங்களைப் பயிர் நிலமாக்குதல் போன்ற வளர்ச்சித் திட்டங்களை மேற்கொள்ளவும் அதிகாரம் கொண்டிருந்தது. சரியாகப் பயிரிடப்படாத நிலத்தைக் கைப்பற்றிச் சர்க்காரிடம் ஒப்படைக்கவும் அதற்கு அதிகாரம் இருந்தது. அரசாங்க அலுவலர்கள் அல்லது அதிகாரிகளுக்குச் சேரவேண்டிய வரிகளை ஊர்மன்றம் திரட்டிக் கொடுத்தது. அதனிடம் கருவூலம் ஒன்றும் (Treasury) இருந்தது. அதன் கணக்குகளை அதிகாரிகள் முறையாக ஆய்வு செய்தனர். அப்படியிருந்தும் பொது பணத்தைக் கையாடும் நிகழ்ச்சிகள் பலபற்றிக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

அறச்செயல்களுக்காகப் பணத்தையும் நிலமானியங்களையும் 'ஊரார்' பெறும் வழக்கம் இருந்தது. அறக்கட்டளையை நிர்வகிப்பதற்கென்று ஆண்டுதோறும் நியமனம் பெற்ற ஆணையாளர் குழு இருந்தது. கோயிலார் போன்ற பொதுக் கழகங்களுக்கு நிலங்களை மாற்றுவதும் ஊரார் மேற்கொண்ட பணிகளில் ஒன்றாகும். ஊர்மன்றத்தின் நீதி வழங்கும் கடமைகளை அதன் குழுக்களில் ஒன்றான நியாயக்குழு அல்லது நீதி வாரியம் நிறைவேற்றி வந்தது. உரிமை வழக்குகளையும் குற்றவழக்குகளையும் விசாரிக்கவும், குற்றத்திற்குத் தகுந்த தண்டனை வழங்கவும் அக்குழு அதிகாரம் பெற்றிருந்தது. பெரும்பாலும் அரசாங்க அதிகாரியே நீதிவாரியத்திற்குத் தலைமை தாங்குவது வழக்கம். வாரியத்தின் முடிவினை நிறைவேற்றிவைப்பது தலைவரின் பொறுப்பாகும். தென்னிந்தியாவில் இருந்த இத்தகைய அமைப்பினை ஆங்கிலேய சாக்சானியா ஜூரி முறையுடன் ஒப்பிடலாம். இங்கிலாந்தில் இருந்ததைப் போன்று

வழக்கின் உண்மைகள் தெரிந்த அக்கம் பக்கத்தவரே குற்ற வாளியை விசாரித்துத் தீர்ப்பளித்தனர் என்பது கவனிக் கத் தக்கது. எனவே, ஜூரிமுறை என்பது ஆங்கிலேயரின் தனி யுரிமையன்று என்பது தெளிவாகும்.

தற்செயலாக நிகழ்ந்த குற்றத்தையும், வேண்டுமென்றே செய்யப்பட்ட குற்றத்தையும் பிரித்துப்பார்த்துக் குற்றத் திற்கேற்ற தண்டனையை வழங்கியது நீதிவாரியம். வேண்டு மென்றே செய்த கொலைக் குற்றத்திற்கு மரண தண்டனை வழங்கியது. ஆனால், தற்செயலாக நடந்த கொலைக் குற்றத்திற்கு எளிய தண்டனையே வழங்கியது. அதாவது கொடுமைக்குள்ளானவர்களின் நலங்கருதி ஊர்க் கோவிலில் இரண்டு அல்லது மூன்று தூங்கா விளக்குகளுக்குக் குற்ற வாளி ஏற்பாடு செய்யவேண்டும். செவ்வையான ஆட்சி நடைபெறுவதற்காக ஊரார் பலகுழுக்களாக அல்லது வாரியங்களாகப் பிரிந்திருந்தனர். அவை ஒவ்வொன்றும் குறிப்பிட்ட கடமை ஒன்றைச் செய்தன. ஏற்கெனவே குறிப் பிட்டதைப்போல நீதிவாரியம் முறைவழங்கியது. பூந் தோட்டங்களைக் கவனித்துக் கொண்டது தோட்டவாரியம். அறக்கட்டளை மற்றும் ஆலயங்களின் பொறுப்பேற்றது தர்ம வாரியம். ஏரிவாரியம் நீர்நிலைகளைக் கண்காணித்தது. இந்த வாரியங்களின் பணிகளை மேற்பார்வை செய்வதற் கென்று கிராமக்காரியவாரியம் இருந்தது. கூற்றத்தின் பரப் பையும் அதில் வாழ்ந்த மக்கள் தொகையையும் பொருத்து ஊராரின் எண்ணிக்கையும் வாரியங்களின் எண்ணிக்கையும் அமைந்தன. ஊராரின் உறுப்பினர்கள் ''பெருமக்கள்'' என வும், வாரியங்களின் உறுப்பினர்கள் ''வாரியப் பெருமக்கள்'' எனவும் கூறப்பட்டார்கள். வாரியம் ஒன்றின் உறுப்பினர்கள் ஓராண்டிற்குப் பதவி வகித்தனர். வாரியங்களில் பணி புரிந்து அனுபவம் மிக்கவர்களே கிராமக் காரிய வாரியத்தில் இடம்பெறத் தகுதியுடையவர்கள்.

இத்தகைய வாரியங்கள் ஒழுங்கான முறையில் அமைக் கப் பட்டிருந்தன. ஒவ்வொரு கூற்றமும் பல குடும்புக ளாகப் (Wards) பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு குடும்பிலிருந்தும் தகுதி வாய்ந்தவர்களுடைய பெயர்கள் தேர்வுக்கு வந்தன. அப்படிப் பெயர் அனுப்பப்பட்டவர்களில் இருந்து வாரியப் பெருமக்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். வாரியப் பெருமக் களாகவருவதற்குப் பின்வரும் தகுதிகளுள் ஏதேனும் ஒன்று இருக்கவேண்டும்.

1. நிலவரி செலுத்தும் கால்வேலிக்கு அதிகமான நில மும் சொந்தமனையில் கட்டப்பெற்ற வீடும் இருக்க வேண் டும்.

2. 35 வயதிற்கு மேற்பட்டவராகவும் 70 வயதிற்குக் குறைந்தவராகவும் இருக்கவேண்டும்.

3. மந்திரப் பிராமணத்தை அறிந்தவராகவும் அதனைப் போதிக்கும் தகுதிபடைத்தவராகவும் இருத்தல் வேண் டும்.

4. வேதம் ஒன்றையும் பாஷ்யம் ஒன்றையும் கற்ற வராக இருந்தால் ⅛ வேலி நிலமிருந்தால் போதும்.

5. பொதுவான வாணிகத்திறமையும், பழிபிறங்காப் பண்பும் வேண்டும்.

பின்வருவனவற்றுள் ஏதேனும் இருந்தால் ஒருவர் வாரியப் பெருமகனாராக இருக்கத் தகுதியற்றவராகிவிடு வார்.

1. பிராமணன், பசு, குலப்பெண், குழந்தை ஆகி யோரைக் கொலை செய்தல். 2. ஆன்மீகக் குருவின் மனை வியை விழைதல். 3. மது அருந்துதல் 4. திருடுதல் 5. மேலே சொன்ன ஒழுக்கக் கேடு உடையவரிடத்தில் உறவாடு தல் 6. கணக்குக்காட்டாத கிராமக் கணக்கரிடம் தொடர்பு கொள்ளுதல். 7. கழுதைமேற்செல்லும் தண்டனையைப் பெற்று மானமிழத்தல்.

ஒரு குடும்பிலிருந்து வந்த பெயர் எழுதிய ஓலைகளைக் காலிப்பானை ஒன்றிலிட்டு, அதனை நன்றாகக் குலுக்கி விடு வார்கள். அதிலிருந்து சிறுவன் ஒருவன் ஒரு சீட்டையெடுத்து ஊர்த்தலைவரிடம் கொடுப்பான். அவரும் தமது கைவிரல் களை விரித்து உள்ளங்கையில் சீட்டைவாங்கி அதிலுள்ள பெயரைப் படிப்பார். இங்ஙனம் ஒவ்வொரு குடும்பிலிருந்தும் ஓர் உறுப்பினர் என்ற அடிப்படையில் பல உறுப்பினர் கள் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். இதுவே புகழ்வாய்ந்த 'குடவோலைத் தேர்தல்' முறையாகும். தேர்தலும் திருவுளச் சீட்டும் (Election and lot) என்னும் அத்தினியக் (Athenian Principle) கோட்பாடுகளை இந்த முறையில் காண முடிகின்றது. உறுப்பினர்கள் ஓராண்டிற்கே பதவி வகித் தனர். மூன்றாண்டுகளுக்கு மேல் தொடர்ச்சியாக யாரும் வாரியத்தின் உறுப்பினராக இருக்க முடியாது. இவ்விதம் வாரியப்பதவி முறையாக மாறிமாறி வந்ததால் ஊர் ஆட்சி

முறையைப்பற்றி அறிந்துகொள்ளும் வாய்ப்பு ஊரில் வாழ்ந்த ஒவ்வொருவருக்கும் இருந்தது. 6 பேர் முதல் 12 பேர் வரையில் வாரியங்களில் உறுப்பினர்களாக இருக்கலாம்.

## ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில்

சோழர்கால உள்ளூர் ஆட்சியானது உண்மையில் ஓர் ஜனநாயக அமைப்பு என்பதை ஏற்கெனவே பார்த்தோம். முகமதியர் ஆட்சிக்காலத்தில் போர்களும் நாடுபிடிக்கும் செயல்களும் இடைவிடாது நடைபெற்று வந்தபோதிலும், கிராமங்களின் ஆட்சிமுறை பழைய வழியிலேயே இயங்கி வந்தது. மொகலாயப் பேரரசு வீழ்ச்சியுற்ற பிறகு, இந்தியா முழுவதும் குழப்பமும் கொந்தளிப்பும் நிலவியபோது தலத் தன்னாட்சி அமைப்புகள் சரியாகப் பணி புரியவில்லை. அவை அநேகமாகப் பாழ்பட்டுப் போயின. இந்நாட்டில் பிரிட்டிஷார் ஆளத் தொடங்கியபோது தலத்தன்னாட்சியை மேம்படுத்துவதில் ஆட்சியாளருடைய கவனம் திரும்பியது. மாவட்ட அல்லது வட்டாரக் குழுக்களின் உதவியுடன் கல்வி, சுகாதாரம், போக்குவரத்து ஆகியனவற்றை அபி விருத்தி செய்யும் முதல் முயற்சி 1871ஆம் ஆண்டில் மேற் கொள்ளப்பட்டது. ஆனால், இந்த முயற்சி வெற்றி பெற வில்லை. வட்டார எல்லைகள் மிகப் பெரியவை என்பதாலும், குழு உறுப்பினர்கள் தங்களது பணியினைச் செவ் வனே செய்யும் தகுதி குறைந்தவர்களாக இருந்தனர் என்பதாலும் முயற்சி பயனளிக்கவில்லை எனலாம். எனவே, இந்தியாவில் வைசிராயாக இருந்த ரிப்பன் பிரபு தலத்தன்னாட்சிக்கான திட்டமொன்றை 1882ஆம் ஆண் டில் கொண்டு வந்தார். மாவட்டத்திற்கு ஓர் ஆட்சிக் குழு என்றில்லாமல் துணைக்கோட்டத்திற்கு ஒரு குழு இருக்கவேண்டுமென்று அவர் விரும்பினார். துணைக் கோட்டத்திற்குக் கீழேயும், சிறு நிலப் பரப்புகள் இருக்க வேண்டுமென்று விழைந்தார். பரப்பு சிறியதாக இருந்தால் தான் குழு உறுப்பினர்கள் தங்கள் பகுதிகளைப்பற்றி அதி கமாக அறிந்திருக்க முடியும் என்பது அவரது கொள்கை. மேலும் அவர் வட்டாரக் கழகங்களின் உறுப்பினர்கள் மட்டு மன்றித் தலைவரும் அரசாங்க அதிகாரியாக இருக்கக்கூடாது என்றார். ஆனால், துரதிர்ஷ்டவசமாக அவருடைய கருத்து களை இந்தியச் செயலர் ஏற்கவில்லை. இறுதியாக ரிப்பன் பிரபுக் காலத்தில் நிறைவேற்றப்பட்ட தலத்தன்னாட்சி

(தல சுயாட்சிச் சட்டம்), மாவட்ட மாஜிஸ்ட்ரேட் (மாவட்ட அதிகாரி) தலைமையிலான மாவட்டக் கழகங்களை நிறுவியது. திறமை ஒன்றுதான் இந்தியா செயலரின் கவனத்தைக் கவர்ந்தது. ஆனால், இந்திய மக்களுக்கு அரசியல் அறிவையும் பொதுக்கல்வியையும் அளிப்பது, ரிப்பன் பிரபுவின் பேரவாவாக இருந்தது.

ரிப்பன் பிரபுவின் காலம் வரையில் மாவட்ட ஆட்சியாளரின் தலைமையில் இயங்கியதும், அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டதுமான நகர ஆட்சிக்குழுக்கள், பெரிய நகரங்களில் பணியாற்றி வந்தன. மாவட்ட அல்லது கிராமப்புற கழகங்களைப்போலவே நகரங்களிலும் தன்னாட்சிக் கருத்துகளை ரிப்பன்பிரபு புகுத்தினார். நகரமன்றத் தலைவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்ற சட்டங்கள், புலமாநிலங்களில் கொண்டுவரப்பட்டன. முதலில் மாவட்ட ஆட்சியாளரே நகரமன்றத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சிறிது காலத்திற்குப்பிறகு, அதிகாரி அல்லாத ஒருவரையே தலைவராகத் தேர்ந்தெடுக்கும் நிலை உருவானது. தல ஆட்சிக்குழு உறுப்பினர்களும் தலைவரும் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமென்ற ரிப்பன் பிரபுவின் சீரிய கொள்கையானது நாளடைவிலேதான் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பல பரிசோதனைகள் நடந்த பிறகு எல்லா மாநகரசபைகளுக்கும், மற்ற நகரசபைகளுக்கும் ஒரேமாதிரியான அமைப்புமுறை உருவாகியது. இந்த முறைப்படி நகரசபை உறுப்பினருள் பெரும்பான்மையோர் தேர்ந்தெடுக்கப் பெற்றவர்களாக இருந்தனர். வலிமைவாய்ந்த, சுதந்திரமாகச் செயல்படகூடிய நிர்வாக அதிகாரி ஒருவரை அரசாங்கம் நியமித்தது. நகர மன்றத்தின் கணக்குகளை முறையாகத் தணிக்கை செய்யவும் வகை செய்யப்பட்டது. தல ஆட்சி அமைப்புகளில் முறைகேடுகள் மிஞ்சும்போது அரசாங்கம் தலையிட எப்போதும் தயாராக இருந்தது.

நகர ஆட்சியை உள்ளூர் மக்களின் விருப்பத்திற்கு விட்டுவிட வேண்டுமென்ற ரிப்பன் பிரபுவின் எண்ணம் முழுமையாக ஈடேறவில்லை என்பதை, மேலே கூறியதிலிருந்து அறியலாம். தலத்தன்னாட்சி நிறுவனங்களில் அதிகாரவர்க்கத்தினரின் பங்குப்பணி தொடர்ந்து வந்தது. 1919ஆம்

ஆண்டில் நிறைவேறிய பான்ட்போர்டு சட்டம் கொண்டுவந்த அரசியல் அமைப்பிலேதான் ரிப்பன் பிரபுவின் எண்ணங்கள் முழுமையாக நிறைவேறின. இந்த 1919ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தில் தலத்தன்னாட்சி ''மாற்றப்பட்ட துறைகளுள்'' ஒன்றாகியது. நகரசபைகளும் உள்ளாட்சிக் கழகங்களும் அதிக அதிகாரங்கள் பெற்றன. அதிகாரிகளின் கட்டுப் பாட்டிலிருந்து பெருமளவு விடுபட்டன. அவற்றில் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களே பணியாற்றினர். ஏதோ சிலவற்றில்தான், தனித்திறமை பெற்றவர்களின் தலைமை இன்றியமையாதது எனக் கண்டவிடத்து அரசாங்க அதிகாரிகள் தலைவர்களாக இருந்தனர். நகரங்களிலும் கிராமப்புறங்களிலும் தன்னாட்சி நிறுவனங்கள் வளர்ச்சியடைவதற்கு மாநில அரசுகள் தங்களால் இயன்ற அனைத்தையும் செய்து வந்தன. தல ஆட்சியில் மக்களுடைய பிரதிநிதிகள் அக்கறை எடுத்துக் கொண்டதால் கல்வியிலும் சுகாதாரத்திலும் முன்னேற்றம் தோன்றியது.

# 6. இந்தியாவின் சமயங்களும் — பண்பாடும்

இந்திய நாடு பல்வேறு சமயங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. இந்தியர்கள் அனைவரும் சமய உணர்ச்சி மிகுந்தவர்கள். மிகப் பண்டைக் காலத்திலிருந்தே இந்தியர்கள் உலகியல் சாதனைகளில் அக்கறையில்லாமல், ஆன்மீக சாதனைகளில் வெற்றி பெறுவதிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தவர்கள். எனவே இந்தியா, ஆன்மீகச் செல்வத்துக்கோர் கருவூலமாக விளங்குகிறது. அச் செல்வமானது உபநிடதங்கள், பகவத்கீதை, தர்மசாஸ்திரங்கள், இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்கள் முதலிய இந்துக்களின் புனித நூல்களில் பொதிந்து கிடக்கின்றன. உபநிடதங்களில் பேசப்படும் தத்துவம், மேலை நாட்டாரின் கவனத்தைப் பெரிதும் ஈர்த்தது. ஜெர்மானிய மெய்யறிஞரான ஸ்கோபன்ஹேர் என்பவர் 'உபநிடதங்களில் காணப்படும் தத்துவங்கள் எனது வாழ்நாளில் மட்டுமன்றி, மரணத்துக்குப் பின்னும் ஆறுதலை அளிக்கக்கூடிய அருமருந்தாகும்' எனக் கூறுகிறார். இத்தகைய சமய உணர்ச்சியின் விளைவாகவே, அஹிம்சை முறையில் இந்திய சுதந்திரத்திற்காகப்பாடுபட்ட காந்திஜியை இந்திய மக்கள் தங்களுடைய தலைவராக ஏற்றுக்கொண்டனர். இந்திய மக்களின் சமய உணர்ச்சிக்கு தூபம் போட்டதாலேயே காந்திஜி இந்தியப் பாமர மக்களைத் தட்டியெழுப்பித் தேச சுதந்திரத்திற்காகப் பாடுபடச் செய்ய முடிந்தது. இந்தியாவின் ஒரு பெருஞ் சமயமான இந்து சமயம் மட்டுமேயன்றி, அநேகமாக உலகில் காணப்படும் எல்லாச் சமயங்களையுமே பின்பற்றுகின்ற மக்கள் இங்கு இருக்கிறார்கள். இஸ்லாம், கிறிஸ்தவம், சொராஸ்டிரியம் போன்ற பல சமயத்தவர்கள் இங்கு வாழ்கிறார்கள். எனவே, இங்கு உலவி வரும் பல்வேறு சமயங்களைப் பற்றிய அறிவைப் பெறாத வரையில், ஒருவர் உள்ளபடியே இந்திய நாகரிகத்தை நன்கு புரிந்துகொள்வதென்பது முடியாத காரியம்.

### சிந்துவெளி மக்களின் சமயம்

வரலாற்றுக் காலந்தொட்டு இன்றுவரை தொடர்ந்து வந்திருக்கின்ற பண்பாட்டுத் தொடர்பு, இந்திய நாகரிகத்தின்

தனிச் சிறப்பு மிக்க தன்மைகளுள் ஒன்றெனப் புகழப்படு கின்றது. சிந்துவெளியினரால் (கி.மு.3250—2750) வணங் கப்பட்ட கடவுளர்கள் இன்றும் இந்திய வழிபாட்டுக் கடவுள் களாக இருப்பது வியத்தகு நிகழ்ச்சியாகக் கருதப்படுகின்றது. பலவகை மிருகங்கள் புடைசூழ யோகநித்திரையில் ஆழ்ந் திருக்கின்ற ஆண் உருவத்தைச் சிந்துவெளி மக்கள் வழிபட் டனர். இந்த உருவமும் நிலையும் சிந்துவெளிப் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட முத்திரைகளில் காணப்படுகின்றன. யோக நித்திரையில் அமர்ந்திருக்கும் அந்த ஆண்கடவுள் தான் 'சிவபெருமான்' என்று பிற்கால இந்து மதம் ஏற்றுக் கொண்டது. சிவபெருமானுக்குப் 'பசுபதி' (Pasupathy) அல்லது உயிரினங்களையும் காப்பவன் என்ற பெயரும் உண்டு. சிந்துவெளி முத்திரை குறிப்பிடுகின்ற விலங்குகளால் சூழப் பட்ட உருவம் 'பசுபதி' என்ற கடவுளாக இருக்கலாம் என நம்பப்படுகின்றது. அந்தக் கடவுளுக்கு இருந்ததாகக் காணப் படுகின்ற இரு கொம்புகள் பின்னர் 'திரிசூலமாக'ச் (Trisula) சிவபெருமானின் படைக்கருவியாக மாறியிருக்கவேண்டும் என்றும் கருதப்படுகின்றது. சிவலிங்கத்தைப் போன்ற தோற்றமுடைய பல கற்களும் சிந்துவெளிப் பகுதியில் காணப் படுகின்றன. சிவனை லிங்கமாக வழிபடும் வழக்கமும் அம் மக்களுக்கு இருந்திருக்கக்கூடும் என்றும் கருதப்படுகின்றது.

பெண்தெய்வத்தை-அன்னையைத்-தெய்வமாகவே வழி படுகின்ற (Mother-goddess) தன்மையை உறுதி செய்யும் வகையில், பல உருவச் சிலைகள் சிந்துவெளிப் பகுதியில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. மட்பாண்டங்கள், கைகளில் அணி யும் அணிகள், முத்திரைகள் ஆகியவைகளில் அன்னைக் கட வுளின் உருவங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இன்னொரு முத்திரையில் கத்தியைக் கையிலேந்திய ஒருவன் ஆட்டுக் கிடாய் ஒன்றினைப் பிடித்துக் கொண்டு அன்னைக் கடவுளின் முன்னர் நிற்பது போன்ற காட்சி காணப்படுகின்றது. மிருக பலி கொடுக்கின்ற வழக்கத்தை இக்காட்சி குறிப்பிடுவதாக உள்ளது என அறிஞர்கள் கருதுகின்றனர். அன்னைக்கடவுளின் அடி வயிற்றினின்றும் மரம் முளைத்திருப்பதைப் போன்ற காட்சி மற்றொரு முத்திரையில் காணப்படுகின்றது. மக்களைப் பெற்றெடுத்து இனம் வளர்க்கும் பெண்மையைக் குறிக்கும் கடவுளாக (Fertility-goddess) அன்னைக் கடவுளைச் சித்திரிக்கும் காட்சியென இது கருதப் படுகின்றது. ஆண் கடவுளை வணங்குவதை விட அன்னைக் கடவுளை

வழிபடும் பழக்கம் சிந்துவெளி மக்களிடையே மிகுதியாகக் காணப்பட்டிருக்கின்றது என்பது அறியப்படுகின்றது.

சக்தி, சிவன் வழிபாட்டுடன், மரங்கள், மிருகங்கள், மற்றும் பல தேவதைகளையும் சிந்துவெளி மக்கள் வழிபட்டனர். நல்லபாம்பை நாகக் கடவுளாக வழிபடுகின்ற தன்மை பரவலாக இருந்திருக்கின்றது. எருது, புலி, காண்டா மிருகம், யானை, முதலை போன்ற பல்வேறு விலங்குகளையும் வழிபட்டிருக்கலாம் என்றும் கருதப்படுகின்றது. அந்த மிருகங்களின் களிமண் உருவங்கள் இக்கருத்தினை வலியுறுத்துகின்றன. தனிமரங்களும், தனிமரமும் மனிதனும் இருப்பது போன்ற முத்திரைகள், மரங்களையும் சிந்துவெளியினர் வழிப்பட்டார்கள் என்பதற்குச் சான்றாகக் கொள்ளப்படுகின்றன. எருது, பசு, பாம்பு, மரங்கள் ஆகியவைகளை இந்துக்கள் இன்றும்கூட வழிபடுகின்றனர். இந்துக்களின் இன்றைய வழிபாட்டுத் தன்மைகள் சிந்துவெளி மக்களின் வழிபாடுகளுடன் இணைந்து காணப்படுகின்ற தன்மை வியப்பளிக்கின்றது. சக்கரமும், சுவஸ்திகா (Swastika) உருவமும் பொறிக்கப்பட்டுள்ள மற்றொரு முத்திரை, சிந்துவெளி மக்கள் சூரியனையும் கடவுளாக வழிபட்டிருக்கலாம் என்பதைக் குறிப்பிடுகின்றது.

## வேதகாலத்தில் சமயம்

### முற்பட்ட வேதகாலம் (Early Vedic Period)

வழிபாட்டு முறைகளைப் புதிராக மாற்றுகின்ற சமயச் சடங்குகள் இல்லாத எளிய சமயத்தினை ஆரியர்கள் வேத காலத்தின் தொடக்கத்தில் பின்பற்றினர். இயற்கைச் சக்திகளுக்கு ஏற்றவாறு ஏராளமான ஆண்-பெண் கடவுளர்களை இவர்கள் வழிபட்டனர். இயற்கையின் சக்தியைக் கண்டு பயந்த ஆரியர்கள், தம்மால் எதிர்த்து வெற்றி கொள்ள முடியாத இயற்கைச் சக்திகளை வழிபடுவதன் மூலம், அமைதிப்படுத்தமுடியும் என நம்பினர். ஆரம்பக் காலத்தில் ஆரியர்கள் வழிபாட்டிற்குரியவையாக இருந்த பல்வேறு இயற்கைச் சக்திகள் பின்னர் வழிபடாது விடப்பட்டன. ரிக் வேத காலத்தில் முப்பத்து மூன்று வகைக் கடவுள்களை ஆரியர்கள் வணங்கினர்.

சொர்க்கம் விண்ணுலகில் இருப்பதாக நம்பிய ஆரியர்கள் விண்ணைத் (Sky) தந்தையாகக் (Dyaus) கருதி வழிபட்டனர். பூவுலகைப் (Prithvi) பூமா தேவியாக-பெண்

கடவுளாக வழிபட்டனர். அன்னைக் கடவுள் ஆரியர்கள் வழிபடும் கடவுளர்களில் மூத்த கடவுளாகக் கருதப்பட்டது. இவ்விரு மூத்த கடவுளர்களும் பின்னர் இரு புதிய சக்திமிக்க கடவுளர்கள் தோன்றிய பிறகு மதிப்பிழந்தனர். வருணன், இந்திரன் (Varuna and Indra) என்ற இரு கடவுளர்கள் ஆரியர்களிடையே உயர்வு பெற்றனர். வருணன் விண்ணில் ஆதிக்கம் செலுத்தி மேகங்களையும் மழையையும், உருவாக்கு பவன் மழைக் கடவுள் என்று வணங்கப்பட்டவன். இடி, மின்னல் போன்ற இயற்கை வினோதங்களுக்குக் காரணமான இந்திரன் என்ற கடவுளை வணங்கினர். வருணன் வேத காலத்துக் கடவுளர்களில் மிகவும் சக்தி வாய்ந்த கடவுளாக மதிக்கப்பெற்று வணங்கப்பட்டான். உண்மை, நேர்மை ஆகிய தன்மைகளின் உறைவிடமாகவும், உலக இயக்கத்தின் காவல னாகவும் கருதப்பெற்றான். உலக முதற் கடவுள், கண்ணுக்குப் புலப்படாமல் உலகெங்கணும் நிறைந்து நின்று, உலகத்தின் காவலனாய், இயக்கச் சக்தியாகப், புரவலனாக நின்று காத்தருளுவதாகவும், இத்தகைய சக்திகளின் உறை விடமாகிய வருணனின் பார்வையினின்றும் பாவம் செய்கின்ற யாரும் தப்பிக்க முடியாது என்றும் நம்பப்பட்டது. அவன் மன்னித்தருளும் மாண்புடையவன். மக்கள் பாவ மன்னிப் புக்கோரி வணங்கலாம். நீரின் சக்தியைக் கட்டுப்படுத்துவதும் மழைக்கடவுள். வேளாண்மையைத் தொழிலாகக் கொண்ட ஆரியர்கள் வருணபகவானை மழைக் கடவுளாகவே கருதி வணங்கினர். கடல், ஆறு, குளம், கிணறு போன்ற நீர்நிலை களின் இயக்கத்திற்கும், தட்பவெப்ப நிலைக்கும் காரணமாக இருப்பது வருண பகவானே என்றும் நம்பி வழிபட்டனர்.

இந்திரன் போர்க் கடவுளாகச் சித்திரிக்கப்பட்டான். இடி, மின்னல் போன்ற தடுக்க இயலாத வலிமை கொண்ட சக்திகளைப் படைக் கருவிகளாகக் கொண்டு, மனிதர்களால் அழிக்க இயலாத கோட்டை கொத்தளங்களைத் தகர்க்கும் வலிமை படைத்தோனாகக் கருதப்பட்டான். இத்தகு சக்தி யால் இந்திரனுக்குப் 'புரந்தரா' (Purandara) என்ற பெயரும் உண்டு. பெருங்கோட்டைகளைப் பிடிக்கப் போர் தொடுத்த ஆரியர்கள், இந்திரனை வழிபட்டு, அவன் உதவியைப் பெற்றுப்பின்னரே போரில் ஈடுபட்டனர். இந்திர னும் தனது சக்தி வாய்ந்த போர்க்கலமான இடி-மின்னலைக் கொண்டு விண்ணில் திரிகின்ற தீய சக்திகளான தேவதை களை அழித்து, அவைகளின் பிடியிலிருந்த மழைநீரை விடு வித்து, ஏரி குளங்கள் நிரம்பவும், ஆறுகள், ஓடைகள் நீர்

நிறைந்து, நிலத்தைச் செழிப்பிக்கவும் செய்கின்ற கடவுள் என வணங்கப்பட்டான். இத்தகு சக்திகளை உடையவனாகக் கருதப்பட்ட இந்திரன் வேதமுற்காலக் கடவுளர்களில் உயர்ந்த நிலையில் வைத்துப் போற்றப்பட்டான். ஆனால் பிற் காலத்தில் இந்திரன் தனது மதிப்பிழந்து, வெறும் பொன்னுலகத்தின் தலைவனாக (இந்திரலோகம்) மாவீரர்கள் இறந்த பின்னர் சென்று மகிழ்வுறுகின்ற மறு உலகத்தின் தனிப் பெரும் தலைவன் என்ற தாழ்ந்த நிலைக்குத் தள்ளப்பட்டான்.

சூரியன், உதித்ததிலிருந்து மறைகின்ற வரையிலும் ஒவ்வொரு நிலையிலும் தனித்தனி கடவுளாக உருவகம் பெற்று வணங்கப்பட்டான். வைகறைப் பொழுதில் சூரியனை ''உஷா'' (Ushas) எனப்படும் ஓர் எழிலார்ந்த பெண் கடவுளாகப் பாவித்து வணங்கினர். பொழுது புலர்கின்ற வேளையில் பிராமணர்கள் ஓதுகின்ற ''காயத்ரி-மந்திரம்'' (Gayatri Mantra) இந்த உஷாவைப் போற்றி வணகுங் வதேயாகும். சூரியன் உதித்தெழுந்து, இளஞாயிறாக மாறி, உச்சிப் பொழுதாக உயர்ந்து, மாலைப் பொழுதாக மாறும் வரை, பல பெயர்களால் அழைக்கப்பெற்றான். உலகை உய்விப்பவன் 'பூஷன்' (Pushan) என்றும், வீரநடை போட்டுக் காக்கும் கடவுள் 'விஷ்ணு' (Vishnu) என்றும், மாலை மகிழ்ச்சியை ஊட்டும்போது 'சாவித்திரி' (Savitri-Enlivener) என்றும், அந்திப்போதில் உழைப்பின் களைப்பைப் போக்கும் அருமருந்தாகக், காயங்களைஆற்றும் ஔஷதமாக, அஸ்வின் (Aswins-Gods of Healing) என்றும் பல பெயர்களால் சூரியக் கடவுள் வணங்கப் பெற்றான். 'அஸ்வின்கள்' என்பவை சூரியக் கடவுளின் தேரை இயக்கிச் செல்கின்ற அழகுக் குதிரைகளாகவும் உருவகம் பெற்றன.

'அக்னி' அல்லது 'தீ' சூரியக் கடவுளுக்கு அடுத்த உயர் நிலையில் வைத்து வணங்கப்பட்டது. மனிதர்கள் கடவுளுக்குப்படைக்கின்ற பொருள்களைக், கடவுளிடம் கொண்டு செல்கின்ற தூதுவனாக உருவகம் பெற்றது. கடவுளுக்குப் படைப்பவைகளை வேள்வித்தீயில் போட்ட ஆரியன் 'தீ'யான கடவுளின் தூதுவன், தனது முறையீடுகளையும் கொண்டு செல்வான் என நம்பினான். அதனால்தான் தான் இறைவனுக்காகப் பலியிட்ட மிருகங்கள், தங்கம், பட்டாடைகள், தானியங்கள் ஆகிய அனைத்தையும் வேள்வித் தீயிற்கு இறையாக்கினான். வேள்வித்தீயில் இட்ட பொருள்கள் அந்தந்தக்

கடவுளரின் திருவடிகளைச் சென்றடையும் என்று நம்பியிருந்தான். வேதகால வழிபாடுகள் 'தீ' இல்லாமல் முழுமை பெறுவதில்லை. மழையைப் போலவே தீயும் மனிதனின் அன்றாடப் பணிகளுக்கு இன்றியமையாத ஒன்றாகும். எனவேதான், தீயையும் கடவுளாகவே எண்ணி வணங்கினர்.

மதுவில் தலைசிறந்த 'சோம' பானம் (Soma) கடவுளாகவே போற்றப்பட்டது. சோமபானத்தின் புத்துணர்ச்சியூட்டும் தன்மையை ஆரியர்கள் பெரிதும் விரும்பினர். இமயமலைச் சாரலில் வளர்ந்த 'சோமா' என்ற செடியின் வேரிலிருந்து தயாரிக்கப்பட்டதே சோமபானம் என்ற மதுவாகும். வேள்விகளின்போதும், போர்க்காலத்திலும் அம்மதுவைப் பருகிய ஆரியர்கள் களி நடனம் புரிந்தனர். வேள்வியின் போதும், மற்றச் சடங்குகளின் போதும் இறைவனுக்கும் சோமபானம் படைக்கப்பட்டது. இச்சடங்குகளின் போது சோமபானம் அருந்துவது சிறப்பாகக் கருதப்பட்டது.

மேலே குறிப்பிட்ட பெருங் கடவுளர்களைத் தவிர ஏராளமான சிறு கடவுளர்களும் வணங்கப்பட்டனர். 'வளி' அல்லது காற்றின் கடவுள் 'வாயு' (Vayu), புயல் கடவுள் 'மாருதி' (Maruti), இடியின் தலைவன் 'ருத்திரன்' (God of Thunder—Rudra), மழைக் கடவுள் 'பர்ஜன்யா' (Parjanya) நதிகள் 'சரஸ்வதி' (Saraswati) என்றும் பலவிதப் பெயர்களால் வணங்கப் பெற்றன.

உருவகப்படுத்த இயலாத மனித இயல்புகளையும் கடவுளர்களாக வருணிக்கின்ற தன்மையும் வேதகால ஆரியர்களுக்கு இருந்தது. 'நம்பிக்கையை' 'ஸ்ரத்தா' (Sraddah) என்றும், கோபத்தை 'மான்யு' (Manyu) என்றும் வழிபடும் கடவுள்களாக்கினர். உலக உயிர்களின் தலைவன் 'பிரஜாபதி' (Prajapathy) ஆகவும், ஆக்கசக்திகளின் தலைவன் 'விஸ்வகர்மா' (Viswakarma) ஆகவும், காக்கும் கடவுள் 'விதாத்திரி' (Vidhatri) ஆகவும் குறிப்பிடப்பட்டனர்.

''வேதகால ஆரியர்கள் தங்களின் சக்திக்கு மீறியனவாக, அறிவுக்குப் புலப்படாத தன்மையால் உள்ளத்தை வருத்துகின்ற அனைத்தையும் கண்டு அஞ்சினர். தங்கள் வாழ்வின் உயர்வு, தாழ்வுகளுக்குக் காரணியாக இருக்கக்கூடும் எனக் கருதிய எதையும் போற்றிப் புகழவும், வணங்கற்குரியதாகப் பூசனை செய்யவும் தயாராக இருந்தனர்'' என மாக்ஸ் முல்லர் என்ற பேராசிரியர் குறிப்பிடுகின்றார்.

இயற்கையின் சக்திகளுக்கு உருவமும் பெயரும் கொடுத்து வேதமுற்கால ஆரியர்கள் வணங்கினர். கோவில்களோ, கற்பக்கிரகங்களோ, பரம்பரைப் பூசாரிகளோ அக்காலத்தில் இருக்கவில்லை. ஒவ்வொரு குடும்பத் தலைவனும், தனது குடும்பத்தின் சமயச்சடங்குகளையும், வேள்விகளையும் தானே பூசாரியாக முன்னின்று நடத்தினான். அநேகமாக, கடவுளர்கள் அனைவரும் ஆண் கடவுளர்களாகவே இருந்தனர். சில பெண்கடவுள்கள் மட்டுமே வணங்கப் பெற்றனர். ஒருவன் இறந்த பின்னரும் வாழ்வு உண்டு என்பதில் வேத முற்கால ஆரியர்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர் ஒருவன் இறந்த பின்னர் 'பிதுர்லோகம்' என்ற முன்னோர்கள் வாழுமிடத்தைச் சென்று அடைவதாகவும், அங்கு யமனுலகில், ஒருவன் பூவுலகில் செய்த செயல்களுக்கேற்றவாறு தண்டனையோ, பரிசோ அளிக்கப்படுவான் என்றும் நம்பினர். வேத முற்கால ஆரியர்கள் 'மறுபிறப்பு' என்ற தத்துவத்தை நம்பவில்லை என்று கருதப்படுகின்றது. பல கடவுள்களைப் பல உருவங்களில் வணங்கினாலும் அக் கடவுள்களையும், இயக்குகின்ற தனிப்பெரும் சக்தியொன்று இருப்பதாகவும் உலகின் இயக்கத்தின் அடிப்படையே அச்சக்திதான் என்றும் நம்பினர். கடவுள் ஒருவரே; ஆனால், அவரே பல கடவுளர்களாகப் பல முனிவர்களால் சித்திரிக்கப்படுகின்றார்." (Ekam Sat - Baghuta Vedanti - Rig Veda - Mandal X-8-God is one but it is described differently by diffeıent Sages) என்று வலியுறுத்திச் சென்றனர். பல கடவுளர்கள் வணங்கப்பட்டபோதும், முதற் கடவுள் ஒருவனே என்ற ஒரேகடவுள் கொள்கை வேத முற்காலத்தில் உருவாகியிருப்பதை உணர முடிகின்றது.

**பிற்பட்ட வேதகாலம்** (Later Vedic Period)

பிற்பட்ட வேதகாலத்தில் ஆரியர்களின் சமயத்தில் குறிப்பிடத்தக்க பெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. வேத காலத்தின் முன் பகுதியில் உயர் கடவுளர்களாகச் சிறப்பிடம் பெற்றிருந்த வருணன், இந்திரன், சூரியன் போன்ற கடவுளர்கள் மதிப்பிழந்தனர். அவர்களின் உயர்ந்த இடத்தை மும்மூர்த்திகளான (திரிமூர்த்திகள்-Trimurthis) பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய கடவுளர்கள் அடைந்தனர். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய இந்த மூன்று கடமைகளும் முறையே மும்மூர்த்திகளுக்கும் உரித்தாக்கப்பட்டன. 'வேத காலத்தின் முற்பகுதியில் இயற்கை வளத்தின் (Vegetation) காரணியாகக் கருதப்பட்ட ருத்திரன் (Rudra) பின்னர் சிவபெருமான் என்றழைக்கப்

பட்டார். அதன் பின்னர்க் கடவுளர்களில் சிறந்தவன் 'மகாதேவன்' (Mahadeva) என்றும், உயிரினங்களைக் காப்பவனாகப் 'பசுபதி' (Pasupathy) என்றும், அழிக்கும் சக்தியனாக 'சங்கரன்' (Sankara) என்றும் பல பெயர்களைப் பெற்றான். சூரியக் கடவுளின் ஒரு பிரதி பிம்பமாகக் கருதப்பட்ட 'விஷ்ணு' (Vishnu) வேதகாலத்தின் முற்பகுதியில் வருணன் பெற்றிருந்த உயர் இடத்திற்கு உயர்த்தப்பட்டான். உலக இயக்கங்களுக்குக் காரணியாகவும், இப்பூவுலகைக் காக்கும் சக்தியாகவும், மக்களின் துன்பம்-துயர் துடைத்தருளும் கடவுளாகவும் வணங்கப் பெற்றான். விஷ்ணுவின் உறைவிடம் 'வைகுந்தம்' அல்லது 'பரமபதம்' (Paramapadam) என்றும், அவனுறையும் உலகில் மகிழ்வைத் தவிர துன்பத்தின் சாயலைக்கூடக் காண முடியாது என்றும் நம்பினர். அவனுறையும் வைகுந்த பதவியை அடைவதே, அவனது பக்த கோடிகளின் உயர் வேண்டுதலாகும். உலக உயிர்களின் தலைவனாகக் காட்சியளித்த 'பிரஜாபதி' (Prajapathi) பிற்பட்ட வேத காலத்தில் 'பிரம்மா', (Brahma) எனப் பெயர் பெற்றான். "வாசுதேவர்' (Vasudeva) மற்றும் 'கிருஷ்ணன்' (Krishna) போன்ற கடவுளர்கள் விஷ்ணுவின் அவதாரமாகக் கருதப்பட்டுப் பெருவாரியான மக்களால் வணங்கப்பட்டனர். 'கந்தர்வர்கள்' (Gandharvas) 'அப்சரசுகள்' (Apsaras) மற்றும் நாகக்கடவுளர் ஆகியவர் சிறு தேவதைகளாக வணங்கப்பெற்றனர். மரங்கள், ஆறுகள் போன்ற இயற்கைத் தன்மைகளில் பலவற்றையும் பிற்பட்ட வேத கால மக்களும் தொடர்ந்து வணங்கினர். மனிதனின் நல்லியல்புகளுடன் தொடர்பு கொண்ட நல்ல கடவுளர்களான, தேவதைகளை வணங்கிய பிற்பட்ட வேதகால ஆரியர்கள், கொடிய தேவதைகளைப் பற்றிய நம்பிக்கையையும் கொண்டிருந்தனர். கொடிய தேவதைகளிடமிருந்து தங்களைக் காத்துக்கொள்ள மந்திர சக்திகளை உருவாக்கினர். மந்திரங்களும், கண்கட்டும் வித்தைகளும், மாயச் சக்திகளும் மக்களிடம் ஆக்கம் பெற்றன. அதே மந்திர, மாயச் சக்திகளின் துணை கொண்டு நோய்களைக் குணப்படுத்தும் நம்பிக்கையும் இந்து சமயத்தில் வளர்ச்சியுற்றது.

பிற்பட்ட வேத காலத்தில் சடங்குகளும், வேள்விகளும் பல்கிப் பெருகின. சடங்குகள், வேள்விகள் நடத்தும் முறைகளும் மிகவும் சிக்கல் நிறைந்து, நீண்டு காணப்பட்டன. வேள்விகளின் பயன்கள் வானளாவப் புகழப்பட்டன. வேள்விகள் கடவுளின் இயக்கத்தைக் கூடக் கட்டுப்படுத்தும் வலிமை உடையவை என்ற நம்பிக்கை வளர்ந்தது. ஏராளமான, நீண்ட

சடங்குகளுடன், வேத மந்திரங்களை இடையறாது உச்சாடனம் செய்து, முறை தவறாது நடத்தப் பெறும் வேள்வி, கடவுளையும் கட்டுப்படுத்தி, மனிதன் வேண்டியதைக் கடவுளிடமிருந்து பெற்றுத் தருகின்ற சக்திமிக்கது என்ற கருத்து வளர்ந்தது. வேள்வி முறைகளில் ஒருசிறு தவறு நேர்ந்து விட்டால் கூட அத்தவறு, வேள்வி செய்பவனை அழித்து விடக்கூடும் என்றும் அச்சுறுத்தப்பட்டது. எனவே வேள்வியில் ஈடுபடுபவன் தனது சிந்தனை, மனவோட்டம் அனைத்தையும் ஒருமுகப்படுத்தி, மிகவும் கவனத்துடன் வேள்வியை நடத்த வேண்டும் என்றும் அறிவுறுத்தப்பட்டான். எனவே வேள்வி நடத்துவதில் தனித்திறமையும், பயிற்சியும் பெற்றவர்கள் வேள்வி நடத்துவதற்குத் தேவைப்பட்டனர். அத்தகு தேவைகளின்படி உயர்ந்தவர்கள் 'பிராமணர்கள்' (Brahmanas) என்றழைக்கப்பட்டனர். வேள்வி மூலம் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனின் இயக்கத்தினையே ஒரு மனிதன் கட்டுப்படுத்த இயலும். அத்தகைய வேள்விச் சடங்குகளை முறை தவறாது, சிறப்பாகச் செய்து முடிக்கும் தனிச் சிறப்புப் பெற்றிருந்த 'பிராமணன்' மனிதருள் உயர்ந்தோனாகக் கருதப்பட்டான். வேள்வி முறைகள் ஒரு கலையாகவே—அறிவியற் கலையாகவே மதிப்புப் பெற்றது. பதினேழு பிராமணர்களால் பல ஆண்டுகள் தொடர்ந்து நடத்தப்பட்ட வேள்விகளைப் பற்றிய குறிப்புகள் வேள்வியின் சிறப்பினைக் குறிப்பிடுகின்றன. குடும்பத்தில் நடத்தப் படவேண்டிய சடங்குகளைக் 'கிரஹிய சூத்திரங்களும்', (Grihya Sutras) குடும்பத் தலைவன் கடைப்பிடிக்க வேண்டிய நியதிகளைத் 'தர்ம சாஸ்திரங்களும்' (Dharma Sastras) குறிப்பிடுகின்றன. மனிதஇனத்தின் நடவடிக்கைகளை 'வர்ணாஸ்ரம தர்மம்' (Varnashrama Dharma) வலியுறுத்துகின்றது. 'வர்ண தர்மம்' (Varna Dhaima) என்பது நான்கு சாதிகளின் கடமையையும், 'ஆஸ்ரம தர்மம்' (Ashrama Dharma) என்பது, தனி மனிதனின் வாழ்க்கையில் மாணவப் பருவத்தைப் 'பிரமச்சாரி ஆஸ்ரமம்' (Brahmachari Ashrama) என்றும், குடும்பத் தலைவனாகும்போது 'கிரஹஸ்தா' (Grihastha) என்றும், குடும்ப வாழ்வை நீத்து வனத்தில்வசிப்பதை 'வனப்பிரஸ்தா' (Vanaprastha) என்றும், உலகப் பற்றையே துறந்து, பற்றற்ற நிலைக்கு உயர்வதைச் 'சந்நியாசம்' (Sanyasa) என்றும் விளக்குகின்றது. வாய்மை, கண்ணியத்துடன் கடமையாற்றும் பண்பு (Dharma) பெற்றோரை மதித்து வணங்கும் மாண்பு, மற்ற மனிதர்கள், பிற உயிரினங்கள்பால் அன்பு செலுத்துகின்ற தன்மை, கொலை, களவு, பிறன்மனை நோக்குகின்ற தன்மை

போன்ற பஞ்சமகா பாதகங்களைத் தவிர்த்து வாழுகின்ற நேர்மை, ஆகிய நற்குணங்களே நல்வாழ்க்கையின் இயல்புகளாக வலியுறுத்தப்பட்டன

வேத காலத்திய விழாக்கள், சடங்குகள், போன்றவற்றில் நம்பிக்கையிழந்து, வெறுப்படைந்துவிட்ட சில முனிவர்கள், சடங்குகள், முதலியவைகளின் முறைகளைப் பற்றியே சிந்திப்பதை விடுத்து, வேறு உயர் சிந்தனைகளில் ஈடுபட்டனர். பிறப்பு, இறப்பு, இறந்த பின்னரும் தொடரும் வாழ்க்கைப் போன்ற மனித வாழ்க்கையின் நிலைகளைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினர். முனிவர்களின் அத்தகைய சிந்தனைகளிலிருந்து, இந்தியத் தத்துவத்தின் கருப்பொருளை விளக்குகின்ற உபநிடதங்கள் (Upanishads) தோன்றின. அவை இறந்து படுகின்ற உடலையும், இறவாத தன்மை கொண்ட ஆத்மனையும் (Athman) வேறுபடுத்தி விளக்கின. ஒவ்வொரு உடலிலும், ஓர் ஆத்மா குடி கொண்டிருப்பதாகவும், இந்த ஆத்மாவானது உலகம் முழுவதிலும் பரவி நிலைத்து நிற்கின்றது என்றும் உபநிடதங்கள் குறிப்பிட்டன. உடலில் குடிகொண்டிருக்கும் உருவமற்ற 'ஆத்மா'வை 'ஜீவாத்மா' (Jivathma) எனக் குறிப்பிட்டன. அந்த ஜீவாத்மா, எண்ணற்ற உடல்களில் நுழைந்து, பிறப்பு, இறப்பு என்ற பிறவிக் கடலில் மாறி மாறி நீந்துகின்றது. ஒவ்வொரு பிறவியிலும் செய்கின்ற வினைகளுக்கு ஏற்ப (Karmas) உயர்ந்தோர், தாழ்ந்தோ பிறவியெடுக்கின்றன. நல்வினைப் பயன்களினால் உயர் பிறவியாக உருவெடுத்த 'ஆத்மா' பிரம்மன் (Brahman) எனப்படும் உலக முழுவதும் பரவியிருக்கின்ற தெய்வத் தன்மையை அடைகின்ற வழிகளில் செயல்ஆற்றவேண்டும். கடல் நீரில் உப்பு கலந்திருப்பதுபோல நற்செய்கையால், நன்னெறியால், உயர்ந்த, பயிற்சிகளால், இந்த ஆத்மாவானது பிரம்மனுடன் இரண்டறக் கலக்க இயலும். இந்த 'ஆத்மா' பிரம்மனுடன் கலந்துவிடுவதை மோட்சம் (Moksha) அல்லது பிறவியெனும் பெருங் கடலினின்றும் விடுபடுகின்ற தன்மை எனக் கூறப்படுகின்றது. அவரவர் வினைப் பயன்களுக்கேற்ப (Karma theory) மறு பிறவியெடுப்பர். ஆத்மா பல உடல்களில் அடைக்கலம் புகுவது (transmigration of souls) மறு பிறவி (Rebirth), மோட்சம் (Moksha) போன்ற பல புதிய இந்து தத்துவங்களை உபநிடதங்கள் உருவாக்கி விளக்கின. புத்த, ஜைன சமயங்களும் இந்தத் தத்துவங்களை ஏற்றுக் கொண்டன. 'துறவு, நிலையை'ப் (Asceticism) பிற்பட்ட வேதகால

மக்கள் மிகவும் போற்றினர். நிலையற்ற இவ்வுலக வாழ்க்கையையும், அவ்வாழ்க்கை அளிக்கின்ற இன்பத்தையும் முழுக்க முழுக்க உதறிவிட்டு, பற்றற்ற துறவி நிலையை ஏற்றுக் கொண்டவன்தான் நிலையான இன்பமளிக்கும் 'வீடு பேறு' அல்லது 'பிரம்மனை' அடைய இயலும் (சத் - சித் - ஆனந்த நிலை (Sat-chit-Ananda) என நம்பினர்.

**வீர காவியங்களின் காலம்** (Epic Period)

இராமாயணம், மகாபாரதம் தோன்றிய காலத்தை வீர காவியங்களின் காலம் எனக் குறிப்பிடலாம். இக்காலத்தில் மனிதன் உய்விக்க வழிகாட்டும் தன்மை பெற்றுள்ள கடவுளர்கள், மனித உலகிலே தோன்றிவிட்ட பிணிகளையும், ஆபத்துக்களையும் களைந்து அருள்பாலிக்க மனித உருவில் தோன்றினர் என நம்பினர் (Avatars). அந்த அவதாரங்களின் போது உலகைப் பலவிதங்களில் துன்புறுத்தும் தீயசக்திகளின் மொத்த உருவகமான 'அசுரர்களை' (Rakshasas) அழித்து மானிடர்களைக் காத்தருளினர். காக்கும் கடவுளாக உருவகிக்கப் பட்ட மகாவிஷ்ணு பத்துமுறை அவதாரங்கள் எடுத்து உலகை உய்விக்கச் செய்தார் என நம்பப்படுகின்றது. தீய சக்திகளை அழித்து-நேர்மையானவற்றைக் காத்தலே இந்த அவதாரங்களின் நோக்கமாகும் (Dushta Nigraha and Sishta Paripalana - Punishment of the wicked and Preservation of the Righteous). மீன் உருவம், (மச்சாவதாரம் - Matsyavatar) ஆமை உருவம், (கூர்மாவதாரம் - Kurmavatar) சிங்கத்தின் தலையுடன் கூடிய மனித உருவம், (நரசிம்மாவதாரம் - Narasimhavatar) போன்ற பத்து உருவங்களில் விஷ்ணு தோன்றி, தீய சக்திகளை அழித்தார். மகாபாரத காலத்தில் விஷ்ணு கிருஷ்ணனாக அவதாரமெடுத்தார். நேர்மையின் உருவகமாகக் கருதப்படுகின்ற பாண்டவர்களின் நண்பனாக, நல்லாசிரியனாக, பண்பிலே தெய்வமாக, கடமையிலே சேவகனாக நின்று காத்தருளினான். தீய சக்திகளின் உருவகமான கௌரவர்களை அழித்து, நீதியை நிலைநாட்டச் செய்தான். போரின்போது அர்ச்சுனன் மனந்தளர்ந்த போது, கீதையின் நாயகனாகத் தோன்றி பகவத் கீதையை உபதேசித்தான். இந்து சமயத்தின் கருப்பொருளை விளக்கும் புனித நூலாகப் பகவத்கீதை கருதப் படுகின்றது. இறைவனின் திருவடியை அடைய, கண்ணனின் பகவத் கீதை நான்கு வழிகளை எடுத்துக் காட்டுகின்றது.

1. முடிவுகளைப் பற்றிச் சிந்திக்காமல், சமய நூல்கள் காட்டுகின்ற நெறிநின்று, 'என் கடன் பணி செய்து கிடப்பதே'

என்று நேர்மையான கடமையுணர்வுடன் செயலாற்றுவது மோட்சத்தை அடையும் எளிய வழியாகும். சாதாரண மக்கள் பிரதிபலனை எதிர்பார்க்காமல் செயலாற்றுவது 'நிஷ்காமிய கர்மா' (Nishkamya Karma) எனப்படும். இக்கருத்தினைச் செயல்படுத்தும்போது 'கர்மயோகம்' (Karma yoga) எனப் படுகின்றது. 2. முழுக்க முழுக்க இறைவனை நம்பி, இறைவன் புகழ்பாடி, துதித்து, இறைவனடியை அடைவது 'பக்தி வழியாகும்' (Bhakti yoga - path of Devotion) 3. சில கடுமையான பயிற்சிகள் மூலம், உடலையும் உள்ளத்தையும் கட்டுப்படுத்தி, நெறிநின்று ஒழுகி இறைவன் திருவடியை அடைவது 'இராஜயோகம்' (Raja yoga - the path of discipline) எனப்படும். 4. இறுதியாக அறிவு வழியில் இறைவனை அடைதல் 'ஞானமார்க்கம்' (Gnanamarga) ஆகும். ஆத்மா, பரமாத்மா போன்ற இயல்புகளின் விளக்கங்களை ஆய்ந்து, அவைகளுக்கிடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைச் சிந்தித்து, ஆத்மா பரமாத்மாவுடன் இரண்டறக் கலக்கும் வழிகளைக் காண்பது. இவ்வழிமூலம் இறைவனைக் காணமுடியும் எனப், பகவத் கீதை உரைக்கின்றது.

இராமாயண காலத்தில் மானிடர்களில் சிறந்தோனாக, அரசர்களுக்கரசனாக, பண்பிலே தெய்வமாக, கருதப்படுகின்ற மன்னன் இராமனாக விஷ்ணு உருவெடுத்தார். இராமனாக உருவெடுத்த விஷ்ணு தீயசக்தியாக விளங்கிய இலங்கேசுவரனை அழித்தார். இராமன் மனிதருள் மாணிக்கமாக, நற்குணங்கள் அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்று, மானிட தெய்வமாகவே காட்சியளித்தான். இராமனின் குருவாக அமைந்த வசிஷ்ட முனிவர், அவருக்கு ஒருவன் கற்கவேண்டிய அனைத்தையும் கற்றுக் கொடுத்தார். அவர் போதித்த உண்மைகள் 'வாசிஷ்டம்' (Vasishtam) என அழைக்கப் படுகின்றது. பகவத் கீதையைப் போலவே 'வாசிஷ்டமும்' சிறப்புப் பெற்றதாகும்.

**இந்து சமயத்தின் வளர்ச்சி** (Growth of Hinduism)

இந்துக்கள் இராமனையும், கிருஷ்ணனையும், கடவுளர்களாகவே ஏற்றுக் கொண்டனர். இந்தியாவெங்கிலும் இவ்விரு தெய்வங்களுக்கும் கோவில்கள் கட்டி வழிபட்டனர். இராமனின் சேவகனான 'அனுமனும்' (Hanuman) கடவுளாகவே கருதப்பட்டான். இதே போன்று ஏராளமான கடவுள்கள் இந்தியரின் வழிபாட்டிற்குரியவைகளாகத் தோன்றின. விஷ்ணுவின் மனைவி 'இலக்குமி' 'திருமகள்' எனச்

செல்வத்தின் நாயகியாக வணங்கப்பட்டாள். அஷ்ட இலக்குமி எனச் (Ashta Lakshmi) செல்வத்தின் எட்டு நிலைகளாக திருமகள் வணங்கப்பட்டாள். பிரம்மாவின் மனைவி 'கல்விக் கடவுளாக'ச் 'சரசுவதி' (Saraswathi) என உருவகம் பெற்றாள். கலைகளின் தலைவியாகக் 'கலைமகள்' என்றும் வழங்கப்பட்டாள். பக்தர்களைக் காக்கும் கடவுளாகச் சிவபெருமானின் மனைவியார் அமைந்தார். கடுங்கோபம் கொண்டு தீச்சக்திகளை அழிக்கும்போது 'துர்க்கை'யாக—(Durga) காளியாக (Kali) உருவெடுத்தாள். வங்காள மக்கள் காளியாக, துர்க்கையாகப் போற்றி சக்தியை வழிபடுகின்றனர். உலக இயக்கத்தின் ஆதி சக்தியாக (Primordial Energy) சிவபெருமானின் துணைவியாக—அன்னை மகா சக்தியாக (Shakti - Mother Goddess) வணங்கப்படுகிறாள். தந்திரச் சடங்குகள் மூலமாக இறைவழிபாடு செய்வோர் (Tantric worship) காளியை இளநங்கை உருவத்தில் வணங்குகின்றனர். தந்திர முறை வழிபாட்டில் காம உணர்ச்சி ஆன்மீக சக்தியாக (Spiritual Energy) மிளிருகிறது என்பதைக் குறிக்கும் வகையில் மந்திர, வழிபாட்டுச் சடங்குகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. சிவபெருமானின் துணைவியான அன்னை மகாசக்தி 'உமா' என்றும் அழைக்கப்படுவாள். இந்த அன்னையின் இரு புதல்வர்களான விநாயகரும் (Vinayagar) ஸ்கந்தா (Skanda) என்ற முருகனும் இந்துக்களால் பெரிதும் வணங்கப்படுகின்ற பிள்ளைக் கடவுள்களாவர். ஸ்கந்தன் ஆறுமுகங்கள் கொண்ட கார்த்திகேயனாகவும், தமிழர்களால் 'முருகன்' என்றும் வணங்கப்படுகிறான். 'அழகு, இளமை, தெய்வீகம், அருள் மணம்' ஆகிய அனைத்துத் தன்மைகளின் மொத்த உருவமாக, சேவற் கொடியேந்தி, தோகை மயிலை வாகனமாகக்கொண்டு, கண்டவர் உள்ளம் களிப்படையக் குன்றுதோராடிவரும் திருமுருகப் பெருமான் தமிழர் கடவுள் எனப் போற்றப்படுகிறான். 'படைகொடு சூரரை வதைத்து, தேவர்குலம் காத்த குமரன்' எனக் கந்தபுராணம் முருகன் புகழைப்பாடும். யானை முகம் கொண்ட விநாயகன் முழுமுதற் கடவுளென அனைவராலும் வணங்கப் பெறுபவன். அறிவுக் கடவுளாகவும், தீய சக்திகளின் எதிரியாகவும் இந்துக்களிடையே உயர்வு பெறுகிறான். இதன் காரணமாகவே எந்தக் காரியத்தையும் தொடங்கும்போது, முதலில் விநாயகப் பெருமானைத் துதித்துவிட்டு ஆரம்பிக்கின்ற நம்பிக்கை இந்துக்களிடையே இருந்து வருகின்றது. தடைகளை உடைப்பவன் என்ற பொருளில் விக்னேசுவரன் (Vigneswara) என்று பெயர் பெறுகிறான்.

மேலே வகைப்படுத்தியிருக்கும் ஒவ்வொரு கடவுளையும் வணங்கும் முறை, சடங்குகள் தனித்தனியாக அமைந்துள்ளன. வழிபாட்டு முறையில் ஏற்பட்ட இந்த மாறுதல்கள் நாளடைவில் இந்து சமுதாயப் பிரிவுகளை ஏற்படுத்தின. சிவனை வழிபடுவோர் 'சைவர்கள்' (Saivaites) எனப் பெயர் பெற்றனர். காஷ்மீரில் சைவர்கள் மிகுந்துள்ளனர். ஊழிக்காலத்தில் ஆனந்த தாண்டவமாடிய சிவனை, 'நடராஜர்' (Nataraja) என தமிழக மக்கள் கோயில் கொண்டாடுகின்றனர். அறுபத்து மூன்று சைவ நாயன்மார்களின் பக்தி வழிபாட்டினை பெரிய புராணம் (Periyapuranam) என்ற தமிழ் இலக்கியம் புகழ்ந்துரைக்கின்றது. வடமொழி நூலான சைவ ஆகமங்கள், (Saivaite Agamas) சிவன் கோயில் அமைப்பு முறை, சிவலிங்கத்தை நிறுவும் முறைகள், வழிபடும் வழிகள் அனைத்தையும் விளக்குகின்றது. பகவத் கீதையைப் போலவே சைவ நூல்களும் இறைவன் திருவடியை அடைய நான்கு வழிகளை வகுத்திருக்கின்றன. 1. உடல் உழைப்பால் (சரியை - Sariyai) 2. செயல்களால் (கிரியை - Kiriyai) 3. மெய்வருத்தத்தால் (யோகம் Yoga) 4. அறிவாற்றலால் (ஞானம் - Gnanam) என்பவையே சைவ நூல்கள் பகரும் நான்கு வழிகளாகும். இவ்வழிகளில் கிரியை அல்லது பக்தி வழியே சிறந்ததும், எளிமையானதும் ஆகும் எனக் கருதப்படுகின்றது. கபாலிகர்களும் (Kapalikas), பைரவர்களும் (Bairavas) மெய்வருத்தி, துறவுபூண்டு, பற்றற்று நிற்கின்ற நிலையே சாலச் சிறந்ததெனு நம்புகின்றனர். சிவனைப் 'பதி' (Pathi) என்றும், ஆன்மாவைப் 'பசு' (Pasu) என்றும் குறிப்பிடுகின்றனர். ஆன்மா, 'பாசம்' என்ற உலகியல் தளைகளைத் தகர்த்து விடுபட்டு சிவனடி சேரும் போது எல்லையற்ற புனித இன்பம் பெறுகின்றது என்பது சைவ சித்தாந்தம் ஆகும்.

வைணவர்கள் என்ற தனிப்பிரிவினர் விஷ்ணுவை வணங்குவோர் ஆகும். தமிழகத்தைச் சேர்ந்த ஸ்ரீ இராமானுஜர் (Sri Ramanuja) என்பவர் வைணவ வழிபாட்டைப் பரப்பினார். வைணவ வழிபாட்டு முறைகளை முறைப்படுத்தி, வைணவர்கள் அனைவரையும் ஒன்றுபடுத்தி, வைணவத்தைத் தமிழகத்தில் தழைக்கச் செய்தவர் இராமானுஜரே ஆவார். ஸ்ரீரங்கம் எனப்படுகின்ற திருவரங்கம் வைணவ வழிபாட்டுத் தலைமையிடமாகக் காட்சியளிக்கின்றது. இராமானுஜருக்கு முன்னரே 'ஆழ்வார்கள்' (Alwars) என்ற பன்னிரு வைணவ அடியார்கள் தோன்றி,

பக்திச் சுவை மிகுந்த தீந்தமிழ்ப் பாடல்களால் வைணவத்தைச் செழிக்கச் செய்தனர். பல்லவர்கள் காலத்தில் செழிக்கத் தொடங்கிய வைணவம் சோழப்பேரரசு காலத்தில் உன்னத நிலையடைந்தது. முகமதியர் ஆட்சிக் காலத்தில் இராமானந்தர் (Ramananda) போன்றோர் 'இராமன்' வழிபாட்டினையும், சைதன்யர் (Chaitanya) மீராபாய் (Mirabai) போன்றோர் 'கிருஷ்ணன்' வழிபாட்டையும் ஏற்படுத்தினர். மராட்டியத்தில் (Maharashtra) 'விட்டோபா' (Vittoba) என்ற பெயரில் விஷ்ணு வழிபாடு சிறந்தோங்கியது. இவ்வாறு இந்தியா முழுவதும் வெவ்வேறு பெயர்களில் வைணவம் தழைத்தது. ஆனாலும் கிருஷ்ணனை வழிபடுவோர் இன உணர்வு பற்றிக் கொண்டிருந்த கருத்துகளை வைணவத்தின் வளர்ச்சியைச் சிறிது பாதித்தது. ஆரம்பத்தில் வைணவர் அனைவரும் ஒரு சாதியினர்; ஒரே கடவுளை வணங்குபவர்கள் என்ற கருத்து, காலம் செல்லச் செல்ல மறைந்தது. வைணவ சமயத்திலேயே, மாறுபட்ட பலவகை வழிபாட்டு முறைகளும், உட்பிரிவுகளும் தோன்றின.

பிற்காலத்தில் சைவமும், வைணவமும் பல்வேறு சிறுசிறு பிரிவுகளாகப் பிரிந்தன. வைணவர்களில் வடகலை (North oriented), தென்கலை (South oriented) என்றும், சைவர்களில் கர்நாடகத்தில் வீரசைவர்கள் என்றும், தமிழகத்தில் சிதம்பரத்தில் ஆதிசைவர்கள் (Adi Saivites) என்றும் உட்பிரிவுகள் தோன்றின. குமரன் அல்லது சுப்பிரமணியக் கடவுளை வணங்குவோர் 'கௌமாரம்' (Kaumaran) என அழைத்துக் கொண்டனர். கணேசர் அல்லது விக்னேசுவரரைத் தெய்வமாகக் கொண்டவர்கள் 'கணாதிபத்யம்' (Ganathipathyam) என்றும், அன்னை . பராசக்தியை வணங்குவோர் 'சாக்தம்' (Saktham) என்றும் சூரியனை வணங்குவோர் 'சௌரம்' என்றும் பல பிரிவுகளாகப் பிரிந்தனர். இவ்வாறாக இந்து மதத்தில் ஆறு பெரும் உட்பிரிவுகள் தோன்றின. அவையாவன சைவம், வைணவம், சாக்தம், கௌமாரம், கணாதிபத்யம், சௌரம் ஆகியவையாகும்.

மூன்று வகையான சிறப்புத் தத்துவங்கள் இந்துமதத்தில் காணப்படுகின்றன. ஆதிசங்கரர் அருளிய 'அத்வைதம்' (Advaitha of Sankara) இராமானுஜர் அருளிய 'விசிஷ்டாத்வைதம்' (Visishtadvaitha) மற்றும் மத்வாச்சாரியார் இயற்றிய 'துவைதம்' (Dwaitha) ஆகிய இம்மூன்று உயர்

தத்துவங்களும் இந்து சமயத்தில் உள்ளன. ஒரே இறைவன் (Monism) என்ற கொள்கையை ஆதிசங்கரரின் அத்வைதம் வலியுறுத்தியது. உலகம், மும்மூர்த்திகள், அவர்களால் படைக்கப்பட்ட உயிரினங்கள் ஆகிய அனைத்தும் வேறு வேறல்ல. 'பிரம்மன்' (Brahman) என்ற ஒரே கருப்பொருளின் மாறுபட்ட வடிவங்களே மாறுபட்ட வடிவங்களில் உள்ளது. அனைத்தும் வெறுந் தோற்றமே. அத்தனையும் 'பிரம்மன்' என்ற ஒரே இறைவனிடம் அடக்கமாகின்றன என்பது சங்கரர் அருளிய அத்வைதம் வலியுறுத்தும் உயர் தத்துவமாகும். ஆத்மாவும் (Individual Soul) பரப்பிரம்மமும் (Parabrahmam) வெவ்வேறானவை. 'பரப்பிரம்மம்' என்பது உலக சக்திகளின் பிறப்பிடமாகும். (Cosmic Soul) சீரிய பக்தி வழியில் ஆத்மா செயல்பட்டால் 'வைகுந்தம்' அல்லது இறைவன் திருவடியை அடைந்து வீடுபேறடைய முடியும். வீடுபேறடைந்த ஆத்மா, இறைவனுடன் ஐக்கியமாகாமல் தனித்தே, இருக்கும் என்பது இராமானுஜரின் விசிஷ்டாத்வைத தத்துவமாகும். மத்துவாச்சாரியார் ஆதிசங்கரரின் 'ஒரே இறைவன்' கொள்கையை மறுத்தார். இறைவன் அல்லது பரமாத்மா, தனிமனிதனின் உயிர் அல்லது ஆத்மா, ஜடப்பொருள்கள் (Matter) ஆகிய இம்மூன்றும் தனித்தன்மையுடையவை. விஷ்ணுவின் இறையருள் ஒன்றுதான் ஆத்மாவைக் காப்பாற்றும் ஒப்பற்ற சக்தி. நல்வழி, நற்செய்கை, பக்தி மூலம் ஆத்மா இறையருளைப் பெற இயலும். தீய நடத்தையுடைய ஆத்மா இறைவனால் தண்டிக்கப்படும் என்பது மத்துவாச்சாரியாரின் துவைத தத்துவமாகும்.

இதுபோன்ற எண்ணிலடங்கா உட்பிரிவுகள் இந்து சமயத்தில் காணப்பட்டபோதிலும், அத்தனைப் பிரிவுகளிடையேயும் அடிப்படை ஒற்றுமையைக் காண இயலும். ஏராளமான கடவுளர்கள் வணங்கப்பட்ட போதிலும் அந்தக் கடவுளர்களுக்கிடையேயும் உறவு முறை குறிப்பிடப்பட்டது. அதனால் ஒரு கடவுளை வணங்குகின்றவன் ஏனைய கடவுளர்களை மறுப்பதில்லை. தான் வணங்கும் கடவுளின் உறவினர் என்ற முறையில் மற்றக் கடவுளர்களையும் ஏற்று, வழிபடுகின்றான். கடவுள்கள் வெவ்வேறு பெயர்களில் இருந்தாலும், அவையனைத்தும் ஒரே சக்தி, அல்லது ஒரே இறைவனாகிய பரப்பிரம்மத்தின் மாறுபட்ட அம்சங்களாகும் என்ற தத்துவத்தையும் இந்துக்கள் உணர்ந்திருந்தனர். பல்வேறு வழிகளில் செல்லுகின்ற, பல்வேறு பெயர்களால் குறிப்பிடப்

படுகின்ற நதிகள் அனைத்தும் கடலில் கலந்து, ஒரே நிலையைப் பெறுவது போன்று கடவுளுக்கு வெவ்வேறு பெயர்களும், மாறுபட்ட உருவங்களும், வழிபாட்டு முறைகளும் காணப்பட்டிருந்தாலும் அவையனைத்தும் ஒரே முழு முதல் கடவுள் அல்லது பரப்பிரம்மத்தினிடம் ஐக்கியமாகின்றன என்ற உண்மையைப் பகவத்கீதை, வேதங்கள் ஆகிய அனைத்தும் வலியுறுத்துகின்றன. திருமணம், மற்றும், இறப்பு போன்ற காலங்களில் இந்துக்கள் அனைவரும் ஏறத்தாழ ஒரே முறையான சடங்குகளைச் செய்கின்றனர். முன்னோர்களின் ஆத்மசாந்திக்காக நடத்தப்படும் 'ஸ்ரத்தா' (Sradda) என்ற சடங்கை ஒவ்வொரு இந்துவும் கண்டிப்பாகச் செய்தே ஆக வேண்டும். வினைப்பயன், (Karma Theory), மறுபிறப்பு (Rebirth) மோட்சம் அல்லது வீடுபேறு (Moksha) ஆகிய இந்து தத்துவங்களை இந்துக்கள் அனைவரும் நம்புகின்றனர். அதுபோலவே சொர்க்கம், நரகம் என்ற தத்துவங்களிலும் நம்பிக்கைக் கொண்டுள்ளனர். கங்கை, போன்ற நதிகளும், காசி, இராமேசுவரம் போன்ற தலங்களும் இந்துக்கள் அனைவராலும் புனிதத்தன்மை மிக்கனவாக ஏற்றுக் கொள்ளப்பட்டவை. சில புனிதத் தலங்களும், தீபாவளி, நவராத்திரி போன்ற திருவிழாக்களும், இந்துக்கள் அனைவருக்கும் பொதுவானவை. இராமாயணம், மகாபாரதம் போன்ற வீரகாவியங்களும், பதினெட்டுப் புராணங்களும் இந்து சமுதாயத்தின் பொது சொத்து. இத்தகு சமய இலக்கியங்களிலிருந்து பாகவதர்கள் இலக்கியப் பேருரை நிகழ்த்தி, மக்களிடையே பக்தியை வளர்ப்பதும் சாதாரண நிகழ்ச்சிகளாகும். குறைகள் மிகுந்திருப்பினும் 'வர்ணாசிரம தர்மத்தை' இந்துக்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

இந்தியாவிலுள்ள இந்துக்கள் அனைவரும் ஒரே மாதிரியான அடிப்படைக் கொள்கைகளைக் கொண்டிருக்கின்றனர். 'தர்மம்' (Dharma) 'அர்த்தம்' (Artha) 'காமம்' (Kamam) மோட்சம் (Moksha) ஆகிய நான்கு கொள்கைகளிலும் இந்துக்கள் நம்பிக்கை வைத்துள்ளனர். 1. ஒவ்வொரு இந்துவும் தர்மசாஸ்திரங்கள் கூறுகின்ற நெறிமுறைகளைக் கடைப்பிடித்தொழுக வேண்டும் சாதிவேறுபாடுகள் இருப்பினும், சமுதாயத் தடைகள் (Taboos) காணப்பட்டாலும் சமய நூல்கள் வகுத்துத்தந்த பண்பியல் கோட்பாடுகளின்படி இந்து சமுதாயம் செயல்பட்டது. விருந்தோம்பல் நேர்மை, தூய்மை, தாளாண்மை, பொறுமை, கற்புநெறி, மன்னிக்கும் தன்மை, கனிவு, அன்பு, பலன் எதிர்நோக்காது

செயலாற்றும் தன்மை ஆகிய நற்பண்புகளை, இந்துப் பண்பியல் சாஸ்திரங்கள் வலியுறுத்துகின்றன. பேராசை, பொறாமை போன்றவற்றைத் தவிர்த்தல், 2. நேர்வழியில் செல்வம் சேர்த்துச் சமுதாய உயர்வு பெறுவது (Artha) அர்த்தம் என்னும் இரண்டாவது கொள்கையாகும். 'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்ற சொல்லுக் கேற்ப, பொருள் இவ்வுலக வாழ்விற்கு இன்றியமையாதது. சமுதாய மேன்மை பெற உதவுவது, நேர்மையான வழியில் பொருள் சேர்ப்பதை அறிவுறுத்துவது 'அர்த்தம்' (Artha) என்ற தத்துவமாகும். 3. சமுதாய நியதிகளுக்குட்பட்டு மனிதன் தனது காமவேட்கையைத் தணித்துக்கொள்வது (Kama) மூன்றாவது கொள்கையாகும். தாளாண்மையை மேற்கொண்டு, தூயமுறையில் வாழ்ந்து, சமுதாயத்தினருக்கு உதவும் வகையில் குடும்ப வாழ்வை மேற்கொண்டவர்கள் நடக்கவேண்டும் எனச் சாஸ்திரங்கள் கூறின. இந்து சமயம் துறவு வாழ்க்கையைப் போற்றினாலும் குடும்ப வாழ்வையும் ஆதரித்திருக்கின்றது. 4. வீடுபேற்றை (Moksha) அடைவதே ஒவ்வொரு இந்துவின் குறிக்கோளாக இருக்கும். அவ்வாறு வீடுபேறு அடைய வேண்டுமானால் உலகியல் ஆசையையும், பாசங்களையும் துறக்க வேண்டும்; குடும்பவாழ்வில் ஈடுபட்டவன், மூப்பெய்திய பின்னர் உலகியலைத் துறப்பது எளிது; அவ்வாறு மூப்பெய்திய பின்னர், பலனை எதிர்நோக்காது பணிசெய்வதன் மூலமோ (Nishkamya Karma) அல்லது பக்தி, யோகம், மற்றும் ஞான வழியைப் பின்பற்றியோ வீடுபேறடைய முயற்சிக்கலாம். இந்து என்று தம்மைக் கூறிக்கொள்வதில் பெருமையடைகின்ற ஒவ்வொருவரும் 'புருஷார்த்தம்' (Purusharthas) என்ற இத்தகு நான்கு கொள்கைகளையும் தவறாது பின்பற்ற வேண்டுமெனச் சாஸ்திரங்கள் வலியுறுத்துகின்றன. கிருஸ்துவம், இஸ்லாமியம், மற்றும் ஏனைய சமயங்கள் தோற்றுவித்ததைப்போல எந்த ஒருவரும், தனி நபராலோ தெய்வ சக்தியாலோ அல்லது மனிதனாலோ இந்துசமயம் தோற்றுவிக்கப்படவில்லை; எனவே, இந்து சமயக் கொள்கைகளும் கோட்பாடுகளும் வரையறை செய்யப்படவில்லை. எனவே, தமது விருப்பம் போல, சமயக் கோட்பாடுகளை மாற்றியும், திருத்தியும், பின்பற்றுகின்ற தனியுரிமை இந்துக்களுக்கு உண்டு. இருப்பினும் இந்து சமயத்தின் தலையாய கோட்பாடான 'வீடு பேறடைவது' என்ற கொள்கையை இந்துக்கள் அனைவரும் அப்படியே ஏற்றுக் கொள்கின்றனர்.

## புத்த சமயம் (Buddhism)

தற்காலத்தில் புத்தமதமானது இஸ்லாம், கிறிஸ்துவும் போன்ற பெரும் உலகமதமாகத் திகழ்கின்றது. கிழக்கு, தென்கிழக்கு ஆசிய நாடுகளான ஜப்பான், சீனா, பர்மா, இந்தோனேசியா போன்ற நாடுகளில் பல இலட்சக்கணக்கான மக்கள் இம்மதத்தைப் பின்பற்றுகிறார்கள். ஆனால், இச்சமயம் தோன்றியது, தோன்றிவளர்ந்தது இந்தியாவில். புத்த சமயம் சமணத்துடன் இணையாகத் தோன்றிய சமயமே. இந்து மதத்திலிருந்த சில கண்மூடித்தனமான வழக்கங்களைக் களையத் தோன்றிய ஒரு சீர்த்திருத்த இயக்கமே புத்த சமயமும், சமணசமயமும். இந்துச் சமுதாயத்தில் ஒரு சாதாரண மனிதனுக்கு, வேதங்கள் மற்றும் சமயநெறி நூல்களில் கூறும் சடங்குகளும், சம்பிரதாயங்




படம் 8.

கி. மு. ஆறாம் நூற்றாண்டில் இந்தியா

களும் அப்பாற்பட்டே இருந்தன. மனித இனத்திற்கு மிகவும் தேவையான விலங்குகளான ஆடு, பசு, காளை மாடு போன்றவற்றை இந்துக் கடவுளர்களுக்கு பலியிடல், இளகியமனம்படைத்த இந்துக்களாலேயே வெறுக்கப்பட்டது. மேலும் உபநிடதங்களில் கூறப்படும் கருத்துகள் ஒரு

சாதாரண இந்துவால் புரிந்து கொள்ளவும் இயலவில்லை. மக்களுக்கு எளிதான ஓர் இடைப்பட்ட வழியே தேவைப் பட்டது. அவ்வழியை நல்கியதே புத்தசமயம். இந்து சமயத்தைப் போன்றல்லாமல் செயலாக்க மிகவும் எளிதாக இருந்தது. மேலும் இச்சமயம் சாதி குலத்திற்கு அப்பால் நின்று, ஆண் பெண் இருசாரார்களுக்கும் உயர்வு தாழ் வின்றிச் சமமாகவே விளங்கியது. எனவே கி.மு. ஆறாம் நூற்றாண்டில் இந்திய மக்களின் ஒரு குறிப்பிட்ட தேவையை நிறைவு செய்யவே இச்சமயம் தோன்றியது.

## கௌதம புத்தர்

மகாவீரரின் காலத்தே வாழ்ந்த கௌதம புத்தர் என் பவரே புத்தசமயத்தைத் தோற்றுவித்தவர். இருப்பினும் வழக்காற்றில் (Tradition) கோனகமுனி (Konakamuni) போன்ற பல முந்திய புத்தர்கள் இருந்ததாகக் கருதப்படு கின்றது. நேபாள நாட்டில், கபிலவஸ்துவின் அரசனான சாக் கியத் தலைவன் சுத்தோதனரின் மகனே கௌதம புத்தர். கி.மு. 567-ல் கௌதமரை இவ்வுலகிற்கு நல்கிய தாய் மாயாதேவி, கௌதம புத்தர் பிறந்த ஏழாம் நாள் தன் இன்னுயிரை நீத்தார். மாயாதேவி கருவுற்றிருந்தபோதே ஒரு விநோதமான கனவைக் கண்டார். அக்கனவில், மாயா தேவியை இமயத்திலிருக்கும் ஒரு புனித ஏரிக்கு அழைத்துச் செல்வது போன்றும், அங்குப் புனிதத் தேவதைகள் அவரை நீராட்டுதல் போலவும், பின்னர் ஒரு வெள்ளை யானை தாமரை மலருடன் அவர் அருகில் வருவது போன்றும் கண்டார். மாயாதேவிக்குப் பிறக்கும் மகன் இம்மண் ணுலகிற்கே மன்னராக விளங்குவார் அல்லது இவ்வுலக மக்களின் ஆசானாகத் திகழ்வார் என்றனர் சோதிட சாத் திர வல்லுநர்கள். எனவே சுத்தோதனர் தனது மகன் மண்ணுலக மன்னனாக வேண்டும் என்ற எண்ணத்திலேயே வளர்த்தார். தம்மகன் ஞானியாவதை அவர் சிறிதும் விரும்பவில்லை. இளவரசனின் வாழ்க்கைக்கு வேண்டிய சுகபோகங்களைக் குறைவின்றிக்கொடுத்து வளர்த்தார். யசோதரை என்னும் அழகு, அறிவு, பண்பு நலன் பொருந்திய நங்கையான இளவரசியைத் தனது மகனுக்கு மணமுடித்து வைத்தார். இளவரசி யசோதராவும் மன்னர் குலம் விளங்க இராகுலன் என்னும் அழகிய ஆண் மகவை ஈன்றெடுத்தாள். இருவருக்கும் வாழ்க்கையென்பது மகிழ்ச்சி நிறைந்த இன்பப்

பூஞ்சோலையாகவே இனித்தது. ஆனால், விதி தனது விளையாட்டை என்றுமே வரையறைப்படுத்தியதோ அல்லது நிறுத்தியதோ இல்லை. ஒரு நாள் யதேச்சையாகப் புத்தர் ஒரு காட்சியைக் கண்டார். வயதான மனிதர் ஒருவர் தளர்ந்த நடையுடன் தென்பட்டார். பின்னர் பிணியால் பீடிக்கப் பெற்ற வயதான மனிதன் குளிர் காய்ச்சலில் நடுங்கியபடி தனது உடலெங்கும் கொப்பளங்களுடன் தள்ளாடி வந்தான். பின்னர் ஒரு பிணத்தை சிலர் வாடிய முகத்துடன் பின் தொடர்வதையும் அவர்களைத் தொடர்ந்து அமைதிக் கடலென இன்முகத்துடன் ஒரு துறவியும்வந்தார். இக்காட்சிகளைப் புத்தர் கண்டார். முதல் மூவரின் காட்சியும் புத்தரின் உள்ளத்தே ஒரு புரட்சியை ஏற்படுத்தியது. மேலும் புத்தருக்கு உலக வாழ்க்கையின் வெறுமையையும் இன்பங்களின் நிலையற்ற தன்மையையும் விளக்கி, இது துன்பம் சூழ்ந்த உலகென்பதை உண்மை என்பதையும் அவர் கண்ட மூன்று காட்சிகளும் அறிவுறுத்தின. எதையும் துருவிப் பார்க்கும் இயற்குணம் கொண்ட புத்தரின் மனம் உலகின் முடிவிலாத் துன்பங்களுக்குக் காரணம் என்ன என ஆராயத் துவங்கியது. அமைதியின் உருவாகத் தோன்றிய துறவியின் முகமே இவரைப் பெரிதும் கவர்ந்தது. எனவே நடு இரவில் தான் வாழ்ந்த ஆடம்பர எழில் கொஞ்சும் மாளிகையையும், அழகு மனைவியையும், அருமைப் புதல்வனையும் துறந்து காட்டிற்குச் சென்றார். தமது இளம் பருவமான இருபத்தொன்பதாவது வயதிலேயே இவ்வுலக வாழ்வைத் துறந்தார்.



படம் 9.
கௌதம புத்தர்

அரச பாரத்தையும், இல்வாழ்க்கை இன்பத்தையும் துறந்து காட்டிற்குச் சென்ற புத்தர் எவ்விதமான குறிக்கோளுமின்றி உண்மையைத் தேடி அலைந்தார். ஆங்கே

ஒரு பிராமணக் குருவின் சமய விளக்கத்தைக் கவனமாகக் கேட்டார். ஆனால், அவரின் விளக்கங்கள் இவருக்கு எவ்வித விளக்கமும் அளிக்கவில்லை. எனவே அடர்ந்த உருவேலா காட்டினுள் சென்று ஆழ்ந்த தவத்தை மேற்கொண்டார். உடல் இளைத்து மெலிந்தார். ஆனால், உண்மையை இவரால் உணர இயலவில்லை. வேலாண் குலப் பெண்ணால் அளிக்கப்பட்ட உணவை உண்டு தனது தவ வாழ்க்கையை முடித்துக் கொண்டார். வேளாண் குலப்பெண்ணிடம் பெற்ற உணவைப் புத்தர் உண்ட காட்சியைக் கண்ட அவருடைய ஐந்து தோழர்களும், புத்தரைத் துறந்தனர். பின்னர் உண்மையை உணரும்வரை அவ்விடத்தை விட்டு அகலுவதில்லை என்னும் மன உறுதியோடு பிப்பால் (Pipal) மரத்தடியில் அமர்ந்தார்.. மசா (Masa) என்னும் காதல் தேவதை இவரின் கவனத்தைச் சிதைக்க முயன்று தோல்வியுற்றது. ஆனால், கடுமையான நாற்பத்தொன்பது நாள் தவத்திற்குப் பின்னர், கௌதமர் தாம் தேடிய உண்மையை மிகத் தெளிவாகக் கண்டார். புத்தர் தம் பிரச்சினைகளுக்கு முடிவை முழுமையாகக் கண்டார். ஞானம் பெற்ற புத்தர் துன்பங்களுக்குண்டான காரணங்களையும் அதனைக் களைய வழிவகைகளையும் கண்டு கொண்டார். எனவே இதன் பிறகு இவர் 'ஞான ஒளி' (Enlightened) அல்லது புத்தர் எனப்பட்டார். இவர் எந்தமரத்தடியில் அமர்ந்து ஞானம் பெற்றாரோ அம்மரம் போதிமரம் எனப் பெயர் பெற்றது.

ஞான ஒளி பெற்ற புத்தர் காசிக்குச் சென்று தனது முதல் உரையை மான் பூங்காவில் (Deer park) கூடிய மக்களுக்கு எடுத்துரைத்தார். புத்தரைக் காட்டில் துறந்து வந்த ஐந்து நண்பர்களும், புத்தரின் விளக்கத்தில் தெளிவு பெற்று அவரின் முதல் சீடர்களாகத் திகழ்ந்தனர். மிக விரைவில் இவர்களுடன் இன்னும் ஐம்பது இளம் துறவிகள் சேர்ந்து விட்டனர். புத்தர் தம் இளஞ் சீடர்களுடன் நீண்ட நெடுந்தொலைவுகள் அலைந்து தமது மதத்தின் கோட்பாடுகளை எடுத்துக் கூறினார். கோசல நாட்டு அரசன் பிரசேனாஜித்து (Prasenajith) மகதநாட்டு மன்னர் பிம்பிசாரர் (Bimbisara), அஜாதசத்ரு (Ajathasathru) ஆகியோர் தங்களின் ஆதரவைப் புத்தமதத்திற்கு நல்கினார்கள். அரச வமிசத்தைச் சேர்ந்தவரின் மதத்திற்கு அரசர்களால் பேராதரவு கிடைத்தது. உண்மையான வெற்றியென்பது இம்சையால் (Violence) பெறுவதன்று, அன்பால்

பெறுவதே மாபெரும் வெற்றியென அவர்களுக்குப் போதித்தார். இரக்க குணமும், பெருந்தன்மையுமே மக்களிடமிருந்து நற்பெயரை பெற்றுத்தரும் என உணர்த்தினார். வசதி படைத்த செல்வந்தர்கள், புத்தரின் உன்னதக் கொள்கையைப் பரப்ப வசதி செய்து கொடுக்க முன் வந்தனர். ஆனந்த பிந்திகா (Ananda Pendika) என்னும் வணிகர் தமது 540 மில்லியன் தங்க நாணயங்களையும் புத்தருக்கு வழங்கினார். அம்பாபாலி (Amba Pali) என்னும் அழகியக் கணிகையர்குல நங்கை புத்தரின் புனித சேவை தொடரத் தனது பெரும் பழத்தோட்டத்தைக் கொடுத்தாள். விஷாகா (Vishaka) என்ற விதவை 270 மில்லியன் தங்க நாணயங்களைத் தானமாகத் தந்தாள். புத்தர் இப்பெருந் தொகையைக் கொண்டு புத்த விஹாரம் என்னும் மடாலயங்களைக் கட்டிப் புத்தத் துறவிகள் தங்குவதற்கு வசதிகள் செய்து கொடுத்தார். கடவுளின் பெயரால் விலங்குகள் பலியிடப்படுவதைத் தடுத்து புத்தர் மக்கள் மத்தியிலே பெரிதும் புகழ்பெற்றார். மக்கள் இவரைப் பொதுவாகவே 'பகவான் புத்தர்' என்றே அழைத்தனர். நாற்பதாண்டுகளுக்கும் மேலாக புத்தசமயத்தின் உன்னதக் கொள்கைகளை உலகிற்கு உணர்த்தி, முதிர்ந்த தமது எண்பதாவது வயதில் குசிநகரா (Kusi Nagara) என்னுமிடத்தில் உயிர்நீத்தார். புத்தரின் பூத உடல் எரிக்கப் பட்டது. அதன் சாம்பலைப் பெற ஆன்றோர்களும், பெரியோர்களும் போட்டியிட்டனர்.

**புத்தரின் போதனைகள்** (Teachings of Buddha)

மகாவீரரைப் போன்றே புத்தரும் பிறப்பு இறப்பு என மாறி மாறி நிகழும் நிகழ்ச்சியினின்றும் விடுபட்டு நற்கதி— அல்லது பிறவா நிலைபெற வேண்டுமெனப் போதித்தார். ஆசையே பிறப்புக்கும் துன்பத்திற்கும் காரணம் என்றார். எப்போது ஒருவனால் ஆசை அடக்கப்படுகின்றதோ அப்போதே அவனுக்கு மறுபிறவி இல்லை என்றார். எனவேதான் நான்கு உன்னத உண்மைகளை உலகிற்கு வெளியிட்டார். அவையாவன:

1. துன்பமும் துயரமும் நிறைந்ததே வாழ்க்கை.
2. ஆசையே துன்பத்தின் அடிப்படைக் காரணம்.
3. நிறைவேறா ஆசையே மறுபிறவிக்குக் காரணம் ஆகிறது.
4. ஆசையைத் துறந்தவன் பிறவிப் பெருங்கடலைக் கடக்கின்றான்; அதுவே 'நிர்வாணம்' அல்லது நற்கதியாகும்.

புத்தரின் போதனையை ஏற்றுக்கொண்ட ஒருவர், ஆசையைத் துறப்பதெவ்வாறு? எனும் கேள்வியைத் தொடுத்தார். ஆசையை வெல்ல, 'எண் வழிக் கொள்கை'யைப் (Eight fold path) பின்பற்ற வேண்டினார் புத்தர். எண் வழிக் கொள்கைகள்:

1. நன்னம்பிக்கை (Right faith)
2. நல்லெண்ணம் (Right Thought)
3. நல்வாக்கு (Right Speech)
4. நற்செயல் (Right Action)
5. நல்வாழ்க்கை முறை (Right livelihood)
6. நன்முயற்சி (Right Effort)
7. நற்கவனம் (Right Watchfulness)
8. நற்சிந்தனை (Right Contemplation)

இவ்வெண் வழிக் கொள்கைகள் உடலைக் கடுந் துறவறத்தில் வருத்துவதும் அல்ல; இல்வாழ்வை இனிதே சுவைப்பதும் அல்ல. இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட வழியே (Middle path) 'மத்திய மார்க்கம்' (Madhyamarga) எனப்பட்டது. இதுவே நடைமுறை நியதியின் வழியாகவும், ஒவ்வொருவராலும் எளிதில் புரிந்து கொண்டு பின்பற்றக் கூடியதாகவும் இருந்தது. புத்தரின் போதனைகள் வாழ்க்கையின் இடர்ப்பாடுகளின்றும் ஒருவன் தப்பித்துக் கொள்ளும் வழியை கூறுகின்றன. ஆசையை அறவே ஒழிக்க வழி கூறும் புத்தரின் போதனைகள் ஒருவனைச் சோம்பேறியாக்குவதுடன் செயலற்றவனாகவும் ஆக்கிவிடுகின்றன. இவ்வுலகில் ஆசையோ, அல்லது விருப்பமோ இன்றி எந்தக் காரியத்தையும் சாதிக்கவே இயலாது எனக் கருத்துத் தெரிவிக்கின்றனர் சில ஜெர்மானிய அறிஞர்கள். ஆனால், இவ்வறிஞர்களின் கருத்துகள் உண்மைக்கு அப்பாற்பட்டது; ஏனெனில் புத்தர் எதிர்மறைச் செயலை விடுத்து (Negative inaction) ஆக்கச் செயலையே (Positive action) வலியுறுத்துகிறார். எனவே புத்தரின் பத்துக் கட்டளைகளை முறையாகப் பின்பற்றுவதன் மூலம் ஆசையை வென்று ஆனந்த நிலையைப் பெறலாம் என்கிறார். புத்தரின் பத்துக் கட்டளை (Ten Commandments) களாவன: நன்னடத்தை, உண்மை, அன்பு; பரிவு, பெற்றோர்களுக்குக் கீழ்ப்படிதல், முதியோரைப் போற்றல், மது அருந்தாமை, தர்மம் செய்தல், உயிரினங்கள் பால் அன்பு செலுத்துதல் (Ahimsa) ஆகிய இப்பத்துக்

கட்டளையை உணர்ந்தவனால் ஆசையை அறுக்கமுடியும். இந்தப் பத்துக் கட்டளையில் கடைசிக் கட்டளையானது அனைத்துக் கொள்கைகளின் சாரமாக விளங்குகின்றது. இதுவே பின்னர்க் காந்தியின் அஹிம்சாக் (Ahimsa) கொள்கை யானது. பேசும் பேச்சிலும், எண்ணும் எண்ணத்திலும், செய்யும் செயலிலும் அஹிம்சையே இருக்க வேண்டுமென்றார் புத்தர். இக்கொள்கையே காந்தியடிகளின் வாழ்வின் அடிப்படைத் தத்துவமாக இருந்தது. இக்கொள்கையால் ஆயிரக்கணக்கான உயிரினங்கள் ஆண்டவனின் பெயரால் பலி இடப்படுவதைத் தவிர்த்தார். ஆனால், இவர் மஹாவீரரைப் போன்று கொல்லாமையை அவ்வளவு தீவிரமாகச் செயல்படுத்த வில்லை. சில சமயங்களில் (Meat eating) மாமிசம் உண் பதையும் இவர் அனுமதித்தார்.

மஹாவீரரைப் போன்று புத்தர் கடவுளைப்பற்றியோ சொர்க்க நரகத்தைப்பற்றியோ, வேதத்தில் நம்பிக்கையோ அல்லது சாதி முறையைப் பற்றியோ பேசவில்லை. ஆனால், புத்தர் வினைப் பயனில் (Karma Theory) நம்பிக்கைக் கொண் டிருந்தார். மனித வாழ்வில் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் ஒரு காரணம் இருப்பதாகவே கூறினார். பாவச் செயலைப் புரிந்த ஒருவன் அப்பாவத்தின் பிடியினின்றும் தப்பிக்கவே முடியாது. ஒவ்வொருவனும் தனது தீராத முயற்சியால் விடுபட பிறப்பு இறப்பு எனும் காலச் சக்கரத்தினின்றும் முடியும். இதில் இடைத்தரகர்களுக்கு இடமே இல்லை என்கிறார். புத்தரால் நிறுவப்பட்ட மடாலயங்களில் (Monastery) வசித்த புத்தப் பிட்சுகள் புத்தர் காட்டிய வழியிலேயே நடந்தனர். ஆங்காங்கே சில புத்த பிக்குணி களுக்கும் மடாலயங்கள் இருந்தன. ஆனால், இப் புத்த பிக்குணிகள் புத்தப்பிட்சுக்களுடன் பேசவே அனுமதிக்கப் படவில்லை. புத்தப்பிட்சுகளும் பிக்குணிகளும் தூய்மை யான் எளிய வாழ்வையே மேற் கொள்ள வேண்டுமெனப் புத்தர் எதிர்பார்த்தார். இவர்கள் வாழும் உயிரினங் களுக்கு எவ்விதக் கொடுமையும் இழைக்கக்கூடாதென்றார். மேலும் பிறர்பொருள் மீது ஆசை கொள்ளாமை, காம உணர்வின்மை, மது அருந்தாமை, அளவுக்கு மீறி உண் ணாமை, இன்னிசை பாடாமை, நடனமாடாமை, ஆடம் பரப் பொருள்களான அணிகலன்கள் அணியாமை, நறு மணப் பொருளை நுகராமை, மாலை அணியாமை, மற்றும் வசதியான படுக்கையில் துயிலாமை, தங்கம், வெள்ளியை அன்பளிப்பாகப் பெறாமை ஆகிய கொள்கைகளை இவர்கள்

கட்டாயம் கடைப்பிடிக்க வேண்டினார். இக்கொள்கையினின்றும் பிறழாமல் தூய்மையான எளிய வாழ்வையே மேற்கொள்ள வேண்டினார். மேலும் இவர்கள் தங்கள் தலையை முழுமையாக மழுக்கிக்கொள்ள வேண்டினார். இவர்கள் மஞ்சளாடை அணிந்து புத்தம், சங்கம், தர்மம் என்னும் இம்மூன்று நிறுவனங்களுக்கும் உண்மையுள்ளவராக நடந்துகொள்ள உறுதி வேண்டுமென்றார்.

**புத்த சமயத்தின் வளர்ச்சி**

புத்தரின் வாழ்நாளிலேயே புத்த சமயத்திற்குப் பேராதரவு திரண்டது. இவ்வாதரவிற்குப் பல காரணங்கள் இருப்பினும் புத்தரின் போதனையின் எளிமையே முதன்மையானது. மேலும் அரசர்களின் ஆதரவும், மிதமான எளிமையான கொள்கைகளும், மக்களின் கருத்திற்கு மதிப்பளிக்கும் தன்மையும், மேலாகப் புத்தரின் வசீகரத் தன்மையுமே இம்மதத்தின் வளர்ச்சிக்குப் பெரிதும் காரணம் ஆனது எனலாம். புத்தர் நிர்வாண மடைந்தவுடன் முதல் புத்த மாநாடு கி.மு. 483-ல் ராஜகிரிஹாவின் அருகண்மையில் கூடியது. புத்தரின் கொள்கைகள், போதனைகளையும் தொகுத்து முழுமை உருவம் கொடுக்கவே இம்மாநாடு கூடியது. ஐநூறுக்கும் மேற்பட்ட புத்தப் பிட்சுக்கள் இதில் பங்கு பெற்றனர். புத்தரின் முதல் மாணாக்கரான ஆனந்தா என்பவர் 'சுத்தபீடகம்' (Sutta Pitaka) என்ற நூலைத் தொகுத்தார். இந்நூல் புத்தர் போதனைகளையும், கோட்பாடுகளையும், இதன் ஆசிரியர் புத்தரிடம் கேட்டறிந்தவாறு விளக்குகின்றது. 'பீடகம்' என்றால் 'சட்டப் பேழை' எனப் பொருள்பட்டது. உபாலி (Upali) என்ற மற்றொரு மாணவர் 'வினயப் பீடகம்' (Vinaya Pitaka) என்னும் நூலைத் தொகுத்தார். இந்நூல் புத்த பிட்சுக்கள், பிக்குணிகள், எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்ற சட்டதிட்டங்களை இயம்புகின்றது.

ஒரு நூற்றாண்டிற்குப் பின்னர் சில கொள்கைகளைப் பின்பற்றுவதில் இவர்களிடையே கருத்து வேற்றுமை நிலவியது. அதில் குறிப்பாக புத்தமத ஆதரவாளர்களிடமிருந்து தங்கம், வெள்ளியைப் பெறலாமா? கூடாதா? என்பதே மிக முக்கியமானதாகும் எனவே கி.மு. 383-ல் வைசாலியில் இரண்டாம் புத்த சமய மாநாடு கூடியது. ஆனால், இம்மாநாடு மடாலய ஒழுங்குபற்றி எந்தவிதமான முடிவையும் எடுக்க இயலாமற்போனது. எனவே புத்தமதத்தைப் பின்பற்றியவர்

கலிங்கடையே இதன் காரணமாகக் கருத்து வேற்றுமை ஏற்பட்டு, புத்த சமயத்தில் பிளவும் ஏற்பட்டது. ஒன்றாக இருந்த புத்தமதம், கருத்து வேறுபாட்டினால் இரண்டாகப் பிளவுபட்டது. இது புத்த சமயத்தின் வளர்ச்சியைக் குறைத்தது எனலாம். இதில் வினயப் பீடகத்தைப் பின்பற்றியவர்கள் ஸ்தவிரர்கள் (Sthaviras) அல்லது தெரவாடின்கள் (Theravadin) எனப்பட்டனர். இதில் புரட்சிக் கருத்தைக் கொண்டோர்கள் மஹாசங்கிகள் (Maha Sangika) எனப்பட்டனர்.

கி.மு. 250-ல் மூன்றாம் மாநாடு பாடலிபுத்திரத்தில் அசோகரின் அரவணைப்பில் கூடியது. இம்மாநாட்டிற்கு மொஹலி புத்த திஸ்ஸ (Moggaliputta tissa) என்பவர் தலைமையேற்று நடத்தினார். இம்மாநாட்டின் முக்கியக் குறிக்கோள், புத்த சமயத்தில் நிலவிய பிரிவுகளை இணைத்துப் புத்த சமயத்தைப் பழைய நிலைமைக்குச் சீராக்க வேண்டுமென்பதே. 'அபிதாம பீடகம்' (Abhidhama Pitaka) என்ற நூல் புத்தரின் தத்துவ விளக்கங்களை வரையறை செய்த தொகுப்பு நூலாகும். இதுவே மூன்றாம் பீடகம் என விளங்கியது. தெரவாடின் (Theravadin) முறைப் புத்தத் தத்துவங்களே உண்மையானவை என ஏற்கப்பட்டு ஹீனயானம் (Hinayana) என அழைக்கப்பட்டது. இதையே சிறுதேர்க் கொள்கை (Little Vehicle) என்றனர். இக்கருத்துகளை ஏற்க மறுத்தவர்கள் புத்த சமயத்திலிருந்தே வெளியேற்றப்பட்டனர்.

புத்த சமயத்தின் பேரறிஞர்களான வசுமித்திரர் (Vasumitra) அஸ்வகோசர் (Asvagosa) தலைமையில் கனிஷ்கர் ஆட்சியில், காஷ்மீரத்தில் நான்காம் புத்த சபை கூடியது. இச்சபையிலும் ஐநூறு புத்தப்பிட்சுக்கள் பங்கேற்றனர். இச்சபையும், புத்த சமயத்தின் இருபிரிவையும் மீண்டும் ஒன்றாக்க முயன்றது. 'விபஷாஸ்' (Vibhashas) எனும் நூலைத் தொகுத்தனர். இது மூன்று பீடகங்களுக்கும் விளக்க உரை கொடுத்தது.

கி.பி. ஆறு, மற்றும் ஏழாம் நூற்றாண்டில் ஹர்ஷரின் ஆட்சியில் புத்த சமயமே நாட்டின் ஆட்சி சமயமாக விளங்கியது. மேலும் இந்தியா முழுவதும் இச்சமயம் பரவியது. நாளந்தா பல்கலைக் கழகம் இந்தியப் புத்த பிட்சுக்களைப் பயிற்றுவித்ததோடன்றி, தெற்கு, மற்றும் தென்கிழக்கு ஆசிய நாடுகளினின்றும் வந்த பிட்சுக்களையும் பயிற்றுவித்தது.

புத்தமதம் அசோகர், கனிஷ்கர், ஹர்ஷர் போன்ற பண்டைய இந்தியப் பேரரசர்களால் பெரிதும் ஆதரிக்கப் பட்டு நல்வாழ்வினைப் பெற்றிருந்தது. இவர்களின் காலத்தில் இந்தியாவில் மட்டுமன்றி அண்டை நாடுகளான இலங்கை, பர்மா, சயாம், லாவோஸ், கம்போடியா, சைனா, ஜப்பான், இந்தோனேசியா ஆகிய நாடுகளிலும் பரவியிருந்தது. சீனயாத்திரிகரான பாகியான் (Fabian), யுவான் சுவாங் (Hiuen-Tsang) இட்-சிங் (It - Sing) போன்றவர்கள் இந்தியாவிற்கு வருகை தந்தது, புத்த விகாரத்தையும் புனித இடத்தையும் தரிசிக்கவுமே.

**மஹாயானம் (Mahayanam)**

புத்த சமயம் ஆரம்பக் காலத்தில் ஹீனயானம் எனப் பட்டது. ஆனால், இதன் பிற்கால வளர்ச்சியே மஹாயானம் (Mahayanam) எனப்பட்டது. அது முற்றிலும் கடவுளைப் பற்றியோ கடவுள் வழிப்பாட்டினைப்பற்றியோ, புத்தர் வழிப்பாட்டைப்பற்றியோ கூறவில்லை. இதன் போதனை, ஒவ்வொருவரும் தமது சுய முயற்சியால் நற்கதியடைய வேண்டும் என்பதே. மேலும் இது புத்தரால் பயன் படுத்தப்பட்டுச் சென்ற சில பொருள்களை வழிபட அனுமதித்தது. புத்தர் பயன்படுத்திவிட்டுச் சென்ற குடை, காலணிகளும், (புத்தரின் பூத உடல் எரிக்கப்பட்ட சாம்பல் வைக்கப்பட்டுள்ள இடமான ஸ்தூபி) மற்றும் போதிமரம் போன்றவற்றை வழிபாடு செய்ய இச்சமயம் அனுமதித்தது. ஆனால், காலப் போக்கில் புத்த சமயத்தினர் புத்தரின் உருவச்சிலையை வணங்க முற்பட்டனர். கிரேக்கக் கடவுளை மாதிரியாகக் கொண்டு தயாரிக்கப் பட்ட புத்தரின் முழு உருவச் சிலைகள் கனிஷ்கர் காலத்தில் செதுக்கப்பட்டன. இந்தியக் கிரேக்கக் கலைகளை இணைத்து உருவான கலையே இச்சிலைகளின் அமைப்பு; இதுவே காந்தாரக்கலை எனப்பட்டது.

புத்த ஆலயங்கள் கட்டப்பட்டன. புத்தபிரானுக்குத் திருவிழாவும் ஊர்வலமும் நடத்தப்பட்டது. பூவகைகள் மற்றும் பழங்கள் புத்தருக்குச் சமர்ப்பிக்கப்பட்டன. நறுமணப் புகைகளும் புகைக்கப்பட்டன. புத்தரை வழிபட்டதோடன்றிப் போதிசத்துவர்களையும் (கடவுள் தன்மையில் பாதி பெற்றவர்களையும்) (Semi-divine) புனிதராகக் கருதி மக்கள் வழிபட்டனர். மக்களின் பாவங்களைப் போதிசத்துவர்கள் எடுத்துக் கொள்வதாகவும் அதனால்

மக்கள் எளிதில் பாவநிவாரணம் பெற முடியுமெனவும் எண்ணி அவர்களை வழிபட்டனர். இவ்வாறு தன்னம்பிக்கையை (Self-reliance) விடுத்து இடைத்தரகர்களைச்சார்ந்து நிற்கும் (dependence) நிலைமை ஏற்பட்டது. இது புத்தரின் போதனைகளுக்கே எதிரானது. இந்து முறையைப் போலவே சொர்க்கம், (Sugavathi) நரகங்கள் (Hell) வழக்கத்தில் வந்தன. சமயச் சடங்குகளிலும் மந்திர தந்திரங்களிலும் மக்களுக்கு நாளுக்குநாள் நம்பிக்கை பெருகியது. புத்த சமயத்திற்கும் இந்து சமயத்திற்கும் இதனால் வேறுபாடுகள் மிகவும் குறைந்தது. மஹாயானப் பிரிவினர் மேலும் இரு பிரிவாகப் பிரிந்தனர். அவர்கள் மத்தியமிகா (Madhyamikas) எனவும் யோகச்சாரா (Yogachara) எனவும் இரு பிரிவானார்கள். மத்திய மிகாக்கள் உலகும் முக்தியும் (Nirvana) நிலையற்றவை என்ற கொள்கையை உடையவர்கள். ஆனால் யோகாச்சாரர்கள் (Yogachara) உலகுதான் நிலையற்றது. முக்தி நிலையானது என்றனர். வசுபந்து (Vasubandu) என்ற பேரறிஞர் யோகாச்சாராப் (Yogachara) பிரிவினைச் சார்ந்தவர். இவர் சமுத்திர குப்தரின் பேராதரவில் வாழ்ந்தவர்.

**புத்த சமயத்தின் வீழ்ச்சி**

புத்த சமயம் எந்த மண்ணில் தோன்றிப் புகழுடன் பெருகியதோ அதே மண்ணில் வீழ்ச்சியையும் கண்டது. இவ்வீழ்ச்சிக்கு மதத்தினுள்ளும் புறமும் சில காரணங்கள் இருந்தன. புத்த சமயம் தனது சிறப்புத் தன்மையை இழந்து இந்து சமயத்தைப் போல்வே சமயச் சடங்குகள், உருவவழிபாடு, சொர்க்கம், நரகம், போன்ற கருத்துகளால் தனது தனித்தன்மையை இழந்தது. எனவே மக்களின் ஆதரவும் இம்மதத்திற்குக் குறைந்தது. மஹாயான புத்த சமயத்திற்கும், இந்து சமயத்திற்கும் வேறுபாடுகளே தோன்றாத அளவிற்குப் புத்த சமயம் தனது தனித்தன்மையை இழந்தது, புத்த சமயத்தினர் புத்த விழாக்களிலும் சடங்குகளிலும் இந்துக்களைப்போன்றே கலந்து கொண்டனர். மேலும் இவர்கள் புத்தரை விஷ்ணுவின் அவதாரங்களுள் ஒன்றாகவே எண்ணினார்கள். புத்த சமயத்தின் ஒவ்வொரு கொள்கையையும் இந்து சமயம் தனதாக்கிக் கொண்டது.

இந்து சமயம் ஆதிசங்கரர், இராமானுஜர், போன்றவர்களின் போதனையால் புத்துயிர்ப் பெற்றுச் சிறப்புப் பெற்றமையால் புத்த சமயம் வீழ்ச்சியைக் கண்டது. சங்கரரின் அத்துவைதத்

தத்துவம் புத்தரின் சூன்யவாதக் கொள்கையினின்றும் ஆன்றோர்களைத் தன்பால் ஈர்த்தது. சங்கரர் புத்த சமயத்தினரைச் சொற்போட்டியில் வென்று இந்துமதத் தத்துவத்தின் மேன்மையை நிலைநாட்டினார். ஆழ்வார்கள், நாயன்மார்களால் ஆரம்பிக்கப்பட்ட பக்தி மார்க்கம் மற்றும் ஸ்ரீராமானுஜர் போன்றவர்களின் கருத்துகளும் விளக்கங்களும் மக்களைச் சிந்திக்க வைத்ததுடன் இந்து சமயம் பின்பற்றத்தக்க எளிய சமயம் என மெய்ப்பித்தன. இதுபோன்ற இயக்கங்களினால், புத்த சமயத்தைப் பின்பற்றிய எளிய குடிமக்கள் புத்தமதத்தையே துறந்தனர்.

நாளடைவில் புத்த மடாலயங்கள் தவறான காரியங்களுக்கும், நெறியற்ற செயல்களுக்கும் இருப்பிடமாக திகழ்ந்தது. மடாலயப் பிட்சுக்களும், பிக்குணிகளும் அறநெறியின் அரணாக விளங்குவதினின்றும் விடுபட்டுத் தாங்களே தவறுகளின் மொத்த உருவாக விளங்கினார்கள். புத்தமதத்தின் உன்னதக் கோட்பாடுகளை விடுத்து அர்த்தமற்ற, தேவையற்ற சிறு சண்டைகளில் இறங்கிப் புத்தமதத்தின் வீழ்ச்சிக்கே அடிகோலினார்கள். புத்த பிட்சுகளுக்குக் கொடுக்கப்பட்ட தேவையற்ற மதிப்பும் மரியாதையும் மக்களின் மத்தியில் வெறுப்புணர்வையே உண்டாக்கின.

அரசர்களால் ஆதரிக்கப்பட்ட இச்சமயம், அரச ஆதரவைப் பிற்காலத்தில் இழந்ததும் இதன் வீழ்ச்சிக்கு ஒரு காரணம் ஆனது. அசோகர், கனிஷ்கர், ஹர்ஷர் போன்ற பேரரசர்களுக்குப்பின் ஆட்சிக்கு வந்த அரசர்கள் இந்துமதத்திற்கே பெருத்த ஆதரவு காட்டினார்கள். மௌரியருக்குப் பின்னர் ஆட்சிக்கு வந்த புஷ்ய மித்திர சுங்கரும் ஹூனப் (Hun) பேரரசனான மிகிரகுலனும், வங்க அரசன் சசாங்கனும் இந்து மதத்தை ஆதரித்ததோடு புத்த சமயத்தைச் சார்ந்தவர்களை அழிக்கவும் செய்தனர்.

இத்தகு காரணங்களின் விளைவாகப் புத்த சமயம் இந்தியாவின் பெரும்பகுதிகளில் தானாகவே மறைந்தது. இச்சமயம் கிழக்கு இந்தியப் பகுதியில் மட்டுமே சிறிதளவு எஞ்சியது எனலாம். முகமதுபின் பக்தியார் கில்ஜி 12ஆம் நூற்றாண்டில் வங்கத்தை வென்றபோது, புத்த சமயத்தினரை அழித்துப் புத்த சமயத்திற்கே முடிவு கட்டினான். வங்கத்திலிருந்த புத்தபிட்சுக்களும், பிக்குணிகளும் அங்கிருந்துத் தப்பித்து நேபாளம், திபெத் ஆகிய நாடுகளில் அடைக்கலம் புகுந்தனர். இதன் பின்னர் தானாகவே புத்த சமயம் இந்தியாவைத் துறந்தது.

**இந்தியப் பண்பாட்டிற்குப் புத்த சமயம் ஆற்றிய தொண்டு**

புத்த சமயம் இந்தியாவிற்குச் சிறந்த நீதிநெறி முறையினைத் தந்தது. புத்த சமயத்தின் காணிக்கையாக இந்தியப் பண்பாட்டிற்கு அன்பு, அரவணைப்பு, உயிர்வாழ் இனங்களுக்கு மனத்தால், எண்ணத்தால், செயலால், தீங்கு செய்யாமை (Ahimsa) ஆகிய சிறப்புத் தன்மைகள் கிடைத்தன. அர்த்தமற்ற சடங்குகள், சம்பிரதாயங்களைவிடப் பரிசுத்தமும், நேர்மையுமே சிறந்ததென்றது புத்தமதம். இதுபோன்ற உயர்ந்த சிறந்த கருத்துகளே அசோகர், கனிஷ்கர், ஹர்ஷர் போன்ற பேரரசர்களை உருவாக்கியது. அசோகர் பொறுமை, கனிவு, சகிப்புத் தன்மை ஆகிய புத்தக் கொள்கையை உலகில் பரப்பினார். அசோகரின் கொள்கையாகவே ஆன, பொறுமை, சகிப்புத் தன்மை ஆகிய இரண்டும் இந்தியச் சமுதாயத்தின் கலாச் சாரத்திற்கே புத்துயிர்கொடுத்தன. மேலும் இக்கொள்கையே இன்றைய இந்தியாவின் வெளியுறவுக் கொள்கையாகவும் விளங்குகிறது.

இந்து சமயத்தில் சில சிறந்த மாற்றங்கள் ஏற்பட புத்த சமயம் காரணமானது. இந்துக்கள் புத்த சமயக் கட்டிடக் கலையைப் பின்பற்றியதோடு புத்த சமயத்தினரைப் போன்றே கடவுளை மனிதவடிவில் வணங்கினார்கள். இந்துச் சமுதாயத்தில் உயர் பிரிவினர் எனப்படுவோரின் புலாலுண்ணாமை என்னும் வழக்கம் புத்த சமயத்தினின்றும் பெறப்பட்ட சிறப்பே ஆகும். புத்த விஹாரங்களின் பிரதிபலிப்பே சைவ, வைணவ சமயத்தாரின் மடாலயப் பணிகள் ஆகும். அசோகரின் வழியைப் பின்பற்றியே பிற்காலத்தில் சத்திரம், ஓய்வு விடுதி, பிணி நீக்கும் நிலையங்கள், வழிப்போக்கர்கள் தங்குமிடம் ஆகியவைகள் இந்தியாவில் தோன்றின. புத்தரின் போதனையால்தான் இந்துக்கள் கடவுள்களுக்கு விலங்குகளைப் பலியிடும் கொடிய வழக்கத்தை விட்டொழித்தனர்.

புத்த பிட்சுகள், புத்த சமயத்தைத் தாய்மொழி மூலமாகவே பரப்பினார்க்ள். இதனால் தாய்மொழிக் கல்வியும் தாய்மொழியும் வளர்ச்சியுற்றன. தாய்மொழி வளர்ச்சிக்கு அடிகோலிய பெருமை புத்த சமயத்தையே சாரும்.

புத்த சமயத்தால் இந்தியாவின் கட்டிடக்கலையில் பெரிதும் மாறுதல் ஏற்பட்டது. சாஞ்சி, சாரநாத், பர்ஹூத், அமராவதியில் உள்ள அசோகர் ஸ்தூபிகள், தூண்கள்

கன்ஹரியின் தேர்க்கோயில், கார்லி, நாசிக் ஆகிய இடங்களி லுள்ள கலைச் சிறப்பு இந்தியக் கலையின் உச்சகட்டமாகும். அஜந்தா ஓவியம், பாக் (Bagh) மற்றும் சிகிவியா (Sigevia-Ceylon) ஆகியவை உலகப் புகழ் பெற்றவை.

புத்த சமயம் தெற்கு, தென் - கிழக்கு ஆசிய நாட்டின் பண்பாட்டில் பெரிதும் இடம் வகிக்கின்றது. மேலும் இச்சமயம் அங்கு இன்றும் மக்களுக்குப் புத்துணர்வை ஊட்டிக் கொண்டிருக்கின்றது.

## சமண சமயம்

### தோற்றம்

இந்தியாவின் தொன்மைமிகு சமயங்களில் சமண சமயமும் ஒன்றாகும். சமண வழக்காறுபடி இம்மதம் ரிஷபா (Rishaba) என்னும் முதல் தீர்த்தங்கரரால் (Prophet-Tirtangara) ஏற்படுத்தப்பட்டது. தீர்த்தங்கரர் என்னும் சொல் மக்க ளுடைய பிறப்பு இறப்பு என்னும் பெருங்கடலைக் கடக்க உதவும் தோணியைப் போன்றவர் எனவும் பொருள்பட்டது. ரிக் வேதத்தில் ரிஷபரின் (Rishaba) பெயர் குறிக்கப்படு கின்றது. விஷ்ணு புராணமும் (Vishnu Purana) பாகவத புராணமும் (Bhagavata Purana) இவரை விஷ்ணுவின் அவ தாரம் என்றே குறிக்கின்றது. மஹா வீரருக்கும் 250 ஆண்டு களுக்கு முன்னர் வாழ்ந்த பார்சவா (Parsava) என்பவரே 23-ம் தீர்த்தங்கரர் எனப்பட்டார். காசி மன்னரான அஸ்வ சேனரின் (Asvasena) மகனான இவர் க்ஷத்திரிய (Kshatriya) குலத்தைச் சார்ந்தவர். தமது நாட்டை 30 ஆண்டுகள் ஆண்ட பின்னரே துறவறம் பூண்டு தியா னத்தை (Meditation) மேற்கொண்டார். கடுமையான தவத்தின் மூலம் 84 நாட்களுக்குப் பின்னர் ஞான ஒளி பெற் றார். இவர் 'தான்' என்ற அகந்தையை அறுத்து முற்றிலும் கடந்தவர் (Kaivalya-Free from all dondages) ஆனார். இவர் மக்களுக்குப் பொய்யாமை, யாருக்கும் தீங் கிழையாமை, கள்ளாமை, மிகு பொருள் சேர்க்காமை போன்ற போதனைகளை நல்கினார். இவைகளே சமண சமயத்தின் மூல போதனைகள் ஆகும்.

மஹாவீரர்: (Mahavira) (கி. மு. 599 - 527) வர்த்தமான மஹாவீரர், சமண சமயத்தின் 24-வது தீர்த்தங்கரர் ஆவார். சமணர்கள் இவரே சமண சமயத்தைத் தோற்று வித்தவராகக் கருதுகிறார்கள். வைசாலிக்கு அருகிலுள்ள குந்த

கிராமம் (Kundagrama) என்னும் பகுதியை ஆண்ட க்ஷத்திரிய குலத்தில் தோன்றியவர். ஜனதிரிகாவின் (Janatrika) க்ஷத்திரியத் தலைவனான சித்தார்த்தா விற்கும் (Siddhardha) வைசாலி நாட்டு லிச்சாவி (Lichhavi) இளவரசியான திரிசலா (Trisala) விற்கும் மஹாவீரர் மகனாகத் தோன்றினார். முறையாகக் கல்வி பெற்றுப் பின்னர் யசோதா என்னும் இளவரசியை மணந்து ஒரு பெண் மகவையும் பெற்றெடுத்தார். ஆனால் இவர் தமது முப்பதாம் வயதில் இல்வாழ்க்கையைத் துறந்து துற வறத்தை மேற்கொண்டார். பன்னிரண்டாண்டு கடுந்தவம் மேற்கொண்ட பின்னரே இவர் ஞான ஒளியைப் (Enlightenment) பெற்றார். பின்னரே இவர் ஞான அறிவைப் பெற்ற புலன்களை வென்றவர் (Juna-Conqueral of Senses and Arhat) எனப்பட் டார். பின்னர்த் தொடர்ந்து 30 ஆண்டுகள் தமது கொள்கை களைக் கோசலம், (Kosala) மகதம், (Magadha) விதேஹம் (Videha) அங்கம் (Anga) ஆகிய நாடுகளில் போதித்தார். இதற்குப் பிம்பிசாரர், அஜாதசத்ரு போன்ற அரசர்கள் தங்கள் பேராதரவை நல்கி னார்கள். இவரின் கொள் கைகளைப் பின்பற்று வோர் 'நிர்கிரந்தர்கள்' (Nirgrantha - Free from bonds) பற்றற்றவர்கள் எனப்பட்டனர். இவர் தமது 72ஆம் வயதில் பாவா (பாட்னா மாவட் டம்) என்னுமிடத்தில் இறந் தார்.



படம் 10. மஹாவீரர்

### சமண சமயத்தின் கொள் கைகள்

மஹாவீரரின் பெற் றோர்கள் பார்சவ (Parsava) இயக்கத்தைப் பின்பற்றியவர்கள். மஹா வீரர் பார்சவ இயக்கக் கொள்கைகளையும் தத்துவங்களையும் விளக்கத்தினால் உயர்த்தி அதை நிலைநாட்டப்பட்ட சமயமாகவே மாற்றினார். மஹாவீரர், இவ்வுலகில் பிறப்பு இறப்பு என்னும் சுழலினின்றும் விடுபட்டு மோட்சம் (Moksha)

அடைவதே வாழ்வின் இலக்காக இருக்க வேண்டுமென்றார். நீதிநெறி முறைகளை வழிதவறாமல் பின்பற்றுவதின் மூலமே இவ்வீடுப்பேற்றை அடையமுடியும் என்றார். இல்வாழ்வில் ஈடுபட்டோர் பஞ்சரத்தனக் (Five Vows) கொள்கையைப் பின்பற்ற வேண்டும் என்றார். அக்கொள்கைகளாவன: தீங்கிழையாமை (Ahimsa) உண்மை பேசல் (Satya) திருடாமை (Asatya) எப்பொருளையும் கொள்ளாமை (Aparigraha) பிரம்மச்சரியம் (Brahmacharya) பிறன்மனை - நோக்காமை (Non-Adultery) ஆகும். மேலும் அவர்கள் சமண சமயத்தின் முப்பெரும் ரத்தினக் கொள்கையையும் பின்பற்ற வேண்டும். முப்பெரும் ரத்தினக் (Triratan) கொள்கைகளாவன: 1. மகாவீரர் மீது (Jina) நம்பிக்கைக் கொள்ளல். 2. சமணக் கொள்கையில் ஆழ்ந்த அறிவும், நன்னடத்தையும் வேண்டும்.

சமணத் துறவிகள் கடுந்துறவற (Tapas) வாழ்வை மேற்கொள்ள வேண்டும். அதன் மூலமாகத் தங்கள் ஆத்மாவைத் (Soul) தூய்மையாக்கிக் கொள்ள வேண்டும். எளிமையான் பற்றற்ற நிலையை (Celibacy) மேற்கொண்டு உலக வாழ்வைத் துறக்க வேண்டும். இவர்கள் தங்கள் தலைமுடியை ஒவ்வொன்றாக முழுமையும் எடுத்துவிட வேண்டும். மேலும் அடிக்கடி உண்ணா நோன்பிருப்பதைத் தொடர்ந்து இறுதியில் முழுப்பட்டினி (Starvation) இருந்து உயிர் துறக்க வேண்டும். உடல் மீதிருக்கும் ஆசையை அகற்ற உடையையும் களைந்து பிறந்த மேனியுடன் நிர்வாணமாக இருக்கவேண்டும். இவர்கள் தீங்கிழையாமையைத் (Ahimsa) தங்களின் வாழ்வின் ஒவ்வொரு நாளும் கட்டாயம் கடைப்பிடித்தே ஆக வேண்டும். மேலும் அவர்கள் தண்ணீரைக் கூடக் காய்ச்சக் கூடாது என்றனர். அப்போது அதிலுள்ள உயிரினங்கள் இறந்துவிடுவதால், அது கொல்லாமையை மீறிய குற்றம் ஆகும் என்றார். இவர்கள் மூக்கைத் திரையிட்டு (Veil) மூடிக்கொள்ள வேண்டுமென்றார். அன்றேல் சுவாசிக்கும் போது உயிரினங்கள் உள்ளே சென்று இறந்துவிடும். இவர்கள் மயில் பீலியை (Broom of peacock feathers) எப்போதும் வைத்திருக்க வேண்டும். சமணர்கள் நடக்கும் போது தங்களின் பாதம்பட்டு சிறிய உயிரினங்கள் இறந்துவிடும்; எனவே நடக்கும் போதே தரையைச் சுத்தம் செய்வதின் மூலம் அவ்வுயிரினங்கள் அகற்றப்படும் என்றார்.

இவைகளையே மஹாவீரர் வாழ்வின் உயர் தத்துவங்களாக மக்களுக்குப் போதித்தார். இவ்வுலகு அழியக் கூடியப்

பொருளாலும், அழியாத் தன்மையதான ஆத்மாக்களாலும் (Jiwas or Souls) ஆனதே. மனிதர்கள் மட்டுமன்றி, விலங்குகள், தாவரங்கள் மற்றும் கல்லுக்கும் உயிர் இருப்பதாகக் கருதினார். உயிர்கள் மீண்டும் மீண்டும் பிறக்கின்றன. அதற்குக் காரணம் தாங்கள் செய்யும் வினையும் (Karma) வினைப்பயனுமே (Samskara) ஆகும் என்கிறார். தூய்மையான உயிர் (Jiva) வினைப் பயனால் கறைபடிந்திருக்கிறது. வினைப் பயனைக்களையக் கடுமையான தவவாழ்வை மேற்கொள்ள வேண்டும். இதில் தீங்கிழையாமையே (Ahimsa) தலையாயது. பயிற்சியால் (Sadhana) உயிர் (Jiva) புனிதமாகும்போது நிலையான புகழ்மிக்க உயிராகின்றது. (Arhat or Paramatma) பரமாத்மன் என்பது எல்லையற்ற இன்பம், அறிவு, சக்தி ஆகியவற்றின் உறைவிடமாகின்றது. தன்னைத்தானே உண்மையில் உணர்ந்தவனே ஜீவன் முக்தி அடைந்தவன் ஆவான். மேலும் மறுபிறவி எடுக்கக் காரணமான உலகியல் ஆசாபாசங்களையும் வென்றவன் ஆகின்றான் என்கிறார்.

மஹாவீரர் கடவுள் நம்பிக்கையற்றவர். இவர் கடவுள் உண்டென்பதையோ அன்றிக் கடவுளே இவ்வண்டத்தைப் படைத்தார் என்பதையோ நம்பவில்லை. மஹாவீரரைப் பொருத்தவரை அண்டம் (Universe) அழிவற்றது. கடவுள் எனப்படுபவை அப்பழுக்கற்ற ஜீவன்களே (Soul). இவர் வேதங்களின் மேன்மையையும், கட்டளைகளையும் வேதச் சடங்குகளையும், பிராமணர்களின் மேலதிகாரத்தையும் அறவே வெறுத்தார்.

**சமண சமயத்தின் வளர்ச்சி**

தனது வாழ்நாளிலேயே மஹாவீரர் தனது கொள்கைகளுக்குப் பேராதரவு இருப்பதைக் கண்டார். பிம்பிசாரர் போன்ற பேரரசரின் ஆதரவைப் பெற்றார். மஹாவீரருக்கு 11 முக்கிய சீடர்கள் (Gandharas) அல்லது பதினொன்று முறைகளின் தலைவர்கள் (11 heads of schools) இருந்தார்கள். இவரின் மறைவுக்குப் பின்னர் ஆரிய சுதர்மன் (Arya-Sudharman) என்னும் இவரது மாணவர் சமண மடாலயத் தலைவர் ஆனார். இவருக்குப் பின்னர் ஜம்பு என்பவரும் இன்னும் சிலரும் தலைவரானார்கள். சமண சமயத்தின் வரலாற்றைக் கூறும் கல்ப் சூத்திரம் (Kalpa Sutra) என்னும் நூலை இயற்றிய சம்புத விஜயா (Sumbhuta Vijaya), பத்ரபாகு (Bhadrabahu) ஆகிய இருவரும் நந்தர்கள் ஆண்ட காலத்தில் சமண மடாலயத் தலைவர்களாக (Theras or

Pontiffs) விளங்கினார்கள். இவர்கள் சமண சமயத்தின் கோட்பாடுகளை 14 இயல்களாகத் (Purvas) தொகுத்து வெளியிட்டனர். சந்திரகுப்த மௌரியரின் ஆட்சிக்காலத்தில் பீஹாரில் கடும்பஞ்சம் ஏற்பட்டு 12 ஆண்டுகள் தொடர்ந்து நீடித்தது. இந்தப் பஞ்சத்தின் காரணமாகப் பத்ரபாகுவின் தலைமையின் கீழ் ஒரு சமணத் துறவியர் குழு, சந்திரகுப்த மௌரியருடன் தெற்கே மைசூர் பகுதிக்குச் சென்றது. சம்புதவிஜயரின் மாணவரான ஸ்துலபத்ரா (Stul Bhadra) என்பவர், அப்படிச் சென்றவர்கள் போக, பீகாரிலிருந்த எஞ்சியவர்களைக் கொண்டு கி. மு. 300-ல் பாடலிபுத்திரத்தில் முதல் சமண சமய மாநாட்டைக் கூட்டினார். இவர்கள் சமண சமயத்தின் கோட்பாடுகளை 12 அங்கங்களாகத் (Angas) தொகுத்தனர். தனது ஆதரவாளர்களுடன் மைசூரினின்றும் திரும்பிய பத்ரபாகு, இவர்கள் வகுத்த 12 அங்கங்களை ஏற்கமறுத்ததுடன் வெள்ளையாடை அணியும் இவர்களின் பழக்கத்தையும் ஒப்ப மறுத்தார். மேலும் சமண சமயம் உடையற்ற அம்மண நிலையையே ஆதரித்தது எனவும் வாதிட்டனர். எனவே இப்பிரிவைச் சார்ந்தவர்கள் திகம்பரர்கள் (Digambaras - Sky clad) எனவும் மற்றப் பிரிவினர் சுவேதாம்பரர்கள் (Swetambaras-white clad) எனவும் விளங்கினார்கள். இக்காலத்தில்தான் முதன் முதலாகச் சமண சமயத்தில் பிளவு ஏற்பட்டது. தேவர்தி சமஸ்சிரமணர் (Devardhi Kshamasramana) என்பவர் தலைமையில் கி. பி. 512-ல் குஜராத்திலுள்ள, வல்லபியில் கூடிய சமண சமய மாநாட்டில், 12 அங்கங்களாகப் பிரிக்கப்பட்ட, சமணக் கோட்பாடுகள், (சுவேதாம்பரர்கள் தொகுத்த தொகுப்பு) மீண்டும் திருத்தியமைக்கப்பட்டது. அர்த்தமகதி (Ardha Magadhi) மொழியில் எழுதப்பட்ட இந்நூல் இப்போது 11 அங்கங்களையே கொண்டிருக்கின்றது. காலப்போக்கில் சமண சமயத்தில் மேலும் பல பிளவுகள் தோன்றின. இவற்றில் ஒரு பகுதியினர் சமண சமய நூல்களையே வணங்கினர். இவர்கள் ஜெரபந்தியர்கள் (Jerapanthis) எனப்பட்டார்கள். இவர்கள் சுவேதாம்பரர்களில் ஒரு பிரிவினர்; சாமயர்கள் (Samaiyas) என்ற பிரிவினர், திகம்பரர்களினின்றும் வந்தவர்கள்.

காலப்போக்கில் சமண சமயம் இந்தியா வெங்கும் பரவியது. பத்ரபாகுவும் அவரின் சீடர்களும் சமண சமயத்தைக் கர்நாடகத்தில் பரப்பினார்கள். இதுவே பின்னர்த் தென் பகுதிகளில் பரவியது. சங்ககால இலக்கியமான நாலடியார், சமணத் துறவிகளால் இயற்றப்பட்ட நூலாகும். கி. மு.

முதல் நூற்றாண்டில் உஜ்ஜெயினி, சமண சமயத்தின் தலைமையிடமாக விளங்கியது. மகதநாட்டில் நந்தர்களும், மௌரியர்களும் இம்மதத்தை ஆதரித்தனர். காரவேலர் (Kharavel) என்ற அரசர் இச்சமயத்தைக் கலிங்கத்தில் பரப்பினார். குஷானர்களின் காலத்தில் இம்மதம் மதுராவிலும் (Mathura) பரவியது. குப்தர்கள் சமண சமயத்தை ஆதரித்தமையால் இம்மதம் மற்றும் இந்தியாவின் மத்திய மேற்குப் பகுதிகளிலும் நிலைத்துவிட்டது. ஹர்ஷரின் ஆட்சிக் காலத்தில் சமண மதம் இந்தியாவின் கிழக்குப் பகுதியிலும் பரவியது. ஐந்தாம் நூற்றாண்டில் இருந்த தென்னிந்திய அரசர் பரம்பரையினரான கங்கர்கள், கடம்பர்கள், சாளுக்கியர்கள் மற்றும் ராஷ்டிரக் கூடர்களும் சமண சமயத்திற்குப் பேராதரவு நல்கினார்கள். ராஷ்டிரக்கூட இனத்திலேயே சிறந்த மன்னராகக் கருதப்படும் அமோக வர்ஷர் (Amoghavarsha) சிறந்த சமண சமயத்தவர். அனைத்துச் சமணப் பிரிவினர்களாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட 'ரத்தினமாலிகா' (Ratnamalika) என்னும் நூலை இயற்றியவரும் இவரே. 12-ம் நூற்றாண்டில் குஜராத்தில் சாளுக்கியர்கள் சமண சமயத்தைப் பெரிதும் ஆதரித்தார்கள். முகலாயர்களின் ஆட்சியிலும் இம்மதம் செழித்தோங்கியது. பேரரசர் அக்பர் சமண சமய வல்லுநர்களை ஆதரித்தார்.

**சமண சமயத்தின் வீழ்ச்சி**

மக்களிடையே சமண சமயம் படிப்படியாகத் தனது செல்வாக்கை இழந்தது. மக்கள் இம்மதத்தின் கொள்கையான தீவிர அஹிம்சை, கடுந் துறவறம் ஆகிய கொள்கைகளை வெறுத்தனர். மேலும் இச்சமயம் பலபிரிவுகளாகப் பிரிந்தமையால் இதன் வளமையும் குறைந்தது. சாதிமுறை சமண சமயத்தில் நுழைந்ததோடன்றி அதன் உயிர்நாடியையே குலைத்துவிட்டது. சமண முறைப்படி கடவுள் இல்லையென்றாலும் பார்சவ (Parsava) மஹாவீரரையும் மற்றும் முன்னிலைத் துறவிகளையும் (Arhat) உருவ வழிபாட்டில் கடவுளராகவே மாற்றி விட்டனர். புத்த மதத்திற்கும் இந்து மதத்திற்கும் வேற்றுமை குறைந்து ஒன்றேபோல் காணப்பட்டதைப் போன்று, இம்மதத்தின் தனித் தன்மை இழந்து இந்துமதத்திற்கும் இதற்கும் வேறுபாடுகள் குறைந்துவிட்டது. பக்தி இயக்கத் தலைவர்களால் இந்து மதம் மறுமலர்ச்சி பெற்று உயர்ந்தபோது சமண சமயத்தைச் சார்ந்தவர்கள் இந்து மதத்திற்கே திரும்பவும் வந்தனர். காலப் போக்கில் அரசர்களது ஆதரவும் இம்மதத்திற்கு கிடைக்க

வில்லை. இந்தியாவின் மேற்குப்பகுதியும் கர்நாடகமும் தவிர ஏனைய இந்தியப் பகுதியில் சமண சமயம் வீழ்ச்சி யையே கண்டது. இராஜஸ்தானத்திலும், மத்தியப் பிரதேசத் திலும் சற்றே, குறைந்த ஆதரவு இருக்கின்றது. இம்மதத் தைச் சார்ந்தவர்களில் பெரும்பாலானோர் பெரு வசதி கொண்ட செல்வர்கள் ஆதலால், நன்கொடைகள் மிகவும் தாராளமாகத் தந்தனர். இதனால் இச்சமயத்தில் தர்மம் நிலைபெற்றுத். தர்ம சிந்தனையில் சமணம் இயங்கியது.

### இந்தியப் பண்பாட்டிற்கு சமண சமயத்தின் தொண்டுகள்

இந்தியப் பண்பாட்டில் சமண சமயத்தின் பண்புகளில் சில, அழிவற்ற உயர்ந்த இடத்தைப் பெற்றுவிட்டன. சமணர் கள் எங்குச் சென்றாலும் அப்பகுதியின் மொழியைப் பயின்று அம்மொழியின் மூலமே தங்கள் சமயத்தைப் பரப்பினார்கள். பிராகிருதம் பாலி, தமிழ் ஆகிய மொழிகளில் இவர்கள் இறவாத்தன்மை வாய்ந்த பல இலக்கியங்களை உருவாக் கினர். தமிழின் தலைசிறந்த இலக்கண நூல்களான தொல் காப்பியமும், நன்னூலும் மற்றும் சீவகசிந்தாமணி, வளையா பதி, குண்டலகேசி போன்ற சிறந்த இலக்கியப் படைப்பு களையும் தமிழ் கூறும் நல்லுலகிற்குக் காணிக்கையாக விட்டுச் சென்றனர். கன்னட மொழிக்கும் இவர்களின் தொண்டு குறிப்பிடும்படியாக இருக்கின்றது. வடமொழியிலும் இலக் கணம், அகராதி, குறியீட்டுமுறை (Lexicography) மற்றும் கணிதம் ஆகிய துறைகளில் இவர்களின் பணி சிறப்பான தாகும். சமண சமயக் கலைகளில் கட்டிடக்கலை, மிகவும் சிறப்பு வாய்ந்தது. மேலும் இவர்கள் ஸ்தூபிகள், கோயில்கள் கட்டினார்கள். அக்கோயிலில் முழு உருவச் சிலையையும் வைத்தனர். கோமதீஸ்வரரின் (Gomateswara) கம்பீர முழு உருவச்சிலை (70 அடி உயரம்) சிரவனபெலகோலா (Sravanabelagola) என்னுமிடத்தில் ஒரே கல்லில் செதுக்கப் பட்டுள்ளது. குவாலியருக்கு அருகிலுள்ள பாறைகளில் மிகப் பெரிய அளவில் செதுக்கப்பட்ட சிற்பங்களும், உதயகிரி, எல்லோரா, ஹத்திக்கும்பா ஆகிய இடங்களிலுள்ள சிற்ப வேலைபாடுகளும் சமண சமயக்கலைக்கு எடுத்துக்காட்டுகள் ஆகும். மேலும் பாவபுரியிலுள்ள கோயில், இராஜகிரி மற்றும் ஆபுமலையிலுள்ள கோயில், சித்தூர் சமணக் கோபுரம் ஆகியவை இன்றளவும் சமணத்தின் தொண்டைப் பறை சாற்றி நிற்கின்றன.

## சொராஸ்டிரிய சமயம்

பாரசீகத்தில் கி. மு. ஆறாம் நூற்றாண்டில் சொராஸ்டிரியச் சமயம் தோன்றியிருக்க வேண்டும். பாரசீகத்தில் தோன்றிய இச்சமயத்திற்கு இன்று பேரளவில் இந்தியாவில் மட்டுமே ஆதரவாளர்கள் இருக்கின்றார்கள். இந்தியாவிற்கும் மேற்குப் பகுதியில் வாழ்ந்த ஒரு இலட்சத்திற்கும் மேற்பட்ட பாரசீக மக்களால் பின்பற்றப்பட்ட சமயமே சொராஸ்டிரிய சமயம். ஃபார்ஸ் (Fars) மாநில மக்களைத் தவிர மற்றய பாரசீகர்கள் இச்சமயத்தை நீண்ட நெடுங்காலத்திற்கு முன்னரே துறந்து விட்டனர். கி. பி. ஏழாம் நூற்றாண்டில் அரேபியர்கள் (Arabs), பாரசீகத்தைத் தாக்கிய போது, இம்மக்கள் பெருத்தஅளவில் அகதிகளாக (Refugees), இந்தியாவிற்கு ஓடிவந்தனர். பாரசீக வழக்காறுபடி (Tradition) அகதிகளில் ஒரு பிரிவினர் கி. பி. எட்டாம் நூற்றாண்டில், முதன் முதலாகக் கத்தியவாரில் டையூ (Diu) என்னுமிடத்தில் குடியேறினார்கள். பின்னர்ப் பம்பாய்க்கு அருகிலுள்ள தானாவில் (Thana) குடியேறினார்கள். இவர்கள் பார்வைக்கு அழகாகவும், மிகச்சிறந்த நெறிகளையும் நன்னடத்தையும் கொண்ட சிறந்த மக்கள். இவர்கள், தொழில், வாணிபம், சமூக வாழ்க்கை ஆகிய துறைகளில் தங்கள் சேவையைக் குறைவின்றி இந்தியப் பண்பாட்டிற்கும் வளர்ச்சிக்கும் நல்கினர். இவர்கள் நேர்மை, பெருந்தன்மை ஆகிய சிறந்த குணங்கொண்டவர்கள். இவர்கள் தங்கள் பண்டைய சமய நூலைப் படிப்பதுடன், நெருப்பைப் புனிதமானதென வணங்குகிறார்கள். இவர்கள் தங்கள் வழக்கப்படி இறந்தவர்களைப் புதைக்காமல் அவர்களின் உடலைத் திறந்த வெளியில் அமைதி நிலவும் உயர்ந்த இடத்தில் (Towers of Silence) கழுகு போன்ற பறவைகளுக்கு உணவாக வைத்துவிடுவார்கள்.

### சொராஸ்டர் (Zoraster)

பண்டைக்கால மிடியா (Media) எனும் நாட்டில் ராஜஸில் (Rhages - ஈரானிலுள்ள டெக்ரானுக்கு அருகிலுள்ள புறநகர்ப் பகுதி) ஸ்பிடாமா (Spitama) எனும் பிரிவில் சொராஸ்டர் அவதரித்தார். அவர் தோற்றுவித்த மதமே **சொராஸ்டிரியம்** ஆகும். அவரது பிறந்த காலம் இன்னும் தெளிவாகத் தெரியவில்லை. அவர் பிறந்தது கி.மு. 570 அல்லது ஆறாம் நூற்றாண்டின் பிற்பகுதியாக இருக்கலாம் என ஊகிக்கப்படுகின்றது. பாரசீகப் புராதனக் கதை

களின்படி (Legends), அவரின் தந்தையார் ஒரு புரோகிதர் (Priest). ஹோமா என்ற ஒருவகைச் செடியின் (Homa plant) சாற்றை அவர் ஆண்டவனுக்குப் படைப்பது வழக்கம். அச்சாற்றை அவர் பருகும்போது ஆண்டவன் அதன் வழியாக அவரை அடைந்ததாகக் கூறப்படுகின்றது. அவருடைய அன்னையார் ஒரு செல்வந்தர் வீட்டில் பணியாளாக (Maid) வேலை பார்த்தார். பாரசிகப் புராதனக் கதைகளின்படி, சொராஸ்டிரரின் தந்தையார் ஹோமா சாற்றை அருந்திய அதேநேரத்தில், அவரது தாயாரின் மார்பில் ஒரு தேவதை ஒளிக்கற்றையாகப் புகுந்தது எனக் கூறப்படுகின்றது. அவ்வாறு தெய்வீகத் தன்மை கொண்ட அவ்விருவருக்கும் பிறந்த குழந்தையே சரதுஸ்டிரா (Zarathustra) ஆவர். கிரேக்கர்கள் அவரைச் சொராஸ்டர் என அழைத்தனர். அவர் பிறந்த அன்றே வாய்விட்டுச் சிரித்ததாகப் புராதனக் கதைகள் குறிப்பிடுகின்றன. இவர் நாட்டுப்புறச் சூழலில் விவசாயம், மற்றும் கால்நடை வளர்க்கும் விவசாயக் குடியினருடனே வாழ்ந்து வந்தார். இளம் சரதுஸ்டிராவிற்கு உலக வாழ்விலும், சுகத்திலும் அவ்வளவாகப் பிடிப்பு இல்லாமலேயே இருந்தது. தனது பிள்ளைப் பருவத்திலேயே அவர் அமைதியை நாடிக் காட்டுப் பகுதிக்குள் சென்று தனிமையில் தியானம் செய்ய ஆரம்பித்தார். அதுபோன்ற வேளையில் அவர் ஒரு துறவியைப் போலவே நடந்துகொண்டார். அச்சமயம் அடிக்கடி துர்தேவதையால் தூண்டப்பட்டார்! அவ்வாறு தீயசக்திகளால் (Devil) அலைக்கழிக்கப்படும்போது, தம்மை ஒரு ஒளிக்கடவுள் (Ahura Mazdah the God of Light) காப்பாற்றும் என்ற தீவிர நம்பிக்கைக் கொண்டிருந்தார். சொராஸ்டிரரின் கடுந்தவத்திற்குப் பின்னர் 'அகுர மஸ்தா' (Ahura Mazdah) எனும் தெய்வம் தோன்றி, 'அவெஸ்தா' (Avesta) எனும் வேத நூலைக் கொடுத்து, அவ்வறிவுப் பெட்டகத்தினை மனித இனத்தின் உய்விற்காகப் பயன்படுத்தும்படிகூறி மறைந்தது. அவ்வறிவுப் பெட்டகத்தின் கருத்துகளைப் போதிக்க ஆரம்பித்தவுடன், அவருக்கு கடும் எதிர்ப்புத் தோன்றியது. அவர் தனது எதிர்ப்பாளர்களைப் பொய்மையைப் பேணுவோர் (Follower of the Lie) எனச் சாடினார். எதிர்ப்பு அதிகமானபோது, அவர் ஈரானின் மேற்குப் பகுதியினின்றும் விலகி, கிழக்குப் பகுதியில் குடியேறினார். அவர் பாக்டிரியாவில் (Bactria) இருந்தபோது, அந்நாட்டு அரசன் விஷ்டாஸ்பா (Vishtaspa) என்பவர் சொராஸ்டிரரின் புதிய சமயத்தைத் தழுவினார். இவ்வரசனின் பேராதரவினால், அம்மதம் தழைத்தோங்க

நல்லதொரு வாய்ப்பினைப் பெற்றது. பாக்டிரியாவினின்றும் மிடியாவிற்கும் (Media), பின்னர் அங்கிருந்து பாரசீகத்திலும் அம்மதம் பரவியது. பாரசீக அரசகுலமான அக்கமீனியர்கள் (Achaemania) சொராஸ்டிரரின் சமயத்திற்குப் பேராதரவு நல்கினர். அன்றைய நாள் வழக்காற்றுப்படி சரதுஸ்டிரா தனது வயோதிகக் காலம் வரை வாழ்ந்தார் எனவும், தனது அந்திம காலத்தில் ஒளியுடன் கலந்து மறைந்தார் எனவும் நம்பப்படுகின்றது. கி. பி. பத்தாம் நூற்றாண்டின் கவிஞரான ஃபிர்தௌசியின் (Firdausi) கூற்றுப்படி, இவர் தனது 30ஆம் வயதில் மடாலயப் பணியைத் தொடங்கி, 42ஆம் வயதில் விஸ்டாஸ்பா (Vishtaspa) எனும் பாக்டிரிய அரசனைத் தமது சமயத்திற்கு மாற்றி, துரானியர்கள் (Turanians) பால்க்கின் (Balkh) மீது படையெடுத்த போது, தனது 72ஆம் வயதில் கொல்லப்பட்டார் என அறியலாம்.

**சொராஸ்டரின் போதனைகள்** (Teachings of Zoraster)

அக்காலத்தில் மிடார்கள் (Medas) மற்றும் பாரசீகர்கள் விலங்குகளையும், தங்களது முன்னோர்களையும், மற்றும் பூமி, சூரியன், எருது கடவுள் (Bull-God) ஹோமா எனும் செடி போன்றவைகளையுமே தெய்வங்களாக வணங்கினர். அத்தகு காலத்தில்தான் சொராஸ்டிரர் தனது போதனைகளை ஆரம்பித்தார். கடவுளின் பெயரால் போதை தரும் ஹோமா பானத்தையருந்தித் திளைக்கும் அவர்களின் காட்டுமிராண்டித் தனமான பழக்கங்களைக் கண்டு அதிர்ச்சியடைந்தார். அத்தகைய தீய பழக்கங்களைக் கண்டித்ததுடன், அத்தகு வழக்கங்களை வலியுறுத்திய அவர்களுடைய குருவான 'மாகி' (Magi) என்பவரையும் வன்மையாகச் சாடினார். 'அகுர மஸ்தா' ஒருவரே கடவுள் என்றும், அவரே உலகின் ஒளியாகவும், சொர்க்கமாகவும் திகழ்கின்றார் எனவும் போதித்தார். யூத சமயத் தலைவரைப் போன்றே இவரும் பல கடவுள் கொள்கையை மறுத்தும், 'புதிய ஒரு கடவுள் கொள்கையையே' (New Monotheism) சிறந்தது எனவும் வலியுறுத்தினார்.

அகுர மஸ்தாவே (Ahura Mazdah) சொர்க்கம், அவரே அனைத்தும், அவரைச் சுற்றியமைந்ததே உலகு என்கிறார். அவர் வானமே ஆடையாகவும் சூரிய, சந்திரர்களைக் கண்களாகவும் கொண்டவர்; மேலும் நேர்மை நியதியை நிலைநாட்டும் பெருஞ் சக்தியும் இவரே என்றார். இவரே

நல்ல, பயனுள்ள அனைத்து உயிரினங்களையும் படைத்தவர் எனவும், மக்களின் பாதுகாவலராகவும், அவர்களுக்கு உதவுடவ ராகவும், நல்பொருள் கொடுப்பவராகவும் இருப்பவர் இவரே எனவும் நம்பப் பட்டது. கடவுளின் ஆக்கப்பணியில் நெருப்பு, நீர், சூரியன் சந்திரன், காற்று, மழை போன்ற சிறு கடவுளர்கள் (Lesser Gods) உதவினார்கள். இவரின் தன்மைகள் ஏழு: அவைகளாவன: ஒளி, நல்ல எண்ணம், நேர்மை, உறைவிடம், இரக்கம், நல்முறை, அழிவின்மை என்கிறார். இக்கொள் கையைப் பின்பற்றியவர்கள் அழிவற்ற புனிதத் தன்மை பெற்ற தங்களின் குல தெய்வங்களை வணங்கினர். இந்தத் தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமாக அகுர-மஸ்தாவை வணங்கினார்கள். இவ்வாறு இம்மூல தெய்வத்துடன் பல காவல் தெய்வங்களையும் வணங்கினர். மேலும் புனித தேவதைகளினாலேயே மனிதன் நல்வழி நடக்கிறான். அது போலவே துர்தேவதைகள் மக்களை அழிவுப் பாதைக்கு அழைத்துச் செல்கின்றன என்கிறார். இவ்வநீதி களின் தலைவன் அங்ரோ-மெய்ன்யூஸ் (Angro - Mainyus) அல்லது 'அரிமன்' (Ahriman) ஆகும். இவரே இருளின் இளவரசன். மற்றும் இவரே பாதாள லோகத்தின் அரசன் என்றார். இவரே பாம்பு, (Serpants) அருவருக்கத்தக்க பூச்சிகள், (Vermin) வெட்டுக்கிளி (Locusts) எறும்பு, குளிர், (winter) இருள், குற்றம், பாவம், நோய் நொடிகள் போன்று உலகிலுள்ள கொடியவைகளைப் படைத்தவர் என் கிறார். அரிமனும் கிறித்துவச் சமயத்தில் கூறப்படும் சாத் தானைப் (Satan) போன்றதே. சாத்தான் ஆதாம், ஏவாளை அழிவுப் பாதைக்கு அழைத்துச் சென்றதைப் போலவே, இவனும் மக்களை நல்வழியினின்றும் விலக்கி, ஆண்டவனின் அரவணைப்பிலிருந்தும் பிரித்து, சொர்க் கத்தையும் இழக்கச் செய்கிறான்.

சொராஸ்டிரர், உலகம் தோன்றியதிலிருந்தே நல்லதும் கெட்டதும் ஆனசக்திகள் இருக்கின்றன வென்றும் அவை களும் ஆண்டவனைப் போன்றே அழியாத் தன்மையன என் றும் கூறுகிறார். ஒரே சக்தியிலிருந்து (Primordial Source) தோன்றிய இவ்விரு சக்திகளுமே உலகின் படைப்பிற்குப் பெருங் காரணம் ஆகும். இவை இரண்டிற்கும் ஏற்பட்டுள்ள போர் முடிவின்றி உலகு உள்ளளவும் தொடரும். இறுதியில் நன்மையே தீமையை வென்றிடும் என்கிறார்.

சிறு தேவதைகளில் மித்திரர் (Mitra) எனும் ஒளித் தேவதையும் (Spirit of light) நெருப்புக் கடவுளும் (Atars-

Spirit of fire) முக்கியத்துவம் பெற்றனர். எனவேதான் ஒரு சிலர் சொராஸ்டிர சமயம் நெருப்பை வழிபடும் சமயமெனவும், பாரசீகர்கள் தீயையே வணங்குபவர்கள் என்றும் கருதுகின்றனர். அவர்கள் நீர், சூரியன், சந்திரன், நட்சத்திரம், ஹோமா செடி போன்றவற்றிலுள்ள சக்தியையே வணங்கினார்கள். மேலும் இவர்கள் கெட்டத் தேவதைகள் மீதும் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். அக-மஞ்ச் (Aka - Manch - Evil Spirit) எனும் துர்தேவதை அஸ்மா (Asma) எனும் இரத்தக் காட்டேரி, மற்றும் பரிகாஸ் எனினும் மோகினிப்பேய் போன்ற கொடுந்தேவதைகள் இருப்பதாகவும் நம்பினார்கள்.

சொராஸ்டிரர் இறப்பிற்குப் பின்னர் இருப்பதாக எண்ணப்படும் வாழ்வுபற்றி தனிக்கருத்துக் கொண்டிருந்தார். மனிதன் இறந்து மூன்று நாட்களுக்கு அவனது ஆத்மா (ஆவி) உடலைச் சுற்றி அலைந்த பின்னர் சின்வேட் (Cinvat) எனும் பாலத்தைக் கடந்து இறந்தவர் சேரும் உலகை அடைவதாகக் கூறுகிறார். நற்செயலைச் செய்த மனிதனின் நல்லுயிர் அகுரர்வை நோக்கிச் செல்கிறதெனவும், அவை நல்தேவதைகளுடன் இணைந்து இன்புமுறுகின்றதென்கிறார். அதேபோன்று பாவ ஆத்மாக்கள் சின்வேட் எனும் பாலத்தைக் கடக்க இயலாமல் இருண்ட நரகத்தை அடைந்து தம்பாவத்திற்காகத் துன்புற்று விஷத்தையே உண்டு அமைதியற்று வாழ்கின்றன. இறுதியாக இறையருள் பெற்றவர்களில் ஒருவர் வருவார் என்பதை முன்னுரைக்கிறார். அவரே இறந்த உயிர்களின் ஆத்மாவை உயிர்த்தெழச் செய்வார். உயிர்களின் நடத்தைக் கேற்ப நீதி வழங்கப்படும். பின்னர் ஊழித் தீயால் உலகு அழிக்கப்பட்டு, புதிய உலகம் தோன்றும் என்றார். மூவாயிரம் ஆண்டுகள் கொண்ட நான்கு யுகங்கள் (epo...) சென்ற பின்னர் உலகம் அழியும். அந்நான்கு யுகங்களில் அகுர-மஸ்தாவும் அரிமனும் (Ahriman) மாறி மாறித் தலைமையேற்பர் என்கிறார். முடிவாக அகுரமஸ்தா எனும் ஆண்டவனே தீய சக்திகளை வென்று நிலைபெறுவார். புண்ணிய ஆத்மாக்கள் அகுர-மஸ்தா எனும் ஆண்டவனைச் சொர்க்கத்திலடையும் போது. பாவாத்மாக்கள் நரகத்தையே அடைகிறதென்றார்.

**சடங்குகள்** (Rituals) : சொராஸ்டிர சமயத்திற்குக் கோயிலோ அன்றி உருவ வழிபாடோ இல்லை. வழிபாட்டிடம் (Altars) மலையின் உச்சியிலோ அல்லது நகரின்

மையத்திலோ அமைக்கப்பட்டும். புனிதத் தீயை வளர்த்து அசுர-மஸ்தாவுக்கும் மற்றுமுள்ள சிறு கடவுள்களுக்கும் சிறப்பு செய்வர். தீயே எப்போதும் வணங்கப்பட்டது. ஒவ்வொரு குடும்பமும் தங்களது வீட்டு அடுப்பு எப்போதும் எரிந்து கொண்டிருக்க வேண்டுமென்பதைத் தங்களின் சமயத்தின் முக்கியமான சடங்காகவே கருதினார்கள். காலையிலும் மாலையிலும் என்றும் அணையா நெருப்பான சூரியக் கடவுளையே வணங்கினார்கள். மலர்கள், ரொட்டி, பழவகைகளை ஆண்டவனுக்குப் படைத்தனர். சில நேரங்களில் விலங்குகளையும் மனிதர்களையும்கூட ஆண்டவனுக்குப் பலியிட்டனர். போதையூட்டும் ஹோமா மதுவை ஆண்டவனுக்குப் படைத்துப் பின்னர் பக்தர்களுடன் பகிர்ந்து பருகினார்கள். ஆரியர்களைப் போன்றே பாரசீகியர் தங்களின் ஆண் குழந்தைகளுக்கு, வலமிருந்து இடமாகப் புரிநூலிட்டு, துறவியைப் போல் ஆடையணிவித்து மதச் சடங்குகளைச் செய்து தங்களின் வேதமான ஜென்ட்-அவஸ்தாவை (Zend Avasta) ஓதச் செய்தனர். அந்நாள் தொட்டு, தம் வாழ்நாள் வரை ஒவ்வொருவரும் அப்புரிநூலை அகற்றாமல் அணிந்திருக்க வேண்டும்.

**சொராஸ்டிர சமயத்தின் வீழ்ச்சி** (Decline of Zorastrianism)

காலப்போக்கில் சிறு தேவதைகளான மித்திரா, (Mitra) சூரியக் கடவுள், அனைதா எனும் (God of Vegetation and Fertility) வளமைத் தேவதைகள் போன்றவை மக்களிடம் பெருஞ்சிறப்பைப் பெற்றன. மாகி (Magi)எனும் சொராஸ்டிரிய சமயகுரு, புனித சமய நெறிகளைப் பின்பற்றிப் புறத் தூய்மையுடையவராய், எளிய உடையுடன், இறைச்சி போன்றவற்றை நீக்கிய எளிய உணவுகளை மேற்கொண்டு, தூய்மையான வாழ்க்கை நெறியைக் கடைபிடித்தமையால் மக்களிடையே நன்மதிப்பைப் பெற்றுத் திகழ்ந்தனர். மக்களினும் மன்னர்களிடையே நன்மதிப்பைப் பெற்றுத் திகழ்ந்தனர். இச்சமய குரவர்களைக் கலந்தாலோசிக்காமல் அவர்கள் எதையுமே செய்வதில்லை. டேரியேஸ், செர்க்கஸ் (Darius, Xerxes) போன்ற அக்கமீனிய வமிச அரசர்கள் ஆட்சிக்கு வந்தபின்னர், இச்சமயம் தனது தலையாய புனிதத்தை இழந்துவிட்டது. அலெக்சாண்டரின் படையெடுப்பு இச்சமயத்திற்குப் பேரழிவைத் தந்தது. அச்சமய நூலகம் முழுவதுமாகவே அழிக்கப்பட்டது. ஆனால், மீண்டும் சசானிய (Sassanians) வமிச அரசர்களால் ஓரளவுக்குப் புதுப்பிக்கப்பட்டது. இவ்வமிச அரசர்கள் இச்சமயத்தைத் தங்கள் நாட்டிலும் மற்றும் தொலை தூரங்களிலும் பரப்பினார்கள். கி. பி. 7ஆம் நூற்

நூற்றாண்டில் ஏற்பட்ட அரேபியர்களின் படையெடுப்பில் இம்மதம் தனது முடிவான வீழ்ச்சியைக் கண்டது. இம் மதத்தினர் பின்னர்த் தங்கள் மண்ணிலிருந்தும் பலவாறாகப் பிரிந்து உலகின் பல பகுதிகளிலும் பரவி னார்கள். இவர்களில் ஒரு பகுதியினர் இந்தியா வந்து பாரசீகர்கள் (Parsees) என இங்கேயே நிலைத்து விட்டனர். பிறந்த மண்ணினின்றும் பிரிந்து வேற்று மண் ணிற்கு வந்தாலும் தங்களின் சமயம், சடங்குகள், நெறி முறைகளை இழக்காமல் தாங்கள் இருக்கும் நாட்டுடன் இணைந்து விட்டார்கள். சிறந்த சமயமெனச் சீர்பெற்று விளங்கிய இச்சமயம், தான் தோன்றிய மண்ணிலேயே வீழ்ச்சியைக் கண்டது.

## கிறிஸ்தவம் (Christianity)

கிறிஸ்தவச் சமயம், இன்று நூறு கோடிக்கும் மேலான மக்களால் பின்பற்றப்பட்டுவரும் ஒரு மதமாகும். மிகப் பெரி யதும் உலகிலேயே மிக அதிகமாகப் பரவியுள்ளதுமான மதம் இதுவே எனலாம். அதேசமயம் இந்தியாவில் மிகப் பெருஞ் சமயங்களில் ஒன்றாகவும் இது திகழ்கின்றது. இச்சமயத்தின் ஆரம்ப காலப் போதகர்களில்சிலர்—கிறிஸ்துவின் சீடரான புனித தோமாவைப் போன்றோர், இந்தியாவுக்கு வருகை தந்தனர். புனித தோமா கி. பி. முதலாம் நூற்றாண்டிலேயே கொண்டோபர்னஸ் (Ghondophernes) எனும் பார்த்திய அரச னது சபைக்கு வருகை தந்து அவ்வரசனையும் கிறிஸ்தவச் சமயத்திற்கு மாற்றினார் எனக் கூறப்படுகின்றது. பின்னர் இவர் இந்தியாவின் கிழக்கு, மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் பயணம் செய்து கிறிஸ்தவத்தைத் தென் இந்தியாவிலும் பரப்பினார். இவரைச் சென்னையிலுள்ள பரங்கிமலையில் கொடூரமாகக் கொன்றனர் எனச் சொல்லப்படுகிறது. இவரது உடல் சென்னையிலுள்ள சாந்தோமில் அடக்கம் செய்யப் பட்டது. அங்கு இருக்கும் புனிததோமாவின் ஆலயம் (St. Thomas Church) இவராலேயே நிறுவப்பட்டதாகக் கருதப்படுகின்றது. சான்றாகக் கிறிஸ்தவச் சமயத்தின் மிகப் பழமையான பிரிவுகள் இங்குக் காணப்படுகின்றன. பழங் காலத்திலிருந்தே மேற்குக் கடற்கரைப் பகுதியில் சிரியன் கிறிஸ்தவர்கள் என்ற பிரிவினர் வாழ்ந்து வருகின்றனர். இந்தியாவெங்கும் கத்தோலிக்கரும் (Catholics) பிராட் டஸ்டென்டுகளும் (Protestants) மிகவும் வெகுவாகப் பரவினார். கிறிஸ்தவத்தைத் தழுவிய இந்தியர், தேசிய நல னுக்கும் இந்தியப் பண்பாட்டிற்கும் தங்கள் பணியைக் குறை யின்றி நிறைவு செய்தனர்.

**இயேசு கிறிஸ்து** (Jesus Christ)

கிறிஸ்துவ மதத்தைத் தோற்றுவித்த இயேசு நாதர் இஸ்ரவேல் நாட்டிலுள்ள பெத்லெகேம் என்னும் ஊரில் ஒரு யூதக் குடும்பத்தில் பிறந்தவர். அவரது வாழ்வு, வரலாற்றைப் பெரிதும் பாதித்துள்ளது. சான்றாக அவரது பிறப்பை வைத்துத்தான் கி. மு. (கிறிஸ்துவுக்கு முன்) என்றும் கி. பி. (கிறிஸ்துவுக்கு பின்) என்றும் வரலாற்றின் காலம் கணிக்கப் படுகின்றது. யூதத் தீர்க்க தரிசனத்தின்படி இயேசுநாதர் தாவீது அரசனின் வமிசத்தில் பிறந்தவர். யூதரின் மிகப்பெரிய அரசரான தாவீது கி. மு. 1055 முதல் 1015 வரை அரசாண்டார். தாவீது அரசருக்குப் பிறகு வந்த 14-வது தலைமுறையில் பிறந்தவர். அரசருக்குரிய செல்வம் யாவும் நாளடைவில் மறைந்த போதிலும் தாவீதின் சீரிய பண்பு அவரது குடும்பத்தில் நிலைநின்றது. தேவனது அதிசயமாக, மரியாள் எனும் ஒரு மங்கை தான் ஒரு கன்னிகையாக இருக்கும் போதே இயேசுவைக் கர்ப்பந்தரித்தாளென நம்பப்படுகிறது. இயேசுவை மகனாக ஏற்றுக்கொண்ட யோசேப்பு தச்சு வேலையில் ஈடுபட்டவர். வழிவழிவரும் நம்பிக்கைகளின்படி இயேசு அவதரித்த போது வானிலே ஒரு புதிய விண்மீன் தோன்றியது. கிழக்கத்திய ஞானிகள் சிலர் இவ்விண்மீனைப் பின் தொடர்ந்து வந்து, பெத்தலெகேமில் இக் குழந்தையைப் பணிந்து மகிழ்ந்தனர், பரலோகத்துத் தேவதூதன் ஒருவன்; புதிதாகப் பிறந்த இந்தக் குழந்தையே உலக இரட்சகரென அறிவித்தார்.

அவரது முப்பது வயதுவரை இயேசுநாதர் தன்னை மற்றவர்களுக்கு வெளிப்படுத்தவில்லை. தனது பெற்றோர்களுக்கு உதவி செய்தது போக, மீதி நேரத்தைத் தியானத்திலும் ஜெபத்திலும் செலவிட்டுத் தனது வாழ்வின் குறிக்கோளை அடைவதற்கேற்ற ஆயத்தங்களைச் செய்து கொண்டார்.

இயேசுநாதருக்கு முன் தூதுவனாக, யோவான்ஸ்நானகன் என்னும் தீர்க்கதரிசி இருந்தார். இவர் எளிய வாழ்க்கை நடத்தி வந்தார். யூதர்களிலும் அவர்களை ஆண்ட உரோமர்களிலுமுள்ள எல்லாத் தரத்தினரின் பாவங்களையும் ஒழுங்கற்ற வாழ்க்கையையும் கண்டித்தார். இயேசுநாதர் 30 வயதினராயிருக்கும்போது, அவரே மேசியா அல்லது இரட்சகரென யோவான் அறிந்து கொண்டார். அவருக்காகவே தீர்க்கதரிசனப்படி யூதமக்கள் அநேக காலம் காத்திருந்தனர்.

இயேசுநாதர் யூதர்களை உரோமானிய ஆட்சியிலிருந்து விடுவித்து, இஸ்ரவேல் தேசியத்தை நிலைநாட்டுவாரென அநேகர் தவறாகக் கருதினர். ஆனால், இசேயசுநாதருக்கு அரசியலோடு எவ்விதத் தொடர்புமில்லை. யோவான், இயேசுநாதரை, உலகத்தின் பாவத்தைச் சுமந்து தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டியெனச் சுட்டிக் காட்டினார். மக்களின் கவனத்தை அவருக்கு நேராகத் திருப்பினார். அநேகர் இயேசுநாதரைப் பின்பற்ற ஆரம்பித்தனர்.

பொதுமக்களிடம் ஊழியம் ஆரம்பிப்பதற்கு முன் இயேசுநாதர் சிலகாலம் சாத்தானால் சோதிக்கப்பட்டார். சுய திருப்தியையும், சுய நம்பிக்கையையும், சுய மகிமையையும் பின்பற்றும்படி அவர் தூண்டப்பட்டார். ஆனால், அவர் இச்சோதனைகளில் எல்லாம் மயங்காமல் வெற்றி கண்டார். தன்னைத்தான் தியாகம் செய்வதையும், மற்றவர்களுக்கு ஊழியம் செய்வதையும் மனித பாவத்திற்கே தன்னைக் கிருபாதார பலியாக அர்ப்பணம் செய்வதையும் குறிக்கோளாகக் கொண்டு மக்களின் பாவங்களைப் போக்குவதற்காகத் தன்னையே ஒப்பற்ற முறையில் தியாகம் செய்ய முன்வந்தார். அவர் தனது ஊழியத்தை ஆரம்பித்து, ''தேவனது இராஜ்யம் சமீபித்திருக்கிறது. உங்கள் பாவங்களுக்காக மனந்திரும்பி என்னை விசுவாசியுங்கள், ஏனென்றால் நான் உங்கள் பாவத்தை எடுத்துக் கொண்டு உங்களை விடுதலையாக்குவேன்'' என அவர் அறிவுரை கூறினார். பிறகு பலஇடங்களுக்கும் சென்று இந்நற்செய்தியைப் பரப்பினார். அநேகர் இவரைப் பின்பற்றினர். பல துறைகளிலிருந்து இவர் 12 சீடர்களைத் தெரிந்தெடுத்தார். சமயச்சடங்குகளைச் செய்வதைவிட நீதியான வாழ்க்கையே முக்கியமென வற்புறுத்தினார். இப்போதனை அக்காலத்து வைதீகம் நிறைந்த மதத் தலைவர்களின் உள்ளங்களைப் புண்படுத்தியது. தேவன் யூதமக்களுக்கு மாத்திரமல்லாமல் எல்லோருக்கும் தகப்பனெனக் கூறினார். ''நல்லொழுக்கமாக வாழத் தேவனிடமிருந்து 'நம்பிக்கை கொண்டு வந்திருக்கிறேன்'' எனக் கூறித் தங்கள் தீய வழிகளிலிருந்து திரும்புமாறு மக்களுக்கு அறிவுரை வழங்கினார். சடங்கு ஆச்சாரம் இவைகளைவிட அன்பும் பரிசுத்தமுமே மேலானவையென வற்புறுத்தினார். ஒருசமயம் கோயிலிலிருந்து வியாபாரிகளைக் கடிந்து கொண்டு அவர்களை விரட்டினார். தேவாலயம் ஒரு சந்தைக்கடையாக மாறினதற்காக வருந்தினார். பெரிய உற்சவங்களைவிடச் சிறிய பிரார்த்தனையே மேலா

னது எனக் காட்டினார், எல்லாவித மக்களையும் சேவித்து, தம்மிடம் வந்தவர்களையும் சேவித்தார். அவர் வியாதியஸ்தரை சுகமாக்கி, முடவனை நடக்கவைத்து, குருடனுக்குப் பார்வை அளித்து, குஷ்டரோகியைச் சுத்தமாக்கி எல்லாவித வியாதிகளிலுமிருந்து சுகம் அருளினார். மக்களின் கூட்டம் அவரை நெருக்கினது. யூதமார்க்கத் தலைவர்கள் இவர்மேல் பொறாமை கொண்டனர். இயேசுவின் மார்க்கத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அவர்களது மார்க்கம் கீழாகக் காணப்பட்டது. இயேசுவைக் கொல்லுவதற்கு உரோம அரசாங்கத்தின் உதவியை நாடினர். உரோம அதிகாரிகளிடம் சென்று இயேசு தேசத்துரோகி என்றும் அவர் உரோம அரசியலைக் கவிழ்க்க முயலுகிறாரெனவும் முறையிட்டனர். அவருக்கு விரோதமாக ஒரு சூழ்ச்சி செய்யப்பட்டது. யூதாஸ் இஸ்காரியோத் எனும் ஒரு போலியான சீடனுக்கு இலஞ்சம் கொடுத்து அவரைக் காட்டிக் கொடுக்க ஏற்பாடு செய்தனர். எருசலேம் நகரின் அருகிலுள்ள கெத்சமெனித் தோட்டத்தில் இரவில் ஜெபம் செய்து கொண்டிருக்கும்போது இருளில் இவரைக் கைது செய்தனர் யூத சபையின் முன் அவர் நிறுத்தப்பட்டார். அங்கு இயேசு துரோகம் செய்தவரென முடிவு செய்யப்பட்டது. தன்னை தேவ குமாரரென அறிவிப்புச் செய்ததனால் சமய மறுப்புச் செய்தவரெனக் கூறினர். மரண தண்டனைக்குத் தகுதி என முடிவுகட்டினர். ஆனால், யூத சபைக்கு மரண தண்டனை விதிக்கும் அதிகாரம் கிடையாது. எனவே, இவர் உரோமானியக் கவர்னர் பொந்திபிலாத்து (Pontius Pilate) முன்னிலையில் நிறுத்தப்பட்டு, சீசருக்கு (Caesar) எதிராகத் தேசத் துரோகம் செய்தாரெனக் குற்றம் சாட்டப்பட்டார். விசாரணையின் முடிவில் இயேசு குற்றமற்றவர் என்பதைக் கவர்னர் பிலாத்து கண்டுபிடித்தார்; ஆனால், யூதமார்க்கத் துத் தலைவர்களால் கூலிக்கு நியமிக்கப்பட்ட மக்களதிரள் இயேசு கொல்லப்பட வேண்டுமெனக் கூச்சலிட்டது. எனவே பிலாத்து மக்கள் திரளை மகிழ்விக்க எண்ணி இயேசுவைச் சிலுவையில் அறைய ஒப்புக்கொடுத்தார். போர் வீரர்கள் அவரை எள்ளி நகையாடி அடித்து, ஒரு முள் முடியை அவர் தலையில் வைத்தனர். பின் அவரைத் தன் சிலுவை வையைச் சுமந்து கொல்கதாமலைக்கு நடக்க வைத்தனர். இரண்டு திருடர்கள் மத்தியில் அவரைச் சிலுவையில் அறைந்தனர். அவர் இறந்து அடக்கம் செய்யப்பட்டார். மூன்றாம் நாள் அவர் கல்லறையிலிருந்து உயிர்த்தெழுந்தார். அழுது புலம்பிக்கொண்டிருந்த தனது சீடர்களுக்கு அவர்

வெளிப்பட்டார். அவர் தமது சீடர்களை உலகெங்கும் போய் நம்பிக்கையளிக்கும் தனது நற்செய்தியைப் பரப்புமாறு கூறினார். இயேசுவின் உயிர்த் தெழுதலால் தைரியமடைந்த அவரது சீடர்கள் ஆண்டவரின் நற்செய்தியை மக்களுக்கு அறிவிக்கத் தங்களை அர்ப்பணித்தனர்.

**இயேசுவின் போதனைகள்**

இயேசுவின் போதனைகளாவன கி.மு. 1491-ல் மோசே இஸ்ரேல்மக்களுக்கு அளித்த பிரமாணங்களின் முழுமையான விளக்கமேயாகும். மேலும் அவை நடைமுறைக்கொத்தவையாகும். மோசேயின் கட்டளை கூறுவதாவது ஒரே தேவன் உண்டு. அவர் எல்லோருக்கும் பிதா, அவரைத் தேடி அறிந்து அவருக்குப் பணிவிடைசெய்ய வேண்டும். நமது இஷ்டப்படி யாதொரு சொரூபத்தையும் செய்யக் கூடாது. இயேசுவின் போதனைகள் வருமாறு: (1) 'இயேசு தேவ குமாரர், ஒரேமெய்யான இறைவனின் சுபாவமும் தன்மையும் என்னவென மக்களுக்குத் தனது வாழ்க்கையின் மூலம் காட்டவே அவர் இவ்வுலகில் தோன்றியவர். (2) இயேசு மனித பாவத்திற்குப் பலியாகத் தன்னையே அர்ப்பணம் செய்தவர். இந்தப் பலியின் புண்ணியத்தால் யாரென்றாலும் தன் பாவத்திற்காக வருந்தி வரும்போது தேவனிடமிருந்து மன்னிப்புப்பெற்று, பாவத்தின்மேல் வெற்றி பெற்று வாழ வல்லமையைப் பெறுகின்றனர். (3) இயேசு பாவமற்ற தூய்மையான வாழ்க்கையை வாழ்ந்து, அதன் பின் தன் வாழ்க்கையைப் பலிகொடுத்தார். தனது தியாக பலி, தம்மிடம் விரும்பி வரும் எவரையும் பரிசுத்த தேவனோடு தொடர்பு கொள்ளச் செய்யும் என்று கூறினார். (4) தனது பலியைத் தவிர மனித பாவத்திற்கு வேறெந்த பலியும் தேவையில்லையெனக் கூறினார். (5) எல்லா மக்களும் சமமென்றும். நமது அயலகத்தாரிடம் அன்பு கொள்ள வேண்டுமென்றும் போதித்தார். மற்றவர்கள் உனக்கென்ன செய்ய வேண்டுமென எண்ணுகிறாயோ அதையே நீ மற்றவருக்கும் செய்ய வேண்டும் என்றார். (6) தனது விரோதிகளை மன்னித்து இயேசுநாதர் இறந்தார். தன்னைப் பின்பற்றுகிறவர்களும் அவ்விதமே செய்ய வேண்டுமெனக் கற்பித்தார். அவர்களுக்கு வாஞ்சையிருந்தால் அவர்களும் அவ்விதம் செய்யத் தேவன் வல்லமையை அளிப்பார். (7) இயேசுநாதர் சொன்னது தீமைக்குப் பதிலாகத் தீமை செய்யக் கூடாது. தீமையை நன்மையால்தான் வெல்லலாம்

(8) தன்னைப் பின்பற்றுகிறவர்களுக்கு துன்பத்திலிருந்தும் துன்புறுத்துதலிலிருந்தும் பாதுகாப்பு அளிப்பதாக அவர் வாக்களிக்கவில்லை. ஆனால், தொல்லை சூழ்ந்த நிலையிலும் கூட மனோ சமாதானத்தை அளிப்பதாக வாக்களித்தார். (9) மதச் சடங்குகளிலிருந்து மக்களின் மனத்தை அகற்றி, அன்பின் மூலமாய்ச் செயல்படுகின்ற தேவன் மேலுள்ள விசுவாசத்தைக் கற்றுக் கொடுத்தார். (10) மனித வாழ்வின் உயர்வு அநேகம் பொருள்களைச் சம்பாதிப்பதைப் பொருத்து அமைவது அன்று. தேவனையும் தன்னைச் சுற்றியுள்ளோரையும் நேசிப்பதைப் பொருத்தே அது அமையும். (11) இயேசு கிறிஸ்துவின் இறப்பும் உயிர்த்தெழுதலுமே அவரது எல்லாப் போதனைகளுக்கும் அடிப்படை. (12) இயேசு கூறியது இந்த உலகத்திற்கு ஒரு முடிவு உண்டு. மனிதரது ஒழுக்கமும், சன்மார்க்கமும் நாளுக்கு நாள் சீரழிந்து ஒரு பயங்கரமான நிலையேற்படும். அப்போது நான் வந்து இவ்வுலகில் ஒரு பரிபூரண அரசை நிலைநாட்டுவேன். என்னை உண்மையாகப் பின்பற்றுகிறவர்களுக்கு அதில் ஒரு பங்கு உண்டு. (13) இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு மனிதனும் உயிர்த்தெழப்பட்டுத் தனது வாழ்க்கைக்கு இறைவனிடம் கணக்கு ஒப்புவிக்க வேண்டும். இயேசுவின் மரணத்தின் மூலமாய் அவரது இரட்சிப்பைப் பெற்றவர்கள் தேவனோடு சதாகாலமும் வாழ்வார்கள். தங்கள் பாவத்திலிருந்து மனந்திருந்தி இறைவனது மன்னிப்பைப் பெறாதவர்கள் நரகத்தில் தள்ளப்படுவர்.

**கிறிஸ்துவத்தின் வளர்ச்சி**

இயேசுநாதர் விண்ணுலகை எய்தியபின் அவரது சீடர்கள் அவரின் போதனைகளான கிறிஸ்துவச் சமயக் கொள்கைகளை உலகின் பல்வேறு பாகங்களுக்கும் கொண்டு சென்றனர். புனிதத் தோமா பாதிரியார் இந்தியாவிற்கு வந்து இங்கே கிருஸ்துவ சமயத்தைப் பரப்பினார். சவுல் (Saul) என்ற யூதர் முதலில் கிறிஸ்துவச் சமயத்தினரைத் துன்புறுத்தினார். ஆனால், இயேசு இவருக்குக் காட்சியளித்துக் கிறிஸ்துவச் சமயத்தின் கொள்கையை உலகெங்கும் பரப்பக் கோரினார். இவரே புனிதப்பவுல் (St. Paul) எனத் தனது சமய மாற்றத்திற்குப் பின்னர்க் கிறிஸ்துவ உலகில் பெரும் புகழ் கொண்டார். முக்கியமாக இவரே கிறிஸ்துவச் சமயம் என்பது யூத மக்களுக்கு மட்டுமல்ல அனைத்துலகிற்குமே உரித்தானது என்றார். இயேசுவின் கொள்கைகளை இவரே உரோமானியத் தலைநகரில் பரப்பியவர். மேலும், இவர்

சிரியா, ஆசியாமைனர், மற்றும் மத்தியத் தரைக்கடல் நாடுகளிலும் அவற்றைப் பரப்பினார். உரோமானியப் பேரரசரை வணங்க மறுத்தமையால் நீரோ (Nero) மன்னரால் கி.பி. 64-ல் இவர் கொலை செய்யப்பட்டார். இயேசுவின் சீடர்களில் ஒருவரான பேதுரு உரோமில் கத்தோலிக்கத் திருச்சபையை நிறுவினார். இதுவே பின்னர்க் கிறிஸ்துவச் சமயத்தின் தலைமையிடமாக மாறியது. இக் கிறிஸ்துவச் சமயக் கோயிலில் எல்லா இன மக்களும் அனுமதிக்கப்பட்டனர். உரோமானியப் பேரரசரை வணங்க மறுத்தமையால் இவரும் கொல்லப்பட்டார். உரோமானியப் பேரரசின் இப்படு கொலைக்கு எண்ணற்ற கிறிஸ்துவச் சமயத்தினர் பலியானார்கள். இரக்க குணமும் அமைதியும் கொண்டு நல்லரசனாக விளங்கிய மார்க்கஸ் அரேலியஸ் (Marcus Aurelious) என்பவரும் கூடக் கிறிஸ்துவர்களைக் கொலை செய்வது என்பது மிகவும் அவசியமெனக் கருதினார். கிறிஸ்துவர்கள் இரத்தம் சிந்தச் சிந்த இச்சபை மிகவும் வலிவு கொண்டதாகவே விளங்கியது. இத் தியாகிகளின் இரத்தமே கிறிஸ்துவச் சமயத்தின் விதையாக மாறியது எனலாம். முடிவாக கி.பி. 313-ல் 'மிலான் ஆணையை' (Edict of Milan) வெளியிட்டுக் கிறிஸ்துவருக்கு உரிமைகள் வழங்கி, கிறிஸ்துவக் கொள்கையையும் பேரரசர் கான்ஸ்டன்டின் (Constantine) ஏற்றுக் கொண்டார்; மிகவும் குறுகிய காலத்தில் கிறிஸ்துவச் சமயத்தையே நாட்டின் மதமாகவும் மாற்றினார். பிற்காலத்தில் உரோமானியப் பேரரசு நாகரிகமற்ற முரட்டின வகுப்பு அரசர்களால் (Barbarian Kings) தாக்கப்பட்டு அழிந்தது. அந்நாட்டைக் கைப்பற்றிய அம்மன்னர்களும் அவர்தம் குடிமக்களும் கிறிஸ்துவச் சமயத்தை நாளடைவில் பின்பற்றினார்கள். கி.பி. 15-ம் நூற்றாண்டின் முடிவில் கிறிஸ்துவச் சமயம் ஏறத்தாழ ஐரோப்பியா முழுவதுமே பரவியதெனலாம். கிறிஸ்துவச் சமயமென்னும் ஆன்மீயப் பேரரசின் தலைநகராகவே உரோம் நகரம் விளங்கியது. போப்பாண்டவர் கத்தோலிக்கக் கிறிஸ்துவச் சமயத்தின் தலைவராக உரோம் நகரில் வீற்றிருந்தார். கி.பி. 16-ம் நூற்றாண்டில் திருச் சபையிலிருந்த குறைகளை மறுக்க ஜெர்மனியில் ஏற்பட்ட சமயச் சீர்திருத்த இயக்கம் (Reformation movement) காரணமாக, உரோமன் கத்தோலிக்கம், பிராட்டஸ்டென்டுகள் (சமய மறுப்பாளர்கள்) எனக் கிறிஸ்துவத்திலும் சமயப்பிளவு ஏற்பட்டது. பிராட்டஸ்டென்டுகளினின்றும் பியூரிட்டன்கள் (Puritans), ஆங்கிலிக்கன்கள் (Anglicans), மெத்தாடிஸ்டுகள் (Methodist)

எனப் பலப்பிரிவுகள் தோன்றலாயின. இவர்கள் உரோமன் கத்தோலிக்கரின் சில நம்பிக்கைகளை எதிர்த்தனர். உரோமன் கத்தோலிக்கர்களின் கொள்கையான 'புனிதப் பொருள் மாற்றும் கொள்கை (Transubstantiation)' பாவமன்னிப்புக் கோரல் (Auricular Confession) பாதிரிகளின் துறவு வாழ்வு ஆகிய கொள்கையை எதிர்த்தனர். ஆனால், இயேசுவின் கோட்பாடுகளிலும், அவரின் அடிப்படையான போதனைகளிலும் இவர்கள் நம்பிக்கைக் கொண்டிருந்தனர். இவர்கள் சத்தியவேதம் எனும் நூலைப் பின்பற்றினர். தற்காலத்தில் ஐரோப்பியர்கள் குடியேற்ற நாடுகளைப் பெற்றவுடன் அங்கெல்லாம் கிறிஸ்துவச் சமயத்தைப் பரப்பும் பணியைப் பாதிரிமார்கள் மேற்கொண்டனர்.

இந்தியாவில் கிறிஸ்துவத்தை உபதேசித்தவர்களே போர்த்துக்கீசியர்கள்தாம் எனலாம். சமய ஒறுப்புக் கொள்கையைக் கடுமையாகப் பின்பற்றியமையால், இவர்கள் தங்கள் முயற்சியில் தோல்வியே கண்டனர். ஆங்கிலேயர்களுக்கு வாணிகமே முக்கியமானதால் அவர்கள் மதமாற்றத்தை ஏற்கவில்லை. மேற்கத்திய ரோமன் கத்தோலிக்க மடாலயக் குழு மதுரா மடாலயத்தின் மூலம் எண்ணற்ற இந்துக்களைக் கிறிஸ்துவர்களாக மாற்றியது. கல்கத்தாவிலுள்ள செரம்பூர் மடாலயமும் (Serampore) அதிக அளவில் இந்துக்களை கிறிஸ்துவத்தில் இணைத்தது. இந்துக்களிடையே கிறிஸ்துவத்தைப் பரப்புவதில் கத்தோலிக்கர்களும் பிராட்டெஸ்டென்டுகளும் போட்டியிட்டுப் பணியாற்றினார்கள்.

**இந்தியப் பண்பாட்டிற்குக் கிறிஸ்துவத்தின் சேவை** (Christian Contribution to Indian Culture).

கிறிஸ்துவ மடாலயங்கள் கிறிஸ்துவின் நற்செய்தியைப் பரப்பவே இந்தியாவிற்கு வந்தவையெனினும் மிக விரைவில் இந்தியப் பண்பாட்டுடன் இணைந்ததோடல்லாமல், இந்தியத் தன்மையாக்கப்பட்டது (Indianized) இந்தியப் பாமரமக்களிடையே எழுச்சியை ஊட்ட இம்மதம் பெருந்தொண்டாற்றியது. இவர்களின் புகழ்மிகு சேவை, இந்தியாவில் கல்வியைப் புகுத்தி, இந்துக்களுக்கு அறிவுச் சேவையாற்றியதாகும். இயேசு சபை தன்னால் இயன்ற இடங்களிலெல்லாம் கல்வி நிலையங்களை அமைத்துச் சமயத்துறையை விடுத்து விஞ்ஞானக் கல்வியைக் கிறிஸ்துவச் சமய நெறிமுறைகளுடன் போதித்தனர். திருச்சியிலுள்ள புனித யோசேப்

கல்லூரியும் சென்னையிலுள்ள லயோலாக் கல்லூரியும் கத்தோலிக்கர்களால் நிறுவப்பட்டு இன்றும் கல்வித்துறையில் அரும்பணியாற்றிக் கொண்டிருக்கின்றன. தாம்பரத்திலுள்ள சென்னைக் கிறிஸ்துவக்கல்லூரி (MCC) திருச்சியிலுள்ள பிஷப் ஹிபர் கல்லூரி முதலியன பிராட்டஸ்டென்டு கிறிஸ்துவர்களினால் நிறுவப்பட்டு, இன்றும் கல்வித்துறையில் அரும்பெருஞ் சேவைச் செய்து மக்கள் மத்தியிலே ஓர் உயர்ந்த இடத்தைப் பெற்றுள்ளன. மேலும் இந்தியாவில் இலண்டன் மடாலயம், எண்ணற்ற உயர்நிலைப் பள்ளிகளை நிறுவியுள்ளது. மேலும் தொழிற் கல்விக்கூடங்களையும் தொழில் நுணுக்கக் கல்லூரிகளையும் நிறுவியுள்ளார்கள். இந்தியாவில் அச்சுக்கூடங்களை நிறுவிக் கல்வியறிவைப் பெருக்கினார்கள். வீரமாமுனிவர் என்னும் பெஸ்கி பாதிரியார் தலமொழியான தமிழைப் பயின்று, தேம்பாவணி என்னும் இலக்கிய நூலை வெளியிட்டுப் பெருமை செய்தார். இவரைப் போன்றே பாதிரியார்கள் அவ்வப்பகுதி மொழியினைப் பயின்று அதிலேயே தங்கள் பணியை மேற்கொண்டனர். கால்டுவெல் அவர்களும் தமிழில் புலமை பெற்றுத் திராவிட மொழியின் இலக்கணத்தைத் தொகுத்து எழுதினார். மற்றும் ஹிராஸ் பாதிரியார் போன்றோர். வரலாற்றிலக்கியம் படைத்தனர். இவரின், பல்லவர்கள், மற்றும் சிந்துச் சமவெளி நாகரிக ஆராய்ச்சி ஆகியவை இன்றும் குறிப்பிடும்படியாகச் சிறப்பாக அமைந்துள்ளன. பிறருக்கு அன்பு காட்டுவதையே கொள்கையாகக் கொண்ட கிறிஸ்துவம் தனது மடாலயங்களின் மூலமாகத் தூத்துக்குடிக்கு அருகில் அனாதை இல்லத்தையும் வேலூரில் ஒரு பிணிபோக்கும் மருத்துவ இல்லத்தையும் (Hospital) நிறுவியுள்ளது. மற்றும் தொழுநோய் மருத்துவமனையும் இவர்களின் நிறுவனமே. இந்தியர்களுக்குத் தன்னலமற்ற தன்மையைப் போதிக்க இவர்கள் ஓர் எடுத்துக்காட்டாகவே விளங்கினர். இந்தியச் சமுதாயத்திலே ஏழை எளிய வர்க்கத்தினருக்கு இவர்களின் சேவை ஒரு வரப்பிரசாதமாகவே அமைந்தது. இந்தியச் சாதிக் கொடுமையான தீண்டாமையை அகற்ற, பறையர், பரவர்கள் போன்றவர்களைத் தங்கள் சமயத்திலே இணைத்துக் கல்வி அறிவைத் தந்து மற்றக் கிறிஸ்துவர்களுடன் இணையாகவே உயர்த்திய பெருமை இச்சமயத்தையே சாரும். நாகாலாந்திலுள்ள மலைவாழ் மக்களான பண்பாடற்ற மக்களை, தங்கள் சமயத்திலே இணைத்து நாகரிகம் கொண்ட கல்வி அறிவு பெற்றவர்களாக மாற்றிய பெருமை தன்னலமற்ற கிறிஸ்துவச் சமயத்தையே சாரும், ஆனால், ஈண்டும்

கிறிஸ்துவச் சமயத்திலும் சாதிக் கொடுமையும் ஏற்றத் தாழ்வும் ஒழியாமை குறிப்பிடத்தக்கது. ஆனாலும், கிறிஸ்துவத்தின் மேன்மையாலேயே, சமுதாயத்தின் அடித் தளத்தில் அவலமுற்ற மக்கள், தங்கள் வாழ்விலே ஓர் ஒளிமயமான நம்பிக்கையைக் கொண்டு இயங்க முடிந்தது. தீண்டத்தகாதோர்களைத் தங்கள் சமயத்திலே இணைத்துத் தீண்டாமையை ஒழிப்பதிலும் இவர்கள் ஓரளவு வெற்றி கொண்டார்கள் எனலாம். நவீனகால இந்தியத் தலைவர் ளான சுவாமி விவேகானந்தர், நாராயணகுரு, பூலி, ஈ.வே. ராமசாமிப் பெரியார், காந்திஜி போன்ற பெருந் தலைவர்கள் தீண்டாமையை ஒழிக்கப் பெருஞ் சேவை செய்தனர். உரோமன் கத்தோலிக்க மடாலயங்களைப் பின்பற்றியே இராமகிருட்டின் பரமஹம்சரின் மடாலயத் துறவிகள், உயர்கல்வி நிலையங்களைத் தோற்றுவித்து, பெரும் சேவை செய்யத் துவங்கினர். தன்னலமற்ற சேவை, பகைவனுக்கும் அருளும்மனம், நேர்மை நியதிகளைத் துன்பத்துக்கு அஞ்சாமல் ஏற்பது. சுகவீனர்க்கும் பாதிக்கப்பட்டோர் களுக்கும் சேவை செய்தல் போன்ற கொள்கைகள் இந்தியாவில் கிறிஸ்துவச் சமயம் பரவும் முன்னரே இருந் திருப்பினும், இவர்களின் வருகையால் இக்கொள்கைகள் மேலும் வலுப்பட்டு வலுவான சமுதாயத்தைப் படைத்தன எனலாம்.

## இஸ்லாமிய சமயம்

இஸ்லாமிய சமயம் உலகில் உள்ள பெரிய சமயங் களுள் ஒன்று. இச்சமயம் இன்றைய உலக மக்களின் மூன் றில் ஒரு பகுதியினரால் பின்பற்றப்படுகிறது. சுமார் 100 கோடி முஸ்லிம்கள் உலகு எங்கும் பரவி வாழ்கின்றனர். இந்தியாவிலும் இஸ்லாமிய சமயம் பெருமளவில் பரவி யுள்ளது. இந்தியாவில், 6 கோடி முஸ்லிம்கள் உள்ளனர். முஸ்லிம்கள் அதிகமாக வாழும் நாடுகளின் வரி சையில் இந்தியா மூன்றாவது இடத்தைப் பெறுகிறது.

இஸ்லாம் என்பது ''ஆதிமனிதர் ஆதம் வழி இறைவன் உலகுக்கு வழங்கிய அறநெறியே ஆகும்'' என முஸ்லிம்கள் கருதுகின்றனர். அந்நெறி, நூஹ் (Noah), இப்ராஹீம் (Abraham), மூஸா (Moses), ஈஸா (Jesus) போன்ற ஆயிரக்கணக் கான இறை தூதர்களால் அவரவர் காலங்களுக்கு ஏற்ற வகை யில் போதிக்கப்பட்டு வந்தது. எனினும், அந்நெறி காலப் போக்கில் நலிந்தும் சிதைந்தும், மறைந்து போயிற்று.

எனவே, இறை தூதர் வரிசையில் இறுதியாகத் தோன்றிய முஹம்மது நபி, அந்நெறியை எல்லாக் காலங்களுக்கும் ஏற்ற நிறைவுடைய நெறியாக நிலை நாட்டினார்.

## முஹம்மது நபி [ஸல்]

முஹம்மது நபி (ஸல்) அரபு நாட்டில், மக்கமா நகரில், குறைஷியர் குலத்தில், ஹாஷிம் என்னும் கிளையில் தோன்றினார். இவர் கி.பி. 571ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 20ஆம் நாள் திங்கட்கிழமை பிறந்தார். இவருடைய தந்தையார் அப்துல்லா, தாயார் ஆமீனா என்பராவர். முஹம்மது பிறப்பதற்கு முன்னரே தந்தையாரும், பிறந்த ஆறு ஆண்டுகளில் தாயாரும் காலமாகி விட்டனர். எனவே இவர் தம் பாட்டனாராகிய அப்துல் முத்தலிபு என்பவரால் வளர்க்கப்பட்டார். ஆனால், முஹம்மது ஒன்பது வயதை அடைவதற்குள் இப்பாட்டனாரும், மறைந்து விட்டார். அதனால் முஹம்மது தம் பெரிய தந்தை அபூதாலிப் என்பவர் பராமரிப்பில் வளரலானார்.

முஹம்மது முறைப்படி கல்வி பயிலவில்லை; எனினும், சிறு வயது முதற்கொண்டே சீரிய பல நல்லொழுக்கங்களும், நற்குணங்களும், அமையப் பெற்றவராய் வளர்ந்து வந்தார். இவர் சிறுவராக இருக்கும்போது, தமது பெரிய தந்தையின் ஆடுகளை மேய்த்து வந்தார்; பின்னர், அவருடைய வாணிகத்திலும் உதவி புரியலானார்; தம் பன்னிரண்டாவது வயதில் பெரிய தந்தையின் வாணிகக் கூட்டத்தோடு சிரியா நாடு செல்லும் வாய்ப்பினைப் பெற்றார். வாணிகத் தொழிலை அவர் வழி அறிந்து கொண்டார்; தம் இருபத்தைந்தாவது வயதுவரை சிரியா முதலான நாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்து வந்தார்.

முஹம்மது பொய்யே சொன்னதில்லை. எல்லாருக்கும் நம்பிக்கைக்குரியவராகத் திகழ்ந்தார். அதனால் இவர் 'அஸ்ஸாதிக்' (உண்மையாளர்) 'அல் அமீன்' (நம்பிக்கையாளர்) என்னும் சிறப்புப் பெயர்களால் அழைக்கப்பட்டார். பிறருக்கு எத்தீங்கும் செய்திராத இவர் பிறர் நலனுக்காகப் பாடுபட்டார். குறைஷி குலத்தாரிடையே ஏற்பட்டு வந்த கலகங்களை எண்ணி வருந்தினார். அக்கலகங்களைத் தவிர்த்து அமைதியை ஏற்படுத்த விரும்பினார். அதற்காக 'ஹிஸ்புல் ஃபுஸூல்' என்னும் சங்கத்தை நிறுவ, குறைஷிக் குலப் பெரியவர்களுக்கு உறுதுணையாக நின்றார். சச்சரவு

ளைத் தவிர்ப்பது, பாதிக்கப்பட்டோருக்கு உதவுவது, பயணிகளைப் பாதுகாப்பது என்பன அச்சங்கத்தின் குறிக் கோள்களாகும்.

முஹம்மதின் வாணிகத்திறனும் சமூகத்தொண்டும் செல்வச் சீமாட்டியான கதிஜா என்பவரைக் கவர்ந்தன. அவ் வம்மையார் கணவரை இழந்தவர். அதனால் அவர் தம் வெளிநாட்டு வாணிகத்தைப் பரிபாலிக்க முஹம்மதை நிய மித்தார். அவரும் அவ்வாணிகத்தைச் சிறப்பாக முடித்துத் திரும்பினார். தமது வாணிகத்தைத் திறம்பட நடத்திய முஹம்மதின் நேர்மையையும் பெருமையையும் உணர்ந்து அவரையே மணந்து கொள்ள விரும்பினார் அவ்வம்மை யார். அப்போது அம்மையாரின் வயது நாற்பது. முஹம் மதின் வயது இருபத்தைந்து. ஆயினும், அவர்கள் திருமணத் திற்கு வயது வேறுபாடு தடையாக இருக்கவில்லை. அத் தம்பதியர் இருபத்தைந்து ஆண்டுகள் இனிதே இல்லறம் நடத்தினர்.

பலதார மணம் புரிவதைப் பெருமையாகக் கொண்ட வர்கள் அன்றைய அரபு மக்கள். ஆனால், முஹம்மது கதிஜா வோடு இல்லறம் நடத்திய இருபத்தைந்தாண்டுகளும் வேறு மணம் செய்துகொள்ளவில்லை. கதிஜாவையே ஏகத்துணை வியாகக் கொண்டு இனிதே நடத்திய இல்லறத்தின் பயனாக மக்கள் அறுவர் பிறந்தனர். அவருள் பாத்திமா என்பவரைத் தவிர ஐவரும் தந்தையாருக்கு முன்னரே இறந்துவிட்டனர்.

இத்திருமணத்துக்குப் பின்னர் முஹம்மது சமூக சேவை யில் முழுமையாக ஈடுபடலானார். தம் துணைவியாரின் செல்வத்தை அறநெறியிலும் சமூக சேவையிலும் செலவிட லானார். மக்கமா நகரிலுள்ள 'கஃபத்துல்லா' என்னும் இறை இல்லம் புதுப்பிக்கப்படும்போது, அதிலுள்ள 'ஹஜருல் அஸ்வத்' என்னும் கருங்கல்லை அதற்குரிய இடத்தில் எடுத்து வைக்கும் உரிமைக்காகக் குறைஷிக் குலத்தின் பல கிளையினரும் போட்டியிட்டனர். அதனால் பெரும் கலகமே விளைய இருந்தது. முஹம்மது தம் சாதுரியத்தால் அக் கலகத்தைத் தவிர்த்தார். அவர் ஒரு துணியில் அக்கல்லை எடுத்து வைத்து எல்லாக் கிளைத் தலைவர்களும் சேர்ந்து துணியைப் பிடித்துக் கல்லை உயர்த்தி அதற்குரிய இடத்தில் வைக்கும்படி செய்தார். அதனால், போட்டியிட்ட அனை வருக்கும் கல்லினை எடுத்து வைக்கும் வாய்ப்பினைக்

கொடுத்தார். அவர்கள் அனைவருமே மகிழ்வடைந்தனர்; அவரை அமைதி காப்பவர் என அழைத்தனர். எனவே, முஹம்மது புகழ் ஓங்கியது.

எனினும், அவர் மக்களின் வாழவில படிந்துள்ள கறைகளையும் குறைகளையும் கண்டு வருந்தினார். நாம் யார்? இந்த உலகத்தைப் படைத்தவர் யார்? இந்த உலகத்தில் எதற்காக நாம் பிறந்தோம்? இத்தகைய சிந்தனையிலேயே தோய்ந்தார். மக்கா நகரை அடுத்திருந்த 'ஹீரா' என்னும் மலைக் குகைக்குச் சென்று பல நாள்கள் தனித்திருந்து, பசித்திருந்து, விழித்திருந்து இறைவனை நினைந்து உருகினார். அப்போது இவருக்கு வயது நாற்பது நிறைவடைந்திருந்தது. ரமலான் மாதத்தின் ஓரிரவில் வானவர் தலைவர் ஜிப்ரீல் (Gabriel) ஹீரா' குகையில் இவர் முன் தோன்றி, இறை வசனங்களை ஓதிக் காட்டினார். இப்படியாக அவர் இறைவன் தூதராக நபியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். முஹம்மது 'ஹீரா' குகையில் தமக்கு ஏற்பட்ட புதுமையான அனுபவத்தைத் தம் துணைவியாருக்கு எடுத்துரைத்தார். அதைக் கேட்ட அத்தருணமே துணைவியார் கதிஜா அவரை இறைதூதராக ஏற்று, அவர் நெறியைப் பின்பற்றும் முதல் முஸ்லிமாக ஆனார். அவரைத் தொடர்ந்து அலி, ஆபூபக்கர், ஸைத் போன்ற பெருமக்கள் இஸ்லாத்தை ஏற்றனர். எனினும், முஹம்மது தம் கொள்கையை வெளிப்படையாகப் போதிக்க முன்வரவில்லை.

நபி பட்டம் பெற்ற நான்காம் ஆண்டில் முஹம்மது தம் கொள்கையை யாவருக்கும் எடுத்துரைக்கும்படி இறை ஆணை வந்தது. அதற்கொப்ப நபிகளாரும் தோழர்களும் வெளிப்படையாக இஸ்லாத்தைப் போதிக்கத் தொடங்கினார்கள். புதுக் கொள்கையையும், புது நெறியையும், புது வணக்க முறைகளையும் பொறுக்கமாட்டாத குறைஷியர் கொதித்து எழுந்தனர். இஸ்லாத்தை ஏற்போர் பலவகை இடுக்கண்களுக்கு ஆளாயினர். சிலர் கொல்லப்பட்டனர். ஆயினும், இஸ்லாத்தை ஏற்றோர் அதைத் துறக்கவில்லை. முஹம்மது நபிக்கு இறையருள் வெளிப்பாடு (வஹி) வந்துகொண்டே இருந்தது. இஸ்லாத்தின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்த நினைத்த குறைஷித் தலைவர்கள், நபிகளாரின் பெரிய தந்தையாரை அணுகி முஹம்மதுக்குப் பொன்னும் பொருளும் பதவியும் கொடுப்பதாகவும் அவர்

தும் போதனையை விட்டுவிட வேண்டும் என்றும் வேண்டினர். ஆனால், நபிகள் நாயகமோ ஒரு கையில் சூரியனும், மறு கையில் சந்திரனும் தந்தாலும் தம் கொள்கையை விட முடியாது என மறுத்துவிட்டார். அதனால், குறைஷியரின் தாக்குதல் மிகக் கடுமையாயிற்று.

இத்தகைய சூழ்நிலையில், நபிகள் நாயகம், முஸ்லிம்களில் சிலரை அபிசினியா நாட்டுக்கு அடைக்கலமாக அனுப்பி வைத்தார். நபிகளாரின் சிறிய தந்தையார் ஹம்சா என்பவரும் குறைஷியர் தலைவர்களில் ஒருவரான உமர் என்பவரும் இஸ்லாத்தை ஏற்றனர். இஸ்லாமிய இயக்கம் வலுப்பெறத் தொடங்கியது. அதனால் ஆத்திரம் அடைந்த குறைஷியர் நபிகள் நாதரையும், அவர் குடும்பத்தாரையும் சமூகக் கட்டுப்பாட்டால் புறக்கணித்து ஊரை விட்டு நீக்கி, ஒரு மலைப் பள்ளத்தாக்கில் ஒதுக்கி வைத்து, துன்புறுத்தினர். ஆனால், மக்கமா நகர இளைஞர்கள் சிலர் அக்கட்டுப்பாட்டைத் தகர்த்து அவர்களை விடுவித்தனர். சில நாள்களில் பெரிய தந்தையார் அபூதாலியும் அருமைத் துணைவியாரும் ஒருவருக்குப்பின் ஒருவராக மறைந்தனர். அவர்கள் மறைவுக்குப் பின் பகைவர் தொல்லை பன்மடங்கு பெருகலாயிற்று.

நபிகள் நாயகம் பக்கத்து ஊரான தாயிபுக்குச் சென்று தம் கொள்கையை விளக்க முற்பட்டார். தாயிப் வாசிகளோ சிறார்களை ஏவி நபிகள் நாயகரைக் கல்லால் அடித்தனர். நபியவர்களோ கல்லால் அடித்த மக்களை நல்வழிப் படுத்த இறைவனை இறைஞ்சியவாறு குருதி வடியும் கால்களுடன் மக்காவுக்குத் திரும்பினார்.

மக்காவில் நபிகளாருக்கு ஆறுதலளித்து அன்பு பாராட்ட வாழ்க்கைத் துணைவி இல்லாததை உணர்ந்த அபூபக்கர் தம் இளைய மகள் ஆய்ஷா என்பவளை அவருக்கு மணம் முடித்து வைத்தார். இஸ்லாத்தை ஏற்ற ஒரே காரணத்திற்காகத் தம் கணவரை இழந்து தவித்த விதவைக்கு மறுவாழ்வளிப்பதற்காக ஷௌதா என்பவரையும் நபிகள் நாயகம் மணந்து கொண்டார். இக்காலத்தில் ஓரிரவில் இறைவனுடைய அற்புதங்களைக் காண்பதற்காக மக்காவிலிருந்து ஜெரூஸலம் நகரில் இருக்கும் மஸ்தில் அக்ஸாவிற்கு ஜிப்ரிலோடு சென்றார். அங்கிருந்து விண்ணகம் ஏறி இறை சந்திதானம் அடைந்து இறைவனைக் கண்டு திரும்பினார் இந்த அற்புத நிகழ்ச்சி 'மிஃராஜ்' எனப்படு

கிறது. அதன் பயனாக, முஸ்லிம்களுக்கு ஐந்து நேரத் தொழுகை விதியாக்கப்பட்டது.

நபிகள் பெருமானார் மக்காவுக்கு ஆண்டுதோறும் வரும் பயணிகளுக்கு இஸ்லாத்தை எடுத்துச் சொன்னார். அதன் பயனாக, நபிப் பட்டம் வந்த பத்தாவது ஆண்டில் யத்ரீப் நகரிலிருந்து வந்த அறுவர் இஸ்லாத்தை ஏற்றனர். அந்த அறுவரும் அடுத்த ஆண்டு மற்றும் அறுவருடன் வந்து 'அகபா' என்னும் இடத்தில் இஸ்லாத்தை ஏற்று உறுதி மொழியும் எடுத்துக் கொண்டனர். இரண்டு ஆண்டுகளுக்குப் பின் யத்ரீப் நகரினர் எழுபத்து மூவர் வந்து, அவ்வுறுதி மொழியைப் புதுப்பித்துக் கொண்டனர். அவ்வுறுதி மொழிகள் இஸ்லாமிய வரலாற்றில் 'அகபா' உடன்பாடுகள் எனக் குறிக்கப் பெறுகின்றன. அகபா உடன்பாடு செய்தோர், நபிகள் நாயகரைத் தங்கள் ஊரில் வந்து குடியேற வேண்டினர். நபிகள் யத்ரீப் செல்லவிருக்கும் செய்தியை அறிந்த தோழர் சிலர் முன்னரே அங்குப் புறப்பட்டுச் சென்றனர். அச்செய்தியை அறிந்த பகைவரோ, நபிநாயகரைக் கொல்வதற்கு அபூஜஹல் தலைமையில் சதித் திட்டம் தீட்டினர். அதை அறிந்த நாயகம் அவர்கள் அபூபக்கரோடு பகைவர் பார்வையில் படாமல் வெளியேறித் 'தௌர்' என்னும் குகையில் மூன்று நாள்கள் மறைந்திருந்தார். பின்னர் நான்காம் நாள் யத்ரீப் நோக்கிப் பயணமானார். இந் நிகழ்ச்சி இஸ்லாமிய வரலாற்றில், ஹிஜ்ரத் (துறந்து செல்லல்) எனப்படுகிறது. இதிலிருந்து (கி.பி. 622 செப்டம்பர்) முஸ்லிம்களின் ஹஜிரி ஆண்டு தொடங்குகிறது.

முஹம்மது நபி தோழர்களுடன் யத்ரீப் போய்ச் சேர்ந்ததும் அங்கு மக்களால் அன்புடன் வரவேற்கப்பட்டார். நபி பெருமான் வருகையால் 'யத்ரீப்' என்னும் பெயருடைய அந்நகர் 'மதினத்துன்னபி' (நபிகள் நகரம்) எனப் பெயர் பெற்றது. பின்னர் 'மதினா' என்று சுருக்கமாக அழைக்கப்பட்டு இன்னமும் வழங்கிவருகிறது.

மதினா மாநகரம் வந்த நபிகளார் அங்குப் போட்டி பூசல்களினால் பிணக்குற்றிருந்த 'அவ்ஸ்' 'கஸ்ரஜ்', போன்ற பல கோத்திரங்களை ஒன்றுபடுத்தினார். அவர்களை அன்ஸார் (உதவுபவர்) என அன்பாக அழைத்தார். அவர்களோடு, மக்கமா நகரிலிருந்து அகதிகளாக (முஹாஜிரீன்) வந்த முஸ்லிம்களைச் சகோதரர்களாகப் பிணைத்தார்.

மக்கத்து முஹாஜிரீன்களும், மதினத்து அன்ஸாரிகளும் ஒருவருக்கொருவர் நெஞ்சாரத் தழுவி இஸ்லாமிய சகோதரத் துவ சமுதாயத்தை உருவாக்கினர்.

இச்சமுதாயத்தின் வளர்ச்சியைப் பொறாத மக்கத்துக் குறைஷியர், அதனைச் சீரழிப்பதற்குத் திட்டமிட்டனர். அதற்காக அபூசுப்யான் என்பவர் சிரியாவிலிருந்து பெரும் பொருள் திரட்டித் திரும்பும் செய்தி மதினாவுக்கு எட்டியது. நபிகள் நாயகம் அபூசுப்யானின் வாணிகச் கூட்டத்தை வழி மறிப்பதற்கு ஆயத்தம் செய்தார். அதனால் குறைஷியர் ஆயிரக்கணக்கானோர் அபூஜஹல் தலைமையில் மக்காவிலிருந்து படை யெடுத்து வந்தனர். முஹம்மது நபி 313 முஸ்லிம்களுடன் குறைஷியர் படையைப் 'பத்ர்' என்னும் இடத்தில் எதிர்த்துப் போரிட்டு, இணையற்ற வெற்றி பெற்றார். தோற்றோடிய குறைஷியர் மறு ஆண்டு 3,000 வீரர்களுடன் படையெடுத்து வந்தனர். அப்படையை எதிர்த்து 'உஹது' மலையடியில் 700 வீரர்களுடன் முஹம்மது நபி மும்முரமாகப் போராடினார். குறைஷியர் புறமுதுகிட்டாலும், முஸ்லிம்களுக்கும் சில சேதங்கள் ஏற்பட்டன. மீண்டும் ஹிஜ்ரி 5 ஆம் ஆண்டில் குறைஷியர் பத்தாயிரம் வீரர்களுடன் மதினா மீது படையெடுத்தனர். முஹம்மது நபியோர் 3,000 முஸ்லிம் வீரர்களுடன் ஓர் அகழி வெட்டிப் பகைவரைத் தடுத்து நிறுத்தினார்.

தம் தாயகத்தைத் துறந்து வந்த நாயகம் அவர்கள் ஆறு ஆண்டுகளுக்குப்பின் புனித ஃபத்துல்லாவைக் காணும் நோக்கில் 1,400 தோழர்களுடன் மக்கமா நகர் நோக்கிப் பயணமாயினர். அவர்கள் ஹுதைபிய்யா என்னும் இடத்தில் குறைஷியர்களால் தடுத்து நிறுத்தப்பட்டனர். குறைஷியர் பெருமானாரோடு ஓர் உடன்படிக்கை செய்துகொண்டனர். அது 'ஹுதைபிய்யா உடன்படிக்கை' என அழைக்கப்படுகிறது. இந்த உடன்படிக்கைப்படி, முஸ்லிம்களை மதினாவிற்குத் திருப்பி அனுப்பிவிட்டனர். எனினும், இவ்வுடன்படிக்கையின் பயனாக இஸ்லாம் பல பகுதிகளுக்கும் பரவத் தலைப்பட்டது.

ஹுதைபிய்யா உடன்படிக்கைக்கு மாறாகக் குறைஷியர் கஃபாவினுள் சில முஸ்லிம்களைக் கொன்றனர். இதற்குச் சமாதானம் கேட்ட மதினா வாழ் முஸ்லிம்களைக் குறைஷியர் போருக்கு அழைத்தனர். அதனால் ஹிஜ்ரி எட்டாம் ஆண்டு ரமலான் மாதம் முஹம்மது நபி பதினாயிரம் தோழர்

களுடன் மக்கா நோக்கிப் புறப்பட்டுச் சென்றார். ஆனால், குறைஷியர் பயந்து தலைமறைவாயினர். நபிகள் நாயகம் கத்தியின்றி இரத்தமின்றிக் கடும் பகையை வென்று பிறந்த நகரமான மக்கமாநகரைக் கைப்பற்றினார். சிறைப்பட்ட பகைவர் அனைவரையும் கருணை மழை பொழிந்து மன்னித்தார். அன்று முதல் இஸ்லாம் அரபு நாடு முழுவதும் பரவத் தொடங்கியது.

மக்கா வெற்றியின் பின்னரும், முஹம்மது நபி மதினாவிலேயே எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தார். ஹிஜ்ரி 10ஆம் ஆண்டில் 1,24,000 முஸ்லிம்களுடன் மக்காவுக்குச் சென்று இறுதி ஹஜ்ஜினை நிறைவேற்றினார். அப்போது அவர் ஆற்றிய பேருரை, இஸ்லாத்தின் இணையற்ற பெருமைகளை உலகுக்குப் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றது. இறுதி ஹஜ்ஜின் பின்னர் மதினா திரும்பிய அண்ணல் முஹம்மதுநபி (ஸல்) அவர்கள் ஹிஜ்ரி 11ஆவது ஆண்டு ரபியுல் அவ்வல் மாதம் பன்னிரண்டாம் தேதி (கி.பி. 632 ஜூன், 8) பேரமைதி பெற்றார்.

**நபிகள் போதனைகள்**

முஹம்மது நபி போதித்து நிலைநாட்டிய சமயம் இஸ்லாம் என வழங்கப்படுகிறது. 'இஸ்லாம்' என்னும் அரபுச் சொல்லுக்கு 'இறைவனுக்கு முற்றிலும் வழிபட்டுப் பணிந்து ஒழுகி, அதனால் சாந்தி அடைதல்' என்பது பொருளாகும். இஸ்லாத்தைப் பின்பற்றுவோர் 'முஸ்லிம்' என அழைக்கப்படுவர். இச்சொல் 'இறைவனுக்கு அடிபணிபவர்' எனப் பொருள்படும்.

இஸ்லாமியப் போதனைகள் திருக்குர்ஆனில் விரித்துரைக்கப்படுகின்றன. திருக்குர்ஆன் என்பது, நபிகள் நாயகம், வானவர் தலைவர் ஜிப்ரில் (Gabriel) மூலம் இறைவனிடமிருந்து, இறையருள் வெளிப்பாடாக (வஹி), அறிந்து சொன்ன அறப்போதமாகும். நபிகள் நாயகத்துக்கு இறையருள் வெளிப்பாடு (வஹி) அவர்கள் நபிப் பட்டம் பெற்ற நாளிலிருந்து இறுதி ஹிஜ்ஜி நாள்வரை இருபத்து மூன்று ஆண்டுகளாக வந்து கொண்டிருந்தது. தமக்கு வரும் இறையருள் வெளிப்பாடுகளை (வஹி) நபிகள் நாயகம் மக்களுக்கு எடுத்துச் சொல்லி வந்தார். அவற்றைக் கேட்கும் தோழர்கள் அவற்றை அப்படியே தங்கள் மனங்களில் பதித்துக்கொண்ட

தோடு எழுதியும் வைத்தனர். இப்படி எழுதிப் பாதுகாக்கப் பட்ட திருக்குர்ஆன் நபிகள் நாயகத்தின் காலத்திற்குப் பின் மூன்றாம் கலீபா உத்மான் என்பவரால் தொகுக்கப் பெற்றது. இதில் 114 அதிகாரங்கள் உள்ளன. அதிகாரம் 'சூரா' எனப் படும். ஒவ்வொரு சூராவிலும் பல வசனங்கள் உள்ளன. வசனம் 'ஆயத்' எனப்படும். திருக்குர்ஆனில் 6,666 ஆயத்கள் காணப்படுகின்றன. திருக்குர்ஆன் கூறும் அறப்போதத்தினை மூன்று வகையாகப் பிரிக்கலாம். நம்பிக்கை (ஈமான்), வணக்க முறை (இபாதத்து), இஸ்கான் (சன்மார்க்கம்) என்பவையே அவை.

திருக்குர்ஆனுக்கு அடுத்தபடியாக 'ஹதீது' போற்றப் படுகிறது. திருக்குர்ஆனுக்கு, நபிகள் நாயகம் சொன்ன விளக்கவுரைகளும், அவர்களின் அறிவுரைகளும்; அவர்கள் நடந்து காட்டிய நெறிமுறைகளும் ஹதீது எனச் சொல்லப் படுகிறது. திருக்குர்ஆனும் ஹதீதும் முஸ்லிம்களால் இரு கண்கள்போல் போற்றப்படுகின்றன. இவ்விரண்டின் அடிப் படையில், இஸ்லாமிய ஒழுகலாறுகளை நான்கு இமாம்கள் (வழிகாட்டிகள்) வகுத்துத் தந்துள்ளனர். அவை 'அனஃபி, ஷாஃபி, மாலிக்கி, ஹன்பலி' என அவர்கள் பெயர்களாலேயே அறியப்படுகின்றன. இந்த நான்கு ஒழுகலாறுகளில் ஏதேனும் ஒன்றினை முஸ்லிம்கள் பின்பற்றி ஒழுகுவர்.

இஸ்லாமிய போதனைகள் பின்பற்றுவதற்கும் எளிதா னவை. 'அல்லாஹ் அல்லால் இறைவன் இல்லை, முஹம்மது இறைவனின் தூதர்' என்னும் பொருள் பொதிந்த தாரக மந்திரத்தை (கலிமா) மனம், மொழி, மெய்களால் மெய்ப் பித்துச் செயலாற்றுவதே இஸ்லாமியத்தின் அடிப்படை யாகும். இவ்வடிப்படை நம்பிக்கை, செயல் என்னும் இரு கூறுபாடுகளைக் கொண்டிருக்கிறது. நம்பிக்கை என்பது 'ஈமான்' எனப்படும். அது ஆறு காரியங்களைக் கொண்டு நெஞ்சார நம்பி உறுதி கொள்வதாகும். அவை வருமாறு:

1 படைப்புகள் அனைத்தும் படைத்துக் காத்துப் பரிபாலிக்கும் பரம்பொருளே அல்லாஹ் (இறைவன்). அல்லாஹ் ஒருவனே; அவனே வணக் கத்திற்குரியவன்

2 அல்லாஹ் வானவர்களைப் படைத்துள்ளான்; அவ் வானவர் அல்லாஹ்வுக்குப் பணிந்து அவன் ஏவல் களை நிறைவேற்றி வருகின்றனர்.

3. அல்லாஹ் மக்களுக்கு நேர்வழி காட்டுவதற்காக அவ்வக் காலங்களில், பல வேதங்களை அருளியுள்ளான்.

4. அல்லாஹ், மக்களுக்கு அறப்போதம் செய்வதற்காக உலகின் பல்வேறு பகுதிகளிலும் தன் தூதர்களைத் தோன்றச் செய்தான்.

5. உலக இறுதிநாளின் பின் தீர்ப்பு நாள் உண்டு. அந்நாளில் மக்களின் நன்மை தீமைக்குரிய பயன் அளிக்கப்படும்.

6. நன்மை, தீமை அனைத்தும் அல்லாஹ்வின் ஆதிக்கத்திற்கு உட்பட்டவையாகும்.

இந்த ஆறு காரியங்களையும் உறுதியாக நம்பி, அகத்தில் 'ஈமான்' (நம்பிக்கை) கொண்டோர், புறத்தில் மேற்கொள்ள வேண்டிய செயல்முறைகள் ஐந்தாம். அவை 'அமல்' எனப்படும். அவையாவன:

1. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் அல்லாமல் வேறு யாரும் எதுவும் இல்லை; முஹம்மது அல்லாஹ்வின் திருத்தூதர் என்று சான்று பகர்தல்.

2. அல்லாஹ்வை, நாள் ஒன்றுக்கு ஐந்து வேளை வைகறை முதல் இரவு வரை மனம், மொழி, மெய்களால் பணிந்துள்ளித் தொழுதல்.

3. பொருளாதார வசதி படைத்தோர், தம் முதலின்றும் இரண்டரை சதவிகிதம் 'ஜக்காத்' என்னும் ஏழை வரி கொடுத்தல்.

4. ஆண்டுக்கொருமுறை ரமலான் மாதம் முழுவதும், விடிவெள்ளி தோன்றுவதற்கு முன்னிலிருந்து மாலையில் சூரியன் மறைவது வரையிலும், உண்ணாது, பருகாது, புலன்களை அடக்கி, இறைவனுக்காக நோன்பு இருத்தல்.

5. பயணம் மேற்கொள்ளும் வசதியும் வலிமையும் உடையோர் வாழ்நாளில் ஒரு முறையேனும் மக்க மாநகர் சென்று 'கஃபா' என்னும் ஆலயத்தின் ஹஜ் செய்தல்.

இவ்வைந்து செயல்களும் (அமல்) இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகளாகும்.

இஸ்லாம் மேற்கண்ட கொள்கைகளை வலியுறுத்துவதோடு சிறந்த சன்மார்க்க சமுதாயத்திற்கான பண்பியல்களையும் உருவாக்கித் தந்துள்ளது. மனிதன் தன்னைப் படைத்த இறைவனுக்கு மட்டுமன்றி, தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும், தன் சுற்றுச் சூழலில் வாழ்பவருக்கும் ஆற்றவேண்டிய கடமைகளையும் இஸ்லாம் வலியுறுத்துகிறது. ஒருவனுடைய வணக்கமும், தியாகமும், வாழ்வும், தாழ்வும் அனைத்துலக அதிபதியாகிய இறைவனுக்காகவே இருக்க வேண்டும் என்பது இஸ்லாம் காட்டும் இறையுணர்வின் உயிராகும். இந்த உயிருக்கு உரம் அளிப்பது அறிவாகும். அதனால் இஸ்லாம் அறிவினைத் தேடிக் கொள்வதை ஆண், பெண் ஆகிய அனைவர் மீதும் கடமையாக்குகிறது. எச்சந்தர்ப்பத்திலும் நீதியே செலுத்தும்படியும், நீதியை நிலைநாட்டுவதில் உறுதியான சாட்சியாக இருக்கும்படியும் திருக்குர்ஆன் கட்டளையிடுகிறது. ''உண்மையையே பேசுங்கள்! வாக்குறுதியைக் காப்பாற்றுங்கள், அடைக்கலத்தைப் பாதுகாருங்கள். உங்கள் எண்ணமும் செயலும் தூய்மையாக இருக்கட்டும். பாபத்தை விட்டு விலகி விடுங்கள்'' என நபிகள் நாயகம் நல்லொழுக்கத்திற்கு வழிகாட்டுகின்றார். 'பூமியில் அடக்கமாகவும் பணிவாகவும் நடப்பவர்களே நன்றிமிக்க இறையடியார்கள்' எனக் கூறி நன்னடத்தைக்கு இலக்கணம் வகுத்துள்ளது திருக்குர்ஆன். 'மாதாவின் பாதத்தடியில் சுவனம் இருக்கிறது' எனத் தாயின் சிறப்பினை எடுத்துக் காட்டுகின்றார் நபிகள் நாயகம். 'மனிதனுக்கு நன்றியில்லாதவன் இறைவனுக்கு நன்றியில்லாதவன்' எனக் கூறி நன்றியுடைமையை வலியுறுத்துகிறது இஸ்லாம். இதுபோலவே, 'இரக்கமில்லாதவன் இறைவனில் நின்றும் வெகு தொலைவில் இருக்கின்றான்' என இரக்கமுடைமையும் எடுத்துக் காட்டப் படுகிறது. 'துன்புற்றபோதும் பொறுமையோடு தொழுகையை மேற்கொள்வாரோடு இறைவன் இருக்கின்றான்' எனப் பொறையுடைமை போற்றப் படுகிறது. 'பணிவு நம்பிக்கையின் ஓர் அங்கம்' எனப் பணிவுடைமை பாராட்டப் படுகிறது. 'வியர்வையது உலரும் முன்னர் வேலை செய்தோர் கூலியினைக் கொடுத்துவிட வேண்டும் எனப் பணிக்கின்றார்' நபிகளார். பெற்றோர் சொத்திலும் கணவர் சொத்திலும் பெண்களுக்கு உரிமை வழங்கியது இஸ்லாம். கணவன்மாருக்கு மனைவியாரிடம் உள்ள உரிமைகள் மனைவியாருக்குக் கணவர் மாட்டும் உண்டு என்ற உரிமையும் வழங்கி ஆண் பெண் சமத்துவத்துக்கு வித்திட்டது இஸ்லாம். வட்டி

வாங்குதல், மது அருந்துதல், சூதாடுதல், விபச்சாரம் போன்ற தீய சமூக நோய்களுக்குத் தடை விதித்துள்ளது இஸ்லாம். இப்படியாக மனித வாழ்க்கையில் ஒவ்வொரு கோணத்துக்கும் வழிகாட்டும் நெறிமுறைகளை இஸ்லாம் வகுத்துள்ளது.

**இஸ்லாமிய சமயத்தின் வளர்ச்சி**

நபிகள் நாயகம் இஸ்லாமிய சமயம், இஸ்லாமியப் பேரரசு ஆகிய இரு துறைகளுக்கும் தலைவராக இருந்து இஸ்லாத்தை அரபு நாடு முழுவதும் வேரூன்றச் செய்தார். இஸ்லாத்தின் தலைநகராக மதினா மாநகர் திகழ்ந்தது. நபிகள் நாயகத்தின் மறைவுக்குப் பின்னர், அவருடைய நற்றோழரும் மாமனாருமாகிய அபூபக்கர் இஸ்லாமியப் பேரரசின் தலைவராக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். இவர் நபிநாயகத்தின் பிரதிநிதியாக இருந்து, ஆட்சியை மேற்கொண்டார். அதனால் 'கலீபத்து ரசூலுல்லாஹ்' (இறைதூதரின் பிரதிநிதி) என்று இவர் அழைக்கப்பெற்றார். இதுவே, பின்னர் 'கலீபா' (பிரதிநிதி) எனச் சுருக்கமாக வழங்கப்படலாயிற்று. இஸ்லாமிய வரலாற்றில் அபூபக்கரே முதல் கலீபா ஆவர். கலீபாவின் ஆட்சி 'கிலாபத்' என அழைக்கப்பட்டது. அபூபக்கரைத் தொடர்ந்து உமர், உதுமான், அலி ஆகியோர் ஒருவருக்குப் பின் ஒருவராக கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். இந்நால்வரும், நேரிய முறையில் ஆட்சி செய்தனர். ஆதலால் 'குலபாயே ராஷிதின்கள்' (நேர்வழியில் ஆட்சி செய்த நல்லோர்) என இவர்கள் போற்றப்படுகின்றனர். இவர்கள் காலத்தில் எகிப்து, பாரசீகம், சிரியா, பாபிலோன், அசிரியா போன்ற நாடுகளில் இஸ்லாமிய சமயமும் இஸ்லாமிய ஆட்சியும் விரிவடைந்தன.

நான்காம் கலீபா அலி அவர்களுக்குப்பின் உண்மையான 'கிலாபத்' ஆட்சி முடிவுறலாயிற்று. இவருக்குப்பின் கலீபாவான மூஆவியா என்பவர் உமையா பேரரசை ஏற்படுத்தினார். இவர்கள் ஆட்சி எதேச்சாதிகார ஆட்சியாக இருந்தது. எனினும், உமையா கலீபாக்களுள் உமர் இப்து அப்துல்அஸிஸ் ஆட்சி நேர்வழி நின்ற நான்கு கலீபாக்களைப் பின்பற்றியதாக இருந்தது.

டமாஸ்கஸ் நகரைத் தலைநகராகக் கொண்டு சுமார் 92 ஆண்டுகள் ஆட்சி நடத்தினர் உமையா அரசினர். அவர் ஆட்சியினை அப்பாஸியாக்கள் முறியடித்து, பகுதாதில் அப்பாஸியப் பேரரசினை நிறுவினர். அப்பாஸியர் பரம்பரையில்

37 பேர்கள் கலீபா பதவி வகித்தனர். இவர்களுள் ஹாருன் அல் ரஷித், அல்மாமுன் ஆகியவர்கள் சிறப்பாக ஆட்சி நடத்தினர். இவர்கள் காலத்தில் துருக்கி, வடஆப்பிரிக்கா, ஸ்பெயின் முதலான நாடுகளில் இஸ்லாமிய ஆட்சி பரவியது.

கி. பி. எட்டாம் நூற்றாண்டிலேயே இஸ்லாம் இந்தியாவில் பரவத் தலைப்பட்டது. உமையது கலீபா முதலாம் வலிது காலத்தில் முஹம்மதுபின் காஸிம் சிந்து மாநிலத்தைக் கைப்பற்றினார் (கி.பி. 711—712). பதினொன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கஜினி நாட்டு சுல்தான் மஹமூத் கஜினி பலமுறை இந்தியா மீது படையெடுத்தார். இதன்பின் சுல்தான் முகம்மதுகோரி இந்தியா மீது முப்பதாண்டுகள் படையெடுத்துக் கொண்டிருந்தார். இவர் இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சிக்கு வித்திட்டார். கி.பி. 1206ஆம் ஆண்டில் முகம்மது கோரியின் பிரதிநிதியான குத்புதின் ஐபக் டில்லியிலிருந்து அரசாளத் துவங்கினார். இவருடைய வழியினர் அடிமை வம்சத்தார் என அழைக்கப்படுகின்றனர். இவர்களைத் தொடர்ந்து கில்ஜி அரசு பரம்பரை கி. பி. 1290 முதல் கி. பி. 1321 வரை ஆட்சி செய்தது. இவர்களைத் தொடர்ந்து, துக்ளக், ஸையித், லோடி என்னும் பரம்பரையினர் வடஇந்தியாவை ஆட்சி செய்தனர். லோடி வமிசத்தை வீழ்த்திய பின்னர் மொகலாயப் பேரரசர்கள் கி.பி. 1526-லிருந்து மூன்று நூற்றாண்டுகள் இந்தியாவை ஆண்டனர். மொகலாயப் பேரரசரான அவுரங்கசீப் இஸ்லாமிய சமய அறநெறிகளை வழுவாது கடைபிடித்து எளிய வாழ்க்கை நடத்தி வந்தார்.

தென் இந்தியாவில் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் முஸ்லிம் வாணிகர்கள் மூலம் இஸ்லாம் அறிமுகமாயிற்று. மேற்குக் கடற்கரையில் வந்து இறங்கிய முஸ்லிம் வாணிகர்களின் பழக்கவழக்கங்களையும் வணக்கத்தினையும் கண்ட பலர் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டனர். அப்படி ஏற்றுக் கொண்டவர்களின் மகளிரை அரபு நாட்டிலிருந்து வந்த முஸ்லிம் வாணிகர் மணந்து கொண்டனர். இவர்கள் 'மாப்பிள்ளைகள்' என அழைக்கப்பட்டனர். அவர்களுடைய சந்ததியார்கள் இன்று மாப்பிள்ளைகள் (Moplahs) என அழைக்கப்படுகின்றனர். இஸ்லாமிய ஆன்மீகச் செல்வர்கள் தம் சமயத்தை இந்தியாவின் மேற்குக் கடற்கரையில் பிரசாரம் செய்தனர். அதனால், இஸ்லாமிய சமயம் தென் இந்தியாவில் தோன்றியது. மதுரை மாநகரைப் படையெடுத்து வந்த

கில்ஜி படையினரை எதிர்த்துப் போராடிய தென்னகப் போர் வீரர்களிடையே முஸ்லிம் வீரர்களும் இருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

இப்படியாக முஸ்லிம் மன்னர்கள் தென்னிந்தியா மீது படையெடுப்பதற்கு முன்னரே, தென்னகத்தில் இஸ்லாம் பரவி இருந்தது. முஸ்லிம் படையெடுப்புக்கு முன்னரே முஸ்லிம் வாணிகர்களாலும், இஸ்லாமிய ஆன்மிகச் செல்வர்களின் அறப்போதனையாலும் இஸ்லாம் பரவிற்று.*

**இந்தியப் பண்பாட்டில் இஸ்லாமியம்**

ஐந்து நூற்றாண்டுகளுக்கும் அதிகமாக இந்திய மண்ணில் அரசோச்சிய முஸ்லிம்கள், காலத்தால் அழிக்க முடியாத எண்ணற்ற பண்பியல் சிறப்புகளைத் தோற்றுவித்து, இந்தியப் பண்பாட்டியலில் விட்டுச் சென்றிருக்கின்றனர். இந்திய வரலாற்றில் இடைக்காலத்தில் புகழ் மணக்க வீற்றிருந்த முஸ்லிம், மொகலாயப் பேரரசுகள் அழிந்துபட்டாலும், அப் பேரரசுகளால் உருவாக்கப்பட்ட மாடமாளிகைகள், நகரங்கள், கலை அழகு மிளிரும் ஓவியங்கள் போன்றவைகள் அவர்களின் பெருமித வாழ்வை உலகிற்கு அறிவிக்கும் காவியங்களாக, கண்டோரை வியக்கச் செய்யும் கலைக் கருவூலங்களாக, இந்தியமண்ணில் நிலைபெற்று நிற்கின்றன. மக்கள் வாழ்வின் அனைத்துத் துறைகளிலும் இஸ்லாமிய நாகரிகம் கலந்துவிட்டிருக்கின்றது. அரசியல், பொருளாதாரம், சமுதாய அமைப்பு, பண்பியல் ஆகிய அனைத்துத் துறைகளிலும் இஸ்லாமிய நாகரிகத்தின் கைவண்ணங்களைக் காணலாம்.

**அரசியல்:** அரசியலில் முஸ்லிம்கள் அளவிடற்கரிய புதிய முறைகளை, அமைப்புகளை உருவாக்கியிருக்கின்றனர். ஏராளமான சுதந்திர அரசுகளாக, சிற்றரசுகளாக போர் மனப்பான்மை கொண்ட பல்வேறு அரசகுலங்களினால் ஆளப்பட்டு வந்த இந்தியாவின் பெரும்பகுதியை வென்று ஒரு குடைக்கீழ் முதலில் கொண்டுவந்த பெருமை முஸ்லிம்களையே சாரும். இந்திய ஒருமைப்பாட்டு எண்ணத்தையும்,

*''இஸ்லாமிய சமயம்'' என்னும் துணைத் தலைப்பின்கீழ் இப்பகுதி வரை எழுதி, மேலாய்வு செய்தோர்—பதிப்பாசிரியர் குழுத் தலைவர், ஆசிரியர், மொழி பெயர்ப்பாளர்: பேரா. டாக்டர் எச். முஹம்மது முஹ்யித்தீன், முதல்வர், புதுக் கல்லூரி, சென்னை-600 014. மதிப்புரையாளர்கள்: (1) பேரா. எம். வீ. சுப்பிரமணியம், ''கோமதி விலாஸ்'', திருநெல்வேலி-627 001. (2) திரு. ஜே. எம். மியான்கான் ''தயாமன்சில்'' சென்னை-600 044. (3) பேரா. வெங்கடசாமி, ஆசிரியர் கல்லூரி, சென்னை-600 015. (4) பேரா. என். சுப்பிரமணியம், 95, என். ஜி. ஓ. காலனி, மதுரை-625 019. (5) திருமதி ஜெயலட்சுமி, தலைமை ஆசிரியை, க்ஷத்திரிய மகளிர் மேல் நிலைப் பள்ளி, விருதுநகர்-626 001.

இந்தியர் அனைவரும் ஒரே இனம் என்ற உணர்வுக்கும் வித்திட்டவர்கள் முஸ்லிம்களே. வட இந்தியா முழுவதையும், தக்காணத்தையும்கூட வென்று, ஒரே மாதிரியான அரசு நிர்வாக முறையை அப்பகுதிகளில் செயல்படுத்தியவர்களும் முஸ்லீம்களே. பாரசீக மொழியை---ஒரே மொழியை ஆட்சி மொழியாக உயர்த்திய பெருமையும் அவர்களையே சாரும். இந்தியாவெங்கணும் புழக்கத்திலிருந்த பல்வேறு நாணய முறைகளை அகற்றி, ஒரேவிதமான நாணய முறையைப் புகுத்திய சிறப்பும் முஸ்லிம்களுக்கே உரித்தாகும். மொகலாயர் உருவாக்கி விட்டுச் சென்ற மாநிலம் (Subhas), மாவட்டம் (Zillahs), கோட்டம் (Taluks) போன்ற நாட்டுப் பிரிவினை மாதிரிகள் இன்னமும் வழக்கிலிருக்கின்றன என்பதை அறிவோம். அவர்கள் விட்டுச் சென்ற அரசு அலுவலர்களின் பெயர்களான தாசில்தார், (Tahsildar—வட்டாட்சியாளர்), கோர்ட் (Court---நீதி மன்றம்), பர்ஸார் (Bursar—நிதியாளர்), கஜானா (Kazana--கருவூலம்), ஜமாபந்தி (Zamabandi—நிலவரி வசூல் வணக்குகளைச் சரிபார்த்து அரசுக்குப் பணித்தனுப்புதல்) போன்றவைகள் இன்னும்கூட அரசு நிர்வாகத்தில் பயன்படுத்தப்படுகின்றது நிலவரி முறைகள் (Land Revenue System) நீதித்துறை மற்றும் அரசு பணித்துறைகளில் முஸ்லீம்கள் விட்டுச் சென்ற பல அடிப்படை அமைப்புகள் இன்னமும் பின்பற்றப்படுகின்றன. மராத்தியர்களும் (Marathas) இராசபுத்திரர்களும் மொகலாயர்களின் நிர்வாக அமைப்பையும், மற்றும் அரசவை முறைகள், விழாக்கள், உடைகள், அரசர்கள் சூட்டிக்கொள்கின்ற பலவித பட்டப் பெயர்கள், அரசு நெறி முறைகள் ஆகிய அனைத்தையும் அப்படியே பின்பற்றியிருக்கின்றனர்

**படைத்துறை:** இந்தியப் போர்க்கலையில் பலவித உத்திகளையும், படை அணிவகுப்பு, படைக்கலன்கள் மற்றும் படை நடத்துதல் போன்ற அனைத்துத் துறைகளிலும் ஏராளமான புதுமைகளைப் புகுத்தியிருக்கின்றனர். குதிரைப் படைகளைச் சிறப்பாகச் செலுத்துகின்ற முறையினையும் சுடு படைக்கலன்களை (Artillery) திறமையாகப் பயன்படுத்துகின்ற வழிவகைகளையும் இந்தியருக்கு உணர்த்தினர். யானைப் படைகளின் பயனற்ற தன்மையையும், விரைந்து செல்லும் குதிரைப் படைகளின் உயர்வையும் எடுத்துக் காட்டினர் முஸ்லிம்களின் ஆட்சியின்போது கொஞ்சம் கொஞ்சமாகப் போரில் யானைகளைப் பயன்படுத்தும் போர்

முறை மறைந்தது. வலிவுள்ள மாபெரும் கோட்டைகளை உருவாக்கி, அவைகளைத் திறமையாகப் பாதுகாக்கும் நுணுக்கங்களையும் மொகலாயர்கள் இந்தியருக்குக் கற்றுத்தந்தனர்.

**சமூக-சமயத்துறைகள்:** முஸ்லிம்களின் ஒரு கடவுட் கொள்கையும், வழிபாட்டு முறைகளும், சமய ஆர்வமும் இந்துக்களின் சிந்தனையைத் தூண்டிவிட்டன. இஸ்லாமின் எழுச்சிமிக்க சமய போதனைகள் இந்துக்களை விழிப்படையச் செய்தன. அவர்களின் சமயப் பரப்பார்வம், இந்துக்களுக்கு அச்சத்தையளித்தன. இந்த அச்சத்தின் விளைவாகவும், இந்துக்களிடையே தோன்றிவிட்ட ஏராளமான மூடப்பழக்க வழக்கங்களின் மீது மக்களுக்கு ஏற்பட்டிருந்த வெறுப்பினை மாற்றி, சமய மறுமலர்ச்சி ஏற்படுத்துகின்ற வகையிலும் இந்தியாவில் 'பக்தி இயக்கம்' தோன்றியது என்பதை முன்னரே கண்டோம். இராமானந்தர், கபீர்தாஸர், குருநானக், சைதன்யர் போன்றோர் கணக்கற்ற கடவுளர்கள் இந்துமத வழிபாட்டு முறைகளில் காணப்பட்டாலும், அக்கடவுளர்கள் அனைவரும் ஒரே அம்சத்தின் வெவ்வேறு உருவங்களே என்ற ஒரு கடவுட் தத்துவத்தையும், சாதிகளற்ற சமுதாயம் ஏற்பட வேண்டும் என்ற கருத்தினையும் வலியுறுத்தி, மறுமலர்ச்சிக்கு வழிவகுத்தனர். கபீர்தாசரின் போதனைகளும், குருநானக் தோற்றுவித்த சீக்கிய மதமும் இந்து-முஸ்லிம் சமயக் கோட்பாடுகளின் கலப்பேயாகும். இந்து சமுதாயம் முன்னேற இந்து சமுதாயப் பிணிகளான உடன்கட்டையேறுதல், பால்ய விவாகம், குடிப்பழக்கம், விலைமகளிர் ஆகியவைகளைக் களைந்து, சமுதாயச் சீர்திருத்தம் செய்ய மொகலாய மாமன்னர் அக்பர் முயற்சி எடுத்தார். அக்பரின் இத்தகைய சீர்திருத்தக் கருத்துகளே இன்றைய சமுதாய சீர்திருத்தவாதிகளுக்கு எடுத்துக்காட்டாக அமைந்திருக்கின்றன. இந்து-முஸ்லிம்கள் சகோதர பாசத்தோடு, சமுதாயத்தில் இணைந்து வாழவேண்டும் என்ற அக்பரின் கனவு, இன்றைய தேசிய ஒருமைப்பாடு என்ற கொள்கையின் அடிப்படையாக அமைந்துள்ளது. தேசிய ஒருமைப்பாடு வெறும் அரசியல் முறைகளாலோ சட்டங்களை ஆக்குவதன் மூலமோ ஏற்பட்டுவிடாது. மக்களின் இதயங்களில் நாம் அனைவரும் இந்தியரே என்ற எண்ணம் உறுதியாக இடம்பெற வேண்டும் (Emotional Integration) என்ற இன்றைய வேட்கை, அக்பரின் உள்ளத்திலேற்பட்ட சமுதாய ஒருமைப்பாடு எண்ணத்தின் மறுபதிப்பாகும். இந்துக்கள் முஸ்லிம்களின் உணவு, உடை, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றில் பெரும்பாலானவற்றைப் பின்பற்றியிருப்பதையும் நாம் காணலாம்.

**பொருளாதாரம்:** முஸ்லிம்கள் ஆடம்பரப் பிரியர்கள். ஆடம்பர வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை உற்பத்திசெய்ய தொழிற்கூடங்களை (Kharkanas) ஏற்படுத்தியிருந்தனர். ஏராளமான பூ, சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய மிக அழகான ஆடை வகைகள், தங்கம், வெள்ளி, நூல் இடையிட்ட (Brocades) விலையுயர்ந்த ஆடைகள், கண்களைப் பறிக்கும் வண்ணச் சால்வைகள் (Shawls), மஸ்லின் துணிகள், இரத்தினக் கம்பளங்கள், பலவகையான அணிகலன்கள், பலவகையான (வேட்டெஃகங்கள்) துப்பாக்கிகள் (தகரிகள்), பீரங்கிகள் மற்றும் பல்வேறுபட்ட படைக்கலன்கள், குண்டுகள், பல்வேறு வகையான இசைக் கருவிகள் ஆகிய அனைத்தும் தொழிற்கூடங்களில் (Kharkanas) உற்பத்தி செய்யப்பட்டன.

**கலைகள்—பண்பாடு:** முஸ்லிம்களின் செல்வாக்கு பண்பாட்டுத் துறையில் மிகவும் அதிகமாகக் காணப்படுகின்றது. நவீனகால இந்திய இசையிலும், இசைக்கருவிகளிலும் முஸ்லிம்களின் செல்வாக்குக் காணப்படுகின்றது. கவாலி (Qawali) (பாட்டிற்கு எதிர்ப்பாட்டு பாடுதல்), துமரி (Thumari—உள்ளத்தை உருக்கும் வகையில் கருத்துகளுக்கும் சொற்களுக்கும் முதலிடம் அளிக்கும் இசையோடு கலந்த பாடல்கள்) மற்றும் 'கசல்' (Ghazal-ஈரடிகள் கொண்ட இசைப் பாடல்கள்) போன்ற, இசைப் பாடல் வகைகள் மொகலாயர் காலத்தில் புகழ்பெற்றவை. அத்தகைய இசை இன்றும் விரும்பி ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. இந்துஸ்தானி இசையின் அமைப்பே மொகலாயர் காலத்தில் தோன்றி அவர்கள் ஆதரவுடன் வளர்ந்த கலையாகும். தபலா (Tabala), கித்தார் (Gitar), சாரங்கி (Sarangi) போன்ற இசைக் கருவிகளை மொகலாயர்கள் இந்திய இசைக்கு அளித்தனர். மொகலாயர் காலத்தில் ஓவியக் கலையில் (Painting) புதுமுறைகள் தோன்றின. ஜஹாங்கீரின் காலத்தில்தான் நுண் ஓவியங்கள் (Miniature Painting) முறை மிகவும் சிறந்து விளங்கியது. இந்தியப் பண்பியல் முறையில் ஓவியங்கள் வரைவது ஆதரித்து வளர்க்கப்பட்டது. இந்து-முஸ்லிம் கட்டடக்கலையின் கலப்பான இந்திய-சரசனிக் (Indo-Saracenic) கட்டடக்கலை தோன்றி வளர்ந்தது. ஃபதேபூர்சிக்ரி (Fatepur Sikri) நகரில் அக்பர் உருவாக்கிய மாபெரும் மாளிகைகளும், ஷாஜஹானின் கட்டடக்கலையின் ஆர்வத்தை உலகிற்கு உணர்த்திப் புகழ்பெற்று நிற்கின்ற டெல்லி செங்கோட்டை (Redfort) அவர் தன்னுடைய கனவினைப்

பளிங்கு மாளிகையாக உருவாக்கி, தன்னுடைய மனைவியின் நினைவாக், அழிவற்ற காதல் காவியமாக உலகிற்கு வழங்கி யிருக்கும் தாஜ்மஹால் (Taj Mahal) மற்றும் முத்து மசூதி (Moti Masjid), ஜும்மா மசூதி (Jumma Masjid) போன்ற எழில்மிகு கட்டடங்கள், மொகலாயர்கால கட்டடக்கலையின் சிறப்புச் சின்னங்களாக வடஇந்தியாவில் இருப்பவை. கோல் கொண்டா கோட்டை (Golconda Fort), ஸ்ரீரங்கப் பட்டிணத்துக் கோட்டை (Fort of Srirangapatna), பீஜப்பூர் கோட்டையில் வானளாவி நிற்கும் கோல்கும்பா என்ற கோளங்கள் (Golcumba domes), சார்மினார் போன்ற அழகுமிளிர் கோபுரங்கள் (Char-minar) போன் றவை தக்கணத்தில் முஸ்லிம்களின் கலைவனப்பைப் பறை சாற்றிக் கொண்டிருப்பவையாகும். பூங்காக்களும், அவை களில் உருவாக்கப்படும் நீரூற்றுகளும் மொகலாயர் இந்தியா விற்கு அளித்த கவின் கலைகளாகும்.

மொழி, இலக்கியத் துறையில் இந்தியாவில் முஸ்லிம்கள் ஆற்றியிருக்கும் பணிகளைச் சொல்லில் வடிக்க இயலாது. காகிதம், சித்திர எழுத்துமுறை (Calligraphy), ஒளியூட் டுதல் (illumination) போன்றவைகள் முஸ்லிம்கள் நமக் குக் கற்றுத்தந்தவைகளேயாகும். அமைதியான அரசியல் சூழ் நிலையும், ஒய்வு நிறைந்த வாழ்க்கையும், இலக்கியத் துறை யில் முஸ்லிம்களும் இந்துக்களும் முனைந்து ஈடுபட வகை செய்தன. இந்திய மொழிகளில் இலக்கியம் பெருகத் தொடங் கியது. பக்தி இயக்கம் இலக்கிய வளர்ச்சியை ஊக்குவித்தது. இந்துஸ்தானி, உருது போன்ற கலப்பு மொழிகள் தோன்றி, இலக்கிய வளம்பெற்றுச் சிறந்தன. வரலாற்றுக் குறிப்புகள், வரலாறு எழுதும் முறைகள் கலையாகவே உருப்பெற்றன. அபுல்பசல் (Abul Fazl), ஃபெரிஷ்டா (Ferishta), பதௌனி (Badauni), காஃபிகான் (Khafi Khan) போன் றோர் மிகச் சிறந்த வரலாற்று நூல்களைப் படைத்தனர் பொதுவாக வரலாற்று நூல் எழுதும் முறையே முஸ்லிம்கள் கற்றுக்கொடுத்த கலையாகும். யுனானி வைத்திய முறை (Unani System of Medicine) மொகலாயர்களால் தோற்று விக்கப்பட்டதாகும். வானியல் போன்ற அறிவியல் கலை களுக்கும் முஸ்லிம்கள் பேராதரவு தந்து வளர்த்திருக்கின்ற னர். இதுபோன்றே பல்வேறு நிலைகளிலும் முஸ்லிம்கள் இந்திய மக்களுக்கு உருவாக்கித்தந்த முறைகள் இன்றும் என்றும் இறவா நிலைபெற்றிருக்கும் என்பதில் ஐயமில்லை.

## சீக்கிய சமயம்

### குருநானக் (Guru Nanak, 1469—1538)

குருநானக் என்பவரே சீக்கிய சமயத்தைத் தோற்று வித்தவர் ஆவார். இவர் கி.பி. 1469ஆம் ஆண்டில், மேற்குப் பஞ்சாப்பிலுள்ள 'தல்வாண்டி' (Talwandi) எனும் சிறிய கிராமத்தில் மேத்தா காலு (Mehta Kalu) என்பவருக்கும் திரிப்தா (Tripta) என்ற அம்மையாருக்கும் மகனாகப் பிறந்தார். தனது ஏழாம் வயதில் அவர்து கிராமப் பள்ளி ஒன்றில் கல்வி பயிலத் தொடங்கினார். இவருக்குப் படிப்பில் விருப்பமே இருக்கவில்லை. இதனால் ஆத்திரமடைந்த இவரது தந்தை பள்ளியினின்றும் நீக்கி, ஆடுமாடுகள் மேய்க்கவும் உழவுத் தொழிலைக் கவனிக்கும்படியும் வற்புறுத்தினார். இத்தொழில்களிலும் நானக் அவ்வளவாக அக்கறை காட்டியதாகத் தெரியவில்லை. ஆடுமாடுகளைக் காட்டுக்கு ஓட்டிச் சென்றவர், காட்டுப் பகுதியின் அமைதியான சூழ்லில் மனத்தைப் பறிகொடுத்து ஆழ்ந்த சிந்தனைவயப்பட ஆரம்பித்தார். இந் நிலையைக் கண்ட இவரது தந்தை மிகவும் வருந்தினார். விளையாட்டுகளிலும், கல்வி, தொழில் ஆகிய வற்றிலும் அக்கறை காட்டாத பிள்ளையை, பொருளாசையாவது வாழ்க்கையில் ஒருவிதப் பிடிப்பை ஏற்படுத்தாதா என்ற நப்பாசையில் இவரை வாணிகத்தில் ஈடுபடுத்தினார். வாணிபத்திற்கு வேண்டிய தனித்தன்மை இவரிடம் இருக்கவில்லை. மிகவும் நேர்மையானவராக இருந்தமையால் இவர் வாணிகத்தில் சிறக்க முடியவில்லை. இவர் ஏழை எளியவர்களுக்குத் தாராளமாக உதவியளித்து வந்தார். பண ஆசையும் இவருக்கு இல்லையென்பது தெளிவாயிற்று. திருமணமும் குடும்ப வாழ்க்கையும் இவருக்கு மனமாற்றம் ஏற்படுத்தி, உலக வாழ்வில்



படம் 11. குருநானக்

பற்று ஏற்படுத்தும் என்று நம்பிய இவர்து தந்தையார், சுலாகினி (Sulakhni) என்ற அழகு நங்கையை இவருக்கு மண முடித்தார் இரண்டு பிள்ளைகளுக்கு நானக் தந்தையான பின்னரும்கூட உலகியலில் பற்று இல்லாதவராகவே இருந்தார். நானக்கின் எண்ணமும் சிந்தனையும் இறைவன்பாலும், சமுதாயத்தில் நிலவிவருகின்ற சமயக் கோட்பாடுகளின்பாலும் நிலைத்து நின்றது. தனது முயற்சிகள் பயனற்றதான பின்னர் நானக்கின் தந்தையார், இவரைச் சுல்தான்பூரில் இருந்த தனது மைத்துனரிடம் அனுப்பி வைத்தார். அங்கு 'பொருள்காப்போர்' (Store keeper) பணியில் இவர் அமர்த்தப்பட்டார். நேர்மையுடனும் கடமை உணர்வுடனும் பணியாற்றிய இவர் இடையிடையே தமது சிந்தனை ஓட்டத்தையும் தொடர விட்டார். 1499ஆம் ஆண்டு பியாஸ் நதிக்கரையில் இயற்கை எழிலுடன் ஆற்று நீரின் சலசலப்பில் மயங்கி, தன்னை மறந்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியபோது, இவருக்கு ஞானோதயம் ஏற்பட்டது. ஞானோதயம் பெற்ற பின்னர் இவர் தனது 'பொருள்காப்போர்' என்ற மிகச்சிறு பணியை விடுத்து, மக்களை நல்வழிப்படுத்தும் உயர்பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். துறவறம் மேற்கொண்டார். ஊர் ஊராகத் திரிந்தார் தான் பெற்ற ஒளிமயமான அறிவை மக்களுக்கும் உணர்த்தி, அவர்களை ஆற்றுப்படுத்த முயன்றார். இதன் காரணமாகவே இவர் மூன்று பயணங்களை மேற்கொண்டார் முதல் பயணத்தின்போது அமினாபாத், குருச்சேத்திரம், ஹரித்துவாரம், காசி, காமரூபம் ஆகிய இடங்களுக்குச் சென்றார் தனது இரண்டாவது பயணத்தின்போது தக்கணம் இலங்கைக்கும் சென்று வந்தார். காஷ்மீர் மற்றும் கைலாய மலையில் இவரது மூன்றாவது பயணம் முடிவுற்றது. இந்தியா இலங்கைப் பகுதிகளில் தான் உணர்ந்த நல்லறிவை விளக்கிய இவர், பாக்தாத், மெக்கா, மெதினா போன்ற அயல் நாட்டுப் பகுதிகளுக்கும் சென்று வந்தார். இவரின் இறுதிப் பயணம் பஞ்சாப் மாநிலத்திலேயே முடிவுற்றது. மொகலாய மாமன்னர் பாபரின் ஆட்சிக் காலத்தில், நானக் அவருடைய சீடரான மார்தானாவுடன் (Mardana) கைது செய்யப்பட்டார் இவர்கள் 'துறவிகள்' என்றறிந்த உடனேயே விடுதலை செய்யப்பட்டனர். 1538ஆம் ஆண்டு கர்தர்பூர் (Kartarpur) என்னுமிடத்தில் இவர் இவ்வுலக வாழ்வை நீத்தார்

**குருநானக்கின் போதனைகள்**

குருநானக்கின் போதனைகளே சீக்கிய சமயத்தின் அடிப்படைத் தத்துவங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. பின்னர்

இவரது கூற்றுகள், கருத்துகள் தொகுக்கப்பட்டு, 'ஆதி கிரந்தம்' (Adigranth) என்ற சீக்கியரின் வேத நூலாயிற்று. நானக் பல கடவுளர்களை வணங்கும் வழக்கத்தை எதிர்த்தார். ஒரு கடவுட் கொள்கையை வலியுறுத்தினார் இறைவன் ஒருவனே என்றும், அவனது திருநாமத்தை உள்ளன்போடு போற்றி வழிபட, வழிகாட்டும் குரு ஒருவரின் உதவியையும் நாடவேண்டும். இறைவன் எங்கும் நிறைந்தவர் எதிலும் இருப்பவர். எவ்வழியிலும் அவரை வழிபடலாம். ஆண்டவன் அழிவற்றவர். அனைத்திலும் நிறைந்து நிற்பவர். உன்னிலும் இருக்கின்றார். உலக மக்கள் ஒவ்வொருவரிடத்திலும் குடிகொண்டிருக்கின்றார். எவர் ஒருவர் ஆண்டவனின் திருப்பாதங்களில் முழுமையான அன்போடு சரணடைகின்றர்ரோ அவருக்கு ஆண்டவனின் அருள்கிட்டும். மந்திரமாக அவனது திருப்பெயரை திரும்பத்திரும்ப உச்சரிப்பதன் மூலமாக அவனை வழிபட்லாம். உலக வாழ்க்கைக் கடலிலிருந்து மீண்டும், இம்மை மறுமையை அறுத்து, நிலைபேறுமிக்க நிவாரணம் பெற முயற்சிக்கும்போது ஏற்படுகின்ற இன்னல், இடையூறுகளை அகற்றும் சக்தியை இறைவனது திருப்பெயரைத் திரும்பத் திரும்ப உச்சரிப்பதன்மூலம் ஒருவன் அடைய முடியும். இவ்வனைத்தும் பெற, சமய போதகரோ அன்றி ஒரு குருவோ நிச்சயமாகத் தேவைப்படும் என்றார் குருவின் துணையின்றி, ஆண்டவன் அருளைப்பெற இயலாது என்பதனையும் வலியுறுத்தினார். இறையருளாலேயே ஒருவன் சிறந்த குருவையும் அடையமுடியும் என்றார்

குருநானக் உருவ வழிபாட்டையும், பொருளற்ற சமயச் சடங்குகளில் ஈடுபடுவதையும் கண்டித்தார். புனிதப் பயணத்தாலும், புண்ணிய நீராடல்களினாலும், எவரும் முக்திபெற முடியாது என்றார். ஆண்டவனின் அருட்பெயரைத் திரும்பத் திரும்பத் தியானிப்பதன் மூலமே ஒருவன் மனது தூய்மையடைய முடியும். மிகைபட்ட உணர்ச்சி வேகம் (Passion), கோபம் (Anger), பேராசை (Greed), பாசம் பந்தம் (attachment). பொறாமை ஆகிய அனைத்து உலகியல் நிலைகளும், களையப்படல் வேண்டும். இந்துக்களின் சாதி முறைகளையும் கடுமையாகச் சாடினார். 'சிக்' (Sikh) என்ற வார்த்தையின் பொருளே 'சீடன்' ஆகும். சீக்கியர்கள் சாதிப் பாகுபாடுகளை விடுத்து அனைவரும் சமபந்தியாக உணவருந்த வேண்டும் என்றார். அவ்வழக்கமே அனைவரும் சமபந்தியாக உணவருந்தும் பொது இடம் (Common Kitchen) என அழைக்கப்

பட்டது. இராமன் என்றாலும், இரஹீம் என்றாலும் ஒன்றே என்றார் நானக். எனவே இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் உள்ள வேற்றுமைகள் கற்பனையே என்று வாதிட்டார். 'எல்லோரும் ஓரினம், எல்லோரும் ஓர்குலம், எல்லோரும் ஒரு கடவுளின் குழந்தைகளே,' எனவும் அறிவுறுத்தினார் 'இராமர்', 'கிருஷ்ணர்', 'விஷ்ணு' ஆகிய இந்துக் கடவுளர்களுக்கும் மேலானவரே 'இறைவன்' என்றார். ஆண்டவனை வழிபடுவதைத் தவிர்த்து ஆண்டவனின் அவதாரங்களை வழிபடுவதை நானக் கடுமையாகக் கண்டித்தார். வேதங்கள் மற்றும் சமயத்தின் விளக்கங்களெனப்படும் இந்துசமய நூல்களின் கூற்றுப்படி வழிபாடு செய்வதே இறைவன் திருவடிகளை அடைய உன்னத வழி என்ற கூற்றினை மறுத்தார் இத்தகைய புரட்சிகரமான போதனைகளால், குருநானக் ஒரு புதிய சமயத்தையே தோற்றுவிக்க நாட்டம் கொண்டுவிட்டாரென பழமையில் மூழ்கிய இந்துக்களாலும் மற்றையோராலும் கடிந்துரைக்கப்பட்டார். இத்தகைய புரட்சிக் கருத்துகளின் மூலம் இந்து வழிபாட்டுமுறைகளையும் கடவுளர்களையும் குறைகூறுவதாகவோ அல்லது எள்ளி நகையாடுவதாகவோ கருதவேண்டியதில்லை. 'இந்துக் கடவுளர்களே அனைத்தும்' என்னும் கோட்பாடுகளையும், அக்கடவுளர்களை வழிபட வேதங்கள் கூறும் வழிகளையுமே அவர் எதிர்த்தார். அதே வேதங்களும், சமயநெறி நூல்களும் கூறும் அறிவுரைகளை அவர் அப்படியே ஏற்றுக்கொண்டார். அவர் ஒரு சமய சீர்திருத்தவாதியே ஆவார். இந்துசமயத்தில் நுழைந்துவிட்ட கண்மூடித்தனமான மூடப்பழக்க வழக்கங்களையும் சாதிப் பாகுபாடுகளையும் களைந்து, இந்து சமுதாயத்தைச் சீர்திருத்தம் செய்யவே எண்ணினார். காலப்போக்கில் அவரது கொள்கையைப் பின்பற்றுவோர், சீக்கியத்தை ஒரு தனித்த சமயமாகவே உயர்த்திக் கொண்டனர்

**சீக்கிய சமய வளர்ச்சி**

குருநானக் இரண்டு பிள்ளைகளைப் பெற்றிருந்த போதிலும், அவர்களில் எவரையும் தனது வாரிசாக நியமிக்கவில்லை. மாறாக 'அங்காத்' (Angad, 1538—52) என்பவரையே தமது வாரிசாக நியமித்தார். தனது குருவின் வாழ்க்கை வரலாற்றையும் போதனைகளையும் அங்காத் அவர்கள் தொகுத்து நூலாக வெளியிட்டார். அவர் கட்டுப்பாடு, மற்றும் ஒழுங்கு முறைகளை வகுத்து சீக்கியர்களைப் பின்பற்றச் செய்தார். சீக்கியர்களிடையே ஒருமைப்பாட்டினை ஏற்படுத்தினார். புதிய அகரவரிசையைக் கண்டு

பிடித்து, அதற்கு 'குரு முகி' (Guru Mukhi) எனப் பெயரிட்டு மக்களிடையே பரப்பினார் மொகலாய மன்னர் ஹுமாயூன் இவரை நாடி ஆசிபெற்றார்.

குரு அங்காத் அவர்களின் மறைவிற்குப் பின்னர் அவருடைய விருப்பத்திற்கிணங்க, அமர்தாஸ் (Amar Das, 1552—74) என்பவர் சீக்கியர்களின் குருவானார் குருநானக் மற்றும் அங்காத் அவர்களின் பிள்ளைகள், அமர்தாஸர் குருவானதை எதிர்த்தனர் ஆனால் சிறிது காலத்திற்குள்



படம் 12. பொற்கோயில்

அவர்களது எதிர்ப்புகள் மறைந்தன குரு அமர்தாஸர் பல புதிய சீர்திருத்தக் கருத்துகளையும் நெறிமுறைகளையும் உருவாக்கி, சீக்கியர்களின் ஒற்றுமையுணர்வினைத் தூண்டி வளர்த்து, அவர்களைச் சிறந்ததோர் இனமாக உயர்த்தினார் இந்துக்களைப் போன்று, பிறப்பு முதல் இறப்புவரை உள்ள அனேக சடங்குகளைச் சீக்கியர்களும் பின்பற்றுவதைத்

தடுத்தார். சீக்கியர்களுக்கென ஒருசில தனிச் சடங்கு முறைகளையும் உருவாக்கிக் கொடுத்தார். மேலும் மது அருந்துதல், உடன்கட்டையேறல், மற்றும் பெண்கள் முகத்திரை அணிதல் ஆகிய அனைத்து தீயபழக்கங்களையும் எதிர்த்தார். சீக்கிய சமயத்தினர் அனைவரையும் உள்ளிட்ட சீக்கிய சமயபபேரரசு (Spiritual Empire) ஒன்றினையும் தோற்றுவித்தார். அதனை 22 பகுதிகளாகப் (Manjis) பிரித்து ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு சீக்கியரைத் தலைவராக நியமித்தார். லாகூரில் 'போலி' (Boali) என்னும் புனித ஆலயத்தை நிறுவினார். அவ்வாலயம் சீக்கியர்களின் புண்ணியத்தலமாக ஆக்கப்பட்டது. அவருடைய அத்தகு செயல்களால் சீக்கியர்களுக்கும் இந்துக்களுக்கும் இடையே வேறுபாடுகள் அதிகரித்தன. பின்னர்ச் சீக்கியர்கள் தனி இனத்தவராகவே பிரிந்து விட்டனர்

குரு அமர்தாஸரைத் தொடர்ந்து அவருடைய மருமக்னான இராமதாசர் (1575—81) அவர்கள் சமயக் குருவானார் பேரரசர் அக்பரால் போற்றப்பட்டார். அமிர்தசரசுக்கு அருகில் நீர்வளம் நிறைந்த பெருநிலப்பரப்பை, அக்பர் இராமதாசருக்கு மானியமாக வழங்கினார். அவர் அந்த இடத்தில் ஓர் ஆலயத்தினை நிர்மாணித்து, பெரிய குளத்தையும் உருவாக்கினார். 'இராமதாச நகர்' என்ற புதியதொரு நகரையே நிர்மாணித்தார். அந்நகரே அமிர்தசரஸ் (Golden City—பொன்னகரம்) என இன்றும் புகழப்படுகின்ற சீக்கியர்களின் புண்ணியத் தலமாகும். அவர் மேலும் அமிர்தசரஸ், சந்தோக்சர் (Amritasaras and Sandokshar) எனும் இரு குளங்களையும் கட்ட ஆரம்பித்தார்

பகுதி — ஆ

# 7. கவின் கலைகளும் இலக்கியங்களும்

ஒரு நாட்டின் மக்களின் வாழ்க்கை முறைகளையும், அவர்களின் எண்ணற்ற உள்ளக் கிளர்ச்சிகளையும் உணர வைப்பது அந்நாட்டின் கலைக்கருவூலங்களும் இலக்கியங்களுமே. இதே நோக்கில் இந்தியாவின் கவின்கலைகளும் இலக்கியங்களும், இந்திய மக்களின் வாழ்க்கை முறைகளையும் எண்ண ஓட்டங்களையும் தெளிவாக்கப் பெரிதும் பயன்படுகின்றன. இந்தியாவெங்கணும் சிதறிக் கிடக்கின்ற கணக்கற்ற சிற்பங்களும் கட்டடங்களும் பல்வேறு கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்ற இலக்கியப் பேழைகளும் இந்திய வரலாற்றின் ஒவ்வொரு நிலையிலுமிருந்த மக்களின் கற்பனை வளத்தையும், ஆக்க சக்திகளையும் நமக்குத் தெளிவு படுத்துகின்றன. இத்தகைய கலைகளை விளக்கும் வகையில் இந்த இயலில் இந்தியாவின் கட்டடக்கலை, கவின் கலைகளான ஓவியம், இசை, நடனம் போன்றவைகளையும், இலக்கியங்களின் வளர்ச்சியையும், வரலாற்றுத் தொடக்க காலத்திலிருந்து சுருக்கமாக ஈண்டு காணலாம். அந்நியர்களின் செல்வாக்கு இந்தியக் கலை இலக்கிய வளர்ச்சியில் எந்த அளவிற்கு இருந்திருக்கின்றது என்பதைக் குறிப்பாகவும் காணலாம்.

## கட்டடக்கலை

### இந்தியக் கட்டடக்கலையின் தொன்மை

'இந்திய வரலாற்றுச் சின்னங்களின் பாதுகாப்புச் சட்டத்தை' உருவாக்கிய அரசப் பிரதிநிதி கர்ஸான் பிரபுவுக்கு இந்திய வரலாற்றைப் பயிலும் மாணவர்கள் பெரிதும் கடமைப்பட்டவர்களாக இருக்கவேண்டும். இந்திய அரசப் பிரதிநிதியாகப் பொறுப்பேற்கும் முன்னர்க் கர்ஸான் பிரபு கம்போடிய நாட்டிலுள்ள 'அங்கர்வாட்' என்ற வரலாற்றுத் தொன்மை மிக்க இடத்தினையும், இந்தியாவில் எல்லோரா, அஜந்தா போன்ற குகைக் கோவில்களையும் 'ஹம்பி' போன்ற பாழடைந்த சின்னங்களையும் பார்த்திருந்தார் அந்தப் புராதன வரலாற்றுச் சின்னங்களையும், அவைகளின் சிறப்புகளையும் உணர்ந்த அவர், அவைகளை அழிவி

லிருந்து காக்கும் எண்ணங்கொண்டவர். அந்த எண்ணத்தின் விளைவாகவே, இந்திய அரசப் பிரதிநிதியாக நியமனம் பெற்ற உடன் 'இந்திய வரலாற்றுச் சின்னங்களின் பாதுகாப்புச் சட்டத்தை' உருவாக்கினார். பண்டைய பண்பாட்டுச் சிறப்பியல்புகளைப் போற்றிக்காக்கும் உள்ளம் படைத்த இவர், பண்டைய இந்திய வரலாற்றுச் சின்னங்களின் பாதுகாக்கும் பொறுப்பை 'இந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையினரிடம்' (Archaeological Department of India) ஒப்படைத்தார். அந்தத் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையினைச் சார்ந்த அறிஞர்கள் பூமிக்கடியில் புதைந்து கிடைந்த வரலாற்றுச் சின்னங்கள் பலவற்றைத் தோண்டியெடுத்தனர். அவர்களின் ஆராய்ச்சியின் விளைவாக இந்திய வரலாற்றில் இடம்பெறாத காலங்களின் வரலாறு வெளியிடப்பட்டது. சர் ஜான் மார்ஷல் என்பாரின் தலைமையிலான புதைபொருள் ஆராய்ச்சிக் குழு மொகன்சதாரோ, ஹரப்பா போன்ற இடங்களின் அகழ்வாராய்ச்சிகளை நடத்தினர். பின்னர் கன்னிங்ஹாம் (Cunningham), ஜேம்ஸ் பர்குசன் (James Fergusson), டாக்டர் பர்கஸ் (Dr. Burgess) போன்றோர் பல முக்கிய இடங்களில் பூமியைத் தோண்டி வியத்தகு வரலாற்றுச் சின்னங்களை வெளிக்கொணர்ந்தனர். அவர்களது ஆராய்ச்சிக் குறிப்புகள் பண்டைய இந்தியக் கட்டடக்கலை மற்றும் சிற்பக்கலையின் சிறப்புகளை எடுத்துரைத்தன. அந்தக் குறிப்புகள் பண்டைய இந்தியாவின் கட்டட மற்றும் சிற்பக்கலைச் சிறப்புகளோடு பண்பாட்டுச் சிறப்பையும் அறிவிக்கும் தடயங்களாகவும் அமைந்தன. இவைகளைக் கற்றுணர்ந்த அறிஞர்கள் பண்டைய கிரேக்கர், ரோமர் பண்பாட்டுப் பெருமைகளுடன் இவைகளை ஒப்பிட்டுப் பெருமிதம் கொண்டனர்

**பழங்கால இந்தியக் கட்டடக்கலையும் சிற்பக்கலையும்** (Architecture and Sculpture in Ancient India)

பழங்கால இந்தியாவின் கட்டடங்களின் அமைப்பு பற்றிய விளக்கம் 'சிந்துவெளி நாகரிகம்' என்ற பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது. பல அடுக்குகளைக் கொண்ட மாளிகைகள், பொதுக் குளியலறைகள், மிகப் பெரிய தானியக் கிடங்கு மற்றும் தொழிலாளர் குடியிருப்புகள் ஆகிய அனைத்தும் ஏறத்தாழ நவீனகால கட்டட அமைப்பு முறையிலேயே சிந்துவெளி மக்கள் கட்டியிருக்கின்றனர். ஆனால், அந்தக் கட்டடங்கள் அனைத்தும் சுட்ட செங்கற்களாலோ அல்லது

சுடாத செங்கற்களாலே கட்டப்பட்டிருக்கின்றன. கருங் கற்களைப் பயன்படுத்தும் முறை அங்குக் காணப்படவில்லை. வேத காலத்தின் முற்பகுதியில் கருங்கற்களைக் கொண்டு கட்டடங்கள் கட்டப்பட்டன என்பதற்கு ரிக் வேதத்தில் சான்றுகள் உள்ளன. பல கற்றூண்களைக் கொண்ட பெரிய கற்கோட்டைகளைப் பற்றிய குறிப்புகள் வேத கால இலக்கியங்களில் காணப்படுகின்றன. கலை அழகு மிளிரும் கட்டடக்கலை மௌரியப் பேரரசு காலத்தில்தான் காணப்படுகின்றது. மௌரியர் காலத்துக் கட்டடங்கள் இந்தியாவின் பல பகுதிகளிலும், பல்வேறு கட்டட அமைப்புகளுடன் காணப்படுகின்றன. இந்தக் கட்டடங் கள் இந்தியக் கட்டடக்கலையின் சிறப்புகளுக்குக் கட்டியம் கூறி நிற்கின்றன.

அசோகர் காலத்து ஸ்தூபிகள், தூண்கள், குகைக் கோவில்கள் போன்றவை மௌரியர் காலக் கட்டடக்



படம் 13. சாஞ்சி ஸ்தூபி

கலையின் சிறப்பினை வெளிப்படுத்தும் சின்னங்களாகக் காணப்படுகின்றன. அரைக் கோள வடிவில் செங்கற்கள் அல்லது கற்களைக் கொண்டு கட்டப்பட்டு நிற்கும் வடி வங்களே ஸ்தூபிகள் ஆகும். புத்த பகவானின் சின்னங் களின் மீதுதான் ஸ்தூபிகள் கட்டப்பட்டன மத்தியப்

பிரதேசத்தில் போபால் நகருக்கருகில் இருக்கும் சாஞ்சி என்ற இடத்திலிருக்கும் ஸ்தூபி ஒன்றினைத் தவிர ஏனைய ஸ்தூபிகள் அனைத்தும் படையெடுப்புகளின்போது அழிந்துவிட்டன.

அசோகர் காலத்தில் நிறுவப்பட்ட கற்றூண்கள் அனைத்தும் ஒரே வெண்ணிறக்கல்லில் உருவாக்கப்பட்டு, சிற்பியின் கைவண்ணத்தால் பளபளப்பாக்கப்பட்டு, காண்பதற்கு உலோகத்தால் ஆனதுபோல் தோற்றமளிக்கின்றன. அவைகள் 12-லிருந்து 16 மீட்டர் உயரமுள்ளவை. 'சாரநாத்' என்ற இடத்திலிருக்கும் தூண் மிகவும் சிறப்புப் பெற்றதாகும். இந்தத் தூணின் உச்சியில் அமைந்திருக்கும் தர்மசக்கர அமைப்பை அடித்தளமாகக் கொண்டு முதுகைத் தொட்டுக்கொண்டு அமர்ந்திருக்கும் நான்கு சிங்கங்கள் இப்போது இந்திய அரசின் சின்னமாக விளங்குகின்றது. அலகாபாத், சாஞ்சி, ருமிந்தை (Rummendai), நிக்லிவா (Nigliva (ருமிந்தையும்) நிக்லிவாவும் நேபாளத்திலிருக்கின்றன) பீகார் மாநிலத்திலிருக்கும் ராம்புர்வா (Rampurva) போன்ற இடங்களில் அசோகரது தூண்கள் காணப்படுகின்றன. பஞ்சாப் மாநிலத்தில் தோப்ரா (Topra) என்ற இடத்தில் நிறுவப்பட்டிருந்த அசோகர் காலத்துக் கற்றூண் மட்டும், பெரோஸ் ஷாவினால் (Feroz Shah) டெல்லிக்குக் கொண்டு வரப்பட்டு விட்டது. இந்தக் கற்றூண்களின் உச்சியில் கைவேலைப்பாட்டுச் சிறப்புமிக்க சிங்கம், யானை, எருது போன்ற விலங்குகளின் உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. சாஞ்சியில் இருக்கும் கற்றூணின் உச்சியில் மட்டும் தர்மசக்கரத்தின் அமைப்பை அடிப்படையாகக் கொண்டு முதுகைத்



படம் 14. சாரநாத் தூண்

தொடும் வண்ணம் அமர்ந்திருக்கும் நான்கு சிங்கங்களின் அமைப்பு இந்தியச் சிற்பக்கலைக்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டாகும் என சர் ஜான் மார்ஷல் புகழ்ந்துரைத்தார்

புத்தரின் உருவச்சிலையை வணங்கும் முறையைப் பயன்படுத்துவதற்கு முன்னர், அவருடைய சின்னங்கள்மீது



படம் 15. சைத்யங்கள்

கட்டப்பட்டிருந்த ஸ்தூபிகளுக்குச் சென்று பௌத்தர்கள் வழிபட்டனர். ஸ்தூபிகள் அனைத்தும் புத்த சமயத்தினருக்குக் கோவில்களாகவே தென்பட்டன புனித சின்னங்களாக விளங்கிய ஸ்தூபிகள் சைத்யங்கள் (Chaityas) என அழைக்கப்படுகின்றன. சைத்யா முறை ஸ்தூபிகள் பெரும் பாறைகளைக் குடைந்து உருவாக்கப்பட்டவைகளாகும். கிறித்தவர்களின் திருக்கோயில்கள் (Church) அமைப்பில் 'சைத்யா'வில் விசாலமான அறைகள் இருக்கும் பம்பாய் அருகில் இருக்கும் கார்லேயிலுள்ள சைத்யா

அறைதான் சைத்யா குகைகளுள் மிகப்பெரியவை ஆகும். 'கார்லேயில் இருக்கும் விசாலமான அறை (Hall) இந்தியா வின் புராதனச் சின்னங்களில் மிகச்சிறப்பு வாய்ந்ததாகும்' என ஆனந்த குமாரசாமி (A. K. Coomarasamy) என்ற



படம் 16. அஜந்தா சிற்பம்

பேரறிஞர் இந்திய, இந்தோனேஷியக் கலை வரலாறு' (History of Indian and Indonesian Art) என்ற தமது நூலில் புகழ்ந்துரைக்கின்றார்.

பண்டைய இந்தியக் கட்டடக் கலைக்கு சங்காராமா (Sangharama) அல்லது 'விகாரங்கள்' (Vihara) என்றழைக்கப்பட்ட புத்த, சமண மதத்தினரின் மடாலயங் கள் மிகச்சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். புத்த சமயத் தினரின் விகாரங்கள் தனிச்சிறப்பு பெற்று விளங்குகின்றன. அஜீகர்கள் என்றழைக்கப்பட்ட தீவிர சமண சமயத்தைச் சார்ந்த துறவிகள் வாழ்ந்த குகைகள் சமண சமய விகாரங் களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். அத்தகைய குகை விகாரங்கள் இந்தியாவெங்கிலும் பரவலாகக் காணப்பட்டா லும் 'பாரபர்' மற்றும் நாகார்ஜுனி (Nagarjuni)

போன்ற குகைகள் மிகவும் தொன்மை வாய்ந்தனவாகக் கருதப்படுகின்றன. 'பாரபர்' குகைகள் அசோகர் காலத்திலும், நாகார்ஜுனி குகைகள் அசோகருக்குப் பின்னர் ஆண்ட தசரதன் (Dasaratha) என்பவர் காலத்திலும் உருவாக்கப்பட்டவை எனக் கருதப்படுகின்றது. ஒரிசா மாநிலத்தில் புவனேசுவருக்கருகில் இருக்கும் உதயகிரி (Udayagiri), கந்தகிரி (Kandagiri) குகைகள் கலிங்கத்துக் காரவேலர் (Kharavela of Kalinga) என்ற மன்னர் காலத்தில் உருவாக்கப்பட்டவை எனக் கூறப்படுகின்றது.

இந்தியாவின் மேற்குப் பகுதியில் மிகவும் தொன்மை வாழ்ந்த விகாரமாகக் கருதப்படுவது பாஜா (Bhaja) என்ற இடத்திலிருக்கும் குகைகளாகும். அஜந்தாவிலும் நாசிக்கிலும் இருக்கும் குகைக்கோயில்கள் அழகான அமைப்புகள் கொண்டவை. தூண்கள் அமைந்த தாழ்வாரங்களும், அவற்றிற்கு அடுத்தாற் போல ஒரு பெரிய அறையும், அந்த அறையின் மூன்று பக்கங்களிலும் ஏராளமான சிறு அறைகளும் அஜந்தா மற்றும் நாசிக் விகாரங்களில் காணப்படுகின்றன. அந்தச் சிறு அறைகளின் உட்புறச் சுவரில் ஏராளமான அழகுச் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்கும் குப்தப் பேரரசின் தோற்றத்திற்கும் இடையேயான ஐந்து நூற்றாண்டுகளில், இந்தியக் கலைகளும் கட்டடக் கலையும் சிறந்த முறையில் வளர்ந்திருக்கின்றன. பலவகைப்பட்ட சிற்பமுறைகள் இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் தோன்றி வளர்ந்திருக்கின்றன. அவையாவன: 1. மத்தியப் பிரதேசத்தில் பர்குத் (Barhut) மற்றும் சாஞ்சியில் தோன்றிய சிற்பக்கலை வடிவங்கள், 2. பீகாரில் போத்கயா (Bodh Gaya), 3. உத்தரப்பிரதேசத்தில் மதுரா (Mathura), 4. வடமேற்கு இந்தியாவில் காந்தாரம் (Gandhara), 5. தென்னிந்தியாவில் அமராவதி, நாகர்ஜுன கொண்டா போன்ற இடங்கள் ஆகும்.

கி.மு. இரண்டாம் நூற்றாண்டில், இந்தியாவில் சுங்கர்களின் (Sunga Period) ஆட்சியின்போது, 'பர்குத்' (Barhut) என்ற இடத்தில் மிகப்பெரிய ஸ்தூபி ஒன்று கட்டப்பட்டது. காலத்தின் கோர விளையாட்டினால் அந்த ஸ்தூபி அழிந்துபட்டது. அந்த ஸ்தூபியைச் சுற்றி அமைக்கப்பட்டிருந்த சுற்றுச் சுவரின் ஒரு பகுதியும், வியத்தகு

சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த நுழைவாயில்களில் ஒன்றும் கிடைத்துள்ளன. நுழைவாயில் கல்கத்தாவில் உள்ள 'இந்திய அரும்பொருட்காட்சியகத்தில்' (Indian Museum) கொலுவீற்றிருக்கின்றது. அந்த ஸ்தூபியின் சுற்றுச் சுவரில் புத்தர் வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட ஜாதகா கதைகளில் காணப்படுகின்ற நிகழ்ச்சிகள் சிற்பமாக வடிக்கப் பட்டிருந்தன

புத்த கயாவில் இருக்கின்ற பெரிய கோவிலின் சுற்றுச் சுவரிலும், பர்குத் ஸ்தூபியின் சுற்றுச் சுவ்ரில் இருந்தது போன்ற சிற்பங்கள் காணப்படுகின்றன.

சாஞ்சியிலிருக்கும் ஸ்தூபி மட்டும் அழியாமல் நாம் காணக் கிடைத்திருப்பது வியப்பிற்குரியதே ஆகும். அசோகர் காலத்தில் உருவாக்கப்பட்ட இந்த ஸ்தூபியின் சுற்றுச் சுவர்களும் நுழை வாயில்களும் புஷ்யமித்ர சுங்கா (Pushyamitra Sunga) என்ற இந்துசமயத்தைச் சேர்ந்த அரசனால் கட்டப்பட்டவையாகும். சுற்றுச் சுவர்கள் சிற்பங்களின்றி வெறுமனே காட்சியளித்தாலும், நான்கு நுழைவாயில்களும் பண்டைக்கால சிற்பக்கலையின் கவின்மிகு எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றன. புத்தரின் வாழ்க்கையை விளக்கும் சிற்பங்களும் ஜாதகா கதைகளும் நுழைவாயில் களில் சிற்பங்களாக உருமாறியுள்ளன. பர்குத் சிற்பக் கலையைவிட மிக நுண்ணிய சிற்பவேலைகள் சாஞ்சியில் காணப்படுகின்றன சிற்பக்கலை நுட்பம் வளர்ந்துவிட்ட நிலையை இது குறிப்பிடுகின்றது. பர்குத், சாஞ்சி ஸ்தூபி களில் காணப்படும் சிற்பங்கள் அக்கால மக்களின் சமய உணர்வையும் நம்பிக்கையையும் வெளிப்படுத்துகின்றன. மேலும் அக்கால மக்களின் கோட்பாடுகள், வாழ்க்கை நெறி, பழக்க வழக்கங்கள் ஆகிய அனைத்தையும் பொதுவாகக் கூறுமிடத்து அவர்களது வாழ்வு முறைகளை விளக்குவதாக அமைந்திருக்கின்றது.

பர்குத், சாஞ்சி, கயா போன்ற இடங்களில் காணப் படும் கல்லில் செதுக்கப்பட்ட சிற்பங்கள், இந்தியர்கள் கற் சிலைகள் வடிப்பதில் கைதேர்ந்துவிட்டதையும், கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலேயே சிற்ப நுணுக்கங்களில் சிறந்து விளங்கியதையும் நமக்குத் தெளிவாக்குகின்றன

புத்தசமயம் மகாயான புத்தமாக உருமாறியதனால் ஏற்பட்ட விளைவுகளில், மிகச் சிறந்ததெனக் கருதப்

படுவது, காந்தாரச் சிற்பக்கலையின் (Gandhara Sculpture) தோற்றமாகும். வடமேற்கு இந்தியாவில் பெஷாவர் (Peshawar) நகரைச் சுற்றியிருக்கும் 'காந்தாரம்' என்ற பகுதியில் தோன்றி வளர்ந்ததனால், அந்த முறைக்கு காந்தாரக் கலை என்ற பெயர் நிலைத்தது. காந்தாரக் கலை முறையில் உத்தரப்பிரதேசத்திலுள்ள மதுரா நகரிலும் சிற்பங்கள் உருவாக்கப் பட்டன கி.பி. 50ஆம் ஆண்டிலிருந்து 200ஆம் ஆண்டு வரையில் காந்தாரக் கலை முறையில் உன்னதமான சிற்பங்கள் வடிக்கப்பட்டன. இந்திய வரலாற்றில் அது குஷாணர்களின் ஆட்சிக்காலமாகும். பர்குத், சாஞ்சி போன்ற இடங்களிலிருந்த சிற்பங்களில் தர்மச் சக்கரம் அல்லது சிம்மாசனம் அல்லது புத்தரின் காலடிச் சுவடுகள் ஆகிய சின்னங்களே புத்தரைக் குறிப்பிட்டன. அம்முறைகளில் புத்தருக்கு மானிட உருவம் கொடுக்கப்படவில்லை. ஆனால், காந்தாரக்கலையில் புத்தரின் முழு மனித உருவம் செதுக்கப்பட்டிருந்தது. புத்தரின் உருவச்சிலைகளும் சிற்பங்களும் காந்தாரக் கலையில் செதுக்கப்பட்டிருந்தன. புத்தர் இளவரசனாக செல்வம் கொழிக்க வாழ்ந்தபோது, துறவியாகக் காடுகளில் அலைந்த போது, அறிவொளி அடைந்து புத்தராக மாறியபோது ஆகிய புத்தர் வாழ்க்கையின் அனைத்து நிலைகளையும் விளக்கும் சிற்பங்களும் உருவங்களும் உருவாக்கப்பட்டன. செதுக்கப்பட்ட சிற்பங்கள் (Sculptured Relics), புத்தரின் பிறப்பு, உலத வாழ்வைத் துறந்து வெளியேறு நிலை (Renunciation) மற்றும் அவரை அலைக்கழிக்கும் வகையில் தோன்றிய ஆசைகள் (Temptations) ஆகிய வாழ்க்கை அம்சங்களை விளக்குவதாக அமைந்தன. சிற்பங்களை வடிக்க எடுத்துக்கொண்ட கருப்பொருள் இந்தியத் தன்மையதாகவும் வடிக்கும் முறைகளில் கிரேக்க பாணியையும் கொண்ட கலப்பாகக் காந்தாரக்கலை அமையப் பெற்றது. மிகச்சிறந்த உருவ அமைப்பும், சிலைகளுக்கு அழகான ஆடைகளும் அணிவிக்கப் பெற்றதாக, புத்தரின் தலையைச் சுற்றிலும் தெய்வீக ஒளி வீசுவதாகவும், அமைதியே வடிவான உருவாக அமர்ந்திருக்கும் புத்தரின் உரு



படம் 17.
காந்தாரச் சிற்பம்

வங்கள் காந்தாரச் சிற்பக் கலையின் சிறப்புக்கு எடுத்துக் காட்டுகளாகும்.

காந்தாரக் கலைமுறையில் காணப்பட்ட கிரேக்க பாணி சிறிது சிறிதாக மறைந்து, இந்திய முறைச் சிற்பக்கலை ஆக்கம் பெறலாயிற்று. கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் தற்போதைய கிருஷ்ணா, குண்டூர் மாவட்டங்களை ஆண்ட இட்சவாகு (Itshavakus) அரச வமிசத்தினர் நார்கார்ஜுன கொண்டா, அமராவதி போன்ற இடங்களில் ஸ்தூபிகளையும், கற்றூண்களையும், புத்த விகாரங்களையும் நிறுவினர். அக்கட்டடங்கள் அனைத்தும் அமைப்பு முறையில் காந்தாரக் கலையையே பின்பற்றியிருந்தன. கலைத்துறையை நுணுகிப் பார்த்தவர்கள் (Art Critics) அமராவதி, நாகார்ஜுன கொண்டா போன்ற இடங்களில் உருவாக்கப்பட்ட சிற்பங்கள் காந்தாரம், மதுரா போன்ற இடங்களில் உருவாக்கப்பட்ட சிற்பங்களைவிட மிகச்சிறந்தவை' எனப் பாராட்டுகின்றனர்.

குப்தர் காலத்தில் இந்திய சிற்பக்கலை முழு வளர்ச்சி பெற்றுச் சிறந்து விளங்கியது. பண்டைய சிற்பக்கலை முழுவடிவம் பெற்றுப் (Classical Phase) பரவ ஆரம்பித்தது. இந்திய சிற்பக்கலைக்கு மட்டுமல்லாமல் இந்தியர்களின் குடியேற்றங்களாகிய தென்கிழக்காசிய நாடுகளிலும் பரவிய சிற்பக்கலைக்குக் குப்தர்கள் காலச் சிற்பக் கலை எடுத்துக்காட்டுகளாக, முன்மாதிரியாக அமைந்தது. கலையழகு மிளிரும் புத்தரின் உருவச்சிலைகளும் இந்துக் கடவுளர்களின் சிலைகளும் குப்தர்கள் காலத்தில் உருவாக்கப்பட்டன. மதுரா, சாரநாத் போன்ற இடங்களில் காணப்படும் சிலைகள் இந்தியச் சிற்பக்கலையின் மிகச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்.

மிகப் பெரிய அளவில், கலைச் சிறப்புமிக்க பெருங் கோவில்கள் ஏராளமாக குப்தர்கள் காலத்தில் கட்டப்பட்டன ஆனால், அவைகளில் பெரும்பாலானவை அழிந்து விட்டன சாஞ்சியிலும் தியோகாரிலும் (Deogarh) உள்ள கற்கோவில்களும், பித்தர்கானில் (Bithargoan) காணப்படும் செங்கற் கோவிலுமே குப்தர்களின் கட்டடக்கலையின் பெருமையினை விளக்கும் வண்ணம் நிலைபெற்று நிற்கின்றன. மற்றக் கோவில்கள் அனைத்தும் படையெடுப்புகளின் போது அழிக்கப்பட்டன. கோவில்களில் மிக உயர்ந்த கோபுரங்களைக் கட்டுகின்ற முறை குப்தர்கள் காலத்தில்

தோன்றியிருக்கவில்லை. அவைகள் பிற்காலத்தில் தோன்றியவைகளாகும். பித்தகாரிலுள்ள (Bithagarh) கோவிலில் மட்டும் கோபுர அமைப்புகள் ஏற்படுத்துவதற்கான தொடக்கம் காணப்படுகின்றது.

## வட—தென்னிந்தியக் கோவில்கள்

குப்தர்கள் காலத்தின் இறுதியிலிருந்து முஸ்லிம்களின் ஆட்சியின் தொடக்கம் வரையுள்ள (கி.பி. 600 — 1200) காலத்தில் ஏராளமான மாபெருங் கோவில்கள் இந்தியா முழுவதிலும் கட்டப்பட்டன. இந்தியக் கட்டடக்கலை வளர்ச்சியில் இந்தக் காலத்தை மிக முக்கியமான காலமாகவே கருதலாம். அக்காலக் கட்டடக் கலைகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். முதலாவது, இந்தோ-ஆரியன் அல்லது வடஇந்தியக் கட்டடக்கலை. இரண்டாவது, திராவிட அல்லது



படம் 18. லிங்கராஜ் கோவில்

தென்னிந்தியக் கட்டடக்கலை ஆகும். இவ்விரு வேறுவகையான கட்டடக்கலையின் மாறுபாடுகள் இரண்டாகக் குறிப்பிடப்படுகின்றது. முதலாவது வேறுபாடு கோபுர அமைப்பில் காணப்படுகிறது. வடஇந்தியக் கோவில் கோபுரங்கள்

(Sikhara or Tower) இடைவெளியற்று ஒரே அமைப்பாகக் (Solid mass) காணப்படுகின்றன. வட்டத்தின்மேல் வட்டத்தை வைத்து உயரமாக அடுக்கியதுபோல் (Curvi linear tower) நடுப்பகுதி, கோபுரத்தின் அடிப்பகுதியைவிடச் சற்றுப் பருத்தும் மேலே செல்லச் செல்லச் சிறுத்து இறுதியில் ஒரே கூரான அமைப்பாக வானோக்கி உயர்ந்து நிற்கும். அதாவது, அலங்கரிக்கப்பட்ட தேரைப்போல. தென்



படம் 19. காஜுராஹோ ஆலயம்

னிந்தியக் கோவில் கோபுரங்கள் பிரமிடுகளின் அமைப்பைக் கொண்டவை. பல அடுக்குகளாக, கீழிருக்கும் அடுக்கைவிட மேலே இருப்பது சற்றுச் சிறுத்தும் அல்லது அகலம் குறைந்தும் காணப்படும். கோபுர உச்சியில் ஒரு பெரிய விமானமும் விமானத்தின்மீது பல கலசங்களும் அமைந்து, கம்பீர

மாக வானோக்கி உயர்ந்து நிற்கின்றன. அவ்விருவிதக் கோபுரங்களிலும் அழகு கொழிக்கும் சிற்ப வடிவங்கள் ஏராளமாக வடிக்கப்பட்டிருக்கின்றன. இரண்டாவதாக தென்னிந்தியக் கோவில்களில் பல்வேறு சிற்பங்களைக் கொண்ட தூண்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. அத்தகைய தூண்கள் வடஇந்தியக் கோவில்களில் காணப்படுவதில்லை.

சில முக்கியமான வடஇந்தியக் கோவில்கள் வருமாறு:

1. புவனேஸ்வர் நகரில் உள்ள லிங்கராஜ் கோவிலும் இராஜா ராணிக் கோவிலும் (Lingaraj Temple & Rajarani Temple of Bhuvaneswar).
2. பூரி நகரிலிருக்கும் ஜகந்நாதர் ஆலயம் (Jaganathar Temple of Puri).
3. மத்திய இந்தியாவில் காஜுராஹோவில் காணப்படும் மகாதேவன் ஆலயம் (Mahadeva Temple at Khajuraho).
4. இராஜஸ்தான் மாநிலத்தில் அபுமலையிலுள்ள திலவாரா ஆலயம் (Dilawara Temple at Mount Abu in Rajasthan).

தென்னிந்தியாவில் கோவில் கட்டடக்கலையும், சிற்பங்களைச் செதுக்கும் கலையும் பல்லவர் காலத்திலிருந்துதான் தொடங்கியிருக்க வேண்டுமெனக் கருதப்படுகின்றது. (கி.பி. ஏழாம் நூற்றாண்டு) மகேந்திரவர்மன், நரசிம்மவர்மன்



படம் 20. மாமல்லபுரக் கடற்கரைக் கோவில்

போன்ற பல்லவப் பேரரசர்கள் காலத்தில் கோவில்களும் வேறுபல கட்டடங்களும் பெருமளவில் கட்டப்பட்டன.

ஒரே கல்லைச் செதுக்கி உருவாக்கப்பட்ட கற்கோவில்களும் (Rock cut Temples), (உதாரணமாக மாமல்லபுரக் கடற்கரையில் காணக்கிடக்கும் ஏழு கற்கோவில்கள்) அழகே உருவான முறையில் கட்டிமுடிக்கப்பட்ட ஆலயங்களும் (உதாரணமாக மாமல்லபுரக் கடற்கரைக் கோவில், காஞ்சிமாநகரில் உள்ள கைலாசநாதர் ஆலயம், மற்றும் மாமல்லபுரக் கடற்கரைப் பகுதியிலுள்ள பாறைகளில் செதுக்கப்பட்டுள்ள பல்வேறு சிற்பங்களும் பல்லவர்காலக் கலைச் சிறப்பை அறிவிக்கின்றன.

பல்லவர்கால ஆலயங்களின் அமைப்பு முறையின் கட்டட அமைப்பு முறைகள், கட்டடக்கலை மிகவும் வளர்ந்து விட்ட நிலையினை உணர்த்துவதாக உள்ளன. பல்லவர்களுக்கு முற்பட்டகாலக் கட்டடங்களைப் பற்றியோ, கட்டட



படம் 21. மாமல்லபுரச் சிற்பங்கள்

அமைப்புகளைப் பற்றியோ குறிப்புகள் ஏதும் நமக்குக் கிடைக்கவில்லை. பல்லவர்கள் காலக் கற்கோவில் வடிவ அமைப்புகளும், ஆலய அமைப்பு முறைகளும், சிற்பங்களின் அமைப்பையும் பார்க்கும்போது. அத்தகு சிறப்புமிக்க ஆலயங்களை உருவாக்கிய சிற்பிகள், மிகச் சிறந்த கட்டட அமைப்பு முறைகளைக் கற்றுத் தேர்ந்தவர்களாக இருந்திருக்க வேண்டும். எனவே, தென்னிந்தியாவிலும்

ஏழாம் நூற்றாண்டு பல்லவர் காலத்திற்கு முன்பே கட்டடக் கலை வளர்ச்சியுற்று இருந்திருக்க வேண்டும். தென்னிந்தியக் கட்டட அமைப்பு முறையில் கைதேர்ந்த சிற்பிகள் நிறைந்திருக்க வேண்டுமென்பது தெளிவாகின்றது.

பல்லவப் பேரரசர்களைத் தொடர்ந்து தென்னிந்தியாவில் பேரரசு நிறுவிய பிற்காலச் சோழர்களும் கட்டடக்



படம் 22. பிரகதீசுவரர் ஆலயம் (தஞ்சாவூர்)

கலையில் மிகுந்த ஆர்வமுடையவர்களாகக் காணப்பட்டனர். அவர்கள் காலத்தில் உருவாக்கப்பட்டு வானளாவி நிற்கின்ற தஞ்சைப் பெருவுடையார் கோவில் எனப் புகழப்படுகின்ற பிரகதீசுவரர் ஆலயம், சோழர் காலக் கட்டடக் கலைப் பெருமையை உலகம் உள்ளளவும் அறியச்செய்யும். தஞ்சைப் பெருவுடையார் கோவிலை உருவாக்கிய இராசராச சோழனின் மகனான இராஜேந்திர சோழன் கட்டடக் கலையில் தந்தையையும் மிஞ்சவேண்டும் என்ற கலையார்வம் கொண்டு, தனது புதிய தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்தில் தஞ்சைப் பெருங்கோவிலின் மாதிரியை உருவாக்கினான். தஞ்சைப் பெருங்கோவில் கோபுரத்தின் உயரம் 54 மீட்டராகும். அதன் உச்சியில் நிறுவப்பட்டிருக்கும்

மாபெரும் விமானம் 80 டன் எடையுள்ள ஒரே கல்லால் ஆனது. அந்த அளவு எடையுள்ள ஒரே கல்லை 54 மீட்டர் உயரக் கோபுரத்தின் மேல் அந்தக் காலத்திலேயே ஏற்றியிருப்பது, பண்டைய தமிழர்களின் பொறியியல் திறமையை வெளிப்படுத்துகின்றது. நான்கு மைல் தொலைவிலிருந்த ஒரு கிராமத்திலிருந்து தொடங்கிய சாரத்தின் வழியாக, கொஞ்சம் கொஞ்சமாக அப்பெருங்கல்லைக் கோபுரத்தின் உச்சிக்கு உருட்டிச் சென்றிருக்கலாம் எனக் கருதப்படுகின்றது. இந்த நிகழ்ச்சியை வலியுறுத்தும் வண்ணம் தஞ்சைக்கு நான்கு கல் தொலைவில் சாரப்பள்ளம் என்ற கிராமம் உள்ளது. இந்தப் பெருங்கோவில் தமிழர் கட்டடக்கலையின் மேன்மையை விளக்கும் மாபெரும் எடுத்துக்காட்டாகக் கருதப்படுகின்றது. இந்தக் கோவில் அமைப்பினைப் பின்பற்றி தமிழ்நாடு முழுவதிலும் ஆலயங்கள் கட்டப்பட்டன. சோழர்கால ஆலயங்கள் அனைத்தும் மிகப் பெரிய உருவ அமைப்பினைக் கொண்டவை. ஆலயக் கோபுரங்கள் மற்றும் தூண்கள் அனைத்தும் விலைமதிக்க இயலாத தன்மைகொண்ட சிற்ப எழிலோவியங்களைக் கொண்டிருப்பனவாகும். 'சோழர்காலச் சிற்பிகள் மாபெரும் ஆலயங்களைக் கற்பனை செய்தனர். அதை முடிக்கும்போது சிறந்து நுண்ணிய வேலைப்பாடு கொண்ட பொன் அணியைப்போல, அழகு மிளிரும் கலைக் கோவில்களாக உருவாக்கினர்' என ஃபெர்குசன் (Fergusson) என்ற வரலாற்றறிஞர் வியந்துரைக்கின்றார்.

கோவில் கட்டடக்கலையில் ஒரு புதுமாற்றம் ஏற்படத் தொடங்கியது. எளிமையாக அமைக்கப்பட்டிருந்த நுழைவாயில்களுக்குப் பதிலாக மிகப்பெரிய கோபுரங்கள் வாயிற் கோபுரங்களாகக் கட்டத் தொடங்கப் பெற்றது. நுழைவாயிலில் ஒரு கோபுரம் கட்டுகின்ற நிலைமாறி, நான்கு திசைகளிலும் நான்கு வாயிற் கோபுரங்கள் உருவாக்குகின்ற தன்மை ஏற்பட்டது. வாயிற் கோபுரங்களுடன் கோவில் கருவறைமீது சிறிய கோபுரம் கட்டுகின்ற நிலை ஏற்பட்டது. இந்த மாற்றங்கள் காலப்போக்கில் ஏற்பட்டவைகளாகும். இருக்கின்ற கட்டடக்கலையில் ஒருசில சிறந்த மாற்றங்களுடன் கூடிய புதிய கட்டடக்கலை விஜயநகரப் பேரரசர்கள் காலத்தில் உருவாக்கப்பட்டது. அப்புதிய கட்டடப்பாணியில் விஜய நகரப் பேரரசர்கள் தென்னிந்தியா முழுவதிலும் ஆலயங்களை நிறுவினார்கள். அவ்வரசர்கள் கட்டிய கோவில்களின் நுழைவாயில் கோபுரங்

களுக்கு 'இராய கோபுரம்' என்று பெயர். விஜய நகரப் பேரரசில் மிகவும் சிறப்புற்று விளங்கிய இராயர் (Rayar) குல அரசர்களைப் பெருமைப்படுத்தும் வகையில் அப்பெயர் வழங்கிவருகின்றது. இதுமட்டுமன்றி ஒவ்வொரு கோவி லிலும் 'ஆயிரங்கால் மண்டபம்' (Pillared Mandapams)



படம் 23. மதுரைக் கோவில்

கருவறையைச் சுற்றிலும் மேற்கூரையுடன் கூடிய விசால மான நடைகள், பிரகாரங்கள் (Covered Corridors) போன்ற வைகள் காணப்படுகின்றன. விஜய நகரில் கிருஷ்ணதேவ ராயரால் கட்டப்பட்ட **விட்டாலசாமி ஆலயம்** (Vitala-samy Temple), ஹசரா இராமசுவாமி ஆலயம் (Hazara Rama-samy Temple) மற்றும் கிருஷ்ணசாமி ஆலயம் (Krishnasamy Temple) போன்ற விஜய நகரையாண்ட பேரரசர்களின் பெருமித ஆட்சியின் பெருமையைப் பேசும் ஆலயங்கள் தலைக்கோட்டைப் போரையடுத்து (Battle of Talikota) விஜய நகரில் நுழைந்த முஸ்லிம் படைகளின் அழிவுச்

செயல்களுக்கு இலக்காயின. இன்று அழிந்த நிலையில் பழம் பெருமையினை உணர்த்தும் சோகச் சின்னங்களாகக் காட்சியளிக்கின்றன. அதேநேரத்தில் மதுரை, திருவரங்கம் எனப் படும் ஸ்ரீரங்கம், திருநெல்வேலி போன்ற நகரங்களில் விளங்கும்



படம் 24. கைலாசநாதர் கோவில்

ஆலயங்கள் விஜயநகர அரசர்களின் கட்டடக்கலை ஆர்வத்தை உலகிற்குப் பறைசாற்றிய வண்ணம் வானளாவ நிற்கின்றன.

வடஇந்தியாவிலும், தென்குமரி உட்பட்ட தென்னிந்தியப் பகுதிகளிலும் இருவேறு வகைப்பட்ட ஆலயக் கட்டடக்கலை தோன்றி வளர்ந்திருந்தது என்பதைக் கண்டோம். இவ்விரண்டு பகுதிகளுக்கும் இடைப்பட்ட தக்கணப் பகுதியில் வட, தென்னிந்திய ஆலயக் கட்டடக் கலைகளின் கலப்புப் பாணியைக் காணமுடியும். தக்கணப் பகுதியில் ஆட்சி செலுத்திய இராஷ்டிரக் கூட (Rashtra Kutas), சாளுக்கிய (Chalukya) அரச வமிசங்கள் இந்தக் கலப்புக் கட்டடக் கலையைப் பெரிதும் ஆதரித்தன. சாளுக்கிய அரசின் தலைநகரான பாதாமி நகரில் (Badami) கட்டப்பட்ட கோவில்கள் பல்லவர்களின் குகைக் கோவில் அமைப்பில் கட்டப்பட்டுள்ளது. பல கோவில்கள் பல்லவர் கட்டடக் கலை அமைப்பிலும் கட்டப்பட்டிருந்தன. அந்த இந்துக் கோவில்களில் அழகான வடிவமைப்புக் கொண்ட அழகுச் சிலைகளும் சிற்பங்களும் வடிக்கப்பட்டிருந்தன. பல்லவர்கள் கட்டட அமைப்பில் எல்லோரரவில் கைலாசநாதர் கோவில் பாறையைக் குடைந்து அமைக்கப்பட்டுள்ளது. அக்கோவிலை உருவாக்கியவர் இராஷ்டிரக்கூட மன்னர்களில் மிகவும் புகழ்பெற்று விளங்கும் முதலாம் கிருஷ்ணா (Krishna I) என்பவராவர்.

சாளுக்கியர்களும் இராஷ்டிரக் கூடர்களும் தக்கணத்தில் பல்லவர் கட்டட முறைகளைப் பின்பற்றிய அதே காலத்தில் மைசூரை ஆண்ட (தற்போது கர்நாடக மாநிலம்) ஹொய்சால வம்சத்து (Hoysalas) அரசர்கள் புதிய கட்டட முறையைத் தோற்றுவித்தனர். பதின்மூன்று, பதினான்காம் நூற்றாண்டுகளில் அரசோச்சிய ஹொய்சாலர்கள், தங்களுக்கு முன்பிருந்த 'கங்கர்கள்' (Gangas) பின்பற்றிய அதே கட்டட முறையை ஒருசில மாற்றங்களுடன் கையாண்டனர். கங்கர்குல அரசனின் அமைச்சரான சாமுண்ட ராயா (Chamunda Raya) என்பவர் கி.பி. 983ஆம் ஆண்டுவாக்கில் மாபெரும் கோமதீஸ்வரர் (Gomateswarar) சிலையை உருவாக்கக் காரணமாக இருந்தார். 'கோமேதா' (Gomata) என்ற சமண துறவியின் பெருமையை உலகிற்கு உணர்த்தும் வண்ணம் அந்த மாபெரும் சிலையை வடிக்கச் செய்தார் என்று நம்பப்படுகின்றது. சிரவண பெல்கோலா (Sravana Belgola) என்றழைக்கப்படும் குன்றின்மீது, 18 மீட்டர் உயரத்தில் இந்த கோமதீஸ்வரரின் கற்சிலை நிறுவப்பட்டுள்ளது. உலகப் புகழ்பெற்று விளங்கும் கற்சிலைகளில் இந்தக் கோமதீஸ்வரரின் சிலையும் ஒன்றெனப் புகழப்படுகின்றது.

கங்க அரசகுலத்தினரைப் போலவே, ஹொய்சாலர்களும் கட்டடக் கலையிலும் சிற்பக்கலையிலும் ஆர்வம் கொண்டிருந்தனர். துவார சமுத்திரம் என்றழைக்கப்படுகின்ற ஹளபீடு (Dwarasamudra or Halebid) என்ற நகரில் கட்டப்பட்ட ஹொய்சாலீஸ்வரர் ஆலயம் (Hoysaleswara Temple) ஹொய்சாலர்களால் கட்டப்பட்ட ஆலயங்களுள் மிகவும் சிறப்புவாய்ந்த ஒன்றாகும். ஹொய்சாலர் ஆலயங்கள் விண்மீன் வடிவில் (Star shaped) கட்டப்பட்டவை. விண்மீன் வடிவத்தில் ஐங்கோண வடிவில் அமைக்கப்பட்ட அடித்தளத்தின்மீது ஹொய்சாலர்களின் ஆலயங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அந்த அடித்தளங்கள் பெருமளவில் சிற்பங்களைச் செதுக்குவதற்கு வாய்ப்பாக அமைந்



படம் 25. ஹொய்சாலீஸ்வரர் ஆலயம்

துள்ளன. ஆலயக் கோபுரங்கள் சோழர் காலத்துக் கோபுரங்களைப் போலவே பிரமிடுகள் போன்று அடுக்கடுக்காகக் கட்டப்பட்டன. ஆனால், ஹொய்சாலர் காலத்துக் கோபுரங்களின் உயரம் குறைவாக இருக்கின்றது. ஆலயம் முழுவதிலும் விலங்குகள், பறவைகளின் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. சிற்பிகளின் கலையார்வத்தையும், திறமையையும் அச்சிற்பங்கள் வெளிப்படுத்துகின்றன.

இடைக்கால ஆலயங்களில் அழகுக்கும் அமைப்புக்கும் செல்வாக்குக் குறைந்து, சமயக் கருத்துகளையும், கொள் கைகளையும் விளக்கும் வகையில் உருவாக்கப்பட்டிருந்தன. பாலர்கள் (Palas), சேனர்கள் (Senas), சண்டாளர்கள் (Chandellas) மற்றும் காளச்சூரிகள் (Kalachuris) போன்ற வடஇந்திய அரசுப் பரம்பரைகள் அத்தகு பாணி யிலேயே ஆலயங்களை அமைத்துச் சென்றனர். எனவே அழகிலோ, அமைப்பிலோ, சிற்பக்கலைச் சிறப்புகளிலோ, இடைக்காலத்து ஆலயங்கள், அதற்கு முந்திய காலத்து ஆலயங்களைவிடக் குறைந்தே காணப்பட்டன.

**முஸ்லிம்களின் ஆட்சியில் இந்தியக் கட்டடக் கலையில் ஏற்பட்ட மாறுதல்கள்**

இந்தியாவில் முஸ்லிம்களுக்குக் கிடைத்த வெற்றி, இக்கட்ட டக் கலையிலும் மாறுதல் களை ஏற்படுத்தும் காரணி யாயிற்று. இந்தோ-முஸ் லிம் கட்டடக்கலை என்ற புதிய கட்டட அமைப்பு முறை தோன்றியது. டெல்லி சுல்தானியக் காலத்தில் கட்டப்பட்ட கட்டடங்கள் அனைத்தும் அந்தக் கலப்பு முறையிலே யே கட்டப்பட்டிருக்கின் றன. கட்டடக் கலைஞர் களில் பெரும்பாலோர் இந்துக்களே. அக்கலைஞர் கள் வெளிநாட்டு கட்டடக் கலை நுணுக்கங்களைக் கற்று, அவைகளையும் இணைத்துப் புதிய பாணி யில் கட்டடங்களை உரு வாக்கத் துணிந்தனர். அந் தப் புதிய பாணியே இந்தோ-முஸ்லிம் கட்ட டக்கலை என வழங்கப்படு கின்றது. முஸ்லிம் ஆட்சி யின் ஆரம்பக் காலத்தில் இந்துக் கோவில்களே முஸ்



படம் 26. குதுப்மினார்

லிம்களின் மசூதிகளாக மாற்றப்பட்டன. எனவே, இந்திய கட்டட அமைப்பும் கலைகளும் அப்படியே ஏற்றுக்கொள்ளப் பட்டன. விரைவில் முஸ்லிம் கட்டடக்கலை உயர்நிலையை அடைந்தது. அலங்கார வளைவுகளும் (Arches), அரைக்கோள வடிவத்தில் அமைக்கப்படும் ஆலயத்தின் கூரைகளும் (Domes), தொழுகைக்கு அழைப்புவிடுக்கும் உயர்ந்த ஒற்றைக் கோபுரங் களும் (Minars), மசூதியின் நாற்புறங்களிலும் நெடிதுயர்ந்து நிற்கும் கோபுரங்களும் (Minarets), சதுரங்கள், வளைவுகள் கொண்ட சித்திர வேலைப்பாடுகளும், புனித நூலின் கருத்து களை அழகிய எழுத்துகளில் பொறிப்பதும் ஆகியவைகளே முஸ்லிம் கட்டடக் கலையின் சிறப்பு அம்சங்களாகும். டெல்லியிலிருக்கும் குதுப்மினார் (Qutb Minar), வங்காளத்தில் கௌர் நகரிலிருந்த மசூதிகள், ஜான்பூரிலிருந்த அடாலா மசூதி, மற்றும் ஜாமி மசூதி போன்றவை சுல்தானியக் காலத்தின் பெருமையை விளக்கும் ஒருசில சின்னங்களாகும்.



படம் 27. கோல்கும்பா

தக்கணத்திலிருந்த பாமினி அரசுகள் (Bhamani Kingdoms) கலை, இலக்கியம் மற்றும் அறிவியல் கலை களின் காவலர்களாகத் திகழ்ந்தன. அவ்வரசுகள் காலக்

கட்டடக்கலை இந்திய, துருக்கிய, எகிப்திய, பாரசீகக் கட்டடக் கலைகளின் கலப்பாகக் காட்சியளித்தது. குல்பர்கா கோட்டையிலிருக்கும் ஜும்மா மசூதியும், பீடாரில் முகமது கவான் (Mohammed Gawan) உருவாக்கிய கல்லூரியும் அத்தகு கலப்புக்கட்டடக்கலைக்குச்சான்றாக விளங்குகின்றன. பீஜப்பூரின் சுல்தானாக இருந்த முகமது அடில் ஷாவின் (Mohammed Adil Shah) கல்லறை, கோல்கும்பாஸ் (Gol Gumbas) என்றழைக்கப்படுகின்ற கலையழகு மிளிர்கின்ற கட்டடமாகும். அக்கட்டடம் 17ஆம் நூற்றாண்டில் ஆண்ட பாமினி அரசுகளின் கட்டடக்கலைச் சிறப்பிற்குச் சான்றாகத் திகழ்கிறது. பாமினி அரசுகள் காலத்தில் கட்டப்பட்ட பெரும்பாலான கட்டடங்கள், இந்துக்களின் கோவில்களை இடித்துவிட்டு, அதே இடங்களிலேயே கட்டப்பட்டிருக்கின்றன. இந்துக் கோவில்களின் சிதைவிலிருந்து எடுக்கப்பட்ட பல பொருள்களை, முஸ்லிம்களும் தங்கள் கட்டடத்திற்குப் பயன்படுத்திக்கொண்டனர். இதனால் இந்தியக் கட்டடக் கலைமுறைகளும் இஸ்லாமியக் கட்டடக் கலையோடு இணைய நேர்ந்தது எனலாம்.

பாமினி அரசுகள் பாரசீகம், துருக்கி, எகிப்து போன்ற நாடுகளிலிருந்து கட்டடக் கலைஞர்களையும் வரவழைத்துத், தங்கள் நாடுகளில் குடியேற்றினர். அந்தக் கலைஞர்கள் கட்டிய கட்டடங்களில் அந்நிய வாடை வீசியது. பின்னர் படிப்படியாக உறுதியும் வனப்பும் வாய்ந்த தக்கணத்துக் கட்டடக்கலை உருவாயிற்று.

மொகலாயப் பேரரசர்கள் கலைப்பிரியர்கள். அவர்கள் பெருமளவில் மாபெரும் மாளிகைகளையும், கோட்டைகளையும், மசூதிகளையும் நாடெங்கும் கட்டினர். அனைத்துக் கலைகளுக்கும் பேராதரவு அளித்தனர். பண்டைய பாரசீக-இந்திய அழகுக்கலைகளின் கலப்பு ஏற்பட்டது. சுல்தானியக் காலக் கலை, கட்டட முறைகள் கொஞ்சம் கொஞ்சமாக மாறுதல் பெற்று, மொகலாயர் காலத்தில் இந்தோ-சராசனியக் கலையாக (Indo-Saracenic Architecture) உருமாறியது. மொகலாயர் காலத்தில் இந்தக் கட்டடக் கலை உன்னத நிலையை அடைந்தது.

சமண, இந்துக் கோவில்களில் காணப்பட்ட அழகு அம்சங்களான சதுரவடிவத் தூண்கள் அமைப்பையும், நீண்ட

வரிசையில் அமைக்கப்பட்டிருந்த வளைவுகளையும் (Arches) மொகலாயர்கள் அப்படியே பின்பற்றினர். புத்த விகாரங்களின் அமைப்பு, முஸ்லிம்கள் காலத்தில் உருமாறி, அரைக்கோள வடிவ மேற்கூரையானது (Domes).

டெல்லியில் கட்டப்பட்ட ஹுமாயூனின் கல்லறை (Tomb of Humayun) பதேபுர் சிக்ரி நகரில் கட்டப்பட்ட புலந்த் தர்வாசா (Buland Darwaza வெற்றி வளைவுகள்) மற்றும் பளிங்குக்கல் மசூதி போன்றவை மாமன்னர் அக்பரின் கட்டடக் கலை ஆர்வத்தை எடுத்துக்காட்டுகின்றன; மொகலாயர் காலக் கட்டடக்கலையின் சிறப்பையும் விளக்குகின்றன.



படம் 28. ஹுமாயூன் கல்லறை

நூர்ஜஹான் பேரரசியார் தமது தந்தையின் நினைவாக ஆக்ராவில் கட்டிய கல்லறை (Mausoleum of Itimad - uddaula) ஜஹாங்கீர் காலத்துக் கட்டடக்கலையின் வளர்ச்சிக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. ஜஹாங்கீரின் கல்லறையை லாகூருக்கருகில் ஷாதரா (Shahdare) என்ற இடத்தில் நூர் ஜஹான் கட்டிமுடித்தார். அக்பரே தமது கல்லறையின் வடிவமைப்பை உருவாக்கி சிக்கந்தரா நகரில் (Sikkandara) கட்டவும் ஆரம்பித்திருந்தார். ஆனால், கல்லறை கட்டி முடிப்பதற்குள் அக்பர் இறக்கவே, ஜஹாங்கீர் அதைக் கட்டி முடித்தார். இவைகள் அனைத்தும் மொகலாயர் காலத்து கட்டடக் கலையின் சிறப்புகளை விளக்கும் ஒருசில சான்றுகளேயாகும்.



படம் 29. செங்கோட்டை

மொகலாயர் காலக் கட்டடக்கலை பேரரசர் ஷாஜஹான் (Shah Jahan) காலத்தில் மிகவும் உன்னத நிலையை அடைந்தது. செங்கோட்டை, ஜும்மா மசூதி (இவையிரண்டும் டெல்லியில் உள்ளவை), முத்து மசூதி அல்லது மோதி மசூதி (Pearl Mosque or Moti - Masjid), தாஜ்மஹால் (இவையிரண்டும் ஆக்ராவில் உள்ளவை) ஆகிய கட்டடங்கள் மிகவும் புகழ்பெற்ற கட்டடங்கள் ஆகும். டெல்லியில் ஷாஜகானாபாத் என்ற நகரை நிர்மாணித்து, அந்நகருக்குள் செங்கோட்டையை ஷாஜஹான் கட்டினார். செங்கோட்டையின் மிகச் சிறந்த பகுதியான திவானி காஸ் (Diwani Khas-Hall of Prviate Audience) என்ற அறையில் பேரரசர் அரசின் முக்கிய அதிகாரிகளைச் சந்திப்பார். 'திவானி ஆம்' (Diwani-Am or Hall of Public Audience) என்பது பேரரசரின் அரசவைக் கூடும் இடமாகும். அந்த அவையில் அரசரை அனைவரும் நேரில் சந்திக்க இயலும். அந்த இரண்டு அறைகளில் 'திவானி காஸ்' என்ற அறை மிகமிக அழகாக, அருமையான வேலைப்பாடுகளுடன் காணப்படுகிறது. அந்த அறையின் ஒருபகுதியில் கீழ்க்காணும் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது.

'If there is a Paradise on Earth
It is this, it is this, it is this'

'இப்பூவுலகில் சொர்க்கம் என்ற ஒன்று இருக்குமானால், அது இதுவே, அது இதுவே, அது இதுவே' என்று



படம் 30/ ஜும்மா மசூதி

பொருள் விளங்க, எழுதப்பட்ட எழுத்துக்களைப் படிக்கும் போது ஷாஜஹானின் கலையுள்ளமும், அவரது கற்பனை வடிவத்தினையும் ஓரளவு ஊகித்தறிய முடியும்.

டெல்லியிலிருக்கும் ஜும்மா மசூதிதான் இந்தியாவிலேயே மிகப் பெரிய மசூதியாகும். அம்மசூதியின் உட்புறம் எந்த அலங்காரமோ, சித்திர வேலைப்பாடுகளோ இன்றி வெறுமையாகக் காட்சியளிக்கின்றது. 'அல்லாவை உளமாற தொழும் இடத்தில், மனத்தினை ஈர்க்கும் விதத்தில் எவ்வித அழகுக் கலை அம்சங்களும் இருக்கக்கூடாது' என்ற உயரிய நோக்கினாலேயே அவ்வாறு உருவாக்கப்பட்டுள்ளது என நம்புகின்றனர்.

ஆக்ரா நகரில் யமுனை நதிக்கரையில் மறைந்துவிட்ட காதல் மனைவி மும்தாஜின் நினைவஞ்சலியாக ஷாஜஹானால் உருவாக்கப்பட்ட எழிலோவியமே தாஜ்மஹால் ஆகும். ஷாஜஹானின் துணைவி 1630ஆம் ஆண்டு உயிர்நீத்தார். ஆனால், தாஜ்மஹால் உருவில் ஷாஜஹான் அவளது நினைவை பளிங்குமாளிகையாக வடித்தான். அழிவற்ற காதலின் சின்னமாக, உலக அதிசயங்களுள் ஒன்றாக, மொகலாயப் பேரரசின் பெருமையின் எடுத்துக்காட்டாக தாஜ்மஹால் ஒளிவீசி நிற்கின்றது. அந்த அழகு நினைவாலயத்தை உருவாக்க, உலகின் பல பாகங்களிலிருந்தும் கட்டடக்



படம் 31. தாஜ்மஹால்

கலைஞர்கள் வரவேற்கப்பட்டனர். கட்டடக் கலையில் கைதேர்ந்த உலகத்துக் கலைஞர்கள் அனைவரும் உஸ்தாத்

இசா (Ustad Isa) என்பவரின் தலைமையில் பணி யாற்றினார்கள். தினமும் இருபதாயிரத்திற்கும் அதிகமா னோரால் இருபத்திரண்டு ஆண்டுகள் உழைத்து, மூன்றரை கோடி ரூபாய்க்கும் அதிகமான செலவில் கட்டி முடிக்கப் பட்டதே தாஜ்மஹால் ஆகும்.

கணவன்-மனைவியரின் காதல் வாழ்வின் உன்னதத் தன்மையை உலகிற்கு எடுத்துரைப்பது தாஜ்மஹால் ஆகும். அந்தக் காதல் மாளிகையைக் கட்டி முடித்தவர்கள் இஸ்லா மியக் கட்டடக் கலைஞர்கள்; அதை அழகுபடுத்தியவர்கள் இந்துக் கலைஞர்கள் ஆவர்.

ஆக்ராவிலிருக்கும் முத்துமசூதி முழுவதும் சுத்தமான வெண்ணிறப் பளிங்குக் கற்களைக் கொண்டு கட்டப்பட்டு, முத்துப்போல் பளிச்சிடுகின்றது. அந்த மசூதி மொகலாயக் கட்டடக்கலையின் உன்னத நிலைக்குச் சான்றாக மிளிர் கின்றது.

## இந்திய-ஆங்கிலக் கட்டடக்கலை (Indo - British Architecture)

மொகலாயப் பேரரசின் வீழ்ச்சியும், ஆங்கில ஆட்சியின் தொடக்கமும், இந்தியக் கட்டடக்கலையின் வீழ்ச்சியைத் தோற்றுவித்தன. கலையழகு மிக்க கட்டடங்களையும் சிற்பங்களையும் போற்றுவோரும் ஆதரிப்போரும் இல் லாததனால், கட்டடக்கலை வீழ்ச்சியடைந்தது. ஆங்கில ஆட்சியாளரின் தேவைக்கேற்ப ஒரேமாதிரியான, எந்தவித அலங்காரங்களுமில்லாத எளிமையான கட்டடங்களே கட்டப்பட்டன. இந்த எளிய முறையினால் தமது கற் பனை வளத்தினையும் கட்டடத் திறமையினையும் தமது கைவண்ணத்தையும் காட்டுகின்ற வாய்ப்புக் கட்டடக் கலை ஞர்களுக்குக் கிட்டவில்லை. ஏதோ உழைப்பு, உழைப் பிற்கேற்ற ஊதியம் உண்டு வாழப் போதுமானது என்ற எளிய முறையில் வாழவேண்டிய நிலையில் இருந்த கட்டடக் கலைஞன், தனது பரம்பரைத் திறமை பயனற்று மழுங்கிப் போவதைக் கண்டான். எளிமையும் பயனுமே ஆங்கிலக் கட்டடக்கலையின் அடித்தளமாக இருந்தன. கட்டடங் களைக் கட்டப் பயன்படுத்திய பொருள்களும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே மாற்றம் பெற்றன. செங்கல், சுண்ணாம்பு, மரங்கள் ஆகிய பழைய பொருள் களுக்குப் பதிலாகச் சிமென்டு, இரும்பு போன்றவைகளும், பலவித வர்ணங்களும் கட்டடங்கள் கட்டுவதற்கு ஏற்ற

பொருள்களாயின. செல்வந்தர்கள் வாழும் பங்களாக்கள், தொழிற்கூடங்கள், கோட்டைகள், கதீட்ரல் என்ற திருக் கோயில்கள் ஆகிய அனைத்துமே ஐரோப்பியக் கட்டட முறை யில் கட்டப்பட்டன. பம்பாய் அரசு அலுவலகங்கள், லாகூர் புகைவண்டி நிலையம், குவாலியர், பரோடா போன்ற நகரங்களில் இருந்த மாளிகைகள், கல்கத்தாவில் விக்டோரியா பேரரசியாரின் நினைவாலயம் (Victoria Memorial in Calcutta) போன்றவை ஐரோப்பியக் கட்டடக்கலைக்கு ஒருசில உதாரணங்களாகும்.

ஐரோப்பியக் கட்டடக்கலை இந்தியாவில் நிலை பெற்று விட்டதால் தமது பண்டைய திறமைகளை மறந்து விடுகின்ற நிலையிலிருந்த இந்தியக் கட்டடக் கலைஞனுக்கு ஐரோப்பியர் காலத்திலும் ஒரு வாய்ப்பு கிட்டியது. இந் திய வரலாற்றுச் சின்னங்களின் பாதுகாப்புச் சட்டம் (Ancient Monuments Preservation Act of 1904) கர்ஸான் பிரபு வால் இயற்றப்பட்டது. பழங்கால வரலாற்றுச் சின்னங்களை பழுதுபார்ப்பதற்கும் பாதுகாப்பதற்கும் இந்தியக் கட்ட டக்கலை வல்லுநர்கள் தேவைப்பட்டனர். தென்னிந்தியா வில் பல மடாலயங்களும், திருப்பணி மன்றங்களும் பழைய கோவில்களைப் புதுப்பிப்பதற்கும், புதிய கோவில்களை உரு வாக்குவதற்கும் பழைய இந்தியக் கட்டடக்கலை நுணுக்கங் களில் சிறந்தோரைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டியதாயிற்று. சிற்ப சாஸ்திரங்களில் சிறந்தோருக்கு மீண்டும் உயர்வு கிட் டியது. இராஜஸ்தானத்திலிருந்த சுதேச அரசுகள் பண்டைய முறையில் மாபெரும் மாளிகைகளைக் கட்டத்தொடங் கின. இந்தியக் கட்டடக்கலை வல்லுநர்கள் பெருமளவில் தேவைப்பட்டனர். பனாரஸில் கங்கை நதிக்கரையை அழகு படுத்தும் வகையில் உருவாக்கப்பட்டிருந்த ஆலயங்களும் மடங்களும் மொகலாயப் பேரரசர் அவுரங்கசீப்பின் காலத் தில் அழிக்கப்பட்டன. பனாரஸ் தனது பண்டைய சிறப்பை இழந்துவிட்டிருந்தது ஆங்கிலேயர் காலத்தில் பனாரஸ் நகரம் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது. புதியவகைக் கட்டடங் கள் தோன்றலாயின. சில கட்டடங்கள் புதுமையானதா கவும் கட்டப்பட்டன். பண்டைய முறையில் இந்துக்களின் ஆலயங்களும் கட்டப்பட்டன. இத்தகு பணியில் இந்தியக் கட்டடக்கலை நிபுணர்கள் மீண்டும் வாய்ப்பு பெற்றனர். புதிய கோவில்களின் அமைப்புகள் சற்றுப் புதுமையானவை யாகத் தென்படுகின்றன.

ஐரோப்பியரின் கட்டட முறையில் கட்டப்பட்ட ஆங்கிலேயரின் கட்டட அமைப்புகள் இந்தியக் கட்டடக் கலைஞர்களுக்கு சிறந்த எடுத்துக்காட்டுகளாய் விளங்கின. ஐரோப்பியக் கட்டட முறை இந்தியாவில் புகுத்தப்பட்ட பின்னர். ஐரோப்பிய - இந்தியக் கலப்புக் கட்டடக்கலை தோன்றியது. இந்தக் கலப்புக் கலையின் செயலுக்கு எடுத்துக்காட்டாகப் புதுடில்லி நகர அமைப்பைக் கூறலாம். சர் எட்வின் லுட்யன்ஸ் (Sir Edwin Lutyens), சர் எட்வர்ட் பேக்கர் (Sir Edward Baker) ஆகிய இவ்விருவரும் புதுடில்லி நகரை 1930-க்குப் பின்னர் நிர்மாணித்தனர். நிர்மாணத் திட்டங்களைத் தீட்டும்போது புதிய உரோமானிய கட்டடக் கலை மற்றும் நகர அமைப்பு முறையைப் பின்பற்ற முடிவு செய்தனர். ஆனால், ஜார்ஜ் பெர்னாட்ஷா (George Bernard Shaw) மற்றும் சர் வில்லியம் ரோதன்ஸ்டின் (Sir William Rothenstein) போன்றோரின் கடும் எதிர்ப்புக் காரணமாக அத்தகைய திட்டம் கைவிடப்பட்டது. இந்திய முறையில் நகரை நிர்மாணிக்க முடிவுசெய்தனர். அவர்கள் உருவாக்கிய கட்டடங்களும் ஐரோப்பிய-இந்தியக் கலப்புக் கட்டட அமைப்பு முறையில் அமைந்திருக்கவில்லை. ஒவ்வொரு



படம் 32. பார்லிமென்ட்

கட்டடமும் தனித்தனியாக அழகோ, அமைப்போ இல்லாது காணப்பட்டது. கட்டடக் கலைஞர்களின் அத்தகைய தோல்விக்குக் காரணம் அவர்களுடைய திறமைக் குறைவோ, கட்டட முறைகளின் குறைபாடுகளோ அல்ல. அவர்கள் புதுடில்லியை நிர்மாணிக்க முயன்றபோது

பண்டைய கட்டடக்கலையின் மீதிருந்த ஆர்வம் முழுவதும் குறைந்திருக்கவுமில்லை; புதிய ஐரோப்பிய புாணி மக்களி டையே மதிப்புப் பெற்றிருக்கவுமில்லை. இந்த இடைப் பட்ட காலத்தில் உருவாக்கப்பட்ட நகர் சிறப்புத் தன்மை யற்று விளங்குவதில் வியப்பேதுமில்லை. பஞ்சாப், ஹரியானா மாநிலங்களின் தலைநகரான சண்டிகர் (Chandi-garh) நகரம் பிரெஞ்சுக் கட்டடக்கலை நிபுணர்களால் நிர்மாணிக்கப்பட்டு, கலையழகும் கட்டட அமைப்புச் சிறப்புகளும் பெற்றுத் திகழ்கின்றது.

## ஓவியக்கலை

### ஓவியக் கலையின் தோற்றம்

கிறித்து தோன்றுவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே பண்டைய இந்தியாவில் ஓவியக்கலை தோன்றியிருக் கின்றது. புத்த சமய நூல்களும், பிராமண சமய இலக்கி யங்களும் இந்திய ஓவியக் கலையினைப்பற்றிக் குறிப்பிட் டிருக்கின்றன. ஓவியம் மனிதனின் உள்ளத்து எழுச்சிகளை வெளிப்படுத்துவது. உள்ளத்து எழுச்சிகள் சமயச் சார் புடையதாகவோ, அல்லது உலகியல் வாழ்க்கையைச் சார்ந்ததாகவோ இருக்கும். சமயச் சார்புடைய அல்லது உலகியலைச் சார்ந்த எந்தவித ஓவியமாக இருப்பினும், மக்களிடையே மதிப்பு பெற்று, அனைத்து வகுப்பினர் சாதியினராலும் உருவாக்கப்படுவதாக மனித வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலிருந்தே இருந்து வந்திருக்கின்றது. இந்து சமய இலக்கியங்களான பிராம்மணங்களும் (Brah-manas) புத்த இலக்கியத்தில் காணப்படும் சில சூத்திரங்களும் ஓவியம், கலையாக உயர்ந்த நிலையினை உணர்த்துகின்றன. பண்டைக் காலந்தொட்டே ஓவியங்கள் தீட்டுவதில் சில முறைகள் கடைப்பிடிக்கப்பட்டு வந்தன. அந்தத் தொடக்கக்கால முறைகளே பின்னர் ஓவியக்கலை யின் நுணுக்கங்களையும், ஓவியங்களைப் பாகுபாடு செய் கின்ற வழிகளையும், ஓவிய முறைகளையும் பிற்காலத்தில் வரையறை செய்யப்பட்ட ஓவிய விதிகளாக உருமாற்றம் பெற்றன.

தொல்பழங்காலத்து ஓவியங்கள் நமக்குக் கிடைக்க வில்லை. இந்தியக் கிழக்கெல்லை நிறுவனத்திற்குட்பட்ட (Eastern States Agency) சுர்குஜா (Surguja State) சமஸ் தானத்திலிருந்த ராம்கர் (Ramgarh) மலைகளில் இருக்கும் சிதபங்கா அல்லது ஜோகிமாரா (Sitabanga or Jogimara)

குகைகளின் கூரையில் தீட்டப்பட்டிருக்கின்ற வண்ண ஓவியங்களே மிகவும் பழமையானவை என வரலாறு கூறு கின்றது. ஜோகிமாரா குகை வண்ண ஓவியங்களின் உடை களும் காஞ்சி ஸ்தூபியிலிருக்கும் சிற்பங்களின் உடையமைப் பும் ஒரே மாதிரியாகக் காணப்படுகின்றன. இக் குறிப் பினைக்கொண்டே ஜோகிமாரா குகை ஓவியங்கள், கிறித்து வுக்கு இரண்டு நூற்றாண்டுகளுக்கு முற்றபட்டவை எனக் கணக்கிடப்படுகின்றன.

**அஜந்தா ஓவியங்கள்**

குப்தர்கள் ஆட்சிக்காலம் ஓவியக் கலையின் பொற்காலம் எனப் புகழப்படுகின்றது. அஜந்தா வண்ண ஓவியங்கள் இந்திய ஓவியனின் கைவண்ணத்தையும், கலைத் திறமையினையும், உள்ளத்து எண்ணங்களையும் வண்ணக்கலவையில் தோய்த் தெடுத்து, அழியாப் புகழ் பெற்று வாழ, ஓவியங்களாகத் தீட்டுகின்ற மாண்பையும், ஓவியக்கலை பெற்றிருந்த உயர் வையும், முறைகளில் செம்மை பெற்ற தன்மையினையும் விளக்கி நிற்கின்றன. அஜந்தாக் குகைகளிலுள்ள அத்தனை ஓவியங்களும் ஒரே காலத்தில் தீட்டப்பட்டவைகளல்ல. சில ஓவியங்கள் கிறித்துவுக்கு முன் நூற்றாண்டிலும், ஒருசில கி.பி. முதல் நூற்றாண்டிலும் தீட்டப்பட்டிருக்கலாம் எனக் கருதப்படுகின்றது. இருப்பினும், உலகப் புகழ்பெற்ற அஜந்தா ஓவியங்கள் எனக் கருதப்படுகின்ற ஓவியங்களனைத் தும் குப்தர்கள் காலத்தில் உருவாக்கப்பட்டவைகளே (கி.பி. நான்காம் நூற்றாண்டு) ஆகும். அந்த ஓவியங்களின் வண் ணங்கள் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னரும் மங்காமல், புதியவை போன்றே காணப்படுவது காண்போருக்கு வியப் பூட்டுகின்றது. கண்களுக்கு விருந்தையும், உள்ளத்திற்கு உவகையையும் கொடுக்கின்ற எழில் கொஞ்சும் உயிரோவி யங்களாக அஜந்தா ஓவியங்கள் புகழப்படுகின்றன. நவரச பாவங்களை அந்த ஓவியங்களில் காணமுடியும். அச்சம், வெறுப்பு, ஆத்திரம், அன்பு, காதல் போன்ற மனித உணர்ச் சிகள் ஓவியங்களின் மூலமாக அப்படியே வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றன. உள்ளத்து உணர்ச்சிகளைத் திரைச்சீலை யில் வடிப்பதுதான் ஓவியம் என்றால் அத்தகு ஓவியக் கலையின் இலக்கணமாக, இலக்கியமாக, பார்க்கத் தெவிட் டாத கலையழகுச் சின்னங்களாக அஜந்தா ஓவியங்கள் காண் போரின் கண்களையும் கருத்தையும் ஒருங்கே கவருகின்றன. விலங்குகள், பறவைகள், மற்றும் வண்ணமலர்கள், உயி ரோவியமாக, அழகு மிளிர ஓவியங்களாக உயிர் பெற்றிருக்

கின்றன. 'சாவின் மடியில் இளவரசி' (The Dying Princess), 'தாயும் சேயும்' (Mother and Child) ஆகிய இவ்விரண்டும் அஜந்தா ஓவியங்களிலேயே மிகவும் சிறந்ததெனக் குறிப்பிடப் படுகின்றது.

குவாலியர் பகுதியிலுள்ள 'பாக்' குகைகளிலும் (Bagh Caves) சிறப்புமிக்க ஓவியங்கள் காணப்படு கின்றன. 'பலவிதமான ஓவிய வகைகள், மிகச் சிறந்த முறையில் உருவாக்கப்பட்டுள்ளன' எனக் கலை ஆராய்ச்சி யாளர்கள் 'பாக் குகை' ஓவியங்களின் சிறப்புத் தன்மை யைப் புகழ்கின்றனர். இலங்கைத் தீவில் சிகிரியா (Sigiria) என்ற இடத்தில் காணப்படும் ஓவியங்களும் ஐந்தாம் நூற் றாண்டின் இறுதியைச் சார்ந்தவைகளாகக் கருதப்படுகின் றன. ஆனால், அவைகள் அஜந்தா ஓவியங்களைப்போல அவ்வளவு சிறப்புள்ளவைகளல்ல எனவும் குறிப்பிடப் படுகின்றது. புதுக்கோட்டை மாவட்டத்தில் சித்தன்ன வாசல் (Sittannavasal) என்ற இடத்தில் காணப்படு கின்ற மிகச் சிறந்த குகை ஓவியங்கள் சமணத் துறவிகளால் பல்லவ மகேந்திரவர்மன் காலத்தில் உருவாக்கப்பட்டவை யாகும் (ஏழாம் நூற்றாண்டு). தஞ்சைப் பெருவுடையார் கோவிலில் பதினொன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த சோழர் காலத்து வண்ண ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட் டுள்ளன.

### மொகலாயர் கால ஓவியக் கலை—இந்திய முறை (Mughal Painting Regional Schools)

இஸ்லாமிய சமயம் உருவ வழிபாட்டினையும் சிலை களை வழிபடுவதையும் எதிர்த்தது. அதனால் சிற்பக்கலை வளர்ச்சி இஸ்லாமிய நாடுகளில் தடைப்பட்டது. தனது சொந்த இல்லங்களிலும் மாளிகைகளிலும் ஓவியங்கள் தீட்டுவதை முஸ்லிம் காலிபாக்கள் (Caliphs) ஆதரித்த னர். இதனால் பல்வேறு நிலைகளில் மனித உருவங்கள் வண்ணக்கலை ஓவியங்களாக மாளிகைகளில் தீட்டப்பட்டன. ஆனால், மசூதிகள் போன்ற பொது இடங்களில், சமயவழி பாட்டிடங்களில் உருவ ஓவியங்கள் தீட்டுவது தடைசெய்யப் பட்டது. உமயது (Umayyads), அபாஸித் (Abbasids) பரம்பரையைச் சேர்ந்த ஆசிய நாடுகளின் காலிபாக்கள் தங்கள் அரண்மனைச் சுவர்களைப் பல்வேறு சிறந்த ஓவியங் களினால் அழகுபடுத்தினர். பலவித வண்ண மலர்க்

கூட்டங்களும், மனித உருவத்தின் பல்வேறு நிலைகளும் வண்ண ஓவியங்களாகத் தீட்டப்பட்டன. இந்தியாவில் மொகலாயப் பேரரசை நிறுவிய பாபர், ஓர் ஓவியப் பிரியர். இயற்கைவனப்பை, நீரோடைகளை, சலசலத்துச் செல்லும் ஆறுகள், அதனைச் சுற்றி வளர்ந்திருந்த மரங்கள், செடி கொடிகள், இயற்கையன்னை முகமலர்ந்து அழகொழுகச் சிரிப்பது போன்று மலர்ந்திருந்த பல்வேறு வண்ணமலர்கள், இவையனைத்தையும் கொண்ட பூங்காக்கள் போன்றவற்றை இறவா ஓவியங்களாகத் தீட்டி அழகு பார்ப்பதில் பாபர் மிகவும் விருப்பம் கொண்டிருந்தார். ஹுமாயூன் தமது பேரரசிலிருந்து விரட்டப்பட்டு, அகதியாகப் பாரசீக மன்னரின் பாதுகாப்பில் தங்கியிருந்தபோது ஓவியக்கலையின் சிறப்பினைக் கற்றுக் கொண்டார். ஹுமாயூன் தமது பேரரசை மீண்டும் கைப்பற்றி டெல்லி அரியணையில் அமர்ந்தவுடன் மீர் சயிது அலி (Mir Sayyid Ali), குவாஜா அப்துஸ் சமது (Kwaja Abdus Samad) என்ற இரண்டு மாபெரும் ஓவியக் கலைஞர்களைப் பாரசீகத்திலிருந்து வரவழைத்தார். நிலைபெறும் ஓவியப் படைப்புகளை உருவாக்கிப் பார்க்கும் முன்னர் அவரின் நிலையற்ற உலக வாழ்க்கை முடிவுற்றது. அதனால் அவர் தொடங்கிய ஓவியங்கள் முற்றுப் பெறாது போயின.

அவருக்குப்பின் டெல்லி அரியணையில் அமர்ந்த மாமன்னர் அக்பர், ஓவியக்கலையைப் போற்றினார். குவாஜா அப்துஸ் சமது அவர்களின் தலைமையில் ஓவியத்துறையை ஏற்படுத்தினார். பதினேழாம் நூற்றாண்டில் இந்தியாவில் மூன்றுவித ஓவிய முறைகள் (Three Schools of Painting) விளங்கின: 1. இராசபுத்திர (Rajput) 2. ஜம்மு (Jammu) மற்றும் 3. காங்கரா (Kangra) ஓவிய முறைகள் ஆகிய இம்மூன்று வகை ஓவிய முறைகள் புகழ்பெற்று விளங்கின. இம்மூன்று வகைகளில் இராசபுத்திர ஓவிய முறை மிகச் சிறந்ததாகக் கருதப்பட்டது. காஷ்மீர், மதுரா, காசி போன்ற இடங்களுக்கும் பரவி நிலைபெற்றது. பலவித வண்ணங்களில் உள்ளத்து உணர்ச்சிகளை முகத்தில் தேக்கிய ஓவியங்கள் இராசபுத்திர முறையில் புகழ்பெற்றிருந்தன. கண்களைப் பற்றி, அதுவும் இளமங்கையரின் கண்களைப் புகழ்ந்து பாடாத கவிஞர்கள் உலகிலேயே இல்லை எனலாம். கவிஞர்கள் வார்த்தைகளால் வடிக்க இயலாதவற்றை ஓவியர்கள், தங்கள் தூரிகைகளைக் கொண்டு வடித்துத் தந்திருக்கின்றனர். பார்வையில் ஆயிரம்கதை சொல்லும்

கண்களையும் உடலசைவில் கோடிஎண்ணங்களை வெளிப் படுத்தும் அழகினையும் இராசபுத்திர ஓவியங்களில் காண முடியும். இராசபுத்திர முறையில் காணப்பட்ட இயற்கை யோடியைந்த தன்மையையும், எளிமையில் அழகுமிளிரச் செய்யும் பாங்கினையும் மாமன்னர் அக்பர் பெரிதும் விரும் பினார். அதேபோல பாரசீக ஓவிய முறையில் காணப் பட்ட வடிவழகையும், அலங்கார வேலைப்பாடுகளையும் அக்பர் மிகவும் விரும்பினார். இந்தியாவிலிருந்த ஓவியர்கள் அனைவரையும் வரவழைத்து இந்தியத் தேசிய ஓவிய முறையைத் (National Indian School of Painting) தோற்று வித்தார். தேசிய ஓவிய முறையை உருவாக்கிய கலைக் குழுவில் இந்துக்கள் பெரும்பான்மையினராக இருந்தனர். தஸ்வந்த் (Daswant), பசவான் (Basawan), சன்வால் தாஸ் (Sonwaldas), தாராசந்த் (Tarachand), ஜகநாத் (Jagannath) போன்ற இந்துக்களும், அப்துஸ் சமது (Abdus Samad) மீர் சயிது அலி (Mir Sayyid Ali), ஃபரூக் பெக் (Farukh Beg) போன்ற முஸ்லிம் ஓவியர்களும் சிறப்பு மிக்கவர்களாவர். 'அயினி அக்பரி' (Ain-i-Akbari), 'அக்பர் நாமா' (Akbar Nama) போன்ற நூல்கள் ஓவியக் கலையின் முக்கியத்துவத்தை வலியுறுத்துகின்றன. அக்பர் நாமாவும், பாரசீக மொழியாக்கம் பெற்ற இராமா யண, மகாபாரதக் காவியங்களும், நள-தமயந்திக் கதையும் ஓவியங்களில் வடிக்கப்பட்டுள்ளன. அந்த ஓவியங்கள் ஓவியக்கலையின் இலக்கணமாகவே கருதப்பட்டுச் சிறப் படைந்திருக்கின்றன.

தந்தையைப்போலவே பிள்ளையும் ஓவியக் கலைக்கு ஆதரவளித்துப் போற்றினார். அக்பருக்குப் பின்னர் அரி யணையேறிய ஜஹாங்கீர் ஓவியக் கலைப்பிரியர். அவரே சிறந்த ஓவியருமாவார். ஜஹாங்கீர் ஓவியக்கலைப் பிரியர் என்பதை சர் தாமஸ் ரோ (Sir Thomas Roe) என்ற ஆங்கி லேயரும் வலியுறுத்தியிருக்கின்றார். ஜஹாங்கீர் பிறவியிலேயே கலையுணர்வு கொண்டவர். இயற்கை அழகை அனுபவிக்கத் தெரிந்தவர் என ஜஹாங்கீரின் கலையார்வத்தைப்பற்றி மேலும் குறிப்பிட்டிருக்கின்றார். காஷ்மீரின் இயற்கையழகில் ஈடுபாடு கொண்ட ஜஹாங்கீர் தமது இருபத்திரண்டு ஆண்டு ஆட்சியில் பதின்மூன்று முறைகள் காஷ்மீருக்குச் சென்று திரும்பியிருக்கின்றார். இயற்கையை விளக்கும் ஓவியங்களைப் பெரிதும் பாராட்டினார். தம்முடைய தந்தையைப் போலவே, நீரோடைகள், மலர்கள், இயற்கைச் சூழலில்

தீட்டப்பட்ட பலவித மிருகங்கள், பறவைகளின் ஓவியங்களை ஜஹாங்கீரும் போற்றினார். உருவப்படங்கள் வரைகின்ற கலையும் இவரது காலத்தில் மிகவும் சிறந்து விளங்கியது. உஸ்தாத் மன்சூர் (Ustad Mansur) என்பவர் ஜஹாங்கீர் காலத்தில் வாழ்ந்த மிகச் சிறந்த ஓவியக் கலைஞர் ஆவார். அவர் இயற்கைப் பின்னணியில் விலங்குகள், பறவைகளின் உயிரோவியங்களைத் தீட்டுவதில் நிகரற்று விளங்கினார்.

ஷாஜஹான் கலைத்திறனோடு மாபெரும் கட்டடங்களைக் கட்டுவதில் ஆர்வம் கொண்டிருந்தார். ஓவியக் கலையை அவ்வளவாக ஆதரிக்கவில்லை. அவருடைய மாமனாரான ஆஸப் கானைப் (Asaf Khan) போன்ற ஒரு சில பிரபுக்கள் மட்டுமே ஓவியர்களைப் போற்றி ஆதரித்தனர். ஆஸப் கானின் லாகூர் மாளிகையில் ஏராளமான ஓவியங்கள் தீட்டப்பட்டிருந்தன. ஷாஜஹானின் மூத்த பிள்ளையான தாரா ஷுகோ (Dara Shukov) ஓவியக் கலையார்வம் மிக்கவர். அவர் ஓவியக் கலைஞர்களின் புகலிடமாக விளங்கினார். வாரிசுரிமைப் போரில் (War of Succession) அவருக்கு ஏற்பட்ட துயர முடிவின் பின்னர் ஓவியக் கலைஞர்களை ஆதரிப்பார் யாரும் இருக்கவில்லை.

ஔரங்கசீப் பழமைப் பற்றுள்ளவர். தூய இஸ்லாமிய நெறிகளை அப்படியே கடைப்பிடிக்க வேண்டும் என்ற ஆர்வம் மிக்கவர். எனவே, கவின் கலைகளில் ஒன்றான ஓவியங்களின் மூலம் உருவங்களைத் தீட்டுவதோ, மாளிகையில் அலங்காரமாக ஓவியங்கள் தீட்டுவதையோ, ஆடம்பர வாழ்வையோ வெறுத்தவர். சிக்கந்தராவில் இருந்த அக்பரின் கல்லறை ஓவியங்களைக்கூட வெள்ளையடித்து அழித்தார் என்பது வியப்பிற்குரியதாக உள்ளது. ஒருசில பிரபுக்கள் மட்டும் ஓவியக் கலைஞர்களைத் தொடர்ந்து போற்றினர். தங்களது மாளிகைகளில் கலையழகு மிகுந்த ஓவியங்களைத் தீட்டச் செய்தனர். எனினும், அரச ஆதரவு இன்றேல் அந்தக் காலத்தில் எந்தக் கலைஞனும், கலையும் மதிப்பிழந்துவிடும். மொகலாய ஆட்சியின் பிற்காலத்தில் ஓவியர்களும் மற்றக் கலைஞர்களும் டெல்லியை விட்டு கங்கை நதிப் பகுதிக்கும் தக்கணத்திற்கும் குடிபெயர்ந்தனர். அங்கிருந்த சுதந்திர அரசர்கள் அவர்களின் கலைத்திறமைக்கு வாய்ப்பளித்து வாழவைத்தனர்.

மொகலாயர் கால ஓவிய முறை, மொகலாயப் பேரரசில் மாமன்னர்கள் காலத்தில் தோன்றி, மாமன்னர்களின் பின்னர் பேரரசு வீழ்ச்சியுறத் தொடங்கியபோது வீழ்ந்துபட்டது. மாமன்னர் அக்பர் காலத்தில் வேகமாக வளர்ச்சியுறத் தொடங்கிய மொகலாயர் ஓவிய முறை ஜகாங்கீரின் காலத்தில் உன்னத நிலையடைந்து, ஷாஜகான் ஔரங்கசீப் காலங்களில் வீழ்ச்சியடைந்தது. இந்து ஓவியக்கலை சமயம் சார்ந்ததாகவே இருந்தது. சமய நூல்களின் கருத்துகளை மனக்கண்ணால் அறிந்த மக்கள் அதே கருத்துகளை எழில் கொஞ்சும் ஓவியங்களாகக் கண்டு, நன்குணர்ந்தனர். அதேவகையில் அஜந்தாக் குகை ஓவியங்களைக் கூறலாம். சமண சமயக் கருத்துகளை ஓவியங்களாகத் தருகின்ற முறையினைக் காணலாம். ஆனால், மொகலாயர் கால ஓவியக்கலை சமயத்துறையினின்றும் பிறழ்ந்து, உலகியலை ஓவியங்களாக்கியது. அரசவையினரின் ஆடம்பரமான வாழ்க்கை நிலைகளையும், அரசர் பங்கேற்கும் திருவிழாக் கோலங்களையும், அரச ஊர்வலங்களையும், வேட்டையாடுகின்ற வீரத்தன்மையினையும் விளக்குகின்ற வகையிலேயே அமைந்துவிட்டன. அதே இயற்கையின் எழிலை ஓவியங்களாக வடித்துத் தந்தனர். வண்ண மலர்கள், விலங்குகள், பறவைகள் மற்றும் இயற்கை தந்த எண்ணிறந்த அழகுக் கோலங்களை மனத்தை ஈர்க்கும் வண்ணம் படம் பிடித்துக் காட்டினர். ஆனால்; அத்தகைய ஓவியங்கள் அனைத்தும் மேட்டுக் குடியினருக்காகவே உருவாக்கப்பட்டன. அத்தகைய கலைக் கருவூலங்களைப் பாமர மக்கள் கண்டுகளிக்கக்கூட வாய்ப்புகளில்லை. பேரரசர், அவரைச் சுற்றி ஆடம்பரத்துடன் வாழ்ந்த உயர் பிரபுக்கள், மற்றும் செல்வச் சீமான்கள் ஆகியோரைத் தவிர ஏனையோருக்கு ஓவியக் கலையைப் பற்றியே தெரிந்திருக்கவில்லை.

தக்கணத்தில் தோன்றிய ஓவியமுறை, மொகலாயர் அரசவையினின்றும் குடிபெயர்ந்த ஓவியக் கலைஞர்களினால் தோற்றுவிக்கப்பட்டது. தக்கணத்துச் சுல்தான்கள் ஓவியர்களை வரவேற்றனர்; போற்றினர். போற்றி ஆதரவு தருகின்ற இடத்தில் தழைக்கும் தன்மையுள்ள இந்தக் கவின் கலை தக்கணத்தில் செழிக்கத் தொடங்கியது. மொகலாய ஓவியமுறையின் மறுபதிப்பாகவே தக்கணத்து ஓவியமுறை காணப்பட்டது.

இராசபுத்திர ஓவியமுறை இராசபுத்திர சிற்றரசர்களின் ஆதரவுடன் தோன்றி வளர்ந்தது. இந்துக்களான ஓவியர்கள், சாதாரண மக்களின் வாழ்க்கை நிலையின் பகுதிகளை ஓவியங்களாகப் படம்பிடித்துக் காட்டினர். சமய நம்பிக்கை, பண்பாடு, பழக்கவழக்கங்கள் ஆகிய சமுதாய நிலைகள் இத்தகைய ஓவியங்களின் கருப்பொருளாகக் கையாளப்பட்டன. காதல், வீரம், விவேகம், அன்பு, பாசம், பக்தி போன்ற பாமர மக்களின் உள்ளக்கிளர்ச்சிகளுக்கு வடிவம் கொடுத்து, வண்ண ஓவியங்களாக்கினர். சங்கரன் (Sankara), பார்வதி (Parvathy), கிருஷ்ணா (Krishna), இராதா (Radha) போன்ற தெய்வங்களும், அத்தெய்வங்களின் லீலைகளும் கண்ணைக் கவரும் வண்ண ஓவியங்களாக வடிக்கப்பட்டன. ஒவ்வொரு ஓவியமும், நுண்ணிய வேலைப்பாடுகளுடன் காணப்பட்டது.

## மேலையர் தொடர்பும் நவீன மறுமலர்ச்சியும்

கலையுணர்வுக்கு சிறப்பிடம் அளிக்காத மேனாட்டுக் கல்வி முறை இந்தியாவில் நுழைந்தபின்னர், கவின்கலைகளின் வளர்ச்சி தடையுற்றது. கவின்கலைகளின் சிறப்பிற்கும் மதிப்புக் குறையலாயிற்று. வழிவழியாகக் கலை பயின்று, கலைச்சிறப்பினால் உயர்வு பெற்று வளர்ந்த கலைப்பரம்பரை, தங்களது பரம்பரை கலைப் பெருமையை, பெருமிதத்தை விட்டுக்கொடுக்க முன்வரவில்லை. 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பிய முறைகளை அப்படியே பின்பற்றுகின்ற அடிமைத் தன்மைக்கு எதிர்ப்பு இந்தியாவில் தோன்றியது. இந்த எதிர்ப்பியக்கம் பண்டைய இந்தியக் கவின் கலைகளின் மறுமலர்ச்சிக்கு வழியமைத்தது. இந்திய கவின் கலையும் இசையும் மறுமலர்ச்சி பெற்றது. இந்தியக் கலைகளுக்கு மதிப்பளித்துப் போற்றும் தேசிய உணர்வும் தோன்றியது. உலகப் புகழ்பெற்ற இரவீந்திரநாத் தாகூரின் சகோதரர்களில் ஒருவரான அபநிந்திரநாத் தாகூர் (Dr. Abanindranath Tagore) என்பார் பல ஓவிய, மற்றும் இசைக்கலைஞர்களை உருவாக்கினார். அக்கலைஞர்களுக்கு ஊக்கமளித்து, போற்றி, கலைவளர்க்கும் பணியில் ஈடுபடுத்தினார். அபநிந்திரநாத் தாகூரைப் பின்பற்றி வங்காளத்தைச் சேர்ந்த நந்தலால் போஸ் (Nandalal Bose) என்பாரும் கலை வளர்க்கும் நற்பணியில் ஈடுபட்டார். அவரைப் போலவே பஞ்சாப் மாநிலத்தில் அப்துர் ரகுமான் சகாதை (Abdur Rahman Chaghatai) என்பாரும் பணியாற்றினார். தற்போது இருக்கின்ற இந்திய ஓவிய முறையையும், மேனாட்டு ஓவிய முறையையும்

இணைத்து, ஒரு புதிய முறையை பம்பாய் கலைக்குழு (Bombay School of Art) உருவாக்கியிருக்கின்றது. கேரள மாநிலத்தைச் சேர்ந்த ராஜா ரவி வர்மா (Rajah Ravi Varma) இப்புதிய பாணியில் ஏராளமான ஓவியங் களைப் படைத்துப் புகழ்பெற்றார். இத்தகைய கலை மறு மலர்ச்சி இந்தியாவில் ஏற்படக்—காரணமாக இருந்த பெருந் தகையர் இருவராவர். கல்கத்தா அரசினர் கலைப் பள்ளி யின் (Government School of Art - Calcutta) முதல்வராக இருந்த E. B. ஹேவல் (E. B. Havell) என்பாரும், டாக்டர் ஆனந்தா K. குமாரசாமி (Dr. A. K. Coomarasamy) என்ற பேரறிஞரும் இந்தியக் கலைத்துறைக்கு ஆற்றிய பணி அளவிடற்கரியதாகும். இந்தியக் கவின்கலை, நுண்கலை போன்றவற்றின் பெருமையை உலகறியச் செய்த பெருமை டாக்டர் A. K. குமாரசாமி அவர்களையே சாரும். இந்திய ஓவியக் கலையில் பல புதுவித் பாணிகள் தோன்றி யிருக்கின்றன. ஓவியக் கலையில் மறுமலர்ச்சி ஏற்பட் டுள்ளது. இந்த புதிய ஓவிய முறையில் இந்தியப் பழமையும்-புதுமையும் இணைந்தும், மேற்கு-கிழக்கு நாடுகளின் ஓவியக்கலை முறையின் இணைப்பும் காணப் படுகின்றது. மேனாட்டு ஓவியப் பாணிகளை, சிறப்பாக பிரெஞ்சு நாட்டு ஓவிய முறையை நவீனகால இந்திய ஓவியக் கலைஞர்கள் பின்பற்றுகின்றனர். ஆனால், அத்தகைய மேனாட்டு முறையில் உருவாக்கப்படும் ஓவியங்கள் இந்து கருப்பொருளை-அதாவது, இந்தியநாடு, இந்திய மக்கள்-அவர் களது நம்பிக்கை, செயல் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டே தீட்டப்படுகின்றது. இரவீந்திரநாத் தாகூர், தமது 'விஸ்வபாரதி' பல்கலைக் கழகத்தில் (Viswabharathi University) ஓவியக்கலையையும் ஒரு பாடமாக்கினார். அவருடைய முயற்சி, வங்களாத்தில் ஓவியக் கலைக்குச் சிறந்த முக்கியத்துவம் அளித்தது.

1930ஆம் ஆண்டிலிருந்து இந்தியக் கலை வளர்ச்சியில் மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. இந்தியத் தேசிய எண் ணங்களைப் பிரதிபலிக்கும் வகையில் இந்தியப் பகுதிகளின் தனித்தன்மையோடு கலைகளின் வளர்ச்சி காணப்படு கின்றது. தன்னுடைய இனத்தின் மேன்மையையும் தேசியச் சிறப்பினையும் விளக்குகின்ற வகையில், வங்காளத்தைச் சார்ந்த ஜாமினி ராய் என்பார் தமது ஓவியங்களை உரு வாக்கியிருக்கின்றார். அவருடைய ஓவியப்பாணி, தற்கால இந்தியப் பாணிகளினின்றும் தனித்துக் காணப்படுகின்றது.

தனி ஒருவரால் இந்தியக் கலைகளில் எவ்வித மாற்றங்களை யும் புகுத்த இயலாது. தேவிபிரசாத் ராய் சவுதரி என்பவர் இந்தியச் சிற்பக் கலைக்கு புத்துயிர் ஊட்டி வளர்த்தவராவார். ஆனால், ராம்கிங்கர் தன்ராஜ் பகத் (Ramkinker Dhanraj Bhagat), ஜானகிராம் மற்றும் நந்தகோபால் போன்ற சிற்பிகள், ராய் சவுதரியின் முறைகளிலும் சிறந்த மாற்றங் களைச் செய்து, புதிய பாணியைத் தோற்றுவித்திருக்கின் றனர். இந்திய அரசால் ஏற்படுத்தப்பட்ட 'சங்கீத நாடக கழகமும்' (The Sangeet Natak Academy), 'லலித கலா கழகமும்' (The Lalit Kala Academy) நாடகங்களை ஊக்குவிப்பதன்மூலமும், கலைக் கண்காட்சிகள் நடத்து வதன் மூலமும் நாடக கலைவல்லுனர்களை ஆதரித்து, போற்றுகின்றது. அதனால் மக்களும் இந்தியக் கலைஞர் களின் பெருமையை உணர்ந்து, அவர்களைப் போற்றிப் பெரு மதிப்புத் தருகின்றனர். சிறந்த கலைஞர்களுக்கு ஆண்டு தோறும் இந்திய அரசு பரிசுகளும், நற்சான்றிதழ்களும் வழங்கி பெருமைப்படுத்துகின்றது. கலைஞர்களிடையே உருவாகி வருகின்ற நல்லெண்ணமும், அதன் விளைவாக வளர்ந்து வருகின்ற கருத்துப் பரிமாற்றங்களும், கலைகளின், கலைஞர் களின் வளர்ச்சியை விளக்குகின்றன. 'ஓவியர் முன்னேற்றக் கழகம்' (Progressive Painters Association) மற்றும் 'சோழமண்டலக் கூட்டுக்கழகம்' (Cholamandal Complex) போன்ற அமைப்புகளைச் சென்னையைச் சேர்ந்த K.C.S. பணிக்கர் என்பார் உருவாக்கியிருக்கின்றார். அந்த அமைப்பு களின் மூலம் இந்தியக் கலைஞர்கள் இந்தியச் சமுதாயத்தில் நிலையானதோர் இடத்தினைப் பெற வாய்ப்புகள் காணப் படுகின்றன. இனியும் மேலைநாடுகளினின்றும் நுழைந்து விட்ட தரக்குறைவான கலைப்பாணிகள் இந்தியரிடையே செல்வாக்குப்பெற இயலாது. இந்தியக்கலை வளர்ச்சியில் இந்தியத் தேசியத் தன்மையே தனித்துக் காணப்படுகின்ற உயரிய நிலை காணப்படுகின்றது.

## இசையும் நாட்டியமும்

### பண்டைய இந்தியாவில் இசையும் நாட்டியமும்

இந்திய இசை, வேதங்களைப் போலவே பழைமை யானது. வேதகாலத்திற்கும் முன்பேகூட இசைக்கலை இருந் திருக்கலாம் என்றும் கூறப்படுகின்றது. வேதங்களில் ஒன்றான சாம வேதம் (Sama Veda) ஆரியர்களின் இன்னிசைப் பாடல்களைக் கொண்டிருக்கின்றது. இந்த வேதத்தின்

பாடல்களை இசைவடிவிலேயே பாடவேண்டும் என்பது முறை. சோம்பான வேள்வியின்போது இசையுடன் இசைக்க வேண்டிய பல பாடல்களை முதன்மை வேதமான ரிக் வேதத்திலிருந்து எடுத்து, இசையமைத் திருக்கின்றனர். இவ்வேள்வியை நடத்தவும் இசைப்பாடல்களைப் பாடவும் பயிற்சி பெற்ற புரோகிதர் குழு ஒன்றும் தோன்றியிருந்தது. கூத்து அல்லது நடனக்கலை சிந்துவெளி மக்களிடம் இருந்திருக்கலாம் என்பதற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன. மொகஞ்சதாரோவில் கண்டெடுக்கப்பட்ட ஒரு சிலை, கூத்தின் பெருமானாகிய நடராஜர் வடிவத்தை ஒத்திருக்கின்றது. வேத காலத்தில் இசையும் நாட்டியமும் மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்திருக்கின்றன. இக்கருத்தினை வலியுறுத்தும் வகையில் சாந்தோக்ய உபநிஷதத்தில் (Chandogya Upanishad) கருத்துகள் காணப்படுகின்றன. 'நான் வேதங்களையும், வீரகாவியங்களையும் (Epics), புராண நூல்களின் பாடல்களையும், போர்க்கலைகளையும், வானியல் சாஸ்திரங்களையும், நுண்கலைகளையும் (இசையும் நாட்டியமும்) கற்றுள்ளேன்' என்று நுண்கலைகளையும் இசையையும் சாந்தோக்ய உபநிஷதம் குறிப்பிடுகின்றது.

மௌரியர் காலத்தில் இசையும், கருவி இசையும் (Instrumental Music), நடனமும் திருவிழாக்களின் இன்றியமையாத பகுதியாக இருந்திருக்கின்றன. அந்தக் கலைகளின் விற்பன்னர்கள் கணிகையர் குல நங்கையருக்கு இசையையும், நடிப்பையும், நடனத்தையும் கற்பித்திருக்கின்றனர். அரசனும், அரசவை உயர் அதிகாரிகளும், ஏனைய செல்வந்தர்களும் கலைகளில் சிறந்த எழில் கணிகையர்களைப் பேணியிருக்கின்றனர். கணிகையர்கள் ஒற்றர்களாகவும் அரசுப் பணியாற்றியிருந்தனர். மௌரியர், குப்தர், ஹர்ஷ வர்த்தனர் காலங்களில் இசையும்-நாட்டியமும் கணிகையர் குலத்தினரின் தனி உரிமையாக இருந்தது. தென்னிந்தியாவிலும் இக்கலைகள் கணிகையர் குலத்தினரின் தனி உரிமையாக இருந்தது என்பதை ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றான 'சிலப்பதிகாரம்' என்ற தமிழ்க் காவியம் குறிப்பிடுகின்றது. கி. பி. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தது 'சிலப்பதிகாரம்' என்ற பைந்தமிழ் நூல் என்பது குறிப்பிடத்தக்கது. அழகே உருவாக, இசை-நடனக் கலைகளின் உருவகமாக இருந்த மாதவி, கலையார்வம் பெற்றிருந்த கோவலன் என்ற செல்வம் படைத்த வணிகனை மயக்கி, அவனை அவனுடைய இல்லத்தரசியான கண்ணகியிடமிருந்து

பிரித்தான் என்று சிலப்பதிகாரம் கூறிச் செல்கின்றது. இந்திய ஆலயங்களில் காணப்படும் சிற்பங்கள் அனைத்துமே அழகே உருவான நங்கையர்களின் நடனத் தோற்றமாகவே இருக்கின்றன. இசைக் கலைஞர்கள், அவர்களுடைய இசைக் கருவிகளுடன் சிற்பங்களில் காட்சியளிக்கின்றனர். இத்தகைய சிற்பங்கள் தென்னிந்திய மக்கள் இசை-நடனக் கலைகளுக்கு அளித்திருந்த பெருமையை எடுத்துக் காட்டுகின்றது.

இசைக்கலையைக் குப்தர்கள் போற்றி வளர்த்தனர். சமுத்திரகுப்தர், இசைக்கலையில் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தார் என்பதை அவர் வீணையைப் போன்ற ஓர் இசைக் கருவியை மீட்டும் உருவம் பொறித்த குப்தர் கால நாணயங்கள் குறிப்பிடுகின்றன.

சமயச் சடங்குகளின்போதும், திருவிழாக்களின்போதும், மற்றும் தங்களின் தினசரி வாழ்க்கையிலும் இந்துக்கள் இசையைப் பயன்படுத்தியிருக்கின்றனர். தென்னிந்தியாவில் வைணவ ஆழ்வார்களும், சைவநாயன்மார்களும் இசை வழியே பக்தியைப் பரப்பினர். சைத்தன்யர் (Chaitanya), மீராபாய் (Meerabai), கபீர் தாசர் (Kabir das), நாமதேவர் (Namadev), துக்காராம் (Tukkaram) ராம தாசர் (Ramadas) போன்றோர் இசையின் வழியே பக்தியைப் பரப்பினர். உள்ளமுருகி இறைவனைத் துதித்து இசைப் பாடல்களைப் பாடுவதன்மூலம், இறைவன் திருவருளைப் பெற முடியும் என்றே போதித்தனர். இந்து அரசர்கள் அனைவரும் இசையையும் இசைக் கலைஞர்களையும் பேணிக்காத்தனர் தமிழகத்தில் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள குடுமியான் மலையில் (Kudumiyanmalai) காணப்படுகின்ற கல்வெட்டுகள் இசைக்கலையைப் பற்றியதாகும். இக்கல்வெட்டினை உருவாக்கியவர் பல்லவர் குல மகேந்திரவர்மன் ஆவார். பல்லவ மகேந்திரனுக்கு இருந்த இசையறிவையும், இசையில் அவருக்கு இருந்த ஆர்வத்தையும் இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது.

**இஸ்லாமிய காலத்தில் இசையும் நாட்டியமும்**

முஸ்லிம்கள் ஆரம்பகாலத்தில் இசையில் விருப்பமற்று இருந்தனர். ஆயினும், நாளடைவில் இசையின்மீது பற்றை வளர்த்துக் கொண்டனர். இஸ்லாமிய இசை முதன் முதலில் ஆராபியருடன் சிந்துப்பகுதியில் நுழைந்து, காலப்போக்கில் இந்திய இசைக்கலையுடன் கலந்துவிட்டது. இஸ்லாமியரின் வழிபாடு, மசூதிகளில் இசையோ, இசைக் கருவிகளோ இன்றி

அமைதியான முறையில் ஆரம்ப காலத்தில் இருந்தது. இந்துக்களின் ஆலய வழிபாட்டின்போதும் வாழ்க்கை முழுவதிலும் இசை ததும்பி நிற்பதைக் கண்ட இஸ்லாமியர்களும் தங்கள் சமுதாய வாழ்க்கையில் இசையைப் பயன்படுத்தத் தொடங்கினர். இஸ்லாமின் ஒரு பிரிவான சூபி சமயத்தினைச் (Sufism) சார்ந்த துறவிகள் இந்து பக்தர்களைப்போலவே இசையில் பெருவிருப்பம் கொண்டிருந்தனர். இவர்கள் தங்களின் வழிபாட்டுக் கூட்டங்களில் இறைவனைப் புகழ்ந்துபாடித் துதிப்பர். அவ்வாறு புகழ்ந்து பாடும்போது, கூட்டத்தினர் இருபிரிவினராகப் பிரிந்து நின்று, காதலால் கசிந்துருகி, போட்டிப் பாடல்களைப் பாடுவர். இத்தகு பாடல் முறைக்குக் 'கவாலி இசை' (Qawali) என்று பெயர்.

அலாவுதீன் கில்ஜியின் அரசவையை இசைக்கலையில் தேர்ந்த பல இசைவல்லுநர்கள் அலங்கரித்தனர். அலாவுதீன் கில்ஜி ஒரு கலைப்பிரியர். இந்திய, துருக்கிய, பாரசீக நாட்டு இசை-நாட்டியக் கலைகளில் சிறந்தோர், ஒரு பாரசீக அதிகாரியின் கட்டுப்பாட்டில் எப்போதுமே அரசவையில் குழுமியிருப்பர். பைரவி (Bhairavi), சராஸ்ராகம் (Sarasrag), கலுங்க்ரா (Kalungra), பைரான் (Bhairon) போன்ற ராகங்களில் பக்திப் பாடல்கள் பாடப்பட்டன. அத்தகைய பாடல்கள் வழிபாட்டின்போதும், அரசவையிலும் பாடப்பட்டன. முஸ்லிம் ஆட்சியின்போதிருந்த வடஇந்திய இசை, இந்திய-இரானியக் கலப்பாகும். வரலாற்றுப் புகழ்பெற்ற 'அமிர் குஸ்ரு' (Amir Khusru) என்ற கவிஞர், இனிமையாகப் பாடுவதிலும் வல்லவராக இருந்தார். அக்கால வடஇந்திய இசையில் பாரசீக இசைப் பாணிகள் புகுத்தப்பட்டதால், நாளடைவில் வடஇந்திய இசைக்கும் தென்னிந்திய இசைக்குமிடையே வேறுபாடுகள் தோன்றின. முஸ்லிம் இசைக் கலையைச் சார்ந்த பல கருவிகள் இப்போது இந்திய இசைக் கருவிகளாக உள்ளன. உதாரணமாகத் தபலா (Tabla), தில்ருபா (Dilruba), சரோத் (Sarod), நகரா (Nagara) போன்ற இசைக் கருவிகளைக் குறிப்பிடலாம்.

டெல்லி சுல்தானியர் காலத்தில் ஏற்பட்ட இந்து-முஸ்லிம் இசைக் கலப்பு தொடர்ந்து வளர்ந்து, மொகலாயப் பேரரசர்கள் காலத்தில் மிகச்சிறந்த இசைக் கலையாகவே உயர்ந்து விளங்கியது. இத்தகைய இசைக்கலை, மாமன்னர் அக்பரின் காலத்தில் மிகவும் உன்னத நிலையடைந்தது. இசைக் கலையில் உயர்புகழ் பெற்றிருந்த தான்சேன்

(Tansen) எனும் இசைவாணர் மாமன்னர் அக்பரின் பேராதரவைப் பெற்றிருந்தார். தான்சேனிடம் இசைபயின்ற மாணவர்கள், பிற்காலத்தில் வெவ்வேறான இசை முறைகளை (Schools of Music) உருவாக்கினர். தக்கணப் படையெடுப்பினை வெற்றியுடன் முடித்து டெல்லி திரும்பிய மொகலாய மன்னர்கள் தக்கணத்தில் சிறந்து விளங்கிய தென்னிந்திய இசைப் பேரறிஞர்களையும், சிற்பிகளையும், ஏனைய கலை வல்லுநர்களையும் தங்களுடன் அழைத்துச் சென்றனர்

இந்திய முஸ்லிம்களில் பெரும்பாலோர் இந்துக்களாக இருந்துப் பின்னர் சமயம் மாறியவர்களே. எனவே, மதம் மாறிய பின்னரும், தங்களுடைய பரம்பரை இசைப் பெரு மையை அவர்கள் துறந்துவிட முடியவில்லை. எனவேதான் முஸ்லிம்களின் ஆட்சியின்போதும் இசைக்கலை தொடர்ந்து சிறப்புற்றிருந்தது. இன்றும்கூட இந்திய இசைக்கலையில் மிகவும் புகழ்பெற்ற முஸ்லிம்கள் இருக்கின்றனர். அலி அக்பர் கான் (Ali Akbar Khan), விலாயத்கான் (Vilayat Khan), பிஸ் மில்லாகான் (Bismillah Khan), போன்ற இசைவாணர்கள் இந்தி யாவின் புகழ்பெற்ற இசைக் கலைஞர்கள் ஆவர். தமிழகத்தில் நாதஸ்வர இசையில் மிகவும் புகழுடன் விளங்குபவர் சின்ன மௌலானா சாகிப் (Chinna Maulana Sahib) என்ற முஸ்லிம் ஆவர்.

இந்திய வரலாற்றின் இடைக்காலம் இந்திய-முஸ்லிம் இசையின் பொற்காலமாகத் திகழ்கின்றது. அக் காலத்தில் இந்து-முஸ்லிம் இசைப் பேரறிஞர்கள் பலர் வாழ்ந்தனர். இசைப் புலவர்களாகிய துளசிதாஸ் (Tulasidas), சூர்தாசர் (Surdas), மீராபாய் (Mirabai) போன்றோர் இக் காலத்தைச் சேர்ந்தவர்களே. அக்பர், ஜஹாங்கீர், ஷாஜஹான் போன்ற மொகலாய மாமன்னர்கள் இசைக் கலையைப் போற்றி வளர்த் தனர். ஆனால், மாமன்னர் அவுரங்கசீப் இசைக் கலையை ஆதரிக்கவில்லை. எனினும், மொகலாயர்காலத்தில் வடஇந்திய இசை எனப் புகழ் பெற்ற இந்துஸ்தானி இசை முழு வளர்ச்சி பெற்று நிலைபெற்றுவிட்டது.

பண்டைய இந்தியாவில் இருந்தது போலவே நடனத் துறையில் சிறந்து விளங்கிய மகளிர் கூட்டம் முஸ்லிம் களின் ஆட்சியின்போதும் இருந்தது. ஆடல் பாடல் கலைகளில் சிறந்து விளங்கிய அழகு நங்கையர்கள் ஒவ்வோர் அரசவை யிலும் இருந்தனர். இனிய பொழுதுபோக்கு நிகழ்ச்சியாக

நாட்டியக் கலை முஸ்லிம்கள் காலத்தில் காணப்பட்டது. நடனத்தில் சிறந்த இந்து, முஸ்லிம் நங்கையர்கள் அரசவைப் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டனர். அதே போல மராட்டிய பீஷ்வாக்கள் இசை நடனக் கலையைப் பெரிதும் விரும்பி அனுபவித்தனர். அழகு, அறிவு, ஆடல் பாடல் ஆகிய அனைத்துக் கலைகளிலும் சிறந்த 'மஸ்தானி' என்ற இளநங்கையார் முதலாம் பாஜிராவ் என்ற மாராட்டிய பீஷ்வாவின் ஆசைநாயகியாக இருந்தாள். அறிவாற்றல் மிகுந்த அந்த நங்கை அளவற்ற அன்பு காட்டி பீஷ்வாவை ஆட்டிப் படைத்தாள்.

## ஆங்கிலேயர் காலத்தில் இசையும் நாட்டியமும்

ஆங்கிலேயர் காலத்தில் இந்திய இசையும் நாட்டியமும் ஆங்கிலேயர் பாணிகளுக்கு இசையவில்லை. மேனாட்டு இசையின் செல்வாக்கு, இந்தியத் திரைப்பட இசையில் மட்டும் சில மாற்றங்களைப் புகுத்தி இருக்கின்றது. தற்கால திரைப்பட இசையமைப்பில் மேனாட்டு இசை முறைகள் கையாளப்பட்டு வருகின்றன. சரப்ஜி (Sarapji) போன்ற இசை அமைப்பாளர்கள் இந்தியக் கருப் பொருள்களைக் கொண்ட பாடல்களுக்கு மேனாட்டு பாணியில் இசையமைத்திருக்கின்றனர். இசைப் பாடல்களையும் உருவாக்கி யிருக்கின்றனர். அலி அக்பர்கான் (Ali Akbar Khan) என்ற இசைவாணர் சில சமயங்களில் மேனாட்டு இசையின் சில பாணிகளைக் கலந்து பாடி வருகின்றார்.

மேனாட்டு இசைக் கலப்பினால் கலப்படமடையாத தூய்மையான இசையே 'கர்நாடக இசை' எனப்படுகின்றது. இந்தக் கர்நாடக இசை கலப்பேதுமின்றி, பண்டைய காலத் தூய்மையான நிலையிலேயே இன்றும் தென்னாட்டில் விளங்கி வருகின்றது. அவ்விசைக்கலைக்கு மூன்று முக்கிய சிறப்புத் தன்மைகள் உள்ளன. அவைகளாவன: (1) இனிமையான மென்மைத் தன்மைக்கு (Melody) கர்நாடக இசையும் ஏனைய இசை முறைகளைப் போலவே சிறப்பிடம் கொடுத்திருக்கின்றது. கர்நாடக இசையில் மென்மையாகப் பாட ஏராளமான 'இராகங்கள்' (Ragas) உள்ளன. ஒவ்வோர் இராகத்தையும் இப்படித்தான் பாடவேண்டும் என்ற வரையறைகளை சங்கீத சாஸ்திரம் என்ற இசை அறிவியல் நூல் வகுத்துத் தந்துள்ளது. (2) தாளம் தவறாது பாட வேண்டும்

என்பது மற்றோரு சிறப்பு நியதி. ஒவ்வோர் இராகத்தையும் இந்தந்த அளவில் பாட வேண்டும் என்றும், தாள வகைகள், கால அளவுகள் அனைத்தும் வரையறை செய்யப்பட்டுள்ளன. (3)கர்நாடக இசையில் இயற்றப்பட்டுள்ள பெரும்பாலான பாடல்கள் இறைவன் புகழ்பாடும் துதிப்பாடல்களே. அப் பாடல்கள் பக்தி நெறியினை வளர்ப்பதில் மிகவும் முன்னணி யில் நிற்கின்றன. பாடல்கள் வடமொழி, தெலுங்கு, மளை யாளம், தமிழ் போன்ற பல மொழிகளிலும் கர்நாடக இசைப் பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன. கர்நாடக இசையின் மும் மூர்த்திகள் எனப் புகழப்படுகின்ற தஞ்சை தியாக பிரம்மம், முத்துஸ்வாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரி போன்றோர் இவ்விசைக்கு அரும்பணியாற்றியுள்ளனர். சுவாதித் திருநாள் என்ற திருவாங்கூர் அரசர் ஒரு கர்நாடக இசைத் தொகுப்பினை இயற்றியிருக்கின்றார். கர்நாடக இசைக் கலையில் மேலும் முன்னேற்றம் காணவும், அவ்விசைக் கலை யின் நுணுக்கங்களை ஆய்ந்து விளக்கவும், இசைப் பேரறி ஞர்களின் மாநாடு சென்னையில் ஆண்டுதோறும் கூட்டப்படு கின்றது. அம் மாநாடுகளில் இராகங்களின் சிறப்புத் தன்மை களையும், அவைகளைப் பாடும் முறைகளையும் பற்றிக் கருத்தரங்குகள் நடத்தப்படுகின்றன. தஞ்சை மாவட்டம் திருவையாற்றிலிருக்கும் தியாகப் பிரம்மம் சமாதியில் ஆண்டு தோறும் இசைவிழா நடத்தி நினைவாஞ்சலி செய்கின்றனர். கர்நாடகக் குரல் இசைப்போர், கருவி இசைக் கலைஞர்கள் ஆகிய அனைவரும் தியாகப் பிரம்மம் சமாதியடைந்த தினத்தன்று திருவையாற்றில் கூடி அப்பெருமானாருக்குத் தங்கள் இசைத் திறமையால் அஞ்சலி செலுத்துகின்றனர். கர்நாடக இசை மும்மூர்த்திகளின் பாடல்கள் இனிமையா னவை. செவிக்கின்பமும், உள்ளத்து மகிழ்ச்சியையும் பக்தி நெறியையும் ஊட்டி ஆத்மசாந்தி அளிப்பனவாகவும் உள்ளன. அப்பாடல்களைச் சிலர் பாடும்போது தம்மை மறந்து மணிக்கணக்கில் கேட்டுக் கொண்டிருக்க முடியும். கேட்போரைப் பிணிக்கும் தகைமை வாய்ந்தவையாகும். டெல்லியிலுள்ள சங்கீத நாடக கழகம் (Sangeet Natak Academy) ஒவ்வோர் ஆண்டும் சிறந்ததோர் இசைக் கலைஞருக்குப் பரிசு கொடுத்து கௌரவிக்கின்றது. திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி, (Tmt. M. S. Subbu-lakshmi), அரியக்குடி இராமானுஜ ஐயங்கார் (Ariyakudi Ramanuja Iyengar), செம்பை வைத்தியநாத பாகவதர் (Sembai Vaidyanatha Bhagavathar) போன்ற கர்நாடக இசைக் கலைஞர்கள் சங்கீத நாடக கழகம் விருது பெற்றுள்ளனர்.

அந்நிய நாட்டு இசைக் கலப்பில்லாத தூய கர்நாடக இசை ஒரு புறமும், மறுபுறத்தில் பாமரனுக்கும் மகிழ்ச்சி யூட்டும் திரைப்பட இசையும் இருக்கின்றன. கர்நாடக இசை இறைவனைத் துதித்துப் பாடி, பக்தி நெறி வளர்க்கும் இசை யாகும். அதே நேரத்தில் காதலையும் காமத்தையும்பற்றிப் பாடும் உலகியல் இசையாகத் திரையிசை மலிவு பெற்று விளங்குகின்றது. தமிழக திரைவானின் பின்னணிப் பாடகர் களில் திரு. டி.எம். செளந்தரராஜன் என்பவரும் திருமதி. பி. சுசீலா என்பவரும் புகழ்பெற்று விளங்குகின்றனர். தமிழில் திரைப்படப் பாடல்களை இயற்றுவதில் நிகரற்று விளங்கியவர் கவிஞர் கண்ணதாசன் ஆவார். இந்தி திரைப் பட உலகில் லதாமங்கேஷ்கர், ஆஷா பான்ஸ்லே, கிஷோர் குமார், வாணி ஜெயராம் போன்றோர் சிறப்புற்று விளங்கு கின்றனர்

திருமதி எம்.எஸ். சுப்புலட்சுமி அவர்களின் கர்நாடக இசைத் திறமை உலகம் வியக்கும் வண்ணம் சிறப்புற்று விளங்குகிறது. க்ர்நாடக இசையின் சிறப்புத் தன்மையான நயம், பாவம் போன்றவைகளைத் தனது தேனினுமினிய குரலால், இசை முறை பிறழாமல் இசைக்கக்கேட்ட உலக நாட்டினர், கர்நாடக இசையின் உயர் தனிச் சிறப்பு நிலையை உணரத் தொடங்கி யிருக்கின்றனர். அதேபோல ரவி சங்கர் என்பாரும் கர்நாடக இசையின் புகழ் பரப்பும் இந்தியத் தாயின் மற்றுமொரு தவப்புதல்வராவர். இந்திய ஒலி பரப்புச் சாதனங்களும், அரசின் பேராதரவும், அனைத்திற்கும் மேலாக இசைப் பிரியர்களின் ஆர்வமும் கர்நாடக இசை தொடர்ந்து புகழுடன் விளங்கக் காரணமாக இருக்கின்றன.

இந்திய இசை முறைகள் விளக்கப் படங்களுடன் வெளி யிடப்பட்ட நூல்கள் தற்போது காணப்படுகின்றன. அந் நூல்கள் ஆங்கிலேயருக்கு முன்பிருந்தே விளங்கி வருபவை யாகும். ஒரு காலத்தில் உன்னத நிலையிலிருந்து, பின்னர் படிப்படியாகக் குறைந்துவருகின்ற உன்னத இசைக் கலையின் எச்சங்களாகக் கலைச் சிறப்பின் எடுத்துக்காட்டுகளாக அவை திகழுகின்றன.

இசையைப் போலவே, அந்நியக் கலப்பில்லாது தூய்மை யுடன் விளங்கும் இந்திய நடனம் பரதக் கலை அல்லது பரத நாட்டியம் என்றழைக்கப்படுகின்றது. இந்த நாட்டியக் கலையின் நுணுக்கங்களை கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் 'பரத முனி' என்பவர் உருவாக்கினார் எனக் கருதப்படு

கின்றது. பண்டைய காலத்தில் 'தேவ தாசிகள்' என்றழைக்கப்பட்ட கணிகையர் குல மகளிரின் தனி உரிமையாக ஆண்டவன் சந்நிதானத்தில் மட்டுமே ஆடவேண்டிய கலையாக, ஆலயங்களின் உதவியுடன் வளர்ந்து வந்த பரதக்கலை, இப்பொழுது குலமாதர்களும் பயில்கின்ற உயர்கலையாக உயர்வு பெற்று நிற்கின்றது. பொன்னம்பலத்தில் ஆடுகின்ற நாயகன் 'நடராசன்' என்ற இறைவன் பெயரால் விளங்கிய நடனக் கலையைப் பயின்றிருந்த மகளிருக்குச் சமுதாயத்தில் மிகவும் தாழ்வான இடமளிக்கப்பட்டிருந்தது. அடையாறு புற்று நோய் ஆராய்ச்சி நிறுவனத்தைத் தொடங்கிய டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி அவர்கள் தமிழகத்திற்குத் தலைக்குனிவை தேடித்தந்த தேவதாசி முறையை' ஒழிக்க அரும்பாடுபட்டார். 1925ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட 'தேவதாசி ஒழிப்புச் சட்டம்' டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி அவர்களின் அயரா உழைப்பிற்குக் கிடைத்த பரிசாகும்.

அடையாறு பிரம்மஞான சபையின் (Theosophical Society) தலைவியான ருக்மணி அருண்டேல் (Rukmani Arundale) அவர்கள், பரதக் கலையைக் குலப் பெண்டிரும் ஏற்றுக் கொள்ளும் கலையாக மாற்றும் முயற்சியில் ஓரளவு வெற்றியும் கண்டுள்ளார். அவரது முயற்சிகளின் விளைவாக உயர் குலப் பெண்டிரும் பரதக் கலையைப் பொழுதுபோக்காகக் கற்கும்படி செய்திருக்கின்றார். இந்தியப் பெருமையை உலகிற்கு எடுத்தியம்பிய பண்டைய இந்தியக் கலைகளில் ஒன்றான பரதக் கலையை மேலும் போற்றி வளர்ப்பதையே குறிக்கோளாகக் கொண்டு அடையாறில் 'கலாக்ஷேத்திரம் (Kalakshetra) என்ற நிறுவனம் விளங்குகின்றது. பரதக் கலையில் இணையற்ற சிறப்புப் பெற்று, தனது ஆயுள் முழுவதையும் பரத கலைக்காகவே செலவிட்டு வருகின்ற பால சரசுவதி என்பாரைச் சமீபத்தில் இந்திய அரசு விருது வழங்கி கௌரவித்தது. இந்தியப் பண்பாட்டுச் சிறப்புகளைப் போற்றி வளர்க்கப் பாடுபட்ட ருக்மணி அருண்டேல் என்பவரை இந்திய அரசு, டெல்லி நாடாளுமன்றத்தின் மேல் சபை உறுப்பினராக நியமித்துப் பாராட்டியிருக்கின்றது. திருமதி வைஜயந்திமாலாவும் திருமதி பத்மினியும் திரைப் படங்களில் பல்வேறு வகை நடனங்களை ஆடினாலும், அவர்கள் பரதக் கலையிலும் மிகவும் திறமை பெற்றிருக்கின்றனர். இதைத் தவிர உயர் ரக உணவகங்களில் ஆடுகின்ற காபரே (Cabarat) மற்றும் மேனாட்டு வகை நடனங்களும் மக்களிடையே பரவி வருகின்றன. இவைகளைத் தவிர

பக்தியின் அடிப்படையில் கிராமக் கலைகளாகத் தோன்றிப் புகழ் பெற வளர்ந்துவிட்ட கதக்களி நடனம், கரகம், காவடியாட்டம் ஆகியவைகளும் மக்களிடையே செல்வாக்குப் பெற்று வளர்ந்து வரும் கலைகளாகும். மக்களின் மனமகிழ்ச்சியை வளர்ப்பதோடு, அவர்களை ஒன்றுபடுத்தவும் இசை, நாட்டியக் கலைகள் பயன்படுகின்றன.

## மொழியும் இலக்கியமும்

### பண்டைய இந்தியாவில்

நமது நாடு மிகப் பழமையானது. பண்டைய வடமொழி, தமிழ்மொழி இலக்கியப் பெருமையையும் கொண்டிருக்கின்ற நாடு. நமது நாட்டு இலக்கிய வரலாற்றில் மிகவும் தொன்மையானதாகக் கருதப்படுவது வேதகால இலக்கியங்களே ஆகும். வேதங்கள் அதன் தொடக்க காலத்தில் எழுதப்பட்டிருக்கவில்லை. வேதங்களின் பாடல்கள் (Slokas) மனப்பாடம் செய்யப்பட்டு, செவி வழியாகவே பரம்பரை பரம்பரையாகக் கற்பிக்கப்பட்டு வந்தது. பிற்காலத்தில் வியாசர் என்ற முனி புங்கவர் (Sage Vyasa) செவிவழிச் செய்தியாகவே மனப் பாடம் செய்யப்பட்டு வந்த வேத பாடல்களைத் தொகுத்து வரி வடிவம் கொடுத்தார். இதனால்தான் அவர் வேத வியாசர் என்றே குறிப்பிடப்படுகின்றார். நாளடைவில் பிராமணங்களும் (Brahmanas) உபநிஷதங்களும் உருவாக்கப் பட்டன. முழு முதற் கடவுளான 'பிரமம்' (Brahmam) என்பதைப் பற்றியும், வழிபாட்டு முறைகள், வேள்விகளின் நோக்கங்கள், செயல் முறைகள் ஆகிய அனைத்தும் உரை நடையில் எழுதப்பட்ட நூல்களே பிராமணங்கள் என்பவையாகும். கடவுளைப்பற்றிய தத்துவ விளக்கங்களும், தெய்வ சக்தியின் உயர்தனி நிலையையும், இலக்கிய வடிவில் தருவது உபநிஷதங்களாகும். கி.மு. 2000 ஆண்டிலிருந்து கி.மு. (சுமார்) 1000 ஆண்டு வரையில் இந்தியாவின் அரசியல், பொருளாதார, சமுதாய, சமய நிலைகளைப்பற்றி வேதகால இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. வேதங்கள், பிராமணங்கள், உபநிஷதங்கள் ஆகிய அக்கால இலக்கியங்கள் முழுவதுமே வடமொழியில் இயற்றப்பட்டவையாகும்.

வீரகாவியங்களான இராமாயணமும் மகாபாரதமும் வேதங்களுக்கு அடுத்தாற்போல பண்டைய இந்தியாவில் மிகவும் புகழ்பெற்றிருந்தன. அவைகளும் வடமொழியிலேயே எழுதப்பட்டிருந்தன. இராமாயணத்தை வால்மீகி (Valmiki) என்ற முனிபுங்கவரும் மகாபாரதத்தை வியாசரும்

(Sage Vyasa) அருளினர். மகாபாரதத்திலே மிகவும் சிறந்ததாகக் கருதப்படுவது 'பகவத் கீதை' என்ற கண்ணபிரானின் போதனைகளாகும். பகவத் கீதை இந்து சமயத்தின் கோட்பாடுகளையும் தத்துவ நம்பிக்கைகளையும் சுருக்கி விளக்கியிருக்கின்ற நூலாகவே புகழப்படுகின்றது.

அவ்விரண்டு வீரகாவியங்களும் பல இந்திய மொழி களிலும் மொழிபெயர்க்கப்பட்டன. 'இராம சரித மானஸ்' (Rama Charita Manas) என்ற பெயரில் 'துளசிதாசர்' (Tulasi Das) இந்திமொழி இராமாயணத்தை உருவாக்கி னார். துளசிதாசர் மாமன்னர் அக்பர் காலத்தில் வாழ்ந்தவர். அக்பரின் ஆதரவைப் பெற்றிருந்தவர். பன்னிரண்டாம் நூற் றாண்டில் சோழ மன்னரின் அவைக்களப் புலவராக இருந்த 'கம்பர்' (Kambar) (இவரைக் கம்பநாட்டாழ்வார் என்றும் புகழ்ந்துரைப்பர்) இராமாயணத்தைச் செந்தமிழ் இலக் கியமாக உருவாக்கினார். அதேபோல வில்லிபுத்தூராரும் (Villiputhurar) பெருந்தேவனாரும் (Perundevanar) மகா பாரதத்தைப் பைந்தமிழ்க் காவியமாக்கினர். இவ்விரண்டு வீரகாவியங்களும் தேசிய இலக்கியமாக, பலமொழி பேசு வோரும் விரும்பிப் படிக்கின்ற இலக்கியங்களாக உயர்வு பெற் றுள்ளன. சொல்லாற்றல் மிகுந்த 'பௌராணிகர்கள்' அல்லது 'பாகவதர்கள்' (Pauranikar or Bhagavatar) தங்களின் கற்பனை வளத்தோடு இராமாயண, மகாபாரதக் கதைகளை இசையிடையிட்ட உரைநடையாக விளக்குவதை இந்துக்கள் அனைவரும் பெருமையுடன் கேட்டு மகிழ்கின்றனர். இந்திய மக்கள் அனைவரையும் இணைக்கின்ற இலக்கியப் பாலமாக அமைந்து, தேசிய ஒருமைப்பாட்டு எண்ணத்தை வளர்க்கும் வகையிலும், இந்த வகை இலக்கியங்கள் உயர்ந்து காணப் படுகின்றன

புத்த சமயத்தின் தோற்றத்திற்குப் பின்னர் புத்தசமயக் கோட்பாடுகளை விளக்கும் பல நூல்கள் வெளியிடப்பட்டன. திரிபிடகங்கள் (Tripitakas) என்றழைக்கப்பட்ட மூன்று நூல்கள் புத்த சமயத்தின் ஆரம்பகால நூல்களாகும். சுத்த பிடகம் (Sutta Pitaka), வினய பிடகம் (Vinaya Pitaka), அபிதம்ம பிடகம் (Abhidamma Pitaka) என்பவையே திரிபிடகங்களாகும். இந்நூல்கள் பண்டைய பிராகிருத மொழி யின் இலக்கியவழித் தோன்றலான பாலி மொழியில் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட நூல்களாகும். சுத்த பிடகத்தில் (Sutta Pitaka) புத்தக் கோட்பாடுகளின் (Dhamma or Law) விளக்கமும் புத்தர் ஆரம்ப காலத்தில்

தமது மிக முக்கிய மாணாக்கர்களுக்குப் போதித்த கருத்து களின் விளக்கங்களும் காணப்படுகின்றன. வினய பிடகத்தில் (Vinaya Pitaka) புத்தமடங்களைப் பற்றியும், அம் மடங்களின் கட்டுப்பாடுகள், பிட்சுக்களின் நன்னடத்தை, வாழ்க்கை முறைகள் அனைத்தும் அறிவுறுத்தப்பட்டிருக் கின்றன. அபிதம்ம பிடகத்தில் (Abhidamma Pitaka) 'தம்மா' (Dhamma) பற்றிய விளக்க நுணுக்கங்களும் உயர் தத்துவங் களும் விளக்கப்பட்டுள்ளன.

திரிபிடகங்களைத் தவிர தம்ம பாதங்கள்' (Dhamma pada), 'திரகதா' (Therahatha), தேரிகதா (Therigatha), ஜாதகா கதைகள் (Jataka Tales) போன்ற பல்வேறு இலக்கியங்களும் புத்தசமயக் கோட்பாடுகளை வலியுறுத்து கின்றன. ஜாதகா கதைகள் புத்தரின் முற்பிறவிகளைப்பற்றிக் கூறுகின்றன.

கிறித்தவ கால முதல் நூற்றாண்டில் தமிழகத்தில் தனிச் சிறப்புமிக்க சங்க இலக்கியங்கள் உருவாக்கப்பட்டிருந்தன. பண்டைய தமிழகத்தில் தமிழ் வளர்க்க மூன்று சங்கங்கள் பாண்டிய நாட்டின் தலைநகரங்களில் இருந்ததாகவும், அந்த சங்கப் புலவர்களின் அனுமதிபெற்ற பின்னரே இலக்கிய நூல்கள் வெளியிட முடியும் என்றும் கூறப்படுகின்றன. பாண்டிய நாட்டின் இறுதி தலைநகரான மதுரையில்தான் கடைசி மூன்றாவது தமிழ்ச் சங்கம் செயல்பட்டதாகக் கருதப் படுகின்றது. அந்தச் சங்கங்களின் காலத்தில் உருவாக்கப்பட்ட இலக்கியங்கள் சங்கத் தமிழ் இலக்கியங்கள் என்று புகழப் படுகின்றன. முதலிரண்டு தமிழ்ச் சங்கங்களைப்பற்றிய முழுக் குறிப்புகள் நமக்குக் கிடைக்கவில்லை. இடைச்சங்க காலத்தில் உருவாக்கப்பட்ட தொல்காப்பியம் என்ற இலக்கண நூல் ஒன்றுமட்டுமே கிடைத்துள்ளது. மூன்றாவதும் கடைச் சங்க முமான மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் உருவாக்கப்பட்ட பல் சிறந்த இலக்கியங்கள் நமக்குக் கிடைத்துள்ளன. 'பத்துப் பாட்டு', 'எட்டுத்தொகை', 'பதினெண்கீழ்க் கணக்கு' என்ற பெயர்களில் சங்க நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. அவைக ளுடன் இருபெருங் காப்பியங்களான 'சிலப்பதிகாரமும்' 'மணி மேகலையும்' சங்ககால இலக்கியங்களாக ஏற்றுக்கொள்ளப் பட்டன. தமிழர்களின் தனிப்பெரும் நூல்களாக மதிக்கப்படு கின்றன. 'திருக்குறள்' பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்றாகும். திருக்குறள் உலகின் பல்வேறு மொழிகளிலும் மொழியாக்கம் செய்யப்பட்டிருக்கின்றது. இது ஒன்றே குறளின் பெருமையை விளக்கப் போதுமான செய்தியாகும்.

இந்திய இலக்கிய வளர்ச்சி குப்தர்கள் காலத்தில் மீண்டும் சிறந்திருந்தது. 'நவரத்தினங்கள்' (Nine gems) என்றழைக்கப்பட்ட தலைசிறந்த ஒன்பது அவைக்களப் புலவர்கள் குப்தர்கள் காலத்து இலக்கிய வளர்ச்சிப் பணியை மேற்கொண்டனர். நவரத்தினங்களில் தலைசிறந்த இரத்தின மாகப் புகழப்படுகின்ற 'காளிதாசர்' (Kalidasar) வட மொழியில் புலமையும் நாடகங்கள் ஆக்குகின்ற திறமையும் பெற்றுத் திகழ்ந்தார். அவர் எழுதிப்போந்த 'சாகுந்தலம்' (Sakuntala), 'விக்ரம ஊர்வசியம்' (Vikramorvasiyam) 'மாளவிகாக்னிமித்ரம்' (Malavikagnimitra) போன்ற நாடக நூல்கள் இறவாத் தன்மையுள்ளவை. 'ரகுவம்சம்' (Raguvamsa), குமாரசம்பவம் (Kumara Sambava) என்ற இருநூல்களும் வீரகாவியங்களாகப் போற்றப்படுகின்றன. 'மேகதூதம்' (Meghaduta), 'ரிது சம்காரம்' (Ritu Samhara) என்ற இவ்விரண்டும் இசைப்பாடல் நூல்களாக ஏற்றம் பெற்றிருக்கின்றன.

இத்தகு சிறப்புமிக்க வடமொழி நூல்களை இயற்றிய காளிதாசரைத் தவிர வேறு பலரும் குப்தர்கள் காலத்தில் இலக்கியப் பணியில் சிறந்து விளங்கினர். 'மிருச்சகடிகா' அல்லது 'சிறிய களிமண் வண்டி' (Mricha Katika *or* Little Clay Cart) என்ற வடமொழி இலக்கியத்தைச் சூத்ரகா (Sudraka) என்ற அவைப் புலவர் இயற்றினார். விசாகதத்தா (Visakadatta) என்ற அறிஞர் 'முத்ரா ராக்ஷசா' (Mutra Rakshasa) என்ற வடமொழி நாடகத்தை உருவாக்கினார். இந்நாடகம் மகத நாட்டில் தோன்றிய புரட்சியினை மையக் கருத்தாகக் கொண்டு எழுதப் பட்டது. 'கிராதார்ஜுனா' (Kiratarjuna) என்ற மற்று மொரு வீரகாவியத்தினை 'பாரவி' (Bharavi) என்பார் படைத்தார். இந்நூல் சிவபெருமான் 'கிராதா' (Kirata) என்ற பெயருடன் வேட்டுவனாகத் தோன்றிப் பாண்டவ அர்ஜுனனுடன் நடத்திய போரை இந்நூல் இலக்கியமாக வடித்திருக்கின்றது

இந்தியாவின் பல்வேறு பாகங்களிலும் காணப்படுகின்ற 'நாட்டுப் பாடல்கள்', 'பரம்பரைக் கதைகள்' (Folklore) இந்தியாவிற்கே உரித்தான தனிப்பெரும் இலக்கியங்களாகும். 'பஞ்சதந்திரக் கதைகள்' (Panchatantra) இவ்வரிசையில் அடங்கும். நாட்டுப் பாடல்களின் தோற்றமும் வளர்ச்சியும் குப்தர் காலத்திலே ஏற்பட்டது. ''இந்தியாவில் தோன்றிய நாட்டுப் பாடல்கள் ஆசிய, ஐரோப்பிய, ஆப்பிரிக்கக் கண்டங்

களின் நாட்டுப்பாடல் இலக்கிய வளத்திற்கு எடுத்துக் காட்டாக, முன்னோடியாகத் திகழ்ந்திருக்கின்றது; இடைக் கால இந்தியாவின் இலக்கியங்களின் தோற்றத்திற்கும் வளர்ச் சிக்கும், இந்த நாட்டுப் பாடல்கள் பெருந்துணை புரிந்திருக் கின்றன'' என மக்டோனல் (Macdonnel) என்ற அறிஞர் குறிப்பிடுகின்றார்.

காமத்தைப் பற்றியும் (Sex) இலக்கிய நூல்கள் உரு வாக்கப்பட்டன. மனிதனின் காம இச்சையைப் பற்றி விளக்கி, அதை அறிவியலாக உயர்த்தும் வகையில் 'வாத் சாயனர்' (Vatsayana) என்பார் 'காமசூத்திரம்' (Kamasutra) என்ற நூலைப் படைத்தார்.

'பிராக்ரித் பிரகாசா' (Prakrit Prahasa) என்ற பிராகிருத மொழியின் இலக்கண நூல் ஒன்றினை 'வரருசி' (Vararuchi) என்பார் உருவாக்கியிருந்தார். இதைப்போலவே 'அமர சிம்மன்' (Amara Simha) என்பாரும் 'அமரகோசா' (Amarakosa) என்ற சொல்லியல் விளக்க நூலை (Book of Synonyms) உருவாக்கினார்.

மகத நாட்டைச் சேர்ந்த 'புத்த கோஷா' (Buddha Gosha) என்பார் ஸ்ரீலங்கா சென்று, புத்தசமய இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தார். அவர், திரிபிடகங்களைப்பற்றிய விளக்க வுரைகளை எழுதிப் புகழ்பெற்றார்.

' குப்தர் காலத்தில் வடமொழி பண்பிற் சிறந்த உயர் குலத்தோரின் ஏற்றமிகு மொழியாக உயர்ந்திருந்தது அசோகர் தனது கல்வெட்டுகளைப் பிராகிருத மொழியில் உருவாக்கியிருந்தாலும், குப்தர்கள் காலத்திய கல்வெட்டு கள் வடமொழியில் உருவாக்கப்பட்டிருந்தன. சமுத்திர குப் தரின் படைத்தலைவர் அரிசேனர் (Arisena) அலகாபாத் நகரில் நிறுவிய கற்றூண் ஆணை (Inscription) தூய வடமொழியில் பொறிக்கப்பட்டிருக்கின்றது. குப்தர்கள் கால நாணயங்களிலும் வடமொழி எழுத்துகள் காணப்படுகின்றன.

கணிதம், வானியல், மருத்துவம் ஆகிய துறைகளில் சிறந்த அறிஞர்கள், சிறப்புமிகு நூல்களை உருவாக்கினர் 'ஆரியபட்டா' (Aryabhatta) என்ற வானியல் மேதை பூமி சுழற்சி முறையைக் குறிப்பிட்டார். ஓர் அச்சை (Axis) மையமாகக் கொண்டு ஒரு நாளுக்கு ஒருமுறை பூமி சுழல்கிறது என்றும், கிரஹணங்கள் ஏற்படுவதற்கான அறிவியல் காரணங் களையும் விளக்கினார். வராகமிகிரர் (Varahamihira)

என்ற மற்றொரு வானியல் மேதை 'பஞ்ச சித்தாந்திகா' (Pancha siddhantika), 'பிருகத் சம்ஹிதா' (Brihat Samhita), 'பிருகத் ஜாதகா' (Brihat Jataka) போன்ற நூல்களை இயற்றினார். அஷ்டாங்க—ஹ்ருதயா (Ashtonga—Hirudaya) என்ற நூலின் ஆசிரியர் விருத்தவாகபட்டரும் (Vriddahvaha-bhatta), 'தன்வந்திரி' (Danvantri) என்ற தலைசிறந்த மருத்து வரும் மருத்துவ உலகில் தலைசிறந்து விளங்கினர்.

ஹர்ஷவர்த்தனரின் ஆட்சிக் காலமான கி.பி. ஏழாம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்ட புகழ்பெற்ற நூல்களா வன: ஹர்ஷவர்த்தனரே உருவாக்கிய ரத்னாவளி, நாகா னந்தா, பிரியதர்சிகா (Ratnavali, Nagananda and Priadarshika) என்ற மூன்று நாடகக் காவியங்களும், பாணர் என்ற அறிஞர் எழுதிய 'ஹர்ஷ சரிதம்' (Harsha charita), காதம்பரி (Kadambari) போன்ற நூல்களும் ஹர்ஷர் காலத் தலைசிறந்த நூல்களாகும்.

பல்லவர் காலத்திலும் பிற்காலச் சோழர்களின் ஆட்சி யின் போதும் தமிழகத்தில் பெரும் இலக்கிய வளர்ச்சி காணப்பட்டது. பாடல்களாக இயற்றப்பட்ட பக்தி நூல்கள் தமிழகத்தில் தோன்றி வளர்ந்தன. அறுபத்து மூன்று சைவ நாயன்மார்களின் பக்திப் பாடல்கள், தேவாரம் என்ற இலக்கிய நூலாக நம்பியாண்டார் நம்பி (Nambi Andar Nambi) என்பவரால் தொகுக்கப்பட்டது. அதேபோல வைணவ ஆழ்வார்களின் பக்திப் பாடல்கள் 'நாலாயிரத் திவ்ய பிரபந்தம்' (Nalayira Divya Prabandam) என்ற பக்தி இலக்கியமாக நாதமுனி (Nathamuni) என்பவரால் தொகுக்கப் பட்டது. சைவ குரவர் நால்வருள் ஒருவரான மாணிக்கவாசகர் என்பவர் 'திருவாசகம்' (Thiruvachagam) என்ற இன்னுமொரு மிகச்சிறந்த பக்தி இலக்கியத்தைத் தோற்றுவித்தார்.

சோழப் பேரரசின் காலத்தில் தமிழ் இலக்கிய வளர்ச்சி உன்னத நிலையை அடைந்தது. பிற்காலச் சோழர்களின் ஆட்சியின்போது உருவாக்கப்பட்ட தமிழ் இலக்கியங்களில் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடலாம். சீவக சிந்தாமணி (Jivagachintamani) என்ற காவியத்தை இயற்றியவர் திருத்தக்கத்தேவர் என்ற ஜைனர். குண்டலகேசி என்ற இலக்கிய நூல் புத்தசமயத்தினரால் உருவாக்கப்பட்டது கல்லாடம் என்ற நூலைக் கல்லாடனார் என்ற புலவர் இயற்றினார். குலோத்துங்க சோழனின் கலிங்க வெற்றி யைப் பாராட்டும் வகையில் உருவாக்கப்பட்டது கலிங்கத்துப

பரணி என்ற நூலாகும். அதை இயற்றியவர் செயம் கொண்டார் என்ற புலவராவர். கம்பநாட்டாழ்வார் அருளிய கம்பராமாயணம், புகழேந்திப் புலவரின் நள வெண்பா, சேக்கிழார் அருளிய பெரிய புராணம் (அல்லது) திருத்தொண்டர் புராணம் போன்ற காவியங்களும்; பவ ணந்தி என்பார் இயற்றிய நன்னூல் என்ற இலக்கண நூலும் இவை போன்ற ஏராளமான தமிழ்க் காவியங்களும் சோழப் பேரரசின் காலத்தில் உருவாக்கப்பட்டவை யாகும்.

தமிழ்மொழி மட்டுமல்லாது, வடமொழியும் சோழப் பேரரசு காலத்தில் ஊக்குவிக்கப்பட்டது. வடமொழியைக் கற்பிக்கக் கல்லூரிகளும் ஏற்படுத்தப்பட்டிருந்தன. வட மொழிக் கலைக்களஞ்சியம் (Sanskrit Lexicon) ஒன்றினை உருவாக்க இரண்டாம் இராசராசன் ஆணையிட்டிருந்தார். அவ்வாணையின்படி கேசவமின் என்பார் 'நானாந்தார்னவ-சம்ஷேபா' (Nanantharnava-Samshepa) என்ற வடமொழிக் கலைக் களஞ்சியத்தினைத் தொகுத்தார்.

ஹர்ஷவர்த்தனர் இறந்ததிலிருந்து, கஜினி முகமதுவின் தலைமையிலான முஸ்லிம்களின் படையெடுப்பு வரை உள்ள வடஇந்திய வரலாற்றுக் காலம் 'இராசபுத்திரர்களின் காலம்' (Rajput Age) எனக் குறிப்பிடப்படுகின்றது. அக்காலத்தில் வடஇந்தியா முழுவதிலும் அநேக இராசபுத்திர அரசுகள் ஆட்சி புரிந்தன. இராசபுத்திரரின் ஆட்சிக்காலத்தில் வடமொழி இலக்கியங்கள் மிகவும் வளர்ச்சியுற்றன. அக்கால வடமொழி இலக்கியம் மற்றும் பல்வேறு துறைகளில் உருவாக்கப்பட்ட நூல்களில் சில வருமாறு: நாடக இலக்கியத்தில் கனோஜின் அரசரான யசோவர்மன் (Yasovarman) காலத்தில் வாழ்ந்த பவபூதி (Bhavabuthi) என்பாரும், மகேந்திரபாலன் என்ற கனோஜ் அரசன் காலத்தில் வாழ்ந்த 'இராசசேகரன்' (Rajasekara) வங்காளத்தில் லட்சுமண சேனாவின் (Lakshmana sena) அரசவைப் புலவரான ஜெயதேவரும் (Jayadeva) வடமொழி நாடக நூல்களை உருவாக்கினர். பதினோராம் நூற்றாண்டில் காஷ்மீரைச் சேர்ந்த சோமதேவா (Somadeva) என்பார் 'கதாசரித சாகரம்' (Kathasaritha Sagara) என்ற கதைகளின் தொகுப்பு நூலை ஆக்கினார். அதே நூற்றாண்டில் வாழ்ந்த கல்ஹணர் (Kalhana) என்பார் 'இராசதரங்கிணி' (Rajatharangini) என்ற வரலாற்று நூலை உருவாக்கினார். பன்னிரண்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதிவரை

ஆண்ட காஷ்மீர் அரசர்களின் வரலாற்றுத் தொகுப்பே இராசதரங்கிணி எனும் நூலாகும்.

**இடைக்கால இந்தியா**

இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சியின்போது வடமொழி இலக்கிய வளர்ச்சி சரிவுற்றது. வடமொழிக்குப் பதிலாக பாரசீக மொழி, மற்றும் இந்தி, உருது ஆகிய மொழிகள் ஏற்றம் பெற்றன. அத்துடன் இந்தியாவின் மற்ற பகுதிகளில் வழங்கிவந்த ஏனைய மொழிகளும் ஆக்கம் பெற்றன. பக்தி இயக்கம் தாய் மொழி வளர்ச்சிக்கு ஊக்கமளித்தது. ஒவ்வொருவரும் அவரவர் தாய் மொழியின் வாயிலாகவே இறைவனை வழிபடலாம். இறை வழிபாட்டு மொழி எனத் தனியே ஒரு மொழி தேவையில்லை என பக்தி இயக்கத்தைத் தோற்றுவித்த பெருந்தகையோர் வலியுறுத்தினர். இந்த ஊக்கத்தின் விளைவாக இந்தி மொழி மற்றும் பிற மொழிகளின் வளர்ச்சி தொடங்கியது. கவிஞர்களுக்கெல்லாம் இளவரசனைப் (Prince of Poets) போன்றவர் என்று புகழப்பட்ட அமிர்குஸ்ரு (Amir Kusru), பாரசீக மொழியில் ஏராளமான கவிதைகளை உருவாக்கினார்.

தென்னிந்தியாவில் விஜயநகரப் பேரரசு இலக்கிய வளர்ச்சிக்குப் பேராதரவு அளித்ததன் விளைவாகத் தெலுங்கு மொழி இலக்கியத்தின் பொற்காலம் தொடங்கியது. விஜய நகரப் பேரரசர் கிருஷ்ணதேவராயரின் காலம் தெலுங்கு இலக்கிய வரலாற்றில் 'அகஸ்டசின் காலம்' (Augustan Age of Telugu Literature) அதாவது தெலுங்கு இலக்கியத்தின் பொற்காலமெனக் கருதப்படுகின்றது. கிருஷ்ணதேவ ராயரின் அரசவையை அஷ்டதிக்கஜங்கள்' (Ashtadiggajas) என்றழைக்கப்பட்ட எட்டுக் கவிமணிகள் அலங்கரித்தனர். அந்த அஷ்டதிக்கஜங்களில் ஒருவரான அல்லசானி பெத்தண்ணா (Allasani Peddanna) என்பவர் வடமொழி மற்றும் தெலுங்கு மொழிகளில் புலமை பெற்றிருந்தார். அவர் 'ஆந்திர கவி பிதாமகர்' (Andhra Kavi Pitamahar)—'தெலுங்கு இலக்கியப் பாடல்களின் தாத்தா' எனப் புகழப்பட்டார். அவர் உருவாக்கிய நூல்களில் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது 'மனுசரிதம்' (Manucharita) என்ற நூலாகும். கிருஷ்ணதேவராயரும் தெலுங்கு இலக்கியத்தில் புலமை பெற்றிருந்தார். 'ஜாம்பவதி கல்யாணம்' (Jambavati Kalyanam), 'உஷாபரிணயம்' (Usha Parinayam) என்ற இரண்டு வடமொழி நாடகங்களைக்

கிருஷ்ணதேவராயர் உருவாக்கியிருந்தார். 'ஆமுக்த மால்யதா' (Amukta Malyada) என்ற தெலுங்குப் பாடல் நூலையும் அவர் இயற்றியிருந்தார். ஸ்ரீ ஆண்டாளின் வளர்ப்புத் தந்தையான 'விஷ்ணுசித்தர்' (Vishnuchitta) என்பவரின் வாழ்க்கை வரலாற்றைக் கவிதையாக வடித்திருந்ததால் அந் நூலுக்கு 'விஷ்ணு சித்தியமு' (Vishnu chithiamu) என்ற பெயருமுண்டு.

மொகலாயர் காலத்தில் பாரசீக, இந்தி மொழி இலக்கியங்கள் வளர்ச்சியுற்றன. பாபர் துருக்கி, பாரசீக மொழிகளில் புலமை பெற்றிருந்தார். 'திவானி பாபர்' (Diwan Baber) என்ற கவிதை நூலையும், 'பாபர் நாமா' (Babarnama) என்ற நூலில் அவரது சுயசரிதத்தையும் பாபர் துருக்கிய மொழியில் எழுதினார்.

அக்பர் காலத்தில் பார்சீக மொழி இலக்கிய ஆக்கம் பெற்றது. அக்பரின் உற்ற நண்பரும் அவைக்களப் புலவருமான 'அபுல் பாசல்' (Abul Fazl) அக்பர் நாமா (Akbar Nama) மற்றும் 'அயினி-அக்பரி' (Ain-i-Akbari) என்ற இரு நூல்களை உருவாக்கினார். 'அக்பரின் வரலாற்றுக் குறிப்புகள்' (Annals of Akbar) என்ற வரலாற்றுச் சிறப்புமிக்க நூலை நிஜாமுதீன் (Nizamuddin) என்பாரும் 'தரிகிபதௌனி'. (Turk-i-Badhauni) என்ற நூலை பதௌனி என்பாரும் உருவாக்கியிருந்தனர்.

அக்பருடைய காலத்தில் ஏராளமான இந்திய நூல்கள் பாரசீக மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்டன. பதௌனி என்பார் வடமொழியிலும் புலமை பெற்றிருந்தார். இராமாயணம் முழுவதையும், மகாபாரதத்தின் ஒரு சில பகுதிகளையும் பதௌனி பாரசீக மொழியில் மொழியாக்கம் செய்தார். 'அதர்வண வேதத்'தை (Atharvana Veda) இப்ராகிம்-சிர்ஹிந்தி (Ibrahim-Sirhindi) என்பாரும், 'லீலாவதி' (Lilavathy) என்ற கணித நூலை அபுல் பாசலின் சகோதரரான அபுல் பைசி (Abul Faizi) என்பரும் மொழியாக்கம் செய்தனர்.

அக்பருடைய வேண்டுகோளை ஏற்று, ஹுமாயூனின் வரலாற்றை 'ஹுமாயூன் நாமா' (Humayun Nama) என்ற பெயரில் 'குல்பதான் பேகம்' (Gulbadan Begum) என்ற அம்மையார் உருவாக்கினார். இந்த அம்மையார் பாபரின் மகளாவர்.

அக்பரது ஆட்சிக்காலம் இந்தி இலக்கிய வரலாற்றில் மிகவும் சிறப்பு வாய்ந்த காலமாகும். அக் காலத்தில் மிகச் சிறப்பு வாய்ந்த இந்தி இலக்கியங்கள் உருவாக்கப்பட்டன. அக்பரின் அரசவையில் கவியரசராக விளங்கிய பீர்பால் (Birbal) என்பவர் வேடிக்கையாகவும் அதே நேரத்தில் அறிவு சார்ந்ததுமான கவிதைகளை எழுதுவதில் இணையற்று விளங்கினார். இந்தி இலக்கிய உலகின் முடிசூடா மன்னராகக் கருதப்படுபவர் துளசிதாசராகும் (Tulasidas). அவர் இராமாயணத்தை இந்தி மொழியில் 'இராமன் சரிதமானஸ்' (Raman Charita Manas) என்ற நூலாக இயற்றினார் 'இந்தி இலக்கிய உலகிலேயே இணையற்று விளங்குபவர் துளசிதாசரே' என சர் ஜார்ஜ் கிரியர்சன் (Sir George Grierson) என்ற அறிஞர் மிகவும் புகழ்ந்துரைக்கின்றார். ஆக்ராவைச் சேர்ந்த 'சூர்தாசர்' (Surdas) என்பவர் பார்வையற்றவர். அவர் பாடிய பாடல்கள் 'சுர்சாகரம்' (Sursagari), 'சூரவளி' (Suravali) என்ற நூல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. இவ்விரு நூல்களும் கிருஷ்ணபிரானின் குழந்தைப் பருவ விளையாட்டுகளையும் இராதாகிருஷ்ண மகிமையையும் விளக்குவதாகும். ஒரு சிலர் சூர்தாசரை இந்தி இலக்கிய உலகின் 'சூரியன்' என்றும், துளசிதாசரை 'நிலவு' என்றும் கூறி துளசிதாசரைவிட சூர்தாசருக்கு உயர்ந்த இடமளிப்பர்.

ஷாஜஹான் காலத்தில் சிறப்பு மிக்க இலக்கிய கர்த்தாக்கள் நிறைய பேர் இருந்தனர். அவரது கால இலக்கிய நூல்களில் 'பாத்ஷா நாமா' (Badsha Nama) என்பது மிகவும் சிறந்ததாகக் கருதப்படுகின்றது. ஷாஜஹானின் மூத்த பிள்ளையான தாரா ஷுகோ (Dara Shukov) என்பவர் பன்மொழிப் புலமை பெற்றிருந்தார். அவர் வடமொழி வேதாந்தங்களையும் சூபி சமயத்தின் கோட்பாடுகளை விளக்கும் நூல்களையும் கிறித்தவ சமயத்தின் 'புதிய ஏற்பாட்'டையும் (New Testament) கற்றுத் தேர்ந்திருந்தார். அவர் இஸ்லாமிய, இந்து சமயத் தத்துவங்களை மிகவும் உன்னிப்பாகக் கற்றுணர்ந்து 'இருபெருங்கடல்களின் கலப்பு' (Mingling of two oceans) என்ற நூலினை உருவாக்கினார். அந்நூல் இந்து இஸ்லாமிய சமயங்களை ஒப்பீடு செய்திருக்கின்றது. வாரணாசி என்ற நகரிலிருந்த வடமொழிப் புலவர்களின் உதவியுடன் உபநிஷதங்களையும் பகவத் கீதையையும் பாரசீக மொழியில் தாரா ஷுகோ மொழியாக்கம் செய்திருந்தார்.

வடமொழியில் புலமையும் நாவன்மையும் மிக்க 'ஜகந்நாதப் பண்டிதராஜா' (Jagannatha Panditharaja) என்பவரைத் தாராஷுகோவும் (Darashukov) ஷாஜஹானும் ஆதரித்தனர். ஜகந்நாதப் பண்டிதராஜா அவரை ஆதரித்தவர்களான ஆஸப்கான் (Asafkhan—father-in-law of Shahjehan) மற்றும் தாரா ஷுகோ போன்றவர்களின்மீது கவிதைகளைப் புனைந்து அவர்களைப் போற்றினார். 'ராசகங்காதரா' (Rasagangadhara), 'பாமினி விலாசா' (Bhamini vilasa) என்ற இரு வடமொழி நூல்களும் அவருடைய புலமைக்கு எடுத்துக்காட்டுகளாகும்.

**ஆங்கில இலக்கியங்களின் தொடர்பால் தாய்மொழி இலக்கிய வளர்ச்சியில் ஏற்பட்ட மாறுதல்கள்** (The English Impact and the growth of regional literatures)

இந்திய மொழிகளின் இலக்கிய வளர்ச்சியில் ஆங்கில இலக்கியங்களின் செல்வாக்கு பெரும்பணியாற்றியிருக்கின்றது. ரிக்வேத காலந் தொட்டே கவிதை இயற்றுவது இந்திய மொழிகளின் தலை சிறந்த பண்பாக இருந்து வந்திருக்கிறது. ஆனால், உரைநடையில் கருத்துகளை வெளியிடுகின்ற முறை, மேனாட்டு இலக்கியங்கள் நமக்குக் கற்றுக் கொடுத்த புதிய பாணியாகும். சமய விளக்கங்களைப் பற்றியும், சமுதாயச் சீர்த்திருத்தம் பற்றியும் எழுந்த சொற்போர் இந்திய உரைநடை வளர்ச்சியின் ஆரம்பமாகும். கவிதைகளாலேயே உள்ளக் கருத்துகளை வெளியிடும் தன்மை மாறி, உரை நடையால் கருத்துகளைத் தெளிவாக்க முடியும் என்ற எண்ணம் வளர்ந்தது. இந்த எண்ணம் உரை நடை வளர்ச்சியைத் தூண்டியது. இம்முறையைப் பின்பற்றி இந்திய மொழிகளில் புதினங்கள், சிறுகதைகள், கட்டுரைகள், நாடகங்கள் உருவாக்கப்பட்டன. இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்ட சிறுகதை இலக்கிய வளர்ச்சியை அந்நிய இலக்கியத் தொடர்புகளால் ஏற்பட்ட சிறப்பான விளைவாகக் கருதலாம்.

பிராந்திய மொழி இலக்கிய வளர்ச்சியில் இந்தியாவிலேயே வங்காளம் முன்னணியில் நிற்கின்றது. வங்காள எழுத்தாளர்களில் இரவீந்திரநாத் தாகூர் தனிச்சிறப்புப் பெற்று விளங்குகிறார். அவர் கவிதைகள் இயற்றுவதிலும் உரைநடையில் நூல்கள் எழுதுவதிலும் வல்லவராக இருந்தார். அவர் எழுதிய 'கீதாஞ்சலி' என்னும் நூல் நோபல் பரிசைப் பெற்றது (1913). அவர் புதினங்கள், நாடகங்கள், சிறுகதைகள்

என்ற வகைகளில் ஏராளமான நூல்கள் எழுதியுள்ளார். 'கோரா' (Gora), 'நலிவு' (Wreck) என்ற இவ்விரு புதினங்களும் அவர் எழுதிய புதினங்களுள் மிகவும் சிறப்பானதெனக் கருதப்படுகின்றன. 'ஜன கண மன' எனத் தொடங்கும் இந்திய தேசிய கீதத்தை இயற்றியவர் தாகூர் அவர்களே. இந்தியப் பண்பாட்டு இயல்களின் நிலைக்களனாகக் கருதப்படும் சாந்திநிகேதனத்தில் இருக்கும் விஸ்வபாரதிப் பல்கலைக் கழகம் (Visvabharathi University of Shantiniketan) தாகூரால் நிறுவப்பட்டதாகும். இந்தியப் பண்பாட்டின் உயர்வையும் பெருமையையும் மேனாட்டினரும் போற்றி ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்காகப் பாடுபட்டார். நுண்கலைகளையும் பல்கலைக் கழகப் பாடத்திட்டத்தில் முதன்முதலில் புகுத்தி, கற்பிக்க ஏற்பாடு செய்த பெருமை தாகூரையே சாரும். விஸ்வபாரதிப் பல்கலைக் கழகம் மற்றப் பாடங்களுடன் நுண்கலைகளையும் ஒரு பிரிவாகக் கற்பித்து வருகின்றது. மேனாட்டு, கீழ்நாட்டுத் தத்துவங்களின் இணைப்பை ஏற்படுத்தி இந்தியத் தேசிய இயக்கத்தின் அடிப்படையை விரிவாக்க தாகூர் முயன்றார். இந்திய நாட்டின் குடிமகன் என்பதை மட்டும் கருதாது, தான் ஓர் உலகக் குடிமகன் (World Citizen) என்ற பரந்த மனப்பான்மையை வளர்த்து, அனைத்து நாடுகளுக்கும் பொதுவான, உயர்ந்த மனிதனாகத் திகழ்கின்றார்.

பங்கிம் சந்திர சாட்டர்ஜி (Bankim Chandra Chatterjee), ஈஸ்வர சந்திர வித்யா சாகர் (Easwara Chandra Vidya Sagar) போன்றோர் தாகூருக்கு அடுத்து, உயர்புகழ் பெற்ற வங்காள எழுத்தாளர்களாவர்.

'நவீன மராத்திய இலக்கியத்தின் தந்தை'யெனப் (Father of Modern Marathi Literature) போற்றப்படும் 'கேசவசுதர்' (Kesavasudhar) என்பாரும், பால கங்காதரத் திலகரும் புகழ்பெற்ற மராத்தி எழுத்தாளர்களாவர்.

வீரேசலிங்கம் பந்துலுவும், தேசோதரக நாகேஸ்வரராவும் (Veeresalingam Pantulu and Desodaraha Nageswara Rao) நவீன தெலுங்கு இலக்கிய உலகில் தலைசிறந்தோராவர். பந்துலு என்பவர் நவீன தெலுங்கு இலக்கியத்தைத் தோற்றுவித்தவராவார். 'இராச சேகர சரிதம்' (Rajasekara Charitam) என்ற நூல், தெலுங்கு இலக்கியத்தின் சிறப்புக்கு எடுத்துக்காட்டாகும். அதை உருவாக்கியவர் வீரேசலிங்கம் பந்துலு ஆவார். அவர் 'சாகுந்தலம்'

'ரத்னாவளி' போன்ற வடமொழி நாடகங்களைத் தெலுங்கில் மொழியாக்கம் செய்திருக்கின்றார். நாகேஸ்வரராவ் தெலுங்கில் செய்தித்தாள்கள் முதன்முதலில் வெளியிட்டுப் புகழ் பெற்றவராவார்.

பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டுகளில் தமிழில் இலக்கியங்கள் ஏராளமாகத் தோன்றி, இலக்கிய உலகில் புதுமை ஏற்படுத்தின. தஞ்சாவூரில் மராத்திய சரபோஜி மன்னர் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பெரும் ஆதரவளித்தார். அவருடைய அரசவையைக் கற்றறிந்தோர் விரும்பி நாடினர். நாடிவந்த இலக்கிய மேதைகளுக்கு ஆதரவு காட்டி அவர் ஊக்குவித்தார். 'பஞ்ச தந்திரக் கதைகளை'த் தாண்டவராய முதலியார் என்பவர் தமிழில் எழுதினார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய தமிழ்ப் புலவர்கள் அனைவரையும்விட தலைசிறந்தவராகத் திகழ்ந்தவர், வடலூர் இராமலிங்கசுவாமிகள் ஆவார். அவர் இயற்றிய பக்திப் பாடல்களின் தொகுப்பே 'திருவருட்பா' ஆகும். திருவருட்பா பக்திப்பாடல் நூல்களில் தனிச்சிறப்பு பெற்றுத் திகழ்கின்றது. டாக்டர் உ.வே. சாமிநாத அய்யர் அவர்களின் ஆசானாகிய மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களும், H. A. கிருஷ்ணப் பிள்ளை, மற்றும் உமறுப் புலவர் போன்றோரும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ்த் தாய் பெற்றெடுத்த அருந்தவப்புதல்வர்களாவர். கிருஷ்ணப் பிள்ளை எழுதிய 'இரட்சணிய யாத்ரிகம்' என்னும் நூலும் உமறுப்புலவர் எழுதிய 'சீறாப்புராணம்' என்னும் நூலும் புகழ்மிக்க இலக்கியங்களாகும்.

20ஆம் நூற்றாண்டில் டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் பழந்தமிழ்க் காப்பிய ஏடுகளைத் தேடிக் கண்டுபிடித்து அவற்றை அச்சிட்டு வெளியிட்டார். மறைமலை அடிகளார், திரு. வி. க., டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை, பேரறிஞர் அண்ணா போன்றோர் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குச் சிறப்பாகத் தொண்டு புரிந்திருக்கிறார்கள்.

இருபதாம் நூற்றாண்டில் தமிழ்த்தாயின் அருந்தவப் புதல்வராகத் தோன்றியவர் மகாகவி சுப்பிரமணிய பாரதியார். அவர் தேசப்பற்று ஊட்டும் பல பாடல்களை இயற்றியுள்ளார். அவர் புராணக் கதைகளையும் பாடல் உருவில் எழுதியிருக்கின்றார். அவருடைய கவிதைகளும் எழுத்தும் தமிழனை வீறுகொண்டெழச் செய்யும் தேசிய சக்திமிக்கவையாகும். சமூகச் சீர்திருத்தத்தையும் அவை ஊக்குவித்தன. அவரைத் தொடர்ந்து தமிழ்க் கவிதையுலகில்

சிறப்பிடம் பெற்றவர் நாமக்கல் கவிஞர் திரு. வெ. இராம லிங்கம் பிள்ளை. இவர் சிறந்த தேசியக் கவிஞர். இவர் தமிழ்நாட்டு அரசின் அவைப் புலவராக நியமிக்கப்பட்டார். இவரது கவிதைகளில் தேசிய உணர்ச்சியும் காந்திய இலட்சியங்களும் மிளிர்கின்றன.

இந்த நூற்றாண்டின் இன்னொரு புகழ் மிக்க கவிஞர் பாரதிதாசன் ஆவார். இவரது கவிதைக் காவியங்களான 'பாண்டியன் பரிசு,' 'குடும்ப விளக்கு' போன்றவை தமிழ் மக்களால் பெரிதும் பாராட்டப்படுகின்றன. இந்தக் கால கட்டத்தில் புகழ்பெற்றிருந்த இன்னொரு தமிழ்க் கவிஞர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆவார்.

ஆங்கிலக் கல்வி பயின்ற இந்தியர்கள் பலர் ஆங்கில மொழியில் புலமைபெற்று, பல இனிய கவிதைகளையும் உரைநடை நூல்களையும் எழுதி, ஆங்கிலமொழிக்குச் சிறப்பைத் தேடியிருக்கின்றனர். அவர்கள் எழுதிய உரை நடை நூல்கள் ஆங்கில மொழி கற்றவர்கள் போற்றி ஏற்றுக் கொள்ளும் வகையில் சிறப்புற்றிருக்கின்றது. 'இந்தியாவின் கவிக்குயில்' என்று புகழப்படுகின்ற சரோஜினி நாயுடு அவர்கள் பல இனிய ஆங்கிலக் கவிதைகளை இயற்றியிருக் கின்றார். அவருடைய கவிதைகளில் சிறந்ததாகக் கருதப் படுவது 'பல்லக்குத் தூக்கிகள்' (Palanquin Bearers) என்ற தலைப்பில் இயற்றிய கவிதையாகும். பண்டித ஜவஹர்லால் நேரு ஆங்கிலத்தில் 'Discovery of India', 'Glimpses of World History' போன்ற நூல்களையும், தன்னுடைய சுயசரிதத்தையும், எளிய நடையில் ஆங்கி லேயரே போற்றும் வண்ணம் எழுதியிருக்கின்றார். காந்திஜி தன்னுடைய சுயசரிதத்தைச் 'சத்தியசோதனை' (My Experiments with Truth) என்ற நூலை எளிய ஆங்கிலத்தில் அழகுமிளிர எழுதியிருக்கின்றார். R. K. நாராயணன் என் பார் ஆங்கிலத்தில் பல புதினங்களையும் சிறுகதைகளை யும் எழுதியுள்ளார். டாக்டர் S. இராதாகிருஷ்ணன் தத்துவ நூல்களை மிக உயர்ந்த ஆங்கில நடையில் எழுதி யுள்ளார். இந்த எழுத்தாளர்கள் அனைவரும், ஆங்கில மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட ஆங்கிலேயர் களுக்கு, மொழியறிவில் இந்தியர்கள் எவ்விதத்திலும் சளைத் தவர்களல்லர் என்பதை எடுத்துக் காட்டியுள்ளனர் இந்தியர் கள் எழுதிய ஆங்கில இலக்கிய நூல்கள்' இந்தோ-ஆங்கில இலக்கியம்' (Indo-Anglican Literature) என்றே அழைக்கப் படுகின்றது.

# 8. இந்தியாவில் அறிவியலும் தொழில்நுட்பமும்

பன்னெடுங் காலமாகவே, இந்தியா அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்தின் மகத்துவத்தை உணர்ந்திருந்தது. பண்டைய காலத்தில் இத்துறைகளில் கண்டிருந்த முன்னேற்றமும் அறிவும் மிகவும் குறிப்பிடும்படியாகவே இருந்தன. ஆனால், இம்முன்னேற்றம் மேலும் தொடர்ந்து இடைக்காலத்தில் (Medieval Period) வளராமற் போனதற்கு, அந்நியப் படையெடுப்பும், உள்நாட்டுக் குழப்பங்களுமே பெரிதும் காரணமாய் அமைந்தன. நவீன காலம் தொடங்கியதும், இந்தியா மேற்கத்திய அறிவியலுலகுடன் நெருங்கிய தொடர்பினைக் கொண்டது. எண்ணற்ற அறிவியல் வல்லுநர்களும், தொழில்நுட்ப மேதைகளும் தோன்றி இந்தியாவை வளர்ச்சிப் பாதையிலே நடத்தி, அறிவியல் சாதனைகளால் உயர்த்தி, அதற்கென ஒரு தனி இடத்தையும் தந்தனர்.

சிந்துச் சமவெளி நாகரிகக் காலத்திலிருந்தே அறிவியல்களின் வளர்ச்சியின் ஆதாரங்கள் தென்படுகின்றன. மொஹஞ்சதாரோ, ஹரப்பா நகரங்களின் நிர்மாணமுறை, கட்டட அமைப்பு போன்றவற்றைக் காணும்போது இம்மக்கள் ஜியோமிதிக் (Geometry) கணிதத்திலும் ஓரளவு அறிவு பெற்றிருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது. கழிவுநீர் வெளியேறப் பாதாளச் சாக்கடையும், மனிதர்கள் உள்ளே நுழைந்து அடைப்புகளைப் போக்க ஏதுவான துவாரங்கள் கொண்ட சாக்கடை அமைப்பும், பருத்தித் துணி உற்பத்தியும், செம்பு, வெங்கலம் போன்ற உலோகங்களைப் பயன்படுத்தியமை போன்றவைகளினின்றும், இம்மக்கள் தொழில் துறையில் சிறந்த மதிநுட்பம் கொண்டவர்கள் என்பது தெளிவு. அந்நாகரிக உலகிலே வாணிக மக்களும் வாழ்ந்தனர். இவர்களால் வாணிகக் கணக்கும் வளர்ச்சியுற்றது. சிந்துச் சமவெளி மக்கள், சக்கரத்தை (wheel) கண்டுபிடித்ததாக நம்பப்படுகின்றது. இக்கண்டுபிடிப்புப் போக்குவரத்துத் தொடர்பு முறையிலும் பெரிதும் புரட்சிகள் தோன்றக் காரணமாயிற்று எனலாம்.

வேதகால இலக்கியங்கள், அறிவியலைப்பற்றி மிகவும் குறைவான செய்திகளையே கொடுப்பினும், அம்மக்கள் அறிவியலை முழுமையாக ஒதுக்கவில்லை. ஆரியர்கள் வழி பாடு செய்யுமிடத்தை (Vedic Altars) அமைப்பதில் ஜியோமிதி அல்ஜீப்ரா (Geometrical Algebra) கொள்கை களைப் பின்பற்றியுள்ளார்கள். வேதச் சடங்குகளைச் செய் வதற்கு நல்லநேரம் (Auspicious Moments) பார்ப்பதற்கு, நட்சத்திரங்களைக் கொண்டு கணக்கிட்டமையால், வானியலில் (Astronomy) இவர்களுக்கு ஆர்வம் ஏற் பட்டது. வேதகால இந்தியர்கள், வானிலுள்ள கிரகங்கள், பிரகாசமான ஒளி நட்சத்திரங்கள், கிரகங்கள் மற்றும் வால்நட்சத்திரம் (Comet) போன்றவற்றின் வழிகள், சூரியன், சந்திர கிரகணங்கள் ஆகியவற்றைக் கவனிக்கத் தொடங்கினார்கள்.

வேதகாலத்தைத் தொடர்ந்து, பின்னர் வடஇந்தியா வில் வலிமைமிகு கீர்த்திவாய்ந்த பேரரசுகளான மௌரியப் பேரரசு, குப்தப் பேரரசு, மற்றும் ஹர்ஷப் பேரரசு ஆகியவை தோன்றிப் புகழ் பெற்றன. தெற்கே சோழர்களும் ஆந் திரர்களும் அரசியல் ஆதிக்கம் பெற்றனர். நிலையான, வலுவான அரசியலும், கடல்பயணங்களும், கடல்கடந்து நாடுகளைக் கண்டதும், இம்மக்களுக்கு அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்திலே அறிவைப் பெருக்கத் தூண்டுதலாக அமைந்தது. மேலும் புத்த, சமண, இந்து மதங்களால் நிறுவப்பட்ட கல்வி நிறுவனங்கள் பல்வேறு அறிவியல் கலைகளைப் போதித்துவந்தன.

பண்டைய கிரேக்கர்களுடன் ஏற்பட்ட தொடர் பினால் இந்திய வானியலில் வளர்ச்சி ஏற்பட்டது. கார்ஹி சம்ஹிதாவின் (Garhi Samhita) கூற்றுப்படி: ''யவணர்கள் (Yavanas) நாகரிகமற்றவர்கள். ஆனால், வானவியல், அறிவியல் கலையின் ஆரம்பமே இவர்கள்தான். எனவே இவர்கள் கடவுள்களைப் போன்று வணக்கத்திற் குரியவர்கள்'' என்கிறது. இந்தியாவின் பெரும் வானியல் வல்லுநர்கள், இத்துறையில் அரும் பெரும் சேவைகள் புரி துள்ளனர். இவ்வல்லுநர்களில் தலைசிறந்த ஆரியபட்டர் என்பவர் கி.பி. 476-ல் பாடலிபுத்திராவில் பிறந்தார். இவர் தனது பெரும்புகழ் கொண்ட 'ஆரியபட்டியா' (Aryabhattiya) எனும் நூலில், பூமி, தனது அச் சினாலேயே தானே சுற்றுகின்றதெனவும் இதுவே சூரிய சந்திர கிரகணங்களுக்குக் காரணம் எனவும் குறிக்கின்றார்.

பண்டைய காலத்தின் புகழ்மிகு வானவியல் வல்லுநர்களான வராகமிகிரர் (Varahamihira), பிரம்மகுப்தர் (Brahma Gupta), பாஸ்கராச்சாரியார் (Baskaracharya) போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்கள் உருவாக்கிய நூல்கள் இன்றளவும் ''சித்தாந்தம் (Siddhantas) என வழங்கப்படுகின்றன. இந்நூல்கள் கிரகங்களின் இயக்கம் (Movement of Planets), கிரகணங்கள் (Eclipses) மற்றும் கால அளவை (Measurement of Time) போன்றவற்றைப் பற்றிப் பகர்கின்றன. மத்திய இந்தியாவிலுள்ள உஜ்ஜெய்னியில் வானவியல் ஆய்வுக்கூடமும் அமைந்திருந்தது. சூரிய இயக்கத்தை அடிப்படையாகக் கொண்ட ஆண்டை, நிலவின் இயக்கத்தை அடிப்படையாகக் கொண்ட திங்களைக் கொண்டு கணித்து, அவைகளின் இயக்கத்தில் ஏற்படும் மாற்றங்களையும் உட்படுத்தும் வகையில் வானியல் வல்லுநர்கள் நாட்காட்டியை அமைத்தனர்.

பண்டைய இந்தியர்கள் எண் கணிதத்தின் (Arithmetic) முக்கியத்துவத்தை உணர்ந்திருந்தனர். 'யஜுர் வேத சம்ஹிதா' (Yajur Veda Samhita), 'பஞ்ச விம்ச சம்ஹிதா' (Pancha Vimsa Samhita) ஆகிய நூல்கள் எண் கணிதத்தைப்பற்றிக் கூறுகின்றன. பத்துப் பத்தாக உயர்த்தி எண்ணும் முறையும் குறிக்கப்படுகின்றது. 'ஏக' (Eka) என்பது ஒன்றையும் 'தசா' (Dasa) என்பது பத்தையும், 'சதா' (Sata) நூறையும், 'சகஸ்ரா' (Sahasra) ஆயிரத்தையுமாக இப்படி குறிக்கும் முறை குறிக்கப்படுகிறது. ஆரியபட்டரும், வராகமிகிரரும், கணித ஆராய்ச்சிகளை எழுதி, கணிதத்திலுள்ள பிரச்சினைகளையும், பூஜ்யம் (zero) பற்றியும் விவாதம் செய்துள்ளார்கள்.

மருத்துவ விஞ்ஞானம் பொதுவாகவே இங்கு ஆயுர்வேதம் எனவே குறிக்கப்படுகின்றது. மனித குலம், விலங்குகள், மற்றும் தாவரங்களின் வாழ்வைப் பேண இத்துறை உதவியது. உடலின் முறையான இயக்கங்களைக் குறிப்பிட மூன்று வழிவகைகள் (Tridoshas) கூறப்படுகின்றது. அவை வாதம் (Vata), பித்தம் (Pitta), கபம் (Kapha) எனப்படுகின்றது. இவைகளில் தடங்கலோ குறைகளோ ஏற்படின் உடலின் இயக்கமே கெட்டுவிடும். சரகர் (Charaka), வாக்பட்டர் (Vaghbhata) மற்றும் சிஸ்ருதர் (Sisruta) ஆகியோர் இத்துறைக்குப் பெரும் சேவை புரிந்துள்ளார்கள். 'சரக சம்ஹிதா' (Charaka Samhita)

உட்கொள்ளும் மருந்திற்கு (internal medicine) முக்கியத்துவம் கொடுக்கின்றது. 'சிஸ்ருத சஹிதா'. (Sisrut Samhita) அறுவை சிகிச்சைக்கும் முக்கியத்துவம் கொடுக்கின்றது. இந்நூல்களின் கருத்துகளிலிருந்து அக்காலத்தே மக்கள் மருத்துவ விடுதிகளையும், மூலிகை மற்றும் உலோகக் கலவைகளினால் தயாரிக்கப்பட்ட மருந்துகளையும் பயன்படுத்தியமை தெரிகின்றது. பயனற்றுப் போகும் உறுப்புகளை வெட்டியெடுக்கும் (Amputation) அறுவைச் சிகிச்சை முறையும், அக்காலத்தே இருந்தது என்பதை அறிய இயலுகின்றது.

கி.பி. இரண்டாம், மூன்றாம் நூற்றாண்டில் வேதியியல் (Chemistry) வளர்ச்சி பெற்றது. வேதியியல் அக்காலத்தில் அல்கெமி (Alchemy) அல்லது ரசவித்தை (Rasa Vidva) என்றழைக்கப்பட்டு, உலோகக் கலவைகளை (Metallurgy) விளக்குவதாகவும் அமைந்தது. 'ரசா' (Rasa) என்பது பாதரசத்தைக் குறிக்கும். மேலும் கந்தகமும், மைக்காவும், ரசமும் (Rasa) இந்திய வேதியியல் வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்தன. இக்கால மக்கள் இரும்புக் கனிமத்தைப் பிரித்தெடுக்க அறிந்திருந்ததுடன், அயல்நாடுகளுக்கும் இரும்புப்பொருள்களை ஏற்றுமதி செய்தனர். புத்த சமயப் பேரறிஞரான நாகார்சுனர் சிறந்த வேதியியல் வல்லுநராக மட்டுமன்றி கனிமத்துறை (Metallurgy) யிலும் சிறந்து விளங்கினார்.

முகம்மதியர்களின் படையெடுப்பால், அரேபியா மற்றும் மத்திய ஆசியாவுடன் இந்தியாவின் தொடர்பு வலிமை பெற்றது. இதன் காரணமாக, இந்திய அறிவியல் கலை ஆசிய நாடுகளில் நல்ல செல்வாக்கைப் பெற்றது. அராபியர் இந்திய எண்முறையைப் (numerals) பின்பற்றி, இந்திய அறிவியல் கலையையும் தங்கள் மொழியில் மொழி பெயர்த்துத் தங்களுடையதாக்கிக் கொண்டனர். அரபு நாடுகளின் வழியாக இந்தியாவின் அறிவியல் கலையும் இந்தியச் சிந்தனைகளும் ஐரோப்பாவிற்குப் பரவின.

தற்காலத்து வியத்தகு விஞ்ஞான முன்னேற்றம் மேற்கத்திய நாடுகளோடு நில்லாமல், தொடர்ந்து இந்தியாவிலும் நுழைந்து, இன்றைய நவீன இந்தியா அறிவியல், தொழில் நுட்பத்தில் பெரும் வளர்ச்சி கொள்ளச் செய்துள்ளது. ஆங்கில மொழியின் தொடர்பாலேயே இன்று மேற்கத்திய அறிவியல் இந்தியாவில் வேரூன்றியுள்ளது. இந்திய அறி

வியல் வல்லுநர்களும் வியத்தகு பணி புரிந்துள்ளனர். இவ்வறிஞர்களிலே மிகவும் போற்றிப் புகழ்ப்படுபவர்கள் J.C. போஸ், C.V. ராமன், H.J. பாபா போன்றவர்கள். கி.பி. 1858ஆம் ஆண்டிலே இன்றைய வங்க தேசத்திலுள்ள மைமின்சிங் என்னுமிடத்திலே தோன்றிய ஜெகதீஸ் சந்திர போஸ் அவர்கள் தமது இளம் பிராயத்திலேயே அறிவியலில் ஆர்வம் கொண்டு தமது திறமையைக் காட்டினார். இயேசு சபையைச் (Jesuit) சார்ந்த ஆசிரியரால் இவர் ஊக்கு விக்கப்பட்டுக் கல்கத்தாவிலும் பின்னர் கேம்பிரிட்ஜ் பல் கலைக் கழகத்திலும் பயின்றார். கல்கத்தா மாநிலக் கல் லூரியில் இயற்பியல் (Physics) பேராசிரியராக நியமிக்கப் பட்டார். இவர் ரேடியோ செய்தித் தொடர்பிலே (Radio Communication) மிகவும் நாட்டம் கொண்டிருந்தார். ஆனால், நாளடைவில் இவரது விருப்பம் திசை திரும்பி தாவர இயலை அணுகியது. தமது சோதனைகள் மூலம் ஒளி, ஒலி, மின் சக்தி ஆகிய இம்மூன்றும் விலங்குகளைப் போலவே தாவர வகையிலும் மாற்றங்களை ஏற்படுத்து கின்றன என்பதைக் கண்டதுடன், இத்தகைய மாற்றங் களுக்கு ஏற்றபடி தாவரங்கள் தங்களை மாற்றிக் கொள் ளும் சக்தியைப் பெற்றிருக்கின்றன என்றார். இதையே, 'ஆதியிலிருந்து தொடர்ந்து வருகின்ற தாவர உணர்வுகள்' (inherited memory of the past) என்றார். கி.பி. 1917ஆம் ஆண்டில் கல்கத்தா நகரில் 'போஸ்' தாவர இயல் ஆராய்ச்சிக்கூடம் எனும் நிறுவனத்தை அவர் ஏற்படுத்தி னார். C.V. இராமன் (1887—1970) அவர்களும் பெரும் அறிவியல் வல்லுநர். ஈரோட்டிலே பிறந்து, சென்னை மாநிலக் கல்லூரியில் பயின்று கல்கத்தா, கேம்பிரிட்ஜ் மற்றும் கலிபோர்னியாப் பல்கலைக் கழகங்களில் ஆராய்ச்சி களை மேற்கொண்டு சிறந்த இயற்பியல் அறிஞராகத் திகழ்ந் தார். அவர் தமது இடைவிடா ஆராய்ச்சியின் முடிவாக 'Modular Equation' மற்றும் 'Continued Factions' ஆகிய இரு இயற்பியல் தத்துவங்களையும் கண்டறிந்தார். இவரது கண்டுபிடிப்புகள் 'இராமன் விளைவு' (Raman Effect) என்றே இன்றளவும் வழங்கப்படுகின்றன. இதுவே 'மூலக் கூறு அமைப்பு' (Molecular Structure) பற்றிய பிற்கால ஆராய்ச்சிகளுக்கு ஆதாரமானது. உலகிலேயே சிறந்த தென மதிக்கப்படும் 'நோபல் பரிசு' இவருக்கு 1930ஆம் ஆண்டு வழங்கப்பட்டது. அணுசக்தி விஞ்ஞானியான H. J. பாபா (1909—1966) பம்பாயில் பிறந்தவர். தனது ஆராய்ச்சியைக் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் வெற்றி

யுடன் முடித்து, ஆராய்ச்சிப் பட்டத்தையும் பெற்றார். இவர் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் 'நீல்ஸ் போர்' (Neils Bohr) என்பாருடன் இணைந்து செயல்பட்டார். இவர்களுடைய கண்டுபிடிப்பே 'Quantum Theory' எனப் பட்டது. இந்தியா திரும்பிய பின்னர் 'காஸ்மிக் கதிர்கள்' (Cosmic Rays) பற்றிய தனது ஆராய்ச்சியை மேற் கொண்டார். இவர் பம்பாயிலுள்ள டாட்டா அடிப்படை ஆராய்ச்சிக் கழகத்தின் (Tata Institute of Fundamental Research) தலைவராகவும் விளங்கினார். மேலும் இந்திய அணுசக்தித் துறைத் தலைவராகவும் பணியாற்றினார். 1955ஆம் ஆண்டு ஐக்கிய நாடுகள் சபையால் அணுவை அமைதிக்கும் ஆக்கத்திற்கும் பயன்படுத்தும் மாநாட்டின் தலைவரானார்.

இந்தியா விடுதலை பெற்ற பின்னர்ப் பல துறைகளிலும், அறிவியலிலும், தொழில்நுட்பத்திலும் மிகவும் சிறந்து விளங்குகின்றது. அறிவியலை மக்கள் நலனுக்குப் பயன் படுத்துவதில் வெற்றி கண்டு வருகின்றது. அகில உலக அரிசி ஆராய்ச்சி நிலையம் (International Rice Research Institute) மற்றும் இந்திய விவசாய ஆராய்ச்சி நிலையம் (Indian Agricultural Research Institute) ஆகியவற்றின் இணைந்த செயலாக்கமே 'பசுமைப் புரட்சியை'த் தோற்று வித்தது. இப் புரட்சியால் இந்தியாவின் - உணவுப் பஞ்சத்திற்கு நிரந்தரமான முடிவு காண முயற்சி செய்யப் படுகின்றது. மேலும் இந்தியப் 'பால்வள நிறுவனம்' (Indian Dairy Development Corporation) உலக வங்கியுடன் இணைந்து செயல்பட்டதன் முடிவே இன்று குஜராத்தின் ஆனந்தில் உள்ள பால்பண்ணையாகும். அப்பண்ணை ஆசியாவிலேயே சிறந்து விளங்குவதுடன் இந்தியாவின் பால் பிரச்சினைக்கு முடிவு காண எண்ணுவது இவ் வெண்மைப் புரட்சியேயாகும் (White Revolution). இதன் காரணமாக இன்று ஒவ்வொரு மாநிலமும் வெண்மைப் புரட்சியில் வெற்றி காணப் பெரிதும் முயன்று வருகின்றன. நீலக் கடலிலே கிடக்கும் அளவற்ற இயற்கையின் செல்வங்களை மனித இனம் துய்த்து இன் புறவே 'நீலப் புரட்சி' (Blue Revolution) ஏற்படுத்தப் பட்டது. மக்களின் ஏழ்மையையும் வறுமையையும் போக்க அறிவியல் மற்றும் தொழில்நுட்ப இயலின் சாதனை மிகவும் மகத்தானது ஆகும். நீலக் கடலில் குவிந்து கிடக்கும் எண் ணற்ற மீன் வகைகளைப் பிடித்து, இந்திய மக்களின் உணவுப்

பிரச்சினையைச் சீராக்கும் வகையில் ஆழ்கடலில் சென்று மீன் பிடிக்க உதவும் கப்பல்கள், விசைப் படகுகள் கட்டப் பட்டு வருகின்றன. அத்தகு கப்பல்களிலும், விசைப் படகு களிலும் பிடித்த மீன்களைக் கெடாமல் பாதுகாக்கக் குளிர் சாதன அறைகளும் கட்டப்பட்டிருக்கின்றன. இனி வளர்ந்து விட்ட மேலை நாடுகளைப் போலவே இந்தியாவும், ஆழ்கடல் வழங்கும் அளவற்ற உணவுப் பொருள்களை உணவாக்கி மகிழவும், ஏற்றுமதி செய்து பொருளாதார ஏற்றங் காணவும் வாய்ப்புகள் உருவாகியிருக்கின்றன.

# 9. இந்திய மறுமலர்ச்சி

பண்டைய கிரேக்க ரோமானியப் பழம் பெரும் இலக்கியங்களின்மீது மக்களின் கவனம் மீண்டும் செல்வதையே பொதுவாக மறுமலர்ச்சி என்று குறிப்பிடுவது வழக்கம். இம் மறுமலர்ச்சி எழுப்பிய ஆய்ந்தறியும் உணர்வு, திறனாயும் பண்பு, பகுத்தறிவு ஆகியனவற்றின் விளைவாக வழிவழியாக வந்த மதிப்புகளின் புத்தாய்வு தொடங்கியது; சமயச் சீர் திருத்தம் எழுந்தது. புதிய நாடுகளின் கண்டுபிடிப்புகள் நிகழ்ந்தன. நிலமானிய முறை அழிந்தது, தேசிய அரசுகள் முகிழ்ந்தன. ஆயின் இத்தகைய ஐரோப்பிய மறுமலர்ச்சியைப்போல அத்துணை அளவிற்கு தீவிரத் தன்மை கொண்டதல்ல இந்திய மறுமலர்ச்சி. இருப்பினும் இதன் விளைவுகள் சொற்பமானவையல்ல. சமயக் கருத்துகள் சமுதாயப் பழக்கவழக்கங்கள் குறித்துப் புதிய மதிப்பீடும் அறிவார்ந்த விழிப்புணர்ச்சியும் சிறந்த விளைவுகளாம்.

இந்தியாவில் மறு மலர்ச்சி எழுவதற்குப் பல சக்திகள் காரணங்களாயின. அவற்றுள் சிலவற்றை இங்கே குறிப்பிடலாம். இந்தியாவில் ஆங்கிலேயரின் ஆதிக்கம் இந்திய நாகரிகத்தில் காணக்கிடக்கும் குறைபாடுகளை எடுத்துக்காட்டியது. இந்தியச் சிந்தனையில் மேலை நாட்டுக் கல்வியின் செல்வாக்கு இழையோடி நின்றது. ஆங்கிலேயர் ஆட்சியால் விளைந்த அரசியல் ஒற்றுமை பொதுக் குறிக்கோளை நம் நாட்டவர் மனக்கண்முன் கொண்டு நிறுத்தியது. கடல் கடந்து வாணிகம் செய்ய வந்த வியாபாரக் குழுவினர் கண்டோர் வியக்கும் பேரரசை வெற்றி கொண்டதுடன் தங்களது மேலாதிக்கத்தை நிலை நாட்டினர். சாதகமான சூழ்நிலையில் கிறித்தவ சமயப் பரப்பாளர்கள் தங்கள் சமயத்தைப் பரப்பிப் பலரை மதம் மாற்றுவதில் வெற்றி கொண்டனர். நம் நாட்டை ஆள வந்த புதிய ஆட்சியாளர்கள் புகுத்திய ரயில்வேக்கள், தந்தி முதலான மேலை நாட்டவர் அறிவியல் தந்த முற்போக்குச் சாதனங்கள் கீழைநாட்டவரின் நாகரிகத்தில் காணப்பெற்ற சில குறைபாடுகளை எடுத்துக்காட்ட உதவின. இவற்றுடன் மேலை நாட்டவரின் இனச்செருக்கு இந்தியரின் கண்களைத் திறந்தன. வழிவழியாகத் தங்களை உயர் சாதியினர் என்று இறுமாந்திருந்த கூட்டத்தார் உள்ளி

ளிட்ட இந்தியர் அனைவரையும் துச்சமாக மதித்து இழிவாக நடத்தினர் நாடாளவந்த ஆங்கிலேயர். இந்தியக் கலாச்சாரத்தில் காணப்பெற்ற குறைபாடுகளையும், நம்மை ஆள வந்த ஆங்கிலேயரால் இந்தியருக்கு நேர்ந்த இழிவையும் கண்ட சிந்தனையாளர் சிலர் மரபுவழியாக வந்த நமது பண்பாட்டுக் கூறுகளை மறுபரிசீலனை செய்யவும், புதிய சவாலைச் சமாளிப்பதற்கான தங்களின் முயற்சிக்கு உறுதுணையாக நிற்கக்கூடிய கருத்துகளைத் தேடிப்பிடிக்கவும் முனைந்தனர். இரண்டாவதாக, ஆட்சிபீடத்தில் அமர்ந்த ஆங்கிலேயர் மேலை நாட்டுக் கல்வி முறையை நம் நாட்டில் புகுத்தினர். ஐரோப்பிய பாணியில் பள்ளிகளையும் கல்லூரிகளையும் நிறுவியதுடன் ஐரோப்பிய இலக்கியம், கலைகள், அறிவியல் ஆகியவற்றை அறியவும் வகை செய்தனர் வாணிகராக வந்து இந்தியனை அடிமை கொண்ட ஆங்கிலேயர். இத்தகைய ஐரோப்பியக் கல்விமுறையின் வாயிலாக மேலை நாட்டினரின் தாராளக் கருத்துகள் ஊழ்வலிக்கு அடிமையாகி, இவ்வுலகில் காணும் வாய்ப்புகள் வசதிகளைக் காட்டிலும் வீட்டு உலக இன்பத்தைப் பெரிதென எண்ணிக் காலங்கழித்த இந்தியரைத் தட்டியெழுப்பின. புதிய கல்வி முறையின் விளைவாக எழுந்த ஆய்ந்தறி உணர்வும் ஐயப்பாடும், மரபுகள் மூலமாகவும் மூடநம்பிக்கைகள் வாயிலாகவும் வந்த நம்பிக்கைகளை ஏற்கவேண்டுமா எனும் ஐயத்தை மக்கள் மனத்திலே உருவாக்கின. மேலும் நாட்டின் தேசிய ஒருமைப்பாட்டிலே புதிய நம்பிக்கை இந்தியரிடம் மெதுவாக வளரத் தொடங்கியது. இந்தியாவை ஆண்ட அந்நியர்கள், நாட்டில் அரசியல் ஒற்றுமையை வளர்த்தனர். ஒரே சீரான ஆட்சி முறையை அமைத்தனர். சட்டத்தின் ஆட்சியை நிலைநாட்டினர். மேலான போக்குவரத்துச் சாதனங்களுடன் ஆங்கில மொழியையும் கொண்டு வந்தனர். இவற்றி லெல்லாம் நாட்டின் மூலைமுடுக்குகளில் வாழ்ந்திருந்த மக்கள் பொதுவான பல இடங்களில் கூடித் தங்களது கருத்துகளைப் பரிமாறிக் கொள்வதன் மூலமாகத் தேசிய ஒற்றுமை உணர்வை வளர்த்துக்கொள்ள முடிந்தது.

**சமய விழிப்புணர்ச்சி**

பாரத நாட்டில் தோன்றிய பல்வேறு கலாச்சார சங்கங்களின் வாயிலாக நாட்டு மக்களிடையே பெருமளவு சமய விழிப்புணர்ச்சி வளர்ந்தது. இவ்வாறு எழுந்த சங்கங்களில் பிரம்ம சமாஜம், ஆரிய சமாஜம், இராமகிருஷ்ண மடம், மெய்ஞ்ஞான சபை (Theosophical Society) ஆகியவை மிக முக்கியமானவை. இவைகளில் சில உண்மையானதும் கற்

பனையானதுமான பெருமை மிக்க பழங்காலத்திற்குத் திரும்ப வேண்டுமென்ற கோஷத்தைக் கிளப்பின. மற்றவை, கீழைக் கலாச்சாரத்திலும் மேலை நாகரிகத்திலும் காணும் நல்லனவற்றை நமது பண்பாட்டில் புகுத்தும் தாராளக் கொள்கையை வளர்த்துவந்தன.

பிரம்ம சமாஜத்தைத் தோற்றுவித்தவர் இராஜாராம் மோகன்ராய். தமது சகோதரர் இறந்தபோது அன்னாரின் விதவையை அவருடன் வைத்துக் கொளுத்திய கொடுமையைக் (சதி அல்லது உடன்கட்டை ஏற்றுதலை) கண்ட அவர் பழைய நம்பிக்கைகளின்மீது வெறுப்புக் கொள்ளத் தொடங்கினார். பன்மொழிப் புலமையும், இந்து சமய இலக்கியங்களில் ஆழ்ந்த அறிவும் பெற்றிருந்த இராஜாராம் மோகன்ராய் மேலை நாட்டுத் தாராளக் கொள்கையால் கவரப்பட்டு அதன் செல்வாக்கிற்குள்ளானார். 'ஒன்றே கடவுள், ஒருவனே தேவன்' எனும் கொள்கையைப் பரப்ப முற்பட்டார். உருவ வழிபாட்டையும் அதனுடன் தொடர்பு கொண்ட சமயச் சடங்குகளையும் வன்மையாகக் கண்டிக்கலானார். தமது கருத்துகளை வலியுறுத்த வேண்டி இந்து சமய சாஸ்திரங்களிலிருந்தே பல சான்றுகளை எடுத்து வெளியிட்டார். தாராளச் சிந்தனையாளரானதால் அவர் சமயச் சீர்திருத்தத்தை வலியுறுத்தியதுடன் உடன்கட்டையேறுதல் (Sati), பலதார மணம், பால்ய விவாகம் (பாலர் திருமணம்) முதலான சமுதாயக் கேடுகளைச் சாடினார். விதவை மறுமணம், பெண் கல்வி, பத்திரிகைச் சுதந்திரம், ஜமீன்தாரி நிலங்களில் குடியானவர்களின் உரிமைகள் ஆகியவற்றை வலியுறுத்தி வந்தார். மேலை நாட்டுக் கல்வி முறையைப் புகுத்த வேண்டுமென்றார். இத்தகைய முன்னேற்றக் கருத்துகளைப் பரப்பிய இராஜாராம் மோகன்ராய் அவர்கள் நவ இந்தியாவின் தீர்க்கதரிசியெனப் பெயரெடுத்தார். தற்கால இந்தியாவில் தோன்றிய பல சீர்திருத்த இயக்கங்களுக்கு அன்னாரது பணி அடிப்படையாக அமைந்தது என்பர். பிரம்ம சமாஜம் எனப் பெயர் பெற்ற அமைப்பு ஒன்றினை 1828ஆம் ஆண்டில் இராஜாராம் மோகன்ராய் நிறுவினார். 1830ஆம் ஆண்டில் அவரது முயற்சியால் கட்டப்பெற்ற கோயில் ஒன்று எவ்வித பாகுபாடும் கருதாமல் அனைவரும் வழிபாடு செய்யத் திறந்து விடப்பட்டது. ராஜாராம் மோகன்ராயின் போதனைகளான ஒப்புயர்வற்ற இறைவன் ஒருவனை வணங்குதல், துதிப் பாடல்கள் மூலமாக மனத்தைப் பரிசுத்தமடையச் செய்தல், சாதி முறையின் தீமைகளை அகற்றுதல் போன்றவற்றை

பிரம்மசமாஜம் தீவிரமாகப் பரப்பத் தொடங்கியது. இவை யேயன்றி, அக்கால இந்திய சமுதாயத்தில் பெரும்பாலும் காண முடியாத தனி மனித உரிமை, சமுதாய சமத்துவம் முதலான கொள்கைகளையும் வலியுறுத்தி வந்தது.

இந்திய பிரம்ம சமாஜத்தின் தலைவரான கேசவச் சந்திர சென் என்பவரின் செல்வாக்கின் விளைவாகப் பிரார்த்தனை சமாஜம் எனும் அமைப்பு 1867ஆம் ஆண்டில் மராத்திய மண்ணில் தோன்றியது. ஆனால், இது பிரம்ம சமாஜத்தைப் போலல்லாமல் இந்து சமயப் பல கடவுட் கொள்கையையும், உருவ வழிபாட்டையும், வைதீக வழிபடு முறையையும் ஏற்றுக் கொண்டது. இருப்பினும், பிரார்த்தனை சமாஜத் தவரும் இந்து சமுதாயச் சீர்திருத்தத்திற்காகவும் சமுதாயக் கேடுகளைக் களையவும் பிரம்ம சமாஜத்தவரைப் போலவே அரும்பாடு பட்டனர். கலப்புத் திருமணத்தை ஆதரித்தனர். பல சாதியினர் கலந்துண்பதை வரவேற்றனர். தாழ்த்தப் பட்டோரின் நிலை உயர வேண்டுமென்று விழைந்தனர். இந்த சமாஜத்தின் உறுப்பினர்களில் நீதிபதி ரானடேயும் கோபாலகிருஷ்ணகோகலேயும் புகழ் வாய்ந்தவர்கள். அவர் களின் அரவணைப்பில் பிரார்த்தனை சமாஜம் அமைப்பு ஒழுங்காலும் பணிச் சிறப்பாலும் மேலோங்கி நின்றது. அப் பெரியார்கள் எடுத்துக்கொண்ட முயற்சியால் தக்கணக் கழகம் (Deccan Education Society), விதவை மறுமணச் சங்கம், தாழ்த்தப்பட்ட வகுப்பார் நிறுவனம் ஆகியவை தோன்றிப் பல்லாற்றானும் பெரும்பணியாற்ற முற்பட்டன.

1875ஆம் ஆண்டில் தயானந்த சரஸ்வதி என்பார் ஆரிய சமாஜத்தைக் கண்டார். இது பிரம்மசமாஜத்திற்கு நேர்மாறாக அன்னிய செல்வாக்கை முற்றிலும் வெறுத்தது. நம்நாட்டுப் புராதன வழிகளுக்கே மீண்டும் செல்லவேண்டு மென்றது. இந்து இலக்கியங்களில் இல்லாததொன்றுமில்லை யெனக் கொண்டு, எல்லா விதமான நன்மைகளையும் அறிவியல் கருத்துகளையும் அவைகளில் காணமுற்பட்டது. இதனால், ஆரியசமாஜம் தோன்றியதன் விளைவாக இந்து சமுதாயத் திற்குக் கலப்பற்ற நன்மையே ஏற்பட்டது எனக் கூறமுடி யாது. அது, ஒருவகையில் முன்னேற்ற இயக்கம், ஒருவகையில் பிற்போக்கு இயக்கமாக இருந்தது. முற்போக்கு இயக்கம் என்ற வகையில் சமுதாயச் சீர்திருத்தத்தை ஏற்க முன் வந்தது. ஒரே கடவுள் கொள்கையைப் போற்றியது. சாதியின் பேரால் நிறைந்திருந்த தடைகளை நீக்க முன்வந்தது. பெண் களின் மீதான தடைகளையும் அவர்களது குறைகளையும்

போக்க அரும்பாடுபட்டது. இவற்றிற்கெல்லாம் மேலாக மக்களிடையே நாட்டுப்பற்றைப் புகுத்தி, தேசிய உணர்வைத் தட்டியெழுப்பியது.

இந்திய மறுமலர்ச்சியில் மறக்கமுடியாத இடத்தைப் பெற்ற அமைப்பு பிரம்மஞான சபையாகும் (Theosophical Society). கர்னல் ஒல்காட் (Colonel Olcott) என்பாரும் பிளவாட்ஸ்கி அம்மையாரும் (Madame Blavatsky) இச்சபையை 1875ஆம் ஆண்டில் நியூயார்க் நகரில் நிறுவினர். தயானந்த சரஸ்வதியின் வேண்டுகோளுக்கிணங்க இதன் தலைமையகம் 1886ஆம் ஆண்டில் சென்னை நகருக்கு மாற்றப் பட்டது. இன, நிற, பால் வேறுபாடு ஏதுமில்லாத உலக சமுதாயத்தை வளர்ப்பதும் சமயம், தத்துவம், அறிவியல் ஆகியவற்றில் ஒப்பீட்டு ஆய்வும் பிரம்மஞான சபையின் தலைசிறந்த குறிக்கோள்களாகும். அயர்லாந்தில் பிறந்து இந்தியாவைத் தமது தாயகமாகக் கொண்ட அன்னிபெசன்ட் அம்மையார் இச்சங்கத்தில் சேர்ந்தார். அவர் இந்தியப் பண்பாட்டு மரபுகளின் அடிப்படையில் கல்விமுறை ஒன்றை வளர்த்தார். தன்னாட்சிக் கழகத்தை (Home Rule League) நிறுவினார். இந்திய நாட்டின் சுதந்திரத்திற்காகப் பெரிதும் பாடுபட்டார்.

இராமகிருஷ்ண பரமஹம்சரின் பெயரால் எழுந்த இராம கிருஷ்ண மடங்கள் இந்துச்சமய மறுமலர்ச்சியில் மாறாத பங்கு கொண்டன என்பதுடன் அந்த இயக்கத்தின்மீது அதிக அளவு செல்வாக்கு செலுத்தின. இராமகிருஷ்ண பரமஹம்சர் சமயங் களிடையே ஒற்றுமையைக் கண்டார். மாறுபட்ட சமயங் களெல்லாம் ஒரே இலக்கை நோக்கிச் செல்லும் பாதைகளே என்றும், பல பெயர்களைச் சொன்னாலும் வழிபடும் கடவுள் ஒருவரே என்றும் அழகாக எடுத்துக் கூறினார். பரமஹம்சரின் போதனையால் கவரப்பட்டு அவரது சீடராக மாறிய நரேந்திரநாத் தத்தா எனும் இயற்பெயர் கொண்ட உலகப் புகழ் பெற்ற சுவாமி விவேகானந்தர், தமது குருநாதரின் பெயரால் இராமகிருஷ்ண மடங்களை நிறுவி அன்னாரது போதனைகளைப் பரப்பினார். 'உலகம் ஒரு மாயையல்ல, நிலையில்லாத ஒன்றல்ல' என்பது அவரது அசைக்க முடியாத கருத்து. அதற்கு மாறாக மனித சமுதாயத்தின் முன்னேற்றப் பாதையில் ஒரு கட்டமே என்றார். அவர் அமைத்த இராம கிருஷ்ண மடங்கள் மக்களின் ஆன்மீக வளர்ச்சியில் அக்கறை காட்டியது, சீர்திருத்தக் கருத்துகளைப் பரப்பியது, கல்வி

வளர்ச்சிக்காகப் பல்வேறு கல்வி நிறுவனங்களை அமைத்தது. மற்றும் சமூகநல சேவைகளை மேற்கொண்டது.

இந்துசமய மறுமலர்ச்சி எழுந்த இதே காலத்தில் முக மதியரின் நிலை என்ன? நாடாண்ட தங்களை நாடிழக்கச் செய்த அன்னியர்கள், அரசாண்ட இனமான தங்களை அவல நிலைக்குக் கொண்டு வந்த ஆங்கிலேயர்கள் புகுத்திய அரசி யல் முறைகளையோ அல்லது கல்வி முறைகளையோ பயன் படுத்திக்கொள்ள விரும்பாத இந்திய முஸ்லிம்களிடையே அதிக அளவு விழிப்புணர்ச்சி எழவில்லை. இருப்பினும், அவர் கள் தங்கள் தவற்றினை மெதுவாக உணரத் தலைப்பட்டனர். திருத்திக்கொள்ளும் முயற்சியிலும் ஈடுபடலாயினர். இத் தகைய முயற்சிக்கு முழுவடிவம் தந்தவர் சையது அகமத்கான் (Syed Ahamed Khan) ஆவார். அவர் அலிகார் இயக் கத்தைத் துவக்கினார்; பிற்காலத்தில் அலிகார் முஸ்லிம் புல்கலைக் கழகமாக வளர்ந்த முகமதிய ஆங்கிலோ ஓரி யண்டல் கல்லூரியை (Muhammadan Anglo Oriental College) நிறுவினார். மிர்ஸா குலாம் அகமது (Mirza Gulam Ahamed) என்பவர் அஹமதிய இயக்கத்தைத் (Ahamadiya Movement) தோற்றுவித்தார். இத்தகைய அலிகார் இயக்கம், அஹமதிய இயக்கம் ஆகியவை முஸ்லிம்களிடையே புத்துணர்ச்சியை ஊட்ட எண்ணங் கொண்டன. இந்து மற்றும் கிறித்தவ சமயச் சங்கங்களின் செல்வாக்கினைக் குறைப்பதும், முகமதி யரிடையே தேசிய உணர்வை வளர்ப்பதும் இவற்றின் வேறு சில நோக்கங்களாம்.

**கல்வி வளர்ச்சியும் சமுதாயச் சீர்திருத்தமும்**

நாம் எடுத்துக்கொண்டுள்ள காலத்தில் கல்விமுறையில் பெரும் மாறுதல்கள் தோன்றியுள்ளன. சமுதாய வழக்கங்களும் பெரும் மாறுதல்களுக்குள்ளாகியுள்ளன. தொடக்க காலத்தில் இந்தியக் கல்வி முறையைத் திரும்பக் கொண்டுவருவதையே பிரிட்டிஷ் அரசாங்கம் ஆதரித்தது. இதற்கிணங்கவே கல்கத் தாவில் மதராஸா (Madarasa) எனும் கல்வி நிறுவனத்தை உருவாக்கினார் வாரன் ஹேஸ்டிங்ஸ் (Warren Hastings). வங்காள ஆசியக் கழகத்தை நிறுவினார் (Asiatic Society of Bengal), சர் வில்லியம் ஜோன்ஸ் எனும் (Sir William Jones) வித்தகர். வாரணாசியில் சமஸ்கிருதக் கல்லூரியைக் கண்டார் ஜோனாதன் டங்கன் (Jonathan Duncan) எனும் நல்லறிஞர். ஆயின் கிறித்தவப் பாதிரிமார்கள் பள்ளிகள் பல துவக்கி, மேலைநாட்டு மொழிகளையும் மேனாட்டு இயல் களையும் கற்பிக்கலாயினர். பாமரமக்களின் அறிவொளியைத்

தூண்டுதற்காக மேனாட்டுக் கல்வி முறையைப் புகுத்த வேண்டுமென்று இந்திய மறுமலர்ச்சியின் விடிவெள்ளியான இராஜாராம் மோகன்ராய் வற்புறுத்தி வந்தார். வில்லியம் பெண்டிங்கின் (William Bentinck) ஆட்சிக்காலத்தில் பொதுக் கல்விக் குழுவின் தலைவராகயிருந்த தாமஸ் மெக்காலே என்பார் (Thomas Macaulay) இந்தியாவின் புராதனக் கல்வி முறையைக் கண்டித்து மேனாட்டுக் கல்வி முறையைப் பரப்பவேண்டுமென்று வலியுறுத்தினார். கண்காணிப்புக் குழுவின் தலைவரான (President of the Board of Control) சர் சார்லஸ் உட் (Sir Charles Wood) என்பார் 1854ஆம் ஆண்டு வெளியிட்ட கல்வி பற்றிய அறிக்கையில் மெக்காலேயின் கருத்துகளை ஏற்றுக் கொண்டார். தமது அறிக்கையின் மூலமாகப் பிரிட்டிஷ் இந்தியாவிற்கான கல்விமுறை ஒன்றைக் கோடிட்டுக் காட்டினார். அதன் விளைவாக ஒவ்வொரு மாநிலத்திலும் கல்வித்துறை அமைக்கப்பட்டதுடன் தொடக்கநிலை முதல் உயர்நிலை வரையில் ஒன்றோடொன்று தொடர்புடைய கல்வி முறையும் உருவாக்கப்பட்டது.

ஆரம்ப காலத்திலிருந்தே பெண் கல்வியில் தனிக்கவனம் செலுத்தப்பட்ட போதிலும் அது ஆமைவேகத்தில் முன்னேறியது. பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவரான ஈஸ்வர சந்திர வித்யா சாகர் (Iswar Chandra Vidyasagar) பெண்களுக்காக ஏறக்குறைய நாற்பது பள்ளிகளை நிறுவினார். விதவைகளுக்குச் சிறு தொழில்களில் பயிற்சியளிக்கவும், அவர்கள் வாழ்க்கையை நடத்துவதற்கு வாய்ப்பான தொழில்களில் பயிற்சி தரவும் சசிபாத பானர்ஜியும் (Sasipada Banerji) பண்டித இராமாபாய் அம்மையாரும் பல்வேறு இல்லங்களை நிறுவினர். இத்தகைய விதவை இல்லங்களும், பெண்களுக்கான கல்லூரிகளும், பெண்கள் உயர்கல்வி கற்கவும், தொழிற் கல்வி பயிலவும் வாய்ப்புகளைப் பெருக்கின.

மேலுலகத்திலே நாட்டங்கொண்ட பாமர மக்களை, தங்கள் நிலைமை மறக்குமளவிற்குச் சடங்குகளையும் வேள்விகளையும் செய்துவந்த மக்களை எவ்விதத்திலும் தூண்டிவிடாமல் பழையநிலையிலேயே வைத்திருத்தலே தங்கள் அரசியல் ஆதிக்கம் நிலைப்பதற்கான சிறந்த வழியெனப் பிரிட்டிஷ் அரசாங்கம் கருதியது. இதன் காரணமாகவே ஆங்கிலேயர் தலையிடாக் கொள்கையைப் பின்பற்றி வந்தனர். இந்திய மக்கள் பழமைப் பழக்கவழக்கங்களில் புரளுவதை

ஆதரித்து வந்தனர். இருப்பினும், இந்திய சமுதாயக் கட்டு திட்டங்கள் அளவுக்குமீறிப் போனதால் ஆங்கிலேயர் தங்களது கொள்கையை மாற்றிக் கொள்ளவேண்டி வந்தது. சமுதாயத்தில் காணப்பட்ட ஏற்றத்தாழ்வுகளை நீக்கவேண்டுமென்று இந்தியச் சீர்திருத்தக்காரர்கள் அரசாங்கத்தை நச்சரித்து வந்தனர். அதன் விளைவாகப் பெண்குழந்தைக் கொலையைத் தடுக்கவும், சாதியின் பேரால் சமயத்தின் பேரால் நடைபெறும் சதி எனும் உயிர்பலியை ஒடுக்கவும் தடுத்து நிறுத்தவும் பல சட்டங்கள் கொண்டுவந்து நிறைவேற்றப் பட்டன. இத்தகைய சீர்திருத்தங்களைச் சமுதாயத்தில் இருந்த வைதீகப் பிரிவினர் சந்தேகக் கண்கொண்டு பார்த்த போதிலும் அவர்களால் பரவலான வலுவான எதிர்ப்பினை உருவாக்க முடியவில்லை.

சமுதாய அமைப்பிலும் சில மாற்றங்களைக் காணமுடிகின்றது. புதிய பொருளாதாரச் சக்திகள் எழுந்ததாலும் தனிமனிதக் கொள்கை பரவியதாலும் (individualism) கூட்டுக் குடும்பமுறை செல்வாக்கிழந்தது. ராய்சாகப் சாரதா (Rai Saheb Sarada) கொண்டுவந்த சாரதா சட்டமானது பாலர் திருமணத்தின்மீது பல கட்டுப்பாடுகளைக் கொண்டுவந்தது. 1905ஆம் ஆண்டில் கோபால கிருஷ்ண கோகலே நிறுவிய இந்தியத் தொண்டர் கழகம் (The Servants of India Society) சாதிவேற்றுமைகளைச் சாடியது. இந்தியமொழிகளிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்த பல்வேறு பத்திரிகைகளின் எண்ணிக்கை பெருகியது. சாதாரண மக்கள்மீது அவை மிகுந்த செல்வாக்குச் செலுத்தின.

**கலையும் இலக்கியமும்**

இந்திய வரலாற்றையும் கட்டடக் கலையையும் முறையாக அறியும் முயற்சியில் ஆங்கில அறிஞர் ஈடுபட்டனர் இந்தோ கிரேக்க நாணயங்களின் துணைகொண்டு பிராமி எழுத்துகளைப் படித்துப் புரிந்து கொண்டார் ஜேம்ஸ் பிரின்செப் (James Princep). சர் ஜான் மார்ஷல் எனும் அறிஞர் சிந்துவெளியில் அகழ்வாராய்ச்சிகளை (excavations) மேற்கொண்டார். கலைகளையும் கட்டடக் கலையையும் அறிவியல் அடிப்படையில் ஆய்ந்தனர். பர்குஸனும் (Fergusson) கன்னிங்காமும் (Cunningham) கர்சான் பிரபு காலத்தில் நிறைவேறிய 'பழங்கால நினைவுச் சின்னங்கள் பாதுகாப்புச் சட்ட'த்தினால் (The Ancient Monuments Preservation Act) புதைபொருள் ஆராய்ச்சியின் விந்தைகளைப்

பேணிக் காக்கவும் அவற்றினைப் பிற்காலத் தலைமுறை யினருக்கு மரபாக்கிச் செல்லவும் வாய்ப்பு ஏற்பட்டது. இத் தகைய வளர்ச்சிப் போக்கின் விளைவாக இந்திய வரலாற்றில் இயல்பான அக்கறை நம் நாட்டவரிடையே வளர்ந்ததுடன், பாரத பூமியின் பாரம்பரியத்தில் பெருமித உணர்வும் பொங் கியது. கலைகளிலும் மறுமலர்ச்சி தோன்றியது. ஆரம்ப காலத்தில் ஓவியத்திலாகட்டும் அல்லது சிற்பக்கலையிலா கட்டும் இந்தியக் கருத்துகளை வெளியிட மேனாட்டு உத்தி கள் பயன்படுத்தப்பட்டன. ஆனால், நாளடைவில் இந்திய உத்திகளே (techniques) பயன்பட்டன. இங்ஙனமாக இந்தியக் கலையின் பல்வேறு கிளைகளை ஆய்ந்தறிவதில் புத்துணர்ச்சி எழுந்தது.

இந்திய மொழிகளும் இலக்கியங்களும் வளர்வதற்கு மேலை நாட்டவரின் தொடர்பு உதவியது. பாமரமக்களை யும் கவரும் நோக்கத்தில் கிறித்தவப் பாதிரிமார்கள் இந்திய மொழிகளைக் கற்றனர். வேதங்களையும் சமய இலக்கியங் களையும் மொழி பெயர்த்தனர். இவற்றின் மூலமாக இந்திய இலக்கிய வளர்ச்சிக்குத் தொண்டாற்றினர். உரைநடை இலக்கியத்தின் தோற்றம் இக்காலத்தில் குறிப்பிடத் தகுந்த வளர்ச்சியாகும். ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் (Shakespeare) தமிழ் அறிஞர்களிடையே புதிய ஆர்வத்தினை வளர்த்தன. லிட்டன் பிரபுவின் படைப்பான ''இரகசிய வழி'' (Tne Secret Way) எனும் காவியத்தின் தழுவல்தான் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை இயற்றிய 'மனோன்மணியம்'. 'நந்தன் சரித்திரம்' எனும் முதல் கவிதை நாடகம் எழுந்தது. சூரிய நாராயண சாஸ்திரியார் அவர்கள் தாம் எழுதிய 'ரூபாவதி', 'கலாவதி' ஆகிய இலக்கியங்களில் மேலைநாட்டு நாடகக்கூறு களையும் இந்திய நாடகக் கூறுகளையும் ஒருங்கிணைக்க முயன் றுள்ளார். பாவேந்தர் சுப்பிரமணிய பாரதியார் (1882—1921) தேசியப் பாடல்கள் பல புனைந்தார். மேனாட்டுத் தொழில் நுட்பத்திலே அக்கறை காட்டினார். பெண்களின் வீடுதலைக்காகப் பாடுபட்டார். பாரததேவியின் விலங் கொடிக்கத் தேசிய இயக்கத்தை வளர்க்க அரும்பாடுபட்டார். வீரேசலிங்கம் பந்துலு அவர்கள் இக்காலத்தில்தான் தெலுங்கில் முதல் நவீனத்தைப் (novel) படைத்தார். இந்திய நாடகங்களில் மரபுசார்ந்த எளிய மக்களின் வாழ்க் கையே அடிப்படையாகக் காணப்படுகின்றது. காளிதாசரின் 'மேக தூத'த்தைத் தழுவி 'மயூர சந்தேசம்' (Mayura Sandesam) எனும் நூலை கேரள வர்மா எழுதி முடித்

தார் கதக்களிக்கடின கதைகளை இரவி வர்மா தம்பி (Ravi Varma Thampi) என்பார் எழுதினார். வள்ளத்தோள் நாராயண மேனோன் சிறு பாடல் பலவற்றை யாத்துள்ளார். பகுத்தறிவாளராகத் திகழ்ந்த பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்கள் இந்து சமுதாயக் கொடுமைகளைத் தாக்கினார். சாதிமுறையைக் கண்டித்தார். திராவிட இயக்கத்தை வளர்த்தார்.

வட இந்திய மொழிகளும் வியக்கத்தக்க முன்னேற்றம் கண்டன. அவைகளில் வங்காள மொழியே முன்னோடியாகத் திகழ்ந்தது. நாவல், இலக்கியம், கதை, கட்டுரை, நாடகம், உரைநடை ஆகியவற்றில் அது குறிப்பிடத்தக்க முன்னேற்றம் கண்டது. வங்காள மொழியில் நவீன இலக்கிய வளர்ச்சிக்கு இராஜாராம் மோகன்ராய், பங்கிம் சந்திர சாட்டர்ஜி (Bankim Chandra Chatterji), இரமேஷ் சந்திர தத், இரவீந்திர நாத் தாகூர் ஆகியோர் அரிய தொண்டாற்றினர். இக்காலப் பிரிவில் இந்தியும் ஒரு நவீன மொழியாக வளர்ச்சியடைந்தது. தயானந்த சரஸ்வதி வீறார்ந்த நடையில் இந்தி இலக்கியங்களைப் படைத்தார். பரதெண்டு அரிச்சந்திரா (Bharatendu Harischandra) பல்வேறு கட்டுரைகளையும் நாடகங்களையும் எழுதியுள்ளார். உருது மொழி அகராதியையும் இலக்கண நூலையும் ஜான் கில்கிரைஸ்ட் (John Gilchrist) படைத்தளித்தார். லாகூரைச் சேர்ந்த முகமது உஸ்ஸெய்ன் உருது மொழிக் கவிதை யாத்தலை எளிமையாக்கினார். அதே சமயத்தில் தில்லியைச் சார்ந்த கலீப் (Ghalib) என்பார் உரைநடையை வளர்த்தார். மேலை நாட்டினரின் செல்வாக்கால் தற்கால மராத்திய இலக்கியமும் பஞ்சாபி இலக்கியமும் நல்ல வளர்ச்சி பெற்றன. பஞ்சாபி மொழியில் நல்ல கவிதைகளையும் கதைகளையும் படைத்தளித்தார் பண்டித மான்சிங். மராத்திய கவிதை இலக்கிய வளர்ச்சிக்கு கேசவசுதா (Keshavasuta) பெரும் பணியாற்றினார். லால் சங்கர் தமது கவிதைகளாலும் கட்டுரைகளாலும் குஜராத்தி மொழி இலக்கியத்திற்கு அணி செய்துள்ளார். இத்தகைய வளர்ச்சிக் கூறுகள் தேக்க நிலையில் இருந்த இந்திய மொழிகளை முன்னேற்றப் பாதைக்கு இட்டுச்சென்றன.

சமுதாய விழிப்புணர்ச்சி தோன்றிய இக்காலத்தில் இந்தியப் பத்திரிகைகள் பெருவளர்ச்சியுற்றன. 1780ஆம் ஆண்டில் 'பெங்கால் கெஜட்' எனும் வார ஏட்டினை Bengal Gazette) ஹிக்கி (Hickey) என்பார் தொடங்கி

வைத்தார். அதைத் தொடர்ந்து 'கல்கத்தா கெஜட்' (Calcutta Gazette) 'இண்டியன் வோர்ல்ட்' (Indian World) 'மதராஸ் கெஜட்' (Madras Gazette) ஆகியவை வெளிவந்தன. இவையெல்லாம் ஆங்கில ஏடுகளாயினும் அவற்றிற்குப் பரவலான வரவேற்பு இருந்தது. பத்திரிகை வெளியீட்டில் இந்தியரும் அக்கறை காட்டத் தொடங்கினர். அதன் விளைவாக 'அமிர்த பஜார் பத்திரிகா' (Amrita Bazar Patrika) 'இந்தியன் மிர்ரர்' (Indian Mirror), 'கேசரி' (The Kesari), 'ஹிந்து' (The Hindu) முதலானவை வெளிவந்தன. அரசாங்கம் விதித்த தடைகளும் அடக்கு முறைகளும் இந்தியப் பத்திரிகைகளுக்கு ஓயாத தொல்லைதந்த போதிலும் புதிய கருத்துகளைப் பரப்புவதில் இப்பத்திரிகைகள் பாராட்டுதற்குரிய பணியாற்றி வந்துள்ளன.

மறுமலர்ச்சியின் விளைவாக வந்த விழிப்புணர்ச்சியின் அரசியல் பயனாகத் தேசிய உணர்ச்சி முகிழ்ந்தது. பண்டைப் பெரு இலக்கியங்களைப் படிக்கும் புதிய ஆர்வத்தின் பயனாக பாரத நாட்டின் பல்வேறு பகுதிகளில் வாழும் மக்கள் அனைவரும் ஒத்த பண்பாடு கொண்டவர்கள் என்பதை மக்கள் உணரத்தலைப்பட்டனர். பல்வேறு அறிஞர்கள் படைத்த வரலாற்று நூல்களும் அரசியல் ஒற்றுமை எனும் இலக்கை நோக்கி இந்தியா மெதுவாக நடைபோட்டு வந்துள்ளதை எடுத்துக் காட்டின. மேலை நாட்டுக் கல்வியின் மூலமாக பகுத்தறிவு இலக்கியங்களையும் ஜான் ஸ்டூவர்ட் மில் (J.S. Mill), பர்க் (Burke), லாக் (Locke), வால்டேர் (Voltaire), ஆடம் ஸ்மித் (Adam Smith), ரூசோ (Rousseau) போன்ற சிந்தனையாளர்களின் தலை சிறந்த நூல்களையும் கற்கும் நல்வாய்ப்பினை இந்தியர் பெற்றனர். பல்வேறு மொழிகளில் வெளியான செய்தித்தாள்களும் பருவ ஏடுகளும் (periodicals) புரட்சி இயக்கங்களின் செய்திகளை மக்களிடையே பரப்பின. சீர்திருத்தவாதிகளும் பண்டையப் பண்பாட்டில் ஒரு புதிய நம்பிக்கையை வளர்த்ததன் மூலம் எதிர்காலம் ஒளிமயமாக இருக்கும் எனும் நம்பிக்கையூட்டினர். இவற்றின் விளைவாக இந்தியத் தேசிய இயக்கம் மறுமலர்ச்சியின் ஓர் அம்சமாகவே விளங்கியது. வரலாற்றில் காணும் ஒத்த வளர்ச்சி நிலைகளில் காணும் பண்பையே இங்கேயும் காணமுடிகின்றது.

# 10. உலக தத்துவச் சிந்தனையில் இந்தியாவின் பங்கு

உலக வரைபடத்தில் ஆசியப் பெருநிலப்பரப்பின் தென் கோடியில் இந்தியா அமைந்திருப்பதைக் காணலாம். தென் கோடி முனையில் அமைந்திருக்கும் இந்தியா உலக நாடுகளிடையே நடுநாயகமாக விளங்குவதையும் நாம் அறியலாம். மேற்கிலிருந்து கிழக்கு நோக்கிச் செல்லும் கடல் வழிகளின் மையமாக இந்தியா அமைந்திருக்கின்றது. இந்தியாவின் வடக்கு எல்லைக்கப்பால் விரிந்து பரந்து கிடக்கும் ஆசியப் பெருங்கண்டத்தின் ஏனைய பகுதிகளும் அப்பகுதியில் அமைந்துள்ள பல்வேறு நாடுகளும் காணப்படுகின்றன. ஒவ்வொரு நாட்டிலும் இனம், மொழி, பண்பாடு இவைகளில் மாறுபட்ட மக்கள் வசிக்கின்றனர். இந்தியாவின் தென் பகுதியில் எல்லையற்று விரிந்து கிடக்கும் ஆழ்கடற் பரப்பும், ஆங்காங்கே திட்டுத் திட்டாகக் காணப்படுகின்ற எழில்மிகு வளங்கொழிக்கும் தீவுக் கூட்டங்களும் காணப்படுகின்றன. இவ்வாறு இயற்கையிலேயே உலக நாடுகளின் நடுவில் அமைந்திருக்கும் இந்தியா, பன்னாடுகளின் பண்பாடு மற்றும் சமயக் கருத்துகள் சந்திக்கும் பொது இடமாகவும் அமைந்தது. அத்தகைய சந்திப்பால் பிற நாடுகளின் பண்பு நலன்கள் இந்தியப் பண்பாடுகளில் கலக்கவும், இந்தியப் பண்பாட்டுக் கூறுகள் மேற்கு, கிழக்கு நாடுகள், மேலும் வடக்குப் பகுதிகள், தென் பகுதித் தீவுக் கூட்டங்கள் ஆகியவற்றில் பரவவும் ஏதுவாயிற்று.

ஆதி காலந் தொட்டே இந்தியா தனக்கே உரித்தான தனிப் பண்பாட்டுச் சிறப்பினை உருவாக்கியிருக்கின்றது. இந்தியாவில் தோன்றிய நாகரிகங்களின் வளர்ச்சியும் மேம்பாடும், பண்டைய இந்தியப் பண்பாடுகளின் தனிச் சிறப்பினை எடுத்துக் காட்டுகின்றது. திராவிட நாகரிகம் தோன்றிய காலத்திலிருந்து, ஆரியப் பண்பாடுகள் நிலைபெற்ற வரை, ஆதியிலிருந்து இன்று வரை உள்ள இந்தியாவின் தனித் தன்மையை விளக்கும் பண்பாட்டுக் கூறுபாடுகளைக் காண முடிகின்றது. இந்தியாவின் ஒவ்வொரு பகுதியிலும் தனித் தனியாக மாறுபட்ட மரபுகளும், நடைமுறைகளும், பண்பாடுகளும் காணப்பட்டபோதிலும், அத்தகைய வேறுபட்ட

பண்பாட்டு நிலைகளிலும் அடிப்படை ஒற்றுமை இருப்பதை உணரலாம். வேறுபாடுகளுக்கிடையேயும் ஒரே பண்பாடாகக் காட்சியளிப்பதே இந்தியப் பண்பாட்டின் தனிச் சிறப்பு ஆகும். இமயத்தைப் போன்று வானோங்கி உயர்ந்து நிற்கும் மலைகளோ, கடக்க இயலாத காட்டாறுகளோ இந்தியாவில் இல்லை. எனவே, காஷ்மீரம் முதல் தென் குமரி வரை, இந்தியாவின் அனைத்துப் பகுதிகளுக்கும் மக்கள் தாராள மாகச் சென்று வர வாய்ப்பிருந்தது. மக்கள் மட்டுமின்றி அவர்களது பண்பியல்புகளும், உள்ளக் கிடக்கை உணர்த்தும் இலக்கியங்களும், சமய நம்பிக்கைகளும்கூட இந்தியாவெங் கும் பரவி நிலைபெறக் காரணமாக அமைந்தது. திராவிடப் பண்பாடுகளின் பெரும்பாலான கூறுபாடுகளை ஆரியர்கள் தமதாக்கி ஏற்றுக்கொண்டு விட்டனர். இந்தியாவில் ஆரியர் கள் நிலைபெற்றுப் பல நூற்றாண்டுகளுக்குப் பின்னர் மேற் காசியா, மற்றும் மத்திய ஆசியாவிலிருந்து பல இனத்தவர்கள் படையெடுத்து வந்தனர். தங்களது குடியேற்றங்களை இந்தியாவில் ஏற்படுத்தி ஆட்சி புரிந்தனர். பிரெஞ்சுக்காரர் களும் ஆங்கிலேயரும் முதலில் வர்த்தகர்களாக இந்தியாவில் நுழைந்து, பின்னர் இந்தியாவில் நிலவிய அரசியல் குழப்ப நிலை தங்களுக்குச் சாதகமாக அமையவே, அரசியலிலும் தலையிட்டு, ஆட்சிப் பொறுப்பை வென்றனர். இத்தகு அயல் நாட்டினரின் தொடர்படையெடுப்புகளின்போது இந்தியப் பண்பாடுகளுக்கு ஆபத்து ஏற்பட்டது. புதிய சமய பண்பாட்டுக் கூறுபாடுகள் நுழைந்து ஆதிக்கம் பெற்றன. இந்தியப் பண்பாடுகள் சிதைக்கப்பட்டன. பண்பாட்டு மோதல்கள் தொடர்ந்து ஏற்பட்டன. இத்துணை எதிர்ப் பிலும் இந்தியப் பண்பாடு முழுக்க மறைந்துபடாமல், நுழைந்த பண்பாட்டு இயல்புகளில் காணப்பட்ட உயர்ந்த கூறுபாடுகளையும் தனதாக்கி ஏற்றுக் கொண்டது. இவ்வாறு தொடர்ந்து பலவித இனம், பண்பாடுகளுக்கிடையே ஏற் பட்ட மோதல்களின் விளைவாக, பண்பாடுகளின் கலப்பு ஏற்பட்டது.

இந்தியப் பண்பாட்டின் உயர் தனிச் சிறப்புத் தன் மைக்குக் காரணமான சில எடுத்துக்காட்டுகளைக் குறிப்பிட இயலும். முதல் சிறப்புக் கூறுபாடாகச் சமயம், மக்களின் வாழ்க்கையோடு இரண்டறக் கலந்துவிட்ட நிலையினைக் குறிக்கலாம். இந்தியச் சமயமும், உலகியல் கூறுபாடுகளான சட்டங்கள், கலைகள், இலக்கியங்கள் ஆகிய அனைத்தும் ஒன்றையொன்று தனித்துப் பிரித்து அறிய இயலாத அள

-வுக்குப் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன. அதனால்தான் சடங்குகளும், இலக்கியங்களும், கலைகளும் இந்தியாவில் புனிதப் பொருள்களாகக் கருதி மதிக்கப்படுகின்றன. பண்டைய இந்தியாவில் வட்டார மொழிகளில் உருவாக்கப்பட்ட பல நூல்கள் சமயக் கருத்துகளை விளக்குவதாகவே அமைந்திருந்தன. நவீன காலத்தில்தான் சமய இலக்கியங்களுக்குப் பதிலாக, மனித இயல்புகளின் இயக்கத்தினை மையமாகக் கொண்டு நூல்கள் உருவாக்கப்படுகின்றன. கட்டடக் கலையும் சிற்பக் கலையும் சமயங்கள் காட்டிய வழியிலேயே வளர்ந்து சமய வழிபாட்டுத் தேவைகளை நிறைவேற்றின. இரண்டாவது சிறப்புக் கூறாகக் கூறவேண்டுமெனில் இந்திய சமுதாய அமைப்பில் குடி கொண்டு நிலைபெற்றுவிட்ட சாதி அமைப்புகளையும் (Caste System) அதன் விளைவாக எழுந்துவிட்ட கிராமப்புற குடி அமைப்புகளையும், கூட்டுக் குடும்ப அமைப்புகளையும் (Joint Family) குறிப்பிடலாம். இத்தகு அமைப்புகளே இந்திய சமுதாயத்தின் அடிப்படையாக அமைந்திருக்கின்றன. சாதி முறையின் காரணமாக, குலப்பிறப்பு ஒன்றே ஒருவனின் உயர் நிலையை உறுதிப்படுத்தியது. எனவே, சமுதாய உயர் நிலையை அடைய மற்றவர்கள் போட்டியிடவோ, முயற்சி செய்யவோ, அவ்வாறு முயன்றாலும் வெற்றி வாய்ப்புகளோ இருக்கவில்லை. இத்தகு சமுதாய நிலை தொடர்ந்தது. ஆனால் முன்னேற்றம் காண இயலவில்லை. பல பேரரசுகள் தோன்றி, மறைந்ததனால் இந்தியாவில் 'நிலையற்ற அரசுத் தன்மை' (Political Instability) ஏற்பட்டிருந்தது. இதன் எதிரொலியாகச் சமுதாயத்திலும் பொருளாதாரத் துறையிலும் வளர்ச்சியற்ற தேக்க நிலை ஏற்பட்டது.

இந்தியப் பண்பாடுகளில் காணப்படுகின்ற சில கூறுபாடுகள் இதை மேலைப் பண்பாடுகளினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதாக உள்ளன. 'மானவ தர்மம்' (Manava Dharma) அல்லது 'மக்களின் பண்பாடு' (Human Culture) என்றே இந்தியப் பண்பாடு குறிப்பிடப்படுகின்றது. ஆண்-பெண் வேற்றுமையின்றி, மற்றும் வயது, நிறம் ஆகிய எவ்வித வித்தியாசமுமின்றி உலக மக்களனைவரின் தேவைகளையும் நிறைவேற்றும் தகுதி பெற்றதே இந்தியப் பண்பாடாகும். மனிதனின் அடிப்படைத் தன்மைகளையும், மனிதர்களுக்குள் ஏற்படுகின்ற தொடர்பு மற்றும் உறவுமுறைகளின் முழுமையையும், மனிதர்களுக்கும் அவர்கள் வாழும் உலகிற்கும் இடையேயுள்ள பிணைப்பினையும், அடிப்படைத் தன்மை

களையும் நன்கு உணர்ந்து, அறிந்து, அதன் விளைவாக ஏற்படுத்தப்பட்டதே இந்தியப் பண்பாடாகும். வேற்றுப் பண்பாடுகளிலிருந்து, வேண்டியவைகளைத் தனதாக்கி ஏற்றுக் கொள்ளுகின்ற இந்தத் தன்மையை இந்துப் பண்பாட்டைத் த்விர உலகின் வேறு எந்தப் பண்பாடுகளிலும் காண இயலாது. வெவ்வேறு இனத்தினர் தங்களுடைய பண்பாட்டுச் சிறப்புகளோடு, இந்தியாவில் வெற்றி வீரர்களாக நுழைந்தனர். ஆனால், காலப்போக்கில் அவர்கள் அனைவரும் தங்கள் பண்பாட்டுச் சிறப்புத் தன்மைகளைப் படிப்படியாக விடுத்து, இந்திய சமுதாயத்தில் இணைந்துவிட்ட தன்மையையும் நாம் காண முடிகின்றது. முஸ்லிம்கள்மட்டும், சமய நம்பிக்கைகள் மற்றும் தங்களின் மரபுகளைக் காத்து தனித்தே நின்றனர். முஸ்லிம்களின் மாறுபட்ட, சமயக் கோட்பாடுகளையும் மரபுகளையும் கண்ணுற்ற இந்துக்கள், தங்களுடைய சாதி முறைகள் என்ற தகர்க்க முடியாத அரணுக்குள் தங்களை அடைத்துக் கொண்டு தனித்து வாழ்ந்து பண்பாடுகளைக் காப்பாற்றத் துணிந்தனர். இருப்பினும் இந்து-முஸ்லிம் கலப்பு வேறு முறைகளில் காணப்பட்டது; இந்து-முஸ்லிம்களின் கலப்புறவால் 'உருது' என்ற புது மொழி தோன்றியது. இந்திய-பாரசீக ஓவிய முறைகளின் கலப்பு இந்தியாவில் புதிய ஓவிய பாணியைத் தோற்றுவித்தது. அதே போல அலங்கார வளைவுகள் (arches), அரைக்கோள வடிவுள்ள கூரைகள் (domes) மற்றும் உயர்ந்த கோபுரங்கள் (minarets) போன்ற கட்டடக் கலை வடிவங்கள் முஸ்லிம்கள் இந்தியாவிற்கு வழங்கிய புதிய பாணிகளாகும். வெள்ளையர்கள் இந்தியாவில் நுழைந்த பின்னர் அவர்களது கலை, மற்றும் பண்பியல் முறைகள் இந்தியப் பண்பாட்டியலில் நுழைந்து, வெகுவான மாற்றங்களை ஏற்படுத்தியது.

பல்வேறு வழிகளில் பண்டைய இந்தியப் பண்பாடு, வெளிநாடுகளிலும் பரவி நிலைத்துவிட்டது. படையெடுப்பாளர்கள், சமயப் பரப்பாளர்கள், வர்த்தகர்கள், தொழிலாளர்கள் மற்றும் நாடோடிக் கூட்டத்தினர் வாயிலாக இந்தியப் பண்பாடு அந்நிய நாடுகளை அடைந்தது. படைவலிமை பெற்று உலகையே தன்கீழ்க் கொண்டுவந்து மிகப் பெரிய பேரரசை அமைக்கும் பேராசை கொண்ட, அப்பேரரசை அடையும் வழியில் எதிர்ப்படும் எதிர்ப்புகளனைத்தையும் தகர்த்து, கடல் கடந்தும் சென்று, நாடுகளை வென்று, குடியேற்றங்களை ஏற்படுத்தும் உயர் எண்

ண்ம் கொண்ட வீரமறவர் தலைவர்கள் உலகின் பல பகுதிகளுக்கு இந்தியப் பண்பாடுகளைக் கொண்டு சென்றனர். புத்த சமயப் பரப்பாளர்கள் உலகின் பல பகுதிகளுக்கும் சென்று சமயப் பிரசாரத்தில் ஈடுபட்டனர். வாணிகர்களும் உழைப்பாளர்களும், மேலை நாடுகளிலும் இந்தியாவைச் சுற்றியிருக்கும் எண்ணற்ற தீவுக் கூட்டங்களிலும் சென்று குடியேறி யிருந்தனர். ஜிப்ஸீ (Gypsies) எனும் நாடோடிகள் உலகின் பல பகுதிகளுக்கும் சென்று திரும்பினர்.

**புத்த சமயம் பரவுதல்**

மத்திய ஆசியா, சீனா, ஜப்பான், மேற்குஆசியா மற்றும் தென்கிழக்காசிய நாடுகளிலும் இந்தியாவில் தோன்றிய புத்த சமயம் ப்ரவியது. அசோகரால் அனுப்பப்பெற்ற புத்த சமயப் பரப்பாளர்கள் மத்திய ஆசியா, ஸ்ரீலங்கா போன்ற நாடுகளுக்குச் சென்றனர். அசோகருக்குப் பின்னர்க் கனிஷ்கரும் புத்த சமயப் பரப்பாளர்களை வெளிநாடுகளுக்கு அனுப்பினார். இந்தியாவினின்றும் அனுப்பப்பட்ட புத்த சமயப் பரப்பாளர்களைத் தொடர்ந்து, இந்தியா-சீனாவிற்கிடையே புனிதப் பயணிகள், புத்த சமய அறிஞர்கள் போன்றோரின் போக்குவரத்து அதிகரித்தது. இத்தகு போக்குவரத்து ஆயிரம் ஆண்டுகளுக்கும் அதிகமாகவே இருந்து வந்திருக்கின்றது. ஆரம்ப காலத்தில் கோபிப் பாலைவனம் (Gobi Desert), இமயமலைக் கணவாய்கள் வழியாகவே ஆரம்பகால இந்திய-சீனத் தொடர்பு ஏற்பட்டது. அவ்வழியில் காணப்பட்ட எண்ணற்ற இடையூறுகளும், ஆபத்துகளும் வேறு பல புதிய வழிகளைக் கண்டுபிடிக்கத் தூண்டியது. அதன் காரணமாகவே இந்தோ-சீனா இந்தியாவிற்கிடையே கடல்வழி ஒன்றும் கண்டுபிடிக்கப்பட்டது.

சமயப் பரப்பாளர்கள், இந்தியாவில் புனிதப் பயணம் மேற் கொண்டவர்கள் ஆகிய அனைவரைப் பற்றிய முழு விபரங்களும் நமக்குக் கிடைக்கவில்லை. காசியப மதங்கர் (Kashyappa Matanga) என்பவரின் தலைமையில் பல துறவிகள், தங்களுடைய வடமொழிச் சமயக் கருத்துப் பேழைகளுடன் கி.பி. 67-ல் சீனாவை அடைந்த

தாக, நமக்குக் கிடைத்திருக்கின்ற வரலாற்றுச் சான்றுகள் குறிப்பிடுகின்றன. காசியப மதங்கரும், அவரது சீடர்களும்தான் முதன்முதலில் சீனா சென்று சமயப்பரப்பில் ஈடுபட்டவர்கள் என்றும் கருதப்படுகின்றது. அவர்கள் சீன மொழியைக் கற்று, சீனாவின் யாங் மாநிலத்தில் (Yang Province) தங்கி, தங்கள் சமயப் பணியைத் தொடர்ந்தனர். கி.பி. ஆறாம் நூற்றாண்டில் ஒரு சமயம் அம் மாநிலத்தில் 10,000-க்கு அதிகமான இந்தியக் குடும்பங்களும் 3000 புத்த சமயத் துறவிகளும் குடியிருந்தனர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. குமாரஜீவா (Kumarajiva) என்ற அறிஞர் கி.பி. 401ஆம் ஆண்டு சீனாவை அடைந்தார். அவர் சீன மொழியிலும் புலமை பெற்று நாற்பத்தேழு நூல்களைச் சீன மொழியில் உருவாக்கிப் புகழ்பெற்றிருக்கின்றார். அந்நூல்களில் மிகவும் பெருமையுடன் குறிப்பிடத் தக்கது நாகார்ஜுனர் , (Nagarjuna) என்ற புத்த சமயப் பேரறிஞர் எழுதிய வடமொழி நூலைச் சீன மொழியில் மொழியாக்கம் செய்ததாகும். ஜினகுப்தர் (Jinagupta) என்ற மற்றொரு புத்த சமயப் பேரறிஞரும் கி.பி. ஆறாம் நூற்றாண்டில் சீனா சென்றடைந்தார். அவரும் சீன மொழியில் புலமை பெற்று, புத்த சமயக் கோட்பாடுகளைப் பரப்ப ஆரம்பித்தார். ஏராளமான சீனர்கள் இவருக்குச் சீடர்களாயினர். 'தாங்' அரச வம்சத்தைச் (Tang Dynasty) சேர்ந்த பேரரசர் ஒருவரும் அவரது சீடராக இருந்தார் என்பது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். அவர் முப்பத்தேழு வடமொழி நூல்களைச் சீன மொழியில் மொழியாக்கம் செய்தார்.

அத்தகு சமயப்பரப்புப் பணிகளால் புத்த சமயம் உலகின் பல பகுதிகளுக்கும் பரவியது. சீனாவிலிருந்து இந்தியாவிற்குப் புனிதப் பயணம் மேற்கொண்டவர்கள், வருகின்ற வழியில் மத்திய ஆசியாவிலும் புத்த சமயத்தைப் பரப்பி நிலைபெறச் செய்தனர். பாலஸ்தீனத்தில் கிறித்துவ சமயம் தோன்றிய காலத்தில், இந்திய புத்த சமயம் மிகவும் வளர்ந்தோங்கியிருந்தது. தியானம் செய்தல் (ஜபம் செய்தல்) உண்ணா நோன்பிருத்தல் (fasting) போன்ற சில கிறித்துவ மதச் சடங்குகள் புத்த சமயத்தின் செல்வாக்கினால் ஏற்பட்டவைகளாகும்.

சீனாவினின்றும் புனிதப் பயணிகள் இந்தியாவை நாடினர். அத்தகு பயணிகளில் மிகவும் சிறப்பு பெற்று விளங்குபவர்கள் 'பாஹியான் (Fa-Hien) யுவான்-சுவாங் (Hiuen Tsang), இட்சிங் (I-Tsing) என்ற மூவருமாவர்'. குமாரஜீவா (Kumarajiva) என்ற சீனா சென்று புகழ் பெற்ற இந்திய அறிஞரின் சீடராக விளங்கிய பாஹியான் (Fa-Hien) குப்தர்கள் காலத்தில் இந்தியாவில் பயணம் செய்தார். அவர் பாடலிபுரத்தில் இருந்த பல்கலைக் கழகத்தில் சமயத் தத்துவங்களைக் கற்றுத் தேர்ந்தார். ஹர்ஷ வர்த்தனர் ஆட்சியின்போது யுவான்-சுவாங் (Hiuen-Tsang) என்ற சீனர் இந்தியா வந்தார். அவர் இந்தியா வெங்கணும் இருந்த புத்த ஆலயங்களுக்கும் மடாயலங்களுக்கும் சென்று வந்தார். அவர் நாளந்தா (Nalanda) பல்கலைக் கழகத்தில் ஆசிய நாகரிகத்தைக் (Asian Civilisation) கற்பிக்கும் பேராசிரியராகப் பல ஆண்டுகள் பணியாற்றினார். பின்னர் அப்பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராகப் (Vice Chancellor) பணியாற்றினார் என்றும் குறிப்பிடப்படுகின்றது. யுவான் சுவாங் சி-யு-கி (Si-yu-ki) என்ற நூலை உருவாக்கியிருந்தார். அந்நூலில் மேற்கத்திய அரசுகளைப் (Western Kingdom) பற்றிய சுவையான செய்திகளைத் தொகுத்துக் கொடுத்திருந்தார். அந்த நாடுகளைப்பற்றி வரலாற்றுச் சிறப்பு மிக்க பல செய்திகள் அந்நூலில் இடம் பெற்றிருக்கின்றன. 'இட்சிங்' என்பார் (I-Tsing) கடல் வழியாக கி. பி. 671-ல் இந்தியா வந்தடைந்தார். அவர் நாளந்தா பல்கலைக் கழகத்தில் வடமொழியைக் கற்றுத் தேர்ந்தார். சீனாவிற்குத் திரும்பிச் செல்லும்போது ஏராளமான வடமொழி நூல்களையும் தன்னுடன் எடுத்துச் சென்றார்.

சீன வரலாற்றில் மிகவும் குழப்பமான காலத்தில் புத்த சமயம் அங்குப் பரவியது. அரசியல் குழப்பங்களும், அரசின் அத்தகு குழப்பநிலையை அதிகரிக்கச் செய்யும் வகையில் இயற்கையின் கடுமையான செயல்களும் சீன மக்களைத் துயரக் கடலில் ஆழ்த்தின. பெரும் வெள்ளமும், வெள்ளம் குறைந்த பின்னர்க் கடுமையான கொள்ளை நோய்களும் (Epidemics), கொள்ளை நோய் குறைந்த பின்னர்க் கடும் வறட்சியும், அதைத் தொடர்ந்து பஞ்சமும் பட்டினியும் சீனாவை ஆட்கொண்டன. இயற்கையின் இத்தகு கோரச் செயல் சீன மக்களிடையே பெரும் ஆத்திரத்தை ஏற்படுத்

றியது. புத்த சமயத்திற்கு எதிர்ப்புத் தோன்றியது. அந்நிய சமயம் சீனாவில் பரவி நிலைபெற்றுவிட்டதே, சீனாவில் இயற்கையின் வெறிச் செயலுக்குக் காரணமாகும் என்ற கருத்தினைச் சீன அறிஞர்கள் மக்களிடையே பரப்பி வளர்த்தனர். மேலும் மகாயான புத்த சமயப் பிரிவினர், புத்தரைத் தெய்வமாகவே கருதி அவரது உருவச் சிலைகளை வணங்கினர். புத்தரின் சிலைகளைத் தெய்வமாகக் கருதி வணங்கும் வழக்கத்தைக் கண்ட சீனர்கள் வியந்தனர். அது சீன வழக்காறுகளுக்கு முற்றிலும் முரணான செயலாகும். அத்தகு காரணங்களால் சீனர்கள் புத்த சமயத்தை வெறுக்கத் தொடங்கினர். பின்னர் புதிய-கன்பூசிய தத்துவங்களின் (Neo-Confucianism) விளக்கங்களை உணர்ந்து படிப்படியாக ஏற்றுக் கொள்ள ஆரம்பித்தனர். இத்தகு செயல்கள் புத்தசமயத்தின் செல்வாக்குச் சீனாவில் மிகவும் அதிகமாகக் காணப்படுகின்றது என்ற சிலரின், கருத்தை ஆதரிக்கவில்லை.

## குடியேற்றங்கள் அமைத்தல்

இடர்ப்பாடுகளைத் துணிவுடன் ஏற்கும் வீர மறவர்களும், வர்த்தகப் பெருக்கத்தில் ஆர்வம் கொண்ட செல்வ வாணிகர்களும், உலகின் பல பகுதிகளுக்கும் துணிந்து சென்று குடியேற்றங்களை ஏற்படுத்துவதில் முனைந்தனர். பண்டைய வடமொழிக் கல்வெட்டுகளும், அராபியரின் குறிப்பேடுகளும், சீனர்களின் வரலாற்று நூல்களும், பர்மா, மலாயா, இந்தோனேஷியா, சயாம், இந்தோ-சீனா, மத்திய ஆசியா மற்றும் வட ஆப்பிரிக்கா போன்ற பகுதிகளில் இந்தியர்கள் நிறுவியிருந்த குடியேற்றங்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. பண்டைய இந்தியாவிலிருந்து ஒரு சிலர் நெடுந் தொலைவில் உள்ள தாய்வான் (Taiwan), பிலிப்பைன்ஸ் (Philippines) மற்றும் மடகாஸ்கர் (Madagascar) போன்ற பகுதிகளில் குடியேற்றங்கள் நிறுவியிருந்ததற்கான சான்றுகள் உள்ளன. உலகின் பல பகுதிகளிலும் இந்தியர்கள் குடியேற்றங்களை நிறுவியிருந்தாலும், தென்கிழக்காசிய நாடுகளில் ஏற்படுத்தியிருந்த குடியேற்றங்கள் சிறப்புப் பெற்றிருக்கின்றன. கி.பி. முதலாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டிற்குள் நான்கு முக்கிய நிலைகளில் குடியேற்றங்கள் நிறுவப்பட்

டிருக்கலாம் எனக் கருதப்படுகின்றது. இந்தியர்கள் ஏற்படுத்திய குடியேற்றங்கள் அனைத்திலும் இந்துப் பெயர்களே பெரும்பாலும் காணப்படுகின்றன. காம்போஜம் (Kambuja) என்ற இந்திய நகரின் பெயரால் கம்போடியா (Cambodia) என்ற குடியேற்றம் ஏற்படுத்தப்பட்டிருந்தது. அதேபோல ஒருவகை தானியத்தைக் குறிக்கும் (Millet) வடமொழிச் சொல்லான யவத்வீபம் (Yavadweep) என்ற பெயரால் 'ஜாவா' (Java) என்ற குடியேற்றம் அமைக்கப்பட்டிருந்தது. காலப்போக்கில் தென்கிழக்காசிய நாடுகளில் குடியேற்றங்கள் அமைப்பதில் தென்னிந்திய அரசுகளான கலிங்கம் (Kalinga), ஆந்திர தேசம் (Andhra Desa) மற்றும் தமிழகமும் (Tamilnadu) முன்னணியில் நின்றன. தென்னிந்திய அரசுகள் தங்களின் பேரரசின் எல்லைகளை ஆழ்கடலுக்கப்பால் இருந்த நாடுகளிலும் விரிவாக்கியிருந்தன. அத்தகு பேரரசுகளால் உருவாக்கப்பட்ட பெரும் வர்த்தக நிறுவனங்களும் குடியேற்றங்களும், பர்மா, ஸ்ரீலங்கா மற்றும் கிழக்கிந்தியத் தீவுகளிலும் நிறுவப்பட்டன.

தென்னிந்திய அரசுகள் நிறுவிய அத்தகு குடியேற்றங்கள் வளர்ந்து, பெருஞ்சிறப்பு பேற்ற கடலாதிக்கம் மிக்க பேரரசுகளாக உயர்ந்தன. ஒரு சில பேரரசுகள் ஆயிரம் ஆண்டுகளுக்கும் அதிகமாகப் பெருமையுற நிலைத்து நின்றன. இரண்டு இந்துப் பேரரசுகளைக் குறிப்பாகக் கூறலாம். முதலாவதாக, தற்போது வியட்நாம் என்றழைக்கப்படு படுகின்ற நிலப்பரப்பு முழுவதும் 'சம்பா' (Champa) பேரரசில் அடங்கியிருந்தது. இரண்டாவதாக, தற்போதைய கம்போடியா, காச்சின்-சீனா, லாவோஸ், சயாம், பர்மா மற்றும் மலாயாவின் சில பகுதிகளும் அடங்கியிருந்தன. மலாயா தீபகற்பப் பகுதியில் 'சைலேந்திரப் பேரரசு' (Sailendra Empire) பெருமையுடன் ஆட்சி புரிந்தது. அந்தப் பேரரசில் ஜாவா, சுமத்திரா, போர்னியோ பாலி போன்ற தீவுகள் உள்ளடங்கியிருந்தன. அத்தகு வளமைமிகு பேரரசிற்குப் பதினோராம் நூற்றாண்டில்,

சோழப் பேரரசின் வளர்ச்சியின்போது பேராபத்து ஏற்பட்டது. தமிழகத்து இராசேந்திர சோழன் தமது மாபெரும் படைகளுடன் வங்கக் கடலைக் கடந்து சென்று சைலேந்திரப் பேரரசினைத் தாக்கினர்ன். அப்பேரரசின் பெரும் பகுதிகளை வென்றான். அதன் பின்னர் சைலேந்திரப் பேரரசின் அழிவு தொடங்கியது. அதன் அழிவில், ஜாவா தீவில் 'மஜாபாஹித்' (Majapahit) பேரரசு ஏற்பட்டது. அதே போல் மலாக்காவில் (Malacca) மற்றொரு தனி அரசு தோன்றியது. மலாக்காவை ஆண்ட ஓர். அரசன் இஸ்லாம் மதத்தை ஏற்றுக்கொண்டான். மலாக்கா அரசனின் மத மாற்றம், தென்கிழக்காசிய நாடுகளில் இஸ்லாமிய சமயம் பரவி நிலைபெறச் செய்ய பேருதவியாக இருந்தது. ஸ்ரீலங்கா தீவின் வடபகுதியில் 'கண்டி' (Kandi) என்ற தமிழ் அரசும் சிறப்புற்றிருந்தது.

அவ்வாறு தமிழக அரசுகளின் ஆதிக்கம் மேலோங்கி நின்ற காலை, தமிழ்ப் பண்பாடு தென்கிழக்காசியப் பகுதியெங்கணும் பரவி, மிகுதியான மாற்றங்களை ஏற்படுத்தியது. மொழி, கலைகள், கட்டடக்கலை போன்ற அனைத்துத் துறைகளிலும் தமிழ்ப் பண்பாட்டின் செல்வாக்கு மேலோங்கி நின்றது. இந்துச் சமயமும் புத்த சமயமும் பெரும்பாலான மக்களால் மிகவும் விரும்பப்பட்டு, ஏற்றுக் கொள்ளப்பட்டு, பரவி நிலை பெற்றிருந்தது. வட்டார மொழிகளின் மீது ஆதிக்கம் செலுத்துமளவுக்கு இந்திய வடமொழியின் செல்வாக்குத் தென்கிழக்காசியப் பகுதிகளில் ஓங்கியிருந்தது. 'சுகர்ணா' (Su-Karna) அல்லது 'சுயம் வரம்' (Swayamvara) என்பது ஒருவித விளையாட்டினைக் குறிப்பிடும் வடமொழிச் சொல்லின் வழிச்சொல்லே ஆகும். அதே பொருளில் 'சுகர்ணோ' (Sukarno) என்ற சொல் இந்தோனேஷியாவில் செயல்பட்டு வருகின்றது. அரசு விழாக்கள், நடைமுறைகள் இந்திய முறையில், அமைந்திருந்தன. வடமொழியே நடைமுறை மொழியாகச் செயல்பட்டது. இந்திய நிர்வாகத்துறையும் சட்டவியலும்

(Jurisprudence) அப்படியே ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தன. இந்து, புத்த சமயச் செல்வாக்கினால் கோவில்களும் மடாலயங்களும் ஏராளமாகக் கட்டப்பட்டன. சமயக் கோட்பாடுகளும் தத்துவங்களுமே இந்தியக் கலைகள், கட்டடக்கலைகளின் உயிர்நாடியாக இருந்திருக்கின்றன என்பதை ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளோம். இந்தியாவினின்றும் சமயங்கள் தென்கிழக்காசிய நாடுகளில் பரவியது போலவே, சமயக் கருத்துகளையே அடிப்படையாகக் கொண்டிருந்த கலைகளும் கட்டடக்கலைகளும் அப்பகுதிகளில் செல்வாக்குப் பெற்றன. ஜாவா, பாலி போன்ற தீவுகளில் புகழ்பெற்று விளங்குகின்ற நடனக்கலை, இந்திய நடனக்கலையின் அடிப்படையில் உருவானதேயாகும். அதேபோலக் கம்போடிய நாட்டு மொழியில் காணப்படும் அகரவரிசையும், தென்னிந்திய மொழியின்பாற்பட்டதேயாகும்.

கலைகள், கட்டடக்கலைகளின் பண்டைய நினைவுச் சின்னங்களாக தென்கிழக்காசிய நாடுகள் முழுவதிலும் காணப்படுகின்ற கட்டடங்கள், இந்தியக் கலைகளின் செல்வாக்கினைப் பறைசாற்றுகின்றன. ஜாவாத் தீவிலுள்ள போராபதூர் (Borabadur) என்ற மாபெரும் புராதனக் கோவிலில், புத்தரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் கற்சிற்பங்கள், 'கல்லிலே பொறிக்கப்பட்ட காவியங்களாகத் திகழ்கின்றன. மலையுச்சியிலே கட்டப்பட்டுள்ள இந்த ஸ்தூபியின் கூரைகளில் புத்தரின் உருவங்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. போராபதூர் ஆலயத்தில் காணப்படும் சிற்பங்களும் சிலைகளும் இந்தோ-ஜாவானியக் கலையின் மிகச்சிறந்த எடுத்துக்காட்டுகளாகக் கருதப்படுகின்றன. இன்னும் ஏனைய இடங்களில் இந்து புராணக் கடவுளர்களாகிய இராமர், விஷ்ணு, கிருஷ்ணர் போன்ற கடவுளர்களின் லீலைகள், புராணங்களில் கண்டுள்ளபடி ஓவியங்களாகத் திகழ்கின்றன. சயாம், கம்போடியாப் பகுதிகளை உள்ளிட்டு எழுந்த கமர் (Khmer) பேரரசு விட்டுச் சென்ற கலைக்காவியமான 'அங்கர் வாட்' (Angkor Vat) என்ற

திருக்கோயிலும், 'அங்கர் தோம்' (Angkor Thom) என்ற இடத்திலிருக்கும் சின்னங்களும் இந்திய-கமர் கலைப்பண்பு களின் இணைப்பை உறுதிப்படுத்துகின்றன. 'அங்கர்வாட்' என்ற வைணவத் திருக்கோவில் இப்போது சீரழிந்து கிடக் கின்றது. எனினும், அக்கோவிலின் கலைக் கருவூலங்களும், அதைச் சுற்றியுள்ள நீர்நிலைகள், கால்வாய்கள், பாலங்கள் ஆகியவையும் அக்கோவிலின் பண்டைய பெருமையை விளக்கி நிற்கின்றன எனலாம்.

இந்தியப் பண்பாடு வடக்கு, மற்றும் மேற்கிலும் தனது செல்வாக்கினைப் பரப்பியது. புருஷபுரம் நகரைத் தலைநகராகக் கொண்டிருந்த குஷாணர்கள் (Kushans) மத்திய ஆசிய நாடுகளைக் கைப்பற்றினர். இந்துக்கள் கோட்டான் (Khotan) நகரில் குடியேறினர். அப்பகுதி களில் ஆரெல்ஸ்டெய்ன் (Aurel Stein) என்பாரின் அகழ்வாராய்ச்சிகளின் விளைவாக அழிந்துபட்ட மடாலயங் களும் இந்துக் கடவுளர்களின் சிலைகளும் கண்டெடுக்கப் கப்பட்டுள்ளன. பாரசீகப் பேரரசின் தொடர்பால் இந்தியப் பண்பாடு மேற்குப் பகுதிகளிலும் பரவியது. இந்து அரசர்கள் மேற்கில் உரோமானியப் பேரரசுடனும் தூதுவர்கள் மூலமாகத் தொடர்பு கொண்டிருந்திருக்கின்றனர். அதன் காரணமாக வர்த்தகப் பெருக்கமும் ஏற்பட்டிருக்கின்றது. பருவக்காற்றின் தன்மையையும், கடல் நீரோட்டங்களின் வழிகளையும் ஆய்ந்தறிந்த பின்னர், கி.பி. முதலாம் நூற்றாண்டில் ஐரோப்பிய நாடுகளுடன் நிலையான வர்த்தக உறவை வளர்த்துக் கொண்டனர். எகிப்திலுள்ள அலக்சாண்டிரியா (Alexandria) இந்திய வாணிகர்களின் முக்கியக் கேந்திர மாகவே விளங்கியது. அந்நகரில் இந்திய வாணிகர்கள் பலர் குடியேறி, வாணிகத்தலங்களை நிறுவியிருந்தனர். இந்தி யாவின் மேற்குக் கரையிலுள்ள மலபார் பகுதிகளிலிருந்து பாலஸ்தீனத்திற்கு ஏற்றுமதி செய்யப்பட்ட தேக்கு மரத்தைக் கொண்டு சாலமன் (Solomon) என்ற பேரரசர் ஜெருசலம் நகரில் மாபெரும் திருக்கோயில் ஒன்றினைக்

கட்டினார் என்று நம்பப்படுகின்றது. இந்தியாவிலிருந்தும் இறக்குமதி செய்யப்பட்ட பட்டாடைகளுக்கும் முத்துக்களுக்கும் உரோமானியப் பேரரசில் ஏராளமான தேவை இருந்தது. பட்டாடைகளும் முத்துக்களும் இறக்குமதி செய்ய உரோமானியர் ஏராளமாகப் பொன், வெள்ளி நாணயங்களை இந்தியாவிற்கு ஏற்றுமதி செய்ய வேண்டியிருந்தது. அதனால் உரோமப் பேரரசில் பொன்-வெள்ளி உலோகங்களுக்குத் தட்டுப்பாடு ஏற்படுகின்ற ஆபத்து ஏற்படுமோ என்று பிளினி (Pliny) என்ற வரலாற்றாசிரியர் வருந்தியிருக்கின்றார்.

### நீதி பொதிந்த இந்தியக் கதைகள் பரவுதல்

நீதிக் கதைகள் (Fables) என்றழைக்கப்படுகின்ற இந்தியக் கட்டுக்கதைகள் ஐரோப்பிய நாடுகளிலும் பரவியிருப்பதை, மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கூறலாம். இக்கதைகளை நாடோடிக் கூட்டத்தினரும் (Gypsies—பின்னர் நாடோடிகள் 'எகிப்தியர்' என்றும் அழைக்கப்பட்டனர்), கிரேக்கம், பைசாண்டியம் (Byzantium) பகுதிகளிலிருந்து வந்த வர்த்தகர்களும், கிழக்கு ஐரோப்பா மீது படையெடுத்த மங்கோலியர்களும் இக்கதைகளை ஐரோப்பிய நாடுகளில் பரப்பினர். 'ஈசாப்' (Aesop) என்பாரின் நீதிக்கதைகள் கி.மு. ஆறாம் நூற்றாண்டிலேயே இந்தியர்களிடையே பரவியிருந்தது. அதே காலத்தில் பஞ்சதந்திர கதைகளும், பாரசீகத்தில் 'பஹ்லவி' (Behlavi) மொழியில் மொழியாக்கம் செய்யப்பட்டது. அக்கதைகளில் குறிப்பிடப்படுகின்ற 'கலிலா' (Kalila), 'திம்மா' (Dimma) என்ற இரண்டு குள்ளநரிகளின் (Jackals) பெயராலேயே பாரசீக 'பஹ்லவி' மொழிபெயர்ப்பு விளங்கியது. இந்தக் கதைகளைக் கருப்பொருளாகக் கொண்டு அரபுமொழிகளில் உருவாக்கப்பட்ட கதைகள் ஐரோப்பாவில் பரவியிருந்தன. இக்கதைகளின் ஜெர்மானிய வடிவமே முதன் முதலில் அச்சிடப்பட்ட நூல்களில் ஒன்றாகும். அந்தக் கதைகள் கிரேக்க

இலக்கியங்களிலும் நுழைந்து, கிரேக்க இலக்கியங்கள் வாயிலாக டச்சு, டேனிஷ் மற்றும் ஐஸ்லாந்து (Dutch, Danish and Icelandic) மொழிகளிலும் நுழைந்தன. இத்தாலிய மொழியாக்கத்தைப் பின்பற்றிய சர் தாமஸ் நார்த் (Sir Thomas North) என்பார் எலிசபெத் பேரரசியாரின் ஆட்சிக்காலத்தில் இங்கிலாந்திலும் அக்கதைகளைப் பரப்பினார். 'மூன்று பேழைகள்' (Three Caskets), 'ஒரு பவுண்டு நிறை மாமிசம்' (A Pound of Flesh) என்பன போன்ற கருத்துகளை ஷேக்ஸ்பியர் அவரிடமிருந்தே பெற்றார் என்று கருதப்படுகின்றது. 'பெர்ரட்டா' (Perretta) என்ற பிரெஞ்சுக் கதை இந்திய மூலக்கதையின் தழுவலாக இருக்கலாம் என மாக்ஸ்முல்லர் (Max Muller) என்பார் அறிவிக்கின்றார். 'பெர்ரட்டா' என்ற மாது, பால்குடத்தைத் தலையில் சுமந்து, கடைவீதிக்குச் செல்லுகின்றாள். செல்லும்போது அவள் கற்பனையில் மூழ்குகிறாள். அதன் விளைவாகப் பகற்கனவு காணுகின்றாள். 'அக்கனவில் அவள் தலையில் சுமந்துவந்த பாலை, நல்ல விலைக்கு விற்று, நூறு கோழி முட்டைகளை வாங்குகின்றாள். முட்டைகள் குஞ்சுபொறித்தவுடன், அந்தக் கோழிக் குஞ்சுகளை விற்று, ஒரு பசுவும் கன்றும் வாங்குகிறாள். கன்றுக்குட்டி கால்களை உதைத்துக்கொண்டு துள்ளிக் குதிக்கின்றது. பெர்ரட்டாவும் அக்கன்றைப் போலவே தானும் குதிக்கிறாள். அதன் விளைவாக அவள் தலையிலிருந்த பால்குடம் வீழ்ந்துவிடுகின்றது. இதனால் தன் கணவன் தன்னை அடித்துத் துன்புறுத்துவானோ என்றும் அச்சமடைகிறாள்.' அதே கதையமைப்புள்ள இந்தியக் கதையாவது: பெர்ரட்டா என்ற பெண்மணிக்குப் பதிலாக, இந்தியக் கதையில் ஓர் அப்பாவி பிராமணன் குறிப்பிடப்படுகின்றான். அந்த 'அப்பாவிப் பிராமணன் ஒரு பானை நிறைய சோறு சமைத்து, அதை விற்பதற்காக எடுத்துச் செல்லுகின்றான். அச்சோற்றினைக் கொள்ளை லாபத்திற்கு விற்கவேண்டுமென்றும், அவ்வாறு அடைகின்ற லாபத்தைக் கொண்டு, ஒரு பெரிய பணக்காரக் குடும்பப் பெண்ணை மணக்க வேண்டுமென்றும் கனவு காண்கின்றான். அவ்வாறு செல்வச் சீமாட்டியை

மணந்த பின்னர் அவளைத் தடியால் அடித்துத் துன்புறுத்த வேண்டும் எனவும் கனவு காண்கின்றான். அதே நினைவில் அப்பெண்மணியை அடிப்பது போன்ற பாவனையில், தனது கைத்தடியை வீசுகின்றான். அத்தடி அவன் சமைத்து வைத்திருந்த சோற்றுப்பானைமீது பட்டு, பானை உடைபடுகின்றது.' அதேபோல இன்னுமோர் உதாரணத்தையும் ஈண்டுக் குறிப்பிடலாம். 'சிந்தெரல்லா' (Cinderella) என்ற அழகு நங்கையார் 'சுவர்ணதேவி' (Suvarnadevi) என்ற இந்திய இளவரசியாவாள். அந்த இளவரசி தனது காலணிகளில் ஒன்றினை ஓர் ஏரியில் தவறவிட்டுவிடுகின்றாள். அந்தக் காலணி, ஒரு மீனவன் வலையில் சிக்குகின்றது. அந்த மீனவன் 'உக்கிரபாகு' (Ugrabahu) என்ற இளவரசனிடம் அந்தக் காலணியைக் கொடுக்கின்றான். அந்தக் காலணியின் அழகில் மயங்கிய இளவரசன், அந்தக் காலணியை அணிந்த அந்தப் பேரழகியைக் கற்பனையில் கண்டு காமுற்று, அவளைத் தேடி அலைகிறான். அதே போல 'அராபிய இரவுகள்' (Arabian Nights) என்ற கதைக்கொத்தில் காணப்படுகின்ற நிகழ்ச்சிகளில் பெரும்பாலானவை இந்திய, கிரேக்க, பாரசீகக் கதைகளின் தழுவல்களேயாகும். இக்கதைகள் ஸ்பெயின் வழியாக ஐரோப்பிய நாடுகளில் பரவியது.

**அராபியர்களின் பணி**

அராபியர்கள் கி.பி. 712ஆம் ஆண்டு சிந்து மாநிலப் பகுதியில் குடியேறிய பின்னர் இந்திய நாகரிகத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டனர். அவர்கள் இந்திய அறிவியல், கணிதம், மருத்துவம், வானியல், தத்துவம், இலக்கியம் மற்றும் கலைகளையும் கற்றுத் தேர்ந்தனர். அவர்கள் இந்தியாவில் பெற்ற கல்வியறிவின் துணையுடன், கி.பி. 750—850-க்கு இடைப்பட்ட காலத்தில், தங்களது பெருமைமிகு பண்பியல் வளர்ச்சியைத் தொடங்கினர். இந்து முறை எண்கள் (Numerals) மற்றும் பத்துப் பத்தாகக் கணக்கிடும் முறை (தசமமுறை - Decimal system) ஆகியவைகளை அப்படியே தங்கள் நாடுகளிலும் பின்பற்ற

ஆரம்பித்தனர். இந்திய வானியல் முறைகள் பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. அராபிய வானியல் அறிஞரான அபு மஷார் (Abu Mashar) என்பவர் வாரணாசியில் இந்திய வானியலைக் கற்றுத் தேர்ந்தார். இந்தியாவில் கல்வி பயின்று தேர்ந்த அறிஞர்களை பாக்தாத் காலிபுகள் உயர் பணிகளில் அமர்த்தினர். அவ்வறிஞர்கள், தங்களது தாயகம் திரும்பியபோது சாரகர், பிரம்மகுப்தர் போன்றோரின் நூல்களைத் தங்களுடன் எடுத்துச் சென்று, அந் நூல்களை அரபு மொழியில் மொழியாக்கம் செய்தனர். பாக்தாது காலிபுகளிலேயே மிகச்சிறந்தவராகக் கருதப்படும் ஹருன் அல்-ரஷிது (Harun-Al-Rashid) இந்திய மருத்துவர்களைத் தமது அரசவையில் அனுமதித்துப் போற்றினார். அரபு நாடுகளி லிருந்து இந்தியக்கலை, அறிவியல்கள் ஐரோப்பிய நாடுகளை அடைந்தன. 'முஸ்லிம்கள் இந்தியாவை வென்று நிலைபெற்ற பின்னரே, இஸ்லாமிய நாகரிகம் உலகத்தில் சிறந்த நாகரி கங்களில் ஒன்றாகக் கருதப்பட்டு உயர்நிலையை அடைந்தது. இஸ்லாமிய அறிவியல் வளர்ச்சிக்கு, இந்திய அறிவியல் நூல் களே அடிப்படையாக இருந்திருக்கின்றன. இந்திய அறிவியல் நூல்களை கி.பி. எட்டாம் நூற்றாண்டிலிருந்து முஸ்லிம்கள் கற்கத் தொடங்கினர். வேதியியல், கணிதம், மருத்துவம் வானியல் போன்ற அனைத்து அறிவியல் துறைகளிலும் தாங்கள் இந்தியாவிலிருந்து கற்றுணர்ந்தவை அனைத் தையும் அப்படியே ஐரோப்பாவில் புகுத்தியிருக்கின்றனர். இஸ்லாமின் ஏகாதிபத்திய உணர்வும், 'இஸ்லாமியப் படை களின் வெற்றியும் கிழக்குநாடுகளின் அறிவியல் கலைகள் அனைத்தும் மேற்கு நோக்கிச் சென்று ஐரோப்பிய நாடு களில் நிலைபெறக் காரணமாக இருந்திருக்கின்றது. இஸ் லாமியர் மூலமாக ஐரோப்பாவில் நுழைந்து நிலை பெற்று விட்ட கீழைநாட்டு அறிவியல் மற்றும் கலையறிவு,' ஐரோப் பாவில் மறுமலர்ச்சி ஏற்பட மிக முக்கியமான காரணமாக இருந்திருக்கின்றது', என ஹாவல் (Havell) என்ற வரலாற்றறிஞர் குறிப்பிடுகின்றார்.

**மேலை நாடுகளில் இந்தியப் பண்பாட்டின் செல்வாக்கு**

நவீன காலத்தில் ஐரோப்பியர்களின் வர்த்தகம் மற்றும், ஏகாதிபத்தியத் தொடர்புகள் வாயிலாக, இந்தியப் பண்பாட்டுச் சிறப்புகள் மேலைநாடுகளில் நுழைந்து, செல்வாக்குப் பெற்றிருக்கின்றன. இத்தாலியின் வெனிஸ், ஜெனோவா நகர வாணிகர்களின் இந்திய வர்த்தக முற்றுரிமையை நசுக்கும் உறுதிகொண்ட போர்த்துகீசியர்கள், உயிரையும் துச்சமாக மதித்து, அலைகடலில் புதைந்து கிடக்கும் ஆபத்துகளையும் வென்று, அரும்பெரும் முயற்சிகளின் விளைவாக, நன்னம்பிக்கை முனையைச் சுற்றி, அரபுக்கடல் வழியாக இந்தியாவை அடையும் நேரடிக் கடல் வழியைக் கண்டுபிடித்தனர். வரலாற்றுச் சிறப்புமிக்க, ஐரோப்பிய வரலாற்றின் திருப்பு முனையாக அமைந்த இந்த ஒரு சிறப்பு நிகழ்ச்சி, ஐரோப்பா முழுவதிலும் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. ஐரோப்பிய நாடுகளில் பெரும்பாலானவை கீழை நாடுகளுக்குப் புதிய கடல்வழிகள் கண்டுபிடிப்பதிலும், கடல் வழி கண்ட பின்னர் குடியேற்றங்களை அமைக்கவும் வர்த்தகத்தில் செழிக்கவும், புதிய கடல்வழிகளைக் கண்டு பிடிக்கும் முயற்சியில் இறங்கிய வீரர்கள் பயண நூல்கள் எழுதவும், போர்த்துகீசியர்களின் இந்தியக் கடல்வழிக் கண்டு பிடிப்பு பெரும் தூண்டுகோலாக அமைந்துவிட்டது.

சர் தாமஸ் ரோ என்பார் பேரரசர் ஜஹாங்கீரை, அவரது அரசவையில் சந்தித்த நிகழ்ச்சியினைத் தனது குறிப்புகளில் பின்வருமாறு வருணிக்கின்றார்: 'உயர்ந்த பீடத்தில், அரசக் குடையின் கீழே, அழகுமிளிரும் இரத்தினக் கம்பளங்களின் விரிப்பில், அளவற்ற செல்வக் கொழிப்பிலும் கொடுந்தன்மையும் பெருமிதமும் ஒருங்கே கலந்து காட்சியளிக்கின்ற தன்மையில் மொகலாயப் பேரரசர் ஜஹாங்கீர் வீற்றிருந்தார்', என சர் தாமஸ் ரோ குறிப்பிடுகின்றார். இக்குறிப்பில் கண்டுள்ள வருணனை ஆங்கிலக் கவிஞர் மில்டன் என்பவரை மிகவும் கவர்ந்திருக்கவேண்டும். அவர் தமது கவிதை நூலில் சாத்தானை (Satan) உருவகப்படுத்தும்போது இதேபோன்ற கருத்துகளைப் பின்

வருமாறு பயன்படுத்தியிருக்கின்றார்: 'ஆர்முஸ் (Ormuz) மற்றும் இந்து நாடுகளின் செல்வத்தைவிடப் பன்மடங்கு உயர்ந்த செல்வ வளத்தைத் தன்னகத்தே கொண்ட பெருமையுடன் சாத்தான் (Satan) உயர்ந்த பீடத்தில் இருக்கும் அரியணையில் பேரரசனைப்போன்று வீற்றிருக்கின்றார்' என மில்டன் வருணிக்கின்றார். இயேசு சபையினர் (Jesuits) இந்திய மொழிகளைக் கற்றுத் தேர்ந்தனர். இயேசு சபையினர் வடமொழி யஜுர் வேதத்தை பிரெஞ்சு மொழியில் மொழியாக்கம் செய்தனர். மொழியாக்கம் செய்யப்பட்ட யஜுர் வேதம் பிரெஞ்சு அறிஞரான வால்டேரின் சிந்தனையை ஊக்குவித்திருக்கின்றது. மாக்ஸ் முல்லர் என்ற மற்றோர் அறிஞர், ரிக் வேதத்தினை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்தார். மேலும் அவர் இந்து, சொராஸ்டிரிய, புத்த, இஸ்லாமிய, சீன சமய நூல்களின் தொகுப்புகளை ஐரோப்பிய உலகிற்கு அறிமுகப்படுத்தினார். அதன் வாயிலாகக் கீழை நாடுகளின் சமய நூல்களைப் பற்றியும் தத்துவங்களைப் பற்றியும், ஐரோப்பியர்கள் நேரடியாக உணர்ந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. இந்தியக் கவிதைகளின் சிறப்பினை ருக்கர்ட் (Ruckert) என்பார் ஜெர்மானியருக்கு எடுத்துரைத்தார். காளிதாசரின் 'சாகுந்தலம்' என்னும் நாடகக் காவியம் கதே (Goethe) என்ற ஜெர்மானியக் கவிஞரை மிகவும் கவர்ந்தது. ஷெல்லி, வோர்ட்ஸ்வொர்த், கார்லைல் போன்றோர் இந்தியத் தத்துவ நூல்களை விரும்பிக் கற்றனர். இந்தியத் தத்துவக் கருத்துகள் அவர்களது கவிதைகளின் அடிப்படையாக இருக்கின்றன. அமெரிக்காவில் வளர்ந்துவிட்ட ஆங்கில பியூரிட்டானிய முறைகளை வெறுத்து, புதிய இங்கிலாந்து (New England) பகுதியைச் சேர்ந்தவர்கள் இந்திய 'அதீத தத்துவநிலைப் பயிற்சி இயக்கத்தை' (Transcendental Movement) விரும்பி ஏற்றுக் கொண்டுள்ளனர். அதீத தத்துவ நிலைப் பயிற்சி இயக்கத்தை அமெரிக்காவில் பரப்பிய எமர்சன் (Emerson) என்பார் பண்டைய இந்திய சமய நூல்களைக் கற்றவர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். மொகலாயப்

பேர்ரசர் அவுரங்கசீப் அவர்களின் செல்வப் புதல்வி களில் ஒருவர் டெல்லியிலிருந்து காஷ்மீர் செல்லும்போது, பயணக் களைப்பை நீக்கும்பொருட்டு ஓர் இளம் கவிஞன் ஏராளமான சிறு கதைகளை வழிநெடுகிலும் கூறிக்கொண்டே வந்திருக்கின்றான். அக்கதைகள் அனைத்தையும் சர் தாமஸ் மூர் என்பார் தொகுத்து 'லாலா ரூக்' (Lalla Rook) என்ற கதைக் கொத்தாக வெளியிட்டார். அவுரங்கசீபின் புதல்வியார் பெர்ர்ரர் நாட்டு இளவரசனைத் திருமணம் செய்துகொள்வதற்காகக் காஷ்மீர் சென்றார். ஆனால், வழியில் ஏராளமான கதைகள் கூறி, பயண அலுப்புத் தெரியாமல் செய்த இளம் கவிஞன்மீது அவள் மையல் கொண்டாள். காஷ்மீர் சென்று, தனது கரம் பிடிக்கப் போகும் மணாளனைக் கண்டபோது திகைத்து நின்றாள். ஏனெனில், வழிநெடுகக் கதைகள் மூலம் அவளது காதலைப் பெற்ற அதே கவிஞன்தான், மணமகனாக அவளை வர வேற்றான்.

விக்டோரியா காலத்தின் பிற்பகுதியில் (Later Victorian Period) இந்திய 'பிரம்மஞான வழி' (Theosophy) ஐரோப்பிய தத்துவ வளர்ச்சியை மிகவும் பாதித்தது. ருஷியாவைச் சேர்ந்த பிளாவாட்ஸ்கி அம்மையாரும், (Madam Blavatsky) அமெரிக்காவைச் சேர்ந்த கர்னல் ஆல்காட் என்பாரும் (Colonel Olcott) இந்திய பிரம்மஞான அறிவில் நாட்டம் கொண்டு, பிரம்ம ஞான இயக்கத்தைத் (Theosophical Society) தோற்றுவித்தனர். உலகை உய்விக்க, நல்வழிப்படுத்த, இறையருள் பெற்று மகாத்மாக்களாக அவதாரம் எடுத்து வந்தவர்களே கிருஷ்ணர் மற்றும் புத்தர், இயேசு போன்ற தீர்க்கதரிசிகளும் ஆவர் என இவர்கள் கருத்து வெளியிட்டனர். பிரம்மஞான இயக்கத்தின் வாயி லாக, இந்திய வினைப்பயன் கொள்கை (Karma theory) மற்றும் மறு பிறப்பு போன்ற இந்து சமயத் தத்துவங்களின் மேன்மையை ஐரோப்பியர்களும் அமெரிக்கர்களும் உணர்ந் தனர். பிளாவாட்ஸ்கி அம்மையாரைத் தொடர்ந்து மெய் ஞான இயக்கத்தின் தலைமைப் பொறுப்பினை ஏற்ற அன்னி

பெசன்ட் அம்மையார் இந்திய விடுதலைப் போராட்டத்தில் பங்கெடுத்துக் கொண்ட ஐரோப்பியப் பெண்மணிகளில் சிறந்தவராவார்.

சுவாமி விவேகானந்தர், இரவீந்திரநாத் தாகூர், மகாத்மா காந்திஜி போன்றோரின் கருத்துகள் உலக நாடுகள் முழுவதிலும் உயர்ந்த செல்வாக்குப் பெற்றன. 1893ஆம் ஆண்டில் அமெரிக்காவில் சிக்காகோ நகரில் கூடிய உலக சமயங்களின் மாநாட்டில் சுவாமி விவேகானந்தர், இந்து சமயத்தின் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். இந்தியா திரும்பிய பின்னர் அவர் இராமகிருஷ்ணா இயக்கத்தைத் (Ramakrishna Mission) தோற்றுவித்தார். இராம கிருஷ்ணா இயக்கத்தின் தலையாய குறிக்கோள் ஐரோப்பியத் தத்துவங்களான உலகியல், இன்பம், பொருளாசை ஆகியவற்றால் திசைமாறிச் சென்று, பண்டைய இந்திய சமயத் தத்துவங்களையும் நெறிமுறைகளையும் புறக்கணித்துச் செல்லுகின்ற பேதை இந்துக்களையும் ஏனையோரையும் நல்வழிப்படுத்துவதே ஆகும். தாகூர் இந்து சமய, மற்றும் பண்பாட்டு மறுமலர்ச்சிக்கு அரும்பணியாற்றியிருக்கின்றார். அவருடைய 'கீதாஞ்சலி', 'சாதனா' என்ற நூல்கள், இன்றைய உலக சிந்தனை வளர்ச்சியைத் தூண்டியிருக்கின்றன. 'அஹிம்சை அல்லது அமைதிவழிப் போராட்டம்' என்ற புதிய கோட்பாடுகளின் மூலம், இந்திய விடுதலைப் போராட்டத்தை வெற்றிபெறச் செய்த காந்திஜி அவர்கள் பண்டைய இந்திய நெறி நூல்களிலிருந்து உலகிற்கு ஒரு புதிய கோட்பாட்டையே உருவாக்கிக் கொடுத்திருக்கின்றார். காந்திஜியின் இந்த அறவழிக் கோட்பாட்டிற்கு எதிர்ப்புகள் இருப்பினும், அக்கோட்பாடு அமெரிக்க, ஐரோப்பிய, ஆப்பிரிக்க மக்களிடையே உயர்தனிச் செல்வாக்கினைப் பெற்றிருக்கின்றது.

கலைத் துறையிலும் இந்தியாவின் செல்வாக்கு மேனாடுகளில் மிகுந்து காணப்படுகின்றது. மொகலாயர் காலத்தில் மிகச் சிறிய அளவில் தீட்டப்பட்ட ஓவியங்களின் (Miniature Paintings) பெருமையினை சர் தாமஸ் பேரா என்பார்

புகழ்ந்திருக்கின்றார். பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரோப்பிய ஓவியர்கள் இந்தியாவிற்கு வந்து பண்டைய இந்தியச் சின்னங்களின் கவின்மிகு தோற்றத்தினையும் இந்தியாவின் இயற்கை வனப்பினையும் ஓவியங்களாகத் தீட்டியிருக்கின்றார். தாமஸ், வில்லியம், டேனியல் போன்ற ஓவியக் கலைஞர்கள் கீழை நாடுகளின் ஓவியப் படைப்புகளைத் திரட்டித் தொகுத்துக் 'கீழை நாட்டு எழிலோவியங்கள்' (Oriental Scenary) என்ற தலைப்பில் வெளியிட்டனர். அந்த ஓவியத் தொகுப்பு நூல் ஐரோப்பியர் இலக்கியச் சிந்தனைகளில் மாற்றங்களை ஏற்படுத்தியிருக்கின்றது. ஐரோப்பிய இலக்கியங்கள் கீழை நாட்டு எண்ணங்களைப் பிரதிபலிக்கின்றன. கண்ணைப் பறிக்கும் வண்ணங்களில், பூ வேலைப்பாடுகளுடன் கூடிய காஷ்மீரத்து சால்வைகளும், படுக்கை விரிப்புகளும், ஐரோப்பியர்களை மிகவும் கவர்ந்தன. இந்தியக் கட்டடக் கலை அமைப்புகள் ஐரோப்பியர்களை ஆட்கொண்டிருக்கின்றன. அவர்கள் இந்தியக் கட்டடக் கலைப் பாணியில் கட்டடங்கள் உருவாக்க முயன்றனர். இருப்பினும் இக்கலை, ஐரோப்பிய நாடுகளிடையே அவ்வளவாகச் செல்வாக்குப் பெறவில்லை.

பொதுவுடைமையினருக்கும், முதலாளித்துவத்தை ஏற்றுக் கொண்டோருக்கும் இடையே கொள்கை மாறுபாடுகள் காரணமாகத் தொடர்ந்து புகைந்து கொண்டிருக்கும் கெடுபிடிப் போரில் இந்தியா எப்பக்கமும் சாராது நடுநிலைமை வகிக்கின்றது. இந்த நிலையினால் கெடுபிடிப் போரில் ஈடுபட்டிருக்கும் நாடுகளின் நேரடி மோதலை 'இந்தியா தடுத்துக் கொண்டிருக்கின்றது என்று கருதுவது பொருந்தாது. இருப்பினும் அனைத்துலக நாடுகளின் உறவு முறைகளில், நாடுகளின் செயல்பாட்டில் இந்தியாவும் பெருமையான இடத்தைப் பெற்றிருக்கின்றது என்பதை மறுக்க இயலாது. இந்தியாவின் 'அறவழிக் கொள்கையையும்' (Non-Violence) ஒத்துழையாமையையும் (Non Co-operation) அமெரிக்காவிலிருக்கும் செவ்விந்தியர்கள், அமெரிக்க அரசுக்கு எதிரான பேராட்டங்களில் கடைப்பிடித்தனர். ஆனால், அவர்கள்

வெற்றி பெற இயலவில்லை. ஆனால், அதே கொள்கைகளைப் பின்பற்றிப் போராடியதன் விளைவாக இந்தியா வெற்றி கண்டது, சுதந்திரம் பெற்றது. உலக நாடுகளில் இருக்கும் சிறுபான்மை இனத்தவர்களுக்கு, சிறப்பாக அமெரிக்க நீக்ரோக்களுக்கு இந்த இந்தியக் கொள்கைகள் மிகவும் பயனளிப்பதாக உள்ளது. இத்தகு இந்தியக் கொள்கைகளை வேற்று நாடுகளிலும் திறம்படச் செயல்படுத்த முடியும் என்பதனை மார்ட்டின் லூதர் கிங் என்ற அமெரிக்க நீக்ரோத் தலைவர் உலகிற்கு எடுத்துக்காட்டி யிருக்கின்றார். பெரும்பான்மை இனத்தினரால் அதிகார வலிமை கொண்டு சிறுபான்மையினரின் உரிமைகள் நசுக்கப்படும்போது, இந்தியா உலகிற்கு வழங்கிய 'அறவழி' மற்றும் 'ஒத்துழையாமை' என்ற இவ்விரு ஆயுதங்களையும் முறையாகப் பயன்படுத்தி வெற்றி காண முடியும் என்பதை அமெரிக்க நீக்ரோத் தலைவர் மார்ட்டின் லூதர் கிங் என்பவர் நிரூபித்தார்.

இந்தியா மிகப் பெரிய மக்கள் தொகையைக் கொண்ட பரந்த நாடு. இந் நாட்டில் மக்களாட்சி முறை அரசு வெற்றிகரமாகச் செயல்படுகின்றது. இந்திய மக்களாட்சி முறையின் இயக்கத்தினை உலக நாடுகள் உற்று நோக்கிய வண்ணம் உள்ளன. முறைப்படி நடத்தப்படுகின்ற பொதுத் தேர்தல்களும், கட்சி அமைப்புகளும், பஞ்சாயத்து முறைகளும், இப் பரந்த நாட்டில் மக்களாட்சி முறைகளில் செயல்படும் செம்மையினை அறிவுறுத்துகின்றன. இந்தியா மக்களாட்சி அரசு முறையில் கண்டுள்ள சிறப்பு, ஏனைய ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளிலும் மக்களாட்சி முறை மலர வழி காட்டியாக அமைந்திருக்கின்றது.

---

